உ

செந்திலாண்டவன் துணை

பெரிய புராணம்

என்று வழங்குகிற

# திருத்தொண்டர் புராணம்

[பன்னிரண்டாம் திருமுறை]



ஸ்ரீ காசி மடம் :: திருப்பனந்தாள்

1950

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு

உ
செந்திலாண்டவன் துணை

சேக்கிழார் சுவாமிகள் அருளிய

# பெரிய புராணம்

என்று வழங்குகிற

# திருத்தொண்டர் புராணம்

[பன்னிரண்டாந் திருமுறை]

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம்
20-வது பட்டத்தில் எழுந்தருளியிருக்கும்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்
அவர்களுடைய திருவுள்ளப்படி வெளியிடப்பெற்றது

கோவை - வழக்கறிஞர் சிவக்கவிமணி
திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B. A, அவர்கள்
எழுதிய பெரிய புராண வரலாற்றுடன் கூடியது

பதிப்பாசிரியர்
வித்துவான் இ. பட்டுச்சாமி ஓதுவார்
தலைமைத் தமிழாசிரியர்
பொன்னையா உயர்நிலைப்பள்ளி, திருச்சிராப்பள்ளி

[விக்ருதி ஆண்டு ஆவணி மூல நன்னாள்]

 ✶ [ஆகஸ்டு - 1950

உ

# பதிப்புரை

ஒப்பி லேடுயர்வு இகந்தவன் உவந்தினி தருள
அப்பு ராதனன் தோழனும் அருள்மொழிக் கவிஞன்
செப்பு மேன்மையின் ஒன்பதிற்(று) எழுவர்செம் மலர்த்தாள்
வைப்பின் நாவினும் மனத்தினுஞ் சிரத்தினும் மணப்பாம்.

—திருவானைக்காப் புராணம்.

**உ**லகில் நிலவும் பலவகைச் சமயங்களில், இறைவன்பால் நல்லாற்றுப்படுத்தும் விழுப்பமும் தொன்மையும் உடையது நம் **சைவ சமயமே**யாகும் இச் சைவ சமயத்திற்கு அடிப்படையான நூல்கள் **சைவத் திருமுறைகள்** முதலியனவாம். குரு, லிங்க, சங்கம வழிபாட்டிற் சிறந்துநின்று இறைவன் திருவடி நீழல் எய்திய திருத்தொண்டர்களின் வரலாற்றைக் கூறுமுகத்தான் சைவசமய உண்மைகளையும் உயர்வையும் புலப்படுத்தும் பெருமையுடையது, **பன்னிரண்டாந் திருமுறையாகிய இத் திருத்தொண்டர் புராணம் ஆகும்.**

இத்தகைய சைவத்திருமுறைகளைச் சைவ நன்மக்களிடையே நன்கு பரவும்படி செய்வது, சிவநெறி செழித்தோங்குமாறு செய்யும் சிறந்த செயல்களில் ஒன்றும். இச் சிறந்த செயலை மேற்கொண்டு பன்னிரு சைவத் திருமுறைகளையும் வெளியிட்டு மெய்யன்பர்களுக்கு உதவி வரும் பெருமை, திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்திற்கே உரியதாகும்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தில் 20-ஆம் பட்டத்தில் அருளாட்சியுடன் எழுந்தருளியிருப்பவர்களாகிய **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்கள் சைவத்தையும் தமிழையும் தம் இரு கண்கள்போலக் கருதி, அவற்றின் வளர்ச்சியின் பொருட்டு, 15-லட்சம் ரூபாய்களுக்குமேல் செலவிட்டுச் சைவ நூல்களை வெளியிட்டும், பிற அறங்கள் புரிந்தும் வருகிறார்கள். இவர்கள் திருவுள்ளக் கருத்துக் கிணங்க இத் **திருத்தொண்டர் புராணம்** ஸ்ரீ காசி மடத்து வெளியீடாக **ஆவணி மூல நன்னாளாகிய இன்று** வெளி வரலாயிற்று.

இப்பதிப்பு, யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களின் பதிப்பை அடிப்படையாகக் கொண்டு, பிற பதிப்புக்களில் கண்ட சிறந்த பாட பேதங்களை மேற்கொண்டும், நல்லனவாகக்கண்ட பிற பாட பேதங்களை ஆங்காங்குக் காட்டியும் பதிக்கப்பெற்றுள்ளது. இதில் பெரிய புராண வரலாறும், சேக்கிழார் பெருமான் வரலாறும் அடங்கிய ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று சேர்க்கப்பெற்றுள்ளது.

இப் பதிப்பு செவ்விய முறையில் அமைவதற்கு அரிய பாட பேதங்களைக் கொடுத்துதவிய திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை தருமை யாதீனம் மௌனமடம் கட்டளை விசாரணை வித்துவான் **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள்** அவர்கட்கும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தலைமை ஆசிரியர் (Principal) உயர்திரு **வித்துவான் கே. எம். வேஙகடராமையா**, M. A. B. O. L. அவர்கட்கும், இப்பதிப்பு அச்சாகி வருங்கால் உடனிருந்து உதவி புரிந்த நண்பர்கள் **வித்துவான் கோ. இரத்தினம் பிள்ளை, வித்துவான் தி. சி. குழந்தைவேல் முதலியார்** ஆகிய இருவர்கட்கும் என் நன்றி உரியதாகும்

தமிழகம் சைவ நெறியில் மிளிருமாறு செய்துவரும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள்** அவர்கள் அடியேனுக்கு முதல் ஆறு திருமுறைகளைப் பதிப்பிக்கும் பேற்றைத் திருவுளம் பாலித்து அருளியது போன்று, இப் பன்னிரண்டாந் திருமுறையையும் பதிப்பிக்கும் பேற்றையருளியது அடியேனுடைய முன்னோர் செய்த நல்வினைப்பயனேயாகும். எளியேனாகிய அடியேனையும் ஒரு பொருளாக மதித்து இத் திருத்தொண்டர் புராண வெளியீட்டில் ஈடுபடுத்தியருளிய ஸ்ரீ - ல - ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் பொன்னார் திருவடிகளைச் சிந்தித்து வந்திக்கின்றேன்.

வரகநகர்
திருச்சிராப்பளளி
23—8—'50

இங்ஙனம்
**தி. பட்டுசசாமி ஓதுவார்.**

உ

செந்திலாண்டவன் துணை

# உள்ளுறை


| புராணம் | பக்கம் |
|---|---|
| பாயிரம் | ... 1 |
| திருமலைச் சிறப்பு | ... 3 |
| திருநாட்டுச் சிறப்பு | ... 9 |
| திருநகரச் சிறப்பு | ... 14 |
| திருக்கூட்டச் சிறப்பு | ... 21 |
| தடுத்தாட்கொண்ட புராணம் | ... 23 |
| அதிபத்தர் | ... 625 |
| அப்பாலுமடிச்சார்ந்தார் | .. 654 |
| அப்பூதியடிகள் | ... 281 |
| அமர்நீதியார் | ... 81 |
| அரிவாட்டாயர் | ... 142 |
| ஆனாயர் | ... 146 |
| இசைஞானியார் | ... 664 |
| இடங்கழியார் | ... 644 |
| இயற்பகையார் | ... 66 |
| இளையான்குடி மாறர் | ... 72 |
| உருத்திரபசுபதியார் | ... 162 |
| எறிபத்தர் | .. 89 |
| ஏயர்கோன் கலிக்காமர் | 494 |
| ஏனாதிநாதர் | ... 97 |
| ஐயடிகள்காடவர்கோன் | ... 633 |
| கணநாதர் | ... 614 |
| கணம்புல்லர் | ... 635 |
| கண்ணப்பர் | ... 103 |
| கலிக்கம்பர் | ... 628 |
| கலியர் | ... 629 |
| கழறிற்றறிவார் | ... 585 |
| கழற்சிங்கர் | ... 642 |
| காரியார் | ... 636 |
| காரைக்காலம்மையார் | ... 271 |

| புராணம் | பக்கம் |
|---|---|
| குங்குலியக்கலயர் | ... 132 |
| குலச்சிறையார் | ... 268 |
| கூற்றுவர் | ... 615 |
| கோச்செங்கட்சோழர் | ... 659 |
| கோட்புலியார் | ... 648 |
| சடையனார் | ... 664 |
| சண்டேசுரர் | .. 190 |
| சத்தியார் | ... 632 |
| சாக்கியர் | ... 568 |
| சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் | ... 651 |
| சிறப்புலியார் | ... 571 |
| சிறுத்தொண்டர் | ... 572 |
| செருத்துணையார் | ... 645 |
| சோமாசிமாறர் | ... 567 |
| தண்டியடிகள் | ... 561 |
| திருக்குறிப்புத் தொண்டர் | ... 169 |
| திருஞானசம்பந்தர் | ... 299 |
| திருநாவுக்கரசர் | ... 201 |
| திருநாளைப்போவார் | ... 164 |
| திருநீலகண்டர் | ... 59 |
| திருநீலகண்ட யாழ்ப்பாணர் | ... 662 |
| திருநீலநக்கர் | ... 288 |
| திருமூலர் | ... 557 |
| திருவாரூர்ப் பிறந்தார் | ... 652 |
| தில்லைவாழந்தணர் | ... 58 |
| நமிநந்தியடிகள் | ... 293 |
| நரசிங்கமுனையரையர் | ... 623 |
| நின்றசீர் நெடுமாறர் | ... 637 |

| புராணம் | பக்கம் |
|---|---|
| நேசர் | ... 658 |
| பத்தராய்ப்பணிவார் | ... 650 |
| பரமனையே பாடுவார் | ... 651 |
| புகழ்ச்சோழர் | ... 617 |
| புகழ்த்துணையார் | ... 647 |
| பூசலார் | ... 655 |
| பெருமிழலைக் குறும்பர் | ... 269 |
| பொய்யடிமையில்லாத புலவர் | ... 617 |
| மங்கையர்க் கரசியார் | ... 657 |
| மானக்கஞ்சாறர் | ... 137 |
| முப்போதும் திருமேனி தீண்டுவார் | ... 652 |

| புராணம் | பக்கம் |
|---|---|
| முருகர் | ... 160 |
| முழுநீறு பூசியமுனிவர் | ... 653 |
| முனையடுவார் | ... 640 |
| மூர்க்கர் | ... 565 |
| மூர்த்தியார் | ... 153 |
| மெய்ப்பொருளார் | ... 76 |
| வாயிலார் | ... 638 |
| விறன்மிண்டர் | ... 79 |
| திருமுறைகண்ட புராணம் | ... 675 |
| திருத்தொண்டர் புராண வரலாறு | ... 684 |





1. திருமலைச் சருக்கம் ... 3
2. தில்லைவாழந்தணர் சருக்கம் ... 58
3. இலைமலிந்த சருக்கம் ... 89
4. மும்மையால் உலகாண்ட சருக்கம் ... 153
5. திருநின்ற சருக்கம் ... 201
6. வம்பறுவரி வண்டுச் சருக்கம் ... 299
7. வார்கொண்ட வனமுலையாள் சருக்கம் ... 568
8. பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம் ... 617
9. கறைக்கண்டன் சருக்கம் ... 635
10. கடல் சூழ்ந்த சருக்கம் ... 642
11. பத்தராய்ப்பணிவார் சருக்கம் ... 650
12. மன்னியசீர்ச் சருக்கம் ... 655
13. வெள்ளானைச் சருக்கம் ... 665

உ

சிவமயம்

# பெரியபுராண வரலாறு

∘∘○∘∘∘ ★ ∘∘○∘∘∘

**பெரிய புராணம் :** பெரியர் புராணம் என்பது பெரிய புராணம் எனவழங்குகின்றது. இதற்கு ஆசியர் இட்டபெயர் திருத்தொண்டர் புராணம் என்பதாகும். இதன் ஆசிரியர் தெய்வச் சேக்கிழார் பெருமானார்.

**ஆசிரியரது வரலாறு :** "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோ ருடைத்து" என்றபடி, தொண்டை மண்டலம் என்பது இவரது நாடு. "தீய வென்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத் தூய மாந்தர்வாழ் தொண்டை நாட்டியல்பு சொல் வரைத்தோ" என்று ஆசிரியர் இந்நாட்டுச் சிறப்பினை எடுத்தருளியுள்ளார். அஃது 24—கோட்டங்களை (உட்பிரிவுகளை) உடையது. அவற்றுட் சிறந்தது **புலியூர்க் கோட்டம்.** அதன் உட்பிரிவுகள் பலவற்றுள்ளும் சிறந்து விளங்குவது **குன்றத்தூர் வளநாடு.** அதனுட் பலவூர்களிலும் பெருமையுடன் விளங்குவது **குன்றத்தூர்** என்ற பதியாகும். அந்நகரில் வழிவழிச் சைவ மரபின் வந்த வேளாண் குடிகள் பல வாழ்ந்தன. அவற்றுட் சிறந்தது **சேக்கிழார்** மரபு. அக்குடி செய்த பெருந்தவப் பயனாய் **அருண்மொழித் தேவரும்,** அவர் தம்பியார் பாலறாவாயரும் வந்தவதரித்து வாழ்ந்தனர். சேக்கிழார் குடிவிளங்கக் குலவிளக்காக அவதரித்த பெருமானாதலின், அருண்மொழித் தேவருக்குச் சேக்கிழார் என்ற குடிப் பெயரே பெயராக வழங்குவதாயிற்று. அவரே பெரிய புராணத்தின் ஆசிரியர்.

அந்நாளில் சோழநாட்டை ஆண்ட அரசர் **குலோத்துங்க சோழர்** (அநபாயர்). அவரது விழுத்தகைமையினையும் அறிவின் மேம்பாட்டினையும் கேட்டு அவருக்கு **உத்தம சோழப் பல்லவன்** என்ற உயர் பட்டம் கொடுத்து அவரைத் தமது

முதன் மந்திரியாக ஆக்கிக்கொண்டார். அவரும் அவ்வாறே அமைச்சர் தொழில் பூண்டு அரசாங்கத்தைத் திறம்பட நடத்தி வந்தார். சோழநாட்டுத் திருநாகேச்சுரத்தில் எழுந்தருளியுள்ள இறைவரிடத்து மிகுந்த அன்பு பூண்டு, அவரைத் தமது ஆன்ம நாயகராகக்கொண்டு வழிபட்டு வந்தார். அத்தலத்தில் திருப் பணிகள் பலவும் செய்தார். ஆங்கு உள்ள நடராசரது சபையும் மண்டபமும் அவரது திருப்பணியே யாகும் தமது ஊராகிய குன்றத்தூரிலே தமது மனைக்கட்டு இடத்தில் சிவாலயம் தாபித்து, அதற்குத் திருநாகேச்சுரம் என்று பேரிட்டுப் பூசைக் குரிய நிபந்தங்களும் செய்தமைத்தனர். அவ்வூரில் தமக்கிருந்த நிலம் முதலியவற்றை அக்கோயில் பூசைக்குப் பயன்படுமாறு நியமஞ் செய்தனர்.

அந்நாளில் பலரும் பாராட்டியது போலவே, அநபாய சோழனாகிய அரசனும் சீவகசிந்தாமணி என்னும் சமண சமயக் காவிய நூலைப் பெரிதும் பாராட்டி, அதனுள் மகிழ்ச்சி மிகக் கொண்டனன். அரசனை உண்மை நெறியில் திருத்துதலும் அமைச்சரது பெருங் கடமைகளுள் ஒன்றாதலின், "அஃது இம் மைக்கும் மறுமைக்கும் ஆகாத பொய்க்கதை; அதனைப் படித் தல் வீணேயாம்" என்று அரசனை அறிவுறுத்தினர். அரசன் 'அப்படியாயின் உண்மையான தவகதை எது?' என்று கேட் கத் "திருவாரூர்ப் பெருமான் - தில்லைவாழந்தணர் - என்று அடி யெடுத்துக் கொடுக்க, நம்பியாரூரர் திருத்தொண்டத் தொகை பாடி அடியார்களைத் துதித்தனர். அவர்களது வரலாறுகளைத் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் உணர்த்தி யருள, உணர்ந்த நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந் தாதி பாடித் துதித்தனர்; சிவாலய முனிவர் முதலிய பெரியோர் கள் கேட்டு வழிபட்டனர். அவ்வரலாறுகளே இம்மைக்கும் மறு மைக்கும் உறுதி தரத்தக்க வரலாறுகளாகும்" என்று அவற்றை அரசன் கேட்க விரித்துரைத்தனர். அதுகேட்ட அரசன் மிக மகிழ்ந்து அவற்றை விரித்து ஒரு பெருங் காப்பியமாகச் செய்து தரும்படி வேண்டினன். அதற்கிசைந்து அருண்மொழித் தேவர் தில்லைநகர் சார்ந்து நடராசரை வணங்கி வேண்ட, அவர் "உல

கெலாம்'' என்று அடி யெடுத்துக் கொடுத்து உணர்த்தியருள, அத்துணைகொண்டு, ஆசிரியர் இப்புராணத்தைப் பாடி முடித்தனர். அச்செய்தி கேட்டு அரசன் மிக மகிழ்ந்து தில்லைக்கு வந்து நடராசரையும் ஆசிரியரையும் வணங்கி, நடராசரது அருளாணையின்படி ஆசிரியர் ஆயிரக்கால் மண்டபத்திருந்து பொருள் விரித்துரைத்திட அதனை இனிது கேட்டனன். அதற்குப் பல இடங்களுக்கும் ஓலை போக்கிச் சிற்றரசர் மந்திரிகள் முதலிய பலரையும் வரச்செய்து தில்லைவாழந்தணர், மடபதிகள் முதலியோர்களுடன் இருந்து சித்திரைத் திருவாதிரை நாள் தொடங்கி ஏதிராண்டு சித்திரைத் திருவாதிரையில் அரங்கேற்றுரை ஆசிரியர் நிகழ்த்தக் கேட்டு மகிழ்ந்தனன். வந்தவர்களுக்கெல்லாம் உணவு உறையுள் முதலியவற்றைக் குறைவற அரசன் தானே ஏவிச் செய்தமைத்தனன். நடராசருக்கு நாடோறும் படியமுதும், நமகபூசை முதலிய சிறப்புக்களும், தில்லைவாழந்தணர்களுக்கும் மடபதிகளுக்கும் படியமுதும் செய்வித்தனன். புராணவுரை நிறைவாயினபின் ஆசிரியரையும் புராணத் திருமுறையினையும் யானைமேல் ஏற்றித் தானும் ஏறி இணைக் கவரி இரண்டு கையினுலும் வீசி "இதுவன்றோ! நான்செய்த தவப்பயன்' என்று உண் மகிழ்ந்தனன். அதன்பின், ஆசிரியருக்கு ஞானமுடிசூட்டித் "**தொண்டர்சீர் பரவுவார்**" என்ற பெயரும் சூட்டி அரசனும் ஏனை அனைவரும் வணங்கினர். புராணத் திருமுறையினை, முன் நம்பியாண்டார் நம்பிகள் கோவைசெய்த பதினொரு திருமுறைகளுடன் சேர்த்துப் பன்னிரண்டாவது திருமுறை என்று நியமித்துச் செப்பேடு செய்து நடராசர் சந்நிதியில் ஏற்றுவித்தனன். ஆசிரியரது தம்பியார் பாலறுவாயரை அழைத்து அவருக்குத் "**தொண்டைமான்**" என்று பட்டம் அளித்து, அவரை அரசன் தமது மந்திரியாராக அமைத்துக் கொண்டனன். ஆசிரியர் பெருமான் தில்லைநகரிலே இருந்து அறுபத்துமூன்று நாயன்மார் சரிதங்களை யுணர்ந்துகொண்டு அடியார்களுடன் கூடி அருந்தவத்தினிலிருந்து பின் அம்பலவாணரது எடுத்த பாத நிழல் எய்தினர்.

**சரித ஆராய்ச்சிக் குறிப்புகள**: ஆசிரியரது இயற்பெயர் 'அருண்மொழித் தேவர்' என்பதாகும். **அருண்மொழி** என்பது இறைவ

ரது திருப்பெயர்களுள் ஒன்று. சேக்கிழார் குடியிற் பிறந்து அக் குடியினை விளக்கும் குலவிளக்காக நிற்பதனுல் இவருக்குச் சேக் கிழார் என்ற பெயர் வழங்குவதாயிற்று. இளஞ்சேக்கிழார் பழந் தமிழ் நூல்களில் மிக வல்லவராய் விளங்கியதோடு திருக்குறளைப் பெரிதும் பயின்று சிறந்தனர் என்பர். புராணம் பாடியரங் கேற்றிய பின்னர், ஆசிரியர் திருத்தில்லையிலே சிவத்தியானத்தில் அமர்ந்தும் திருத்தொண்டர் சரிதங்களை உணர்ந்தும் சிவனடி யார்களுடனிருந்து தவம் புரிந்தும் தமது வாழ்நாளின் பிற்பகுதி யைக் கழித்துச் சிவனடி சேர்ந்தனர். புராணம் பாடியபின் உலகச் சூழல் தானே அவரை விட்டொழிந்தது. அவருக்குப் பின் அவர் தம்பியாரையே அரசர் தமது அமைச்சராகக் கொண்டனர் என்றும், அதன் பின் வந்த அரசர்களுக்கும் வழி வழியாக அவ ரது பரம்பரையினரே அமைச்சர்களாக விளங்கினர் என்றும் உமாபதி சிவாசாரியர் அறிவிக்கின்ருர்.

ஆசிரியர் வாழ்ந்த காலம் குலோத்துங்க சோழர் II (அநபா யர்) காலம் என்பது இப்போது ஆராய்ச்சியாளர் பலரும் கொள் ளும் கொள்கையாம். அஃது இப்போதைக்கு எண்ணூறு ஆண்டு களுக்கு முற்பட்டதாகும். கலிங்கத்துப் பரணி பாடிய செயங் கொண்டார் ஆசிரியர் காலத்துக்கு முன்னும், ஒட்டக்கூத்தர் அவர் காலத்து உடனும், கம்பர் அவர் காலத்துக்குப் பின்னரும் வாழ்ந்திருந்தனர் என்னலாம்.

ஆசிரியர் சோழநாட்டுத் திருநாகேச்சுரத்து இறைவரைத் தமது ஆன்மார்த்த நாயகராகக் கொண்டு வழிபட்டுவந்தனர் என்று உமாபதியார் அறிவிக்கின்ருர். அங்கு அவர் பலகாலம் தங்கிப் பல திருப்பணிகளும் செய்திருக்கின்ற செய்தி இப்போ தும் காணத்தக்கது. அங்குள்ள இறைவரை வழிபட்ட நல் வினைப் பயனுலே அவரது தாயார் அவரையும், அவரது தம்பி யாரையும் பெற்றெடுத்தனர் என்றும், அத்தொடர்பு பற்றியே அவர் அத்தலத்தில் பலகாலந் தங்கியும் அதனைத் தமது அரசியல் அலுவலகமாகவும் வழிபடு தலமாகவும் கொண் டொழுகினர் என்றும், அந்நினைவு பற்றியே தமது ஊரில் (குன்றத்தூரில்) திருநாகேச்சுரக் கோயில் அமைத்தனர் என்

றும் கருத இடமுண்டு. "மாநாக மருச்சித்த மலர்க்கமலத் தாள் வணங்கி, நாணுளும் பரவுவார் பிணிதீர்க்கு நலம்போற்றி" (திருஞான - புராணம் · 412) என்ற ஆசிரியர் திருவாக்கும் இதற்கு ஆதரவு தருகின்றது. ஆசிரியர் இப்புராணம் தவிர வேறொரு நூலும் இயற்றியதாகத் தெரியவில்லை.

இப்புராணத்துக்கு ஆதரவுகளாவன ; திருத்தொண்டத் தொகை முதனூலும், நம்பியாண்டார் நம்பிகளது திருத்தொண்டர் திருவந்தாதி வழிநூலுமாம். இப்புராணம் அவற்றின் வழியேவந்த விரிநூலும் சார்பு நூலுமாம். மேலும் இதற்கு அடிநிலையாகவுள்ளன மூவர் முதலிகள் அருளிய திருநெறித் தமிழாகிய தேவாரங்களும், ஏனைய திருமுறைகளாகிய அருணூல்களுமாம். மூவரோது திருநெறித் தமிழும், அம்மையாரது அருணூல்களும், சேரமான் பெருமாணுயனரது அந்தாதி, உலா, கோவை என்றவையும், ஐயடிகளாரது திருவெண்பாவும், திருமூலர் திருமந்திரமாலையும் என்னும் இவை இதற்கு உறுப்பாகவும், பொருள்கோள் உயிராகவும், விருத்தப்பா உடலாகவும் கொண்டு, இது நாலடியால் "உலகெலாம்" நடந்தது என்று சுவைபட அறிவிக்கின்றனர் உமாபதி சிவாசாரிய சுவாமிகள். இனி அமைச்சர் பெருமாளுகிய ஆசிரியர் அரசாங்கஞ் செலுத்தலில் தாங்கண்ட கல்வெட்டு செப்பேடு முதலிய சாசனங்களும், உலக வழக்கில் வழிவழி வந்த உண்மைச் சரித வரலாறுகளும், அவைபற்றி அங்கங்குமுள்ள சான்றுகளும், பிறவும் இதற்கு ஆதரவாயின என்னில் இழுக்காகாது. ஆனால், இவற்றைத் தேடி எடுத்துப் பிடித்தே ஆசிரியர் புராணமியற்றினர் என்றல் பொருந்தாது. இவை எல்லாவற்றுக்கும் மேலாய் அம்பலவாணர் அடியெடுத்துக் கொடுத்தும் உண்ணின்றுணர்த்தியும் காட்டியருள அத்திருவருளொடு அத்துவிதமாய் நின்று ஞானக் கண்ணாலே கண்டறிந்தபடி தாமற்ற நிலையில் ஆசிரியர் பாடினர் என்பதே உண்மை. 'யானறிந்தபடி பகர்ந்தேன்' (திருநா–புராணம் . 429), 'அறிந்தபடி துதிசெய்தேன்' (திருஞான–புராணம் . 1256) என்று ஆசிரியர் கூறுவனவற்றுக்கு - திருவருள் அறிவிக்க அறிந்தவாறே - என்றே பொருள் கொள்ளுதல் அமைவுடைத்து.

இது முழுதும் இறைவர் ஆசிரியர் வாக்கின் மூலம் வெளிப் படுத்திய அருள் வாக்காகிய வேதமேயாம் இஃது உபமன்னிய பக்த விலாசம் என்ற வட மொழிநூலின் மொழிபெயர்ப்பு என்போர் சிலர். அது முற்றிலும் தவறு. இது தனித் தமிழ் நூலேயாம். 'என்று மாமுனி வன்றொண்டர் செய்கையை, அன்று சொன்னபடியால்' என்று திருமலைச்சிறப்பில் ஆசிரியர் அருளியது நூல்வந்த வழியினை உணர்த்துவதே யன்றிப் பிறி தன்று.

**இப்புராணத்தின் பயனுவது** மக்களின் சிந்தை யிருள் போக்கி ஞானவெளி தந்து இகத்தும் பரத்தும் இன்ப மளித் துப் பேரின்ப முத்தி உதவுதலேயாம். பேரின்ப வீடு பெறச் **சாதன** மாவதன்றி இதுவே அடையப்படு பொருளாகிய **சாத் தியமு**மாம் என்பது ஆசிரியரது பிற்றை வாழ்நாட் சரித வர லாற்றினுல் அறியப்படும். கலைஞானங்களை அறிந்து ஒழுகும் உலகியல் நல்வாழ்வுக்கும் இது பெருந்துணை யாகும்.

இதனை ஆசிரியர் இரண்டு காண்டங்களாகவும், பதின்மூன்று சருக்கங்களாகவும் வகுத்து **நாலாயிரத்து இருநூற்றைம்பத்து மூன்று** விருத்தச் செய்யுட்களால் பாடி முடித்துத் திருத் தொண்டர் புராணம் என்று பெயரும் சூட்டியருளினர். இப் போதுள்ள பதிப்புக்களில் இத் தொகைக்கு மேல் 33 பாட்டுக் கள் இடைச் செருகல் களாகப் பிற் காலத்தவரால் பல இடத் தும் செருகப்பட்டுள்ளன அவற்றை அன்ன என்று கண்டு பிடித்து விலக்கிக் கொள்ளுதல் எளிதேயாம்.

இப்புராண கதைகளைச் சிவபெருமான் உமாதேவி யாருக்கு உபதேசித்த வரலாறு சிவரகசியத்துள் ஒன்பதாவது கண்டததிலே கேட்கப்படும். கயிலைமலைச் சாரலில் உபமன்னிய முனிவர், பெருமுனிவர்கள் பலருக்கும் சொல்லியருளினர். திரு வாரூர்த் தியாகேசப் பெருமான் ஆளுடைய நம்பிகளுக்கு அடி யெடுத்துக் கொடுத்து உண்ணின்றுணர்த்தி யருளினர். திரு நாரையூர்ப பொல்லாப் பிள்ளையார் நம்பியாண்டார் நம்பிக ளுக்கு அடியார்களது பதி, நாடு, மரபு, தொண்டு முதலிய வற்றை உணர்த்தி யருளினர். தில்லையம்பலவாணர் ஆசிரியர்

பெருமானுக்கு உணர்த்தியருளிய செய்தி முன் உரைக்கப் பட்டது.

இப்பதிப்பு: இவ்வாறுள்ள அரும்பெரும் ஞான நூலினை மக்கள் எத்துணையும் பயின்று பயன்பெறுதல் ஒவ்வொருவருடைய இன்றியமையாத பெருங் கடமையாகும். ஆனால் இந் நாளில் அதனைப் பயில்வார் அரிதாகி வருதல் வருந்தத்தக்கதாம். அவ்வாறு பயில முயல்வார் சிலருக்கும் இப்புராணப் பிரதிகளும் ஏனைய திருமுறைகளும் எளிதில கிடைத்தல் அரிதாகி நிகழும் காலக்கொடுமை அதனினும் பெரிதும் வருந்தத்தக்கதாம். இக் குறையை நீக்கும்படி திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் அதிபர் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** திருவுளங்கொண்டு தேவாராதி ஏனைய திருமுறைகளை எல்லாம் அச்சிட்டுச் சைவ உலகத்துக்கு எளிதின் ஈந்தருளியது போலவே, பன்னிரண்டாம் திருமுறையாகிய இப்பெரிய புராணத்தினையும் அச்சிட்டு உதவியருளத் திருவுளங் கொண்டது சைவ உலகமும் தமிழுலகமும் செய்த தவப்பேறேயாகும். அவ் வடிகளார் இவ்வாறு எண்ணி எண்ணிச் செய்துவரும் பேரறங்கள் எண்ணிலடங்காதபடி பெருகி வருகின்றதனை உலகமறியும். **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமிகள் அவாகள் செய்துவரும் நல்லறஙகள் யாவும் மேன்மேலும் பெருகி நீடுவாழ்க! அவர்களும் அவாகளது திருமடத்தின் திருமரபும வளர்ந்து நீடுவாழக! இப்** பதிப்பில் அவர்களது அருள் ஆணை வழிநின்று எல்லா உரிமைப் பணிகளும் செய்த எல்லாப் பெருமக்களும் நீடுவாழ்க! **சேக்கிழார் பெருமான் சேவடி வாழ்க!**

இப்பதிப்பின்கண் அடியேனையும் பொருட்படுத்தி இவ்வரலாறு எழுதும்படி ஆணை தந்து இதிற் கலந்துகொள்ளும்படி அருளிய அடிகளாரது திருவடிகளுக்கு எனது கடப்பாடுடைய நன்றி செலுத்தி வணங்குகின்றேன்.

சேக்கிழார் நிலையம்
கோயம்புத்தூர்
5—8—'50

இங்ஙனம்
அடியார்க்கு அடியேன்
**C. K. சுப்பிரமணிய முதலியார்**

# குறிப்பு

சேக்கிழாரின் தந்தை வெள்ளியங்கிரி முதலியார் என்பதும், தாய் அழகாம்பிகை என்னும் அம்மையார் என்பதும் கர்ணபரம்பரைச் செய்தியாகும். சேக்கிழார் என்றபெயர் குடிப்பெயர். இது சேலூர்க்கிழார் என்பதன் மரூஉப்பெயர் என்பர். சேலூர் வடார்க்காடு ஜில்லா ஆரணி ஜாகீரை அடுத்துள்ள ஒரு கிராமமாகும். சேக்கிழாரின் பிள்ளைத் திருநாமம் அருண்மொழித்தேவர்; இப்பெயரை உமாபதி சிவாசாரியர் சிறப்புப்பெயர் என்பர். சேக்கிழாரது தெய்வ வாக்குப் பற்றி எழுந்த பெயர் இப்பெயர் என்று சில அறிஞர் கூறுவர். அருண்மொழி என்பது அக்காலத்துச் சோழ மன்னனின் பெயர். "புனற் பொன்னியாறுடை சோழன் அருண்மொழிக்கு" என்பது திருமலைக் கல்வெட்டு. அருண்மொழி என்பது முதல் இராசராசனுக்கு உரிய பெயர் என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். தம் அரசரிடத்து அன்புள்ள மக்கள் தம் மக்களுக்கு அவ்வரசனின் பெயரை இட்டு வழங்குதல் மரபு. இராசராசன் சிவபத்தியில் சிறந்து விளங்கினமையால், சேக்கிழாருக்குத் தந்தையார் அருண்மொழித் தேவர் என்ற பெயரைச் சூட்டினார் போலும்.

அன்றியும், திருமழபாடி சிவாலயத்திலுள்ள ஒரு சாசனத்தில், "ஜெயங்கொண்ட சோழமண்டலத்து... குன்றத்தூர் நாட்டுக் குன்றத்தூர்ச் சேக்கிழான் மாதேவடிகள் ராமதேவனுன உத்தமசோழப் பல்லவராயன்" என்று குறிக்கப்பட்டுள்ளது. ஆதலால், இராமதேவர் என்பது சேக்கிழாருக்கு ஓர் இயற்பெயராகும் என்பதும் தெரிகின்றது.

'நரசிங்க முனையரையர்' என்னும் சிவனடியாரும், திருவிசைப்பா பாடிய 'புருடோத்தம நம்பி' என்னும் சிவனடியாரும் திருமால் பெயர்களைத் தம் பெயர்க

ளாகக் கொண்டிருத்தல் போலவே, நம் சேக்கிழார் பெருமானுக்கும் பெற்றோர் **இராமதேவர்** என்ற பெயரை இட்டனர் போலும்.

திருமழபாடி சாசனத்தில் சேக்கிழாரின் சிவனடிமைத்திறத்தைக் குறிப்பிட, அவருக்கு, '**மாதேவடிகள்**' (மாதேவர்க்குச் சிறந்த அடியார்) என்ற சிறப்புப் பெயர் ஒன்றும் வழங்குகிறது. இதனை, "**குன்றை முனி** சேக்கிழார்" (84), "அண்டவாணர் அடியார்கள் **தம்முடன் அருந்தவத்தினில் இருந்து**" (100) எனச் சேக்கிழார் புராணமும் வலியுறுத்துகிறது.

**வைகாசிப் பூசம்** சேக்கிழாரது திருநட்சத்திரமாகும்.

2-ம் குலோத்துங்க சோழனே அநபாயன் என ஆராய்ச்சியாளர் கூறுவர். அவன் ஆட்சிக் காலம் கி. பி. 1133—1146 ஆகும். ஆகவே, அவன் அமைச்சராகிய சேக்கிழார் காலம் கி. பி. 12-ம் நூற்றாண்டின் முற்பகுதி ஆகும்.

சிலர் சேக்கிழாரை கி. பி. 1012—1032 வரை ஆண்ட இராசராசன் மகனான இராசேந்திர சோழன் காலத்தவர் என்றும், வேறுசிலர், கி. பி. 1146—1164 வரை ஆண்ட இரண்டாம் இராசராசன் காலத்திற்குப் பின்னும் விளங்கியவர் என்றும் கூறுவர்.

பத்திச் சுவைநனி சொட்டச் சொட்ட விளங்கும் இத்திருத்**தொண்டர் புராண**த்தில் முதல், இடை, கடை முறையே அமைந்துள்ள, "**உலகெலாம்** உணர்ந்து...... வணங்குவாம்" (பாயிரம்-1), "சோதிமுத்தின்...... **உய்ய உலகெலாம்**" (திருஞான......புராணம் - 216), "என்றும் இன்பம்......நிலவி **உலகெலாம்**" (வெள்ளானைச் சருக்கம் - 53) இம்மூன்றினையும் மூன்று உயிர் நாடிகளாகப் பெரியோர் கருதுகின்றனர்.

—**பதிப்பாசிரியர்.**

## சேக்கிழார் துதி

"தொகையா நாவ லூராளி
        தொடுத்த திருத்தொண் டப்பெருமை
வகையால் விளங்க உயர்நம்பி
        யாண்டார் வகுப்ப மற்றதனைத்
தகையா அன்பின் விரித்துலகோர்
        தம்மை அடிமைத் திறப்பாட்டின்
உகையா நின்ற சேக்கிழான்
        ஒளிர்பொற் கமலத் தாள்பணிவாம்."

—திருவானைக்காப் புராணம்.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# பெரிய புராணம்

என்று வழங்குகின்ற

# திருத்தொண்டர் புராணம்

## பாயிரம்

°°○○★○○°°

### வாழ்த்து

உலகெ லாம்உணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். ௧

ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மான டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ. ௨

எடுக்கும் மாக்கதை இன்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள இருத்துவாம். ௩

### திருக்கூட்டம்

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொல்மலர்ப்

பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே. 4

### அவையடக்கம்

அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாஅடி யாரபுகழ் கூறுகேன்
அளவு கூட உரைப்பரி தாயினும்
அளவி லாசை துரப்ப அறைகுவேன். 5

தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு தெண்கடல் ஊற்றுண்[1] பெருநசை
ஒருசு ணங்கனை ஒக்குந் தகைமையேன். 6

செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால். 7

மேய இவ்வுரை கொண்டு விரும்புமாம்
சேய வன்திருப் பேரம்ப லம்செய்ய
தூய பொன்னணி சோழன்நீ டூழிபார்
ஆய சீர்அந பாயன் அரசவை. 8

அருளின் நீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளில் நீரிது செப்புதற் காம்எனின்
வெருளில் மெய்ம்மொழி வான்நிழல் கூறிய
பொருளின் ஆகும எனப்புகல் வாம்அன்றே. 9

### நூற்பெயர்

இங்கிதன் நாமம் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டில் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர்புராணம் என்பாம்.

---

[1] ஊற்றும் என்றும், உறறுண் என்றும் பாடம்.

## முதற்காண்டம்

## 1. திருமலைச் சருக்கம்

## 1. திருமலைச் சிறப்பு

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யான்என்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. 1

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணும் மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது. 2

நிலவும் எண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளிர் ஆகஎ ழுந்ததோர்
உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை. 3

மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையின் ஓசையும் காரெதிர்
தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்
வான துந்துபி ஆர்ப்பும்[1] மருங்கெலாம். 4

பணிவி சும்பில் அமரர் பணிந்துசூழ்
அணித கோடி அணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையும்
முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம். 5

நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின்
நாடும் ஐம்பெரும் பூதமும் நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி ஆடும் பரப்பது பாங்கெலாம். 6

---

[1] ஆர்பப எனறும் பாடம்.

நாய கன்கழல் சேவிக்க நான்முகன்
மேய காலம் அலாமையின் மீண்டவன்
தூய மால்வரைச் சோதியில் மூழ்கியொன்
றாய அன்னமும் காணு தயர்க்குமால். 7

காதில்வெண் குழையோன் கழல்தொழ நெடியோன் காலம் பார்த் திருந்ததும் அறியான், சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையில் துதிக்கையோன் ஊர்தியைக் கண்டு, மீதெழு பண்டைச் செஞ்சுடர்[1] இன்று வெண்சுட ரானதென் றதன்கீழ், ஆதிஏனமதாய் இடக்கலுற் றான்என் றதனைவந் தணைதரும் கலுழன்.[2] 8

அரம்பைய ராடல் முழவுடன் மருங்கில் அருவிகள் எதிரெதிர் முழங்க, வரம்பெறு[3] காதல் மனத்துடன் தெய்வ மதுமலர் இருகையும் ஏந்தி, நிரந்தரம் மிடைந்த விமானசோ பானநீடுயர் வழியினல் ஏறிப், புரந்தரன் முதலாங் கடவுளர் போற்றப் பொலிவதத் திருமலைப் புறம்பு. 9

வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம் விண்ணவர் எண்ணிலார் மற்றும், காதலால் மிடைந்த முதற்பெருந் தடையாம் கதிர்மணிக் கோபுரத் துள்ளார்,[4] பூதவே தாளப் பெருங்கணநாதர் போற்றிடப் பொதுவில்நின் றாடும், நாதனர் ஆதி தேவனர் கோயில் நாயகன் நந்தியெம் பெருமான். 10

நெற்றியிற் கண்ணர் நாற்பெருந் தோளர் நீறணி மேனியர் அனேகர், பெற்றமேல் கொண்ட தம்பிரான் அடியார் பிஞ்ஞகன் தன்னருள் பெறுவார், மற்றவர்க் கெல்லாம தலைமையாம் பணியும் மலர்க்கையில் சுரிகையும் பிரம்பும், கற்றைவார் சடையான் அருளினல் பெற்றான் காப்பதக் கயிலைமால் வரைதான். 11

கையில்மான் மழுவர் கங்கைசூழ் சடையில் கதிரிளம் பிறைநறுங் கண்ணி, ஐயர்வீற் றிருக்குந் தன்மையி னுலும் அளப்பரும் பெருமையி னுலும், மெய்யொளி தழைக்குந் தூய்மையி னுலும் வென்றிவெண் குடைஅந பாயன், செய்யகோல் அபயன் திருமனத் தோங்குந் திருக்கயி லாயநீள் சிலம்பு. 12

[1] செழுஞ்சுடா என்றும் பாடம். [2] இதனை வெள்ளிப்பாடல் என்பர்.
[3] பெறுங் என்றும் பாடம். [4] துள்ளான் என்றும் பாடம்.

அன்ன தன்திருத் தாழ்வரை யின்இடத்(து)
இன்ன தன்மையன் என்றறி யாச்சிவன்
தன்னை யேஉணர்ந் தார்வம் தழைக்கின்றான்
உன்ன ருஞ்சீர் உபமன் னியமுனி. 13

யாத வன்துவ ரைக்கிறை யாகிய
மாத வன்முடி மேலடி வைத்தவன்
பூத நாதன் பொருவருந் தொண்டினுக்(கு)
ஆதி அந்தம் இலாமை அடைந்தவன். 14

அத்தர் தந்த அருட்பாற் கடலுண்டு
சித்தம் ஆர்ந்து தெவிட்டி வளர்ந்தவன்
பத்த ராய முனிவர்பல் லாயிரர்
சுத்த யோகிகள் சூழ இருந்துழி. 15

அங்கண் ஓரொளி ஆயிர ஞாயிறு
பொங்கு பேரொளி போன்றுமுன் தோன்றிடத்
துங்க மாதவர் சூழ்ந்திருந் தாரெலாம்
“இங்கி தென்கொல் அதிசயம்” என்றலும். 16

அந்தி வான்மதி சூடிய அண்ணல்தாள்
சிந்தி யாஉணர்ந் தம்முனி “தென்திசை
வந்த நாவலர் கோன்புகழ் வன்றொண்டன்
எந்தை யார்அரு ளால்அணை வான்”என. 17

கைகள் கூப்பித் தொழுதெழுந் தத்திசை
மெய்யில் ஆனந்த வாரி விரவிடச்
செய்ய நீள்சடை மாமுனி செல்வுழி
ஐயம் நீங்க வினவுவோர் அந்தணர். 18

“சம்பு வின்அடித் தாமரைப் போதலால்
எம்பி ரான்இறைஞ் சாயிஃ தென்”எனத்
“தம்பி ரானைத்தன் உள்ளம் தழீஇயவன்
நம்பி ஆரூரன் நாம்தொழும் தன்மையான்.” 19

என்று கூற இறைஞ்சி இயம்புவார்
“வென்ற பேரொளி யார்செய் விழுத்தவம்

நன்று கேட்க விரும்பும் நசையினேம்
இன்றெ மக்குரை செய்தருள்" என்றலும். 20

உள்ள வண்ணம் முனிவன் உரைசெய்வான்
"வெள்ள நீர்ச்சடை மெய்ப்பொரு ளாகிய
வள்ளல் சாத்தும் மதுமலர் மாலையும்
அள்ளும் நீறும் எடுத்தணை வானுளன். 21

அன்ன வன்பெயர் ஆலால சுந்தரன்
முன்னம் ஆங்கொரு நாள்முதல் வன்தனக்(கு)
இன்ன ஆமெனும் நாண்மலர் கொய்திடத்
துன்னி னான்நந் தனவனச் சூழலில். 22

அங்கு முன்னெமை[1] ஆளுடை நாயகி
கொங்கு சேர்குழற் காமலர் கொய்திடத்
திங்கள் வாள்முகச் சேடியர் எய்தினார்
பொங்கு கின்ற கவினுடைப் பூவைமார். 23

அந்த மில்சீர் அனிந்திதை ஆய்குழற்
கந்த மாலைக் கமலினி என்பவர்
கொந்து கொண்ட திருமலர் கொய்வுழி
வந்து வானவர் ஈசர் அருளென. 24

மாத வஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடத்
தீதி லாத்திருத் தொண்டத் தொகைதரப்
போது வார்அவர் மேல்மனம் போக்கிடக்
காதல் மாதருங் காட்சியில் கண்ணினார். 25

முன்னம் ஆங்கவன் மொய்ம்முகை நாண்மலர்
என்னை ஆட்கொண்ட ஈசனுக் கேய்வன
பன்ம லர்கொய்து செல்லப் பனிமலர்
அன்னம் அன்னவ ருங்கொண் டகன்றபின். 26

ஆதி மூர்த்தி அவன்திறம் நோக்கியே
'மாதர் மேல்மனம் வைத்தனை தென்புவி

[1] முன்னரே என்றும் பாடம்.

மீது தோன்றிஅம் மெல்லிய லாருடன்
காதல் இன்பம் கலந்தணை வாய்'என. 27

கைக ளஞ்சலி கூப்பிக் கலங்கினான்[1]
'செய்ய சேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையல் மானுட மாய்மயங் கும்வழி
ஐய னே! தடுத் தாண்டருள் செய்" என. 28

அங்க ணாளன்[2] அதற்கருள் செய்தபின்
நங்கை மாருடன் நம்பிமற் றத்திசை
தங்கு தோற்றத்தில் இன்புற்றுச் சாரு'மென்(று)
அங்க வன்செயல் எல்லாம் அறைந்தனன். 29

அந்த ணாளரும் ஆங்கது கேட்டவர்
“பந்த மானுடப் பாற்படு தென்திசை
இந்த வான்திசை எட்டினும் மேற்பட
வந்த புண்ணியம் யாதெ"ன மாதவன். 30

“பொருவ ருந்தவத் தான்புலிக் காலனும்
அருமு னிஎந்தை அர்ச்சித்தும் உள்ளது
பெருமை சேர்[3] பெரும் பற்றப் புலியூர்என்(று)
ஒருமை யாளர்வைப் பாம்பதி ஓங்குமால். 31

அத்தி ருப்பதி யில்நமை ஆளுடை
மெய்த்த வக்கொடி காண விருப்புடன்
அத்தன் நீடிய அம்பலத் தாடும்மற்
றித்தி றம்பெற லாம்திசை எத்திசை. 32

பூதம் யாவையின் உள்ளலா[4] போதென
வேத மூலம் வெளிப்படு மேதினிக்
காதல் மங்கை இதய கமலமாம்
மாதொர் பாகனார் ஆரூர மலர்ந்ததால். 33

எம்பி ராட்டிஇவ் வேழுல கீன்றவள்
தம்பி ரானைத் தனித்தவத் தால்எய்திக்

[1] கலங்கிநான் என்றும் பாடம். [2] அங்கணாதன் என்றும் பாடம்.
[3] பெருமைசூழ் என்றும் பாடம். [4] யாவையுமுள்ளலர் என்றும் பாடம்.

கம்பை யாற்றில் வழிபடு காஞ்சிஎன்(று)
உம்பர் போற்றும் பதியும் உடையது. 34

நங்கள் நாதனும் நந்தி தவஞ்செய்து
பொங்கு நீடருள் எய்திய பொற்பது
கங்கை வேணி மலரக் கனலமலா
செங்கை யாளர் ஐயாறும் திகழ்வது. 35

தேசம் எல்லாம் விளக்கிய தென்திசை
ஈசர் தோணி புரத்துடன் எங்கணும்
பூச னைக்குப் பொருந்தும் இடம்பல
பேசில் அத்திசை ஒவ்வா பிறதிசை.'' 36

என்று மாமுனி வன்றொண்டர் செய்கையை
அன்று சொன்ன படியால் அடியவர்
தொன்று[1] சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
இன்றென் ஆதர வால்இங் கியம்புகேன். 37

மற்றி தற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்
புற்றி டத்தெம் புராணர் அருளினால்
சொற்ற மெய்த்திருத் தொண்டத் தொகைஎனப்
பெற்ற நற்பதி கம்தொழப் பெற்றதாம்.[2] 38

அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை
நந்தம் நாதனும் நம்பியாண் டாரநம்பி
புந்தி ஆரப் புகன்ற வகையினால்
வந்த வாறு[3] வழாமல் இயம்புவாம். 39

உலகம் உய்யவும் சைவம்நின் றோங்கவும்
அலகில் சீர்நம்பி ஆரூரர் பாடிய
நிலவு தொண்டர்தம் கூட்டம் நிறைந்துறை
குலவு தண்புனல் நாட்டணி கூறுவாம். 40

---

[1] துன்று என்றும் பாடம். [2] பெற்றதால் என்றும் பாடம். [3] வந்த வாறும் என்றும் பாடம்.

## 2. திருநாட்டுச் சிறப்பு

பாட்டியல் தமிழுரை பயின்ற எல்லையுட்
கோட்டுயர் பனிவரைக் குன்றின் உச்சியில்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையான் நவிலல் உற்றனன். 1

ஆதிமா தவமுனி அகத்தி யன்தரு
பூதநீர்க் கமண்டலம பொழிந்த காவிரி
மாதர்மண் மடந்தைபொன் மார்பில் தாழ்ந்ததோர்
ஓதநீர் நித்திலத் தாமம் ஒக்குமால். 2

சையமால் வரைபயில் தலைமை சான்றது
செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும்
உய்யவே சுரந்தளித் தூட்டும் நீரது. 3

மாலின்உந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்
சால்பினால் பல்லுயிர் தருதன் மாண்பினால்
கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையாற்
போலும்நான் முகனையும் பொன்னி மாநதி. 4

திங்கள்சூ டியமுடிச் சிகரத் துச்சியில்
பொங்குவெண் தலைநுரை பொருது போதலால்
எங்கள்நா யகன்முடி மிசைநின் றேயிழி [1]
கங்கையாம் பொன்னியாம் கன்னி நீத்தமே. 5

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பேர் அறங்களும் வளர்க்கும் ஈகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது. 6

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்(து)

---

[1] நின்றேய்ந்திழி என்றும் பாடம்.

எம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால் 7

வாச நீர்குடை மங்கையர் கொங்கையில்
பூசு குங்கும மும்புனை சாந்தமும்
வீசு தெண்டிரை மீதிழிந் தோடுநீர்[1]
தேசு டைத்தெனி னுந்தெளி வில்லதே. 8

மாவி ரைத்தெழுந் தார்ப்ப வரைதரு
பூவி ரித்த[2] புதுமதுப் பொங்கிட
வாவி யிற்பொலி நாடு வளந்தரக்
காவி ரிப்புனல் கால்பரந் தோங்குமால். 9

ஒண்து றைத்தலை மாமத கூடுபோய்
மண்டு நீர்வய லுட்புக வந்தெதிர்
கொண்ட மள்ளர் குரைத்தகை ஓசைபோய்
அண்டர் வானத்தின அப்புறஞ் சாருமால். 10

மாதர் நாறு பறிப்பவர் மாடசியும்
சீத நீர்முடி[3] சேர்ப்பவர் செய்கையும்
ஓதை யார்செய் உழுநர் ஒழுக்கமும்
காதல் செய்வதோர் காட்சி மலிந்ததே[4] 11

உழுத சால்மிக வூறித் தெளிந்தசே(று)
இழுது செய்யினுள் இந்திரத் தெய்வதம்
தொழுது நாறு நடுவார் தொகுதியே
பழுதில் காவிரி நாட்டின் பரபபெலாம். 12

மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்
கண்டுழவர் பதங்காட்டக் களைகளையுங் கடைசியர்கள்
தண்டரளஞ் சொரிபணிலம் இடறியிடை தளர்ந்தசைவார்
வண்டலையுங் குழல்அலைய[5] மடநடையின் வரம்பணைவார். 13

[1] மீதழித் தோடுநீர் என்றும் பாடம். [2] பூவிரைத்த என்றும் பாடம் [3] சீதநீண்முடி என்றும் பாடம். [4] மலிந்தவே என்றும் பாடம். [5] குழல்அசைய என்றும் பாடம்.

செங்குவளை பறித்தணிவார் கருங்குழல்மேல் சிறைவண்டை
அங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்
திங்கணுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவல் தளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார்.[5] 14

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
அரும்பல்ல முலையென்ன அமுதல்ல மொழியென்ன
வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வயல்எல்லாம். 15

கயல்பாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி உலைப்பெய்தங்
கயலாமை அடுப்பேற்றி அரக்காம்பல் நெருப்பூதும்
வயல்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம். 16

காடெல்லாங் கழைக்கரும்பு காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாங் கருங்குவளை வயலெல்லாம் நெருங்குவளை
கோடெல்லாம் மடஅன்னம் குளமெல்லாம் கடல்அன்ன
நாடெல்லாம் நீர்நாடு தனைஒவ்வா நலமெல்லாம் 17

ஆலை பாய்பவர் ஆர்ப்புறும் ஓலமும்
சோலை வாய்வண் டிரைத்தெழு சும்மையும்
ஞாலம் ஓங்கிய நான்மறை ஓதையும்
வேலை ஓசையின் மிக்கு விரவுமால் 18

அன்னம் ஆடும் அகன்துறைப் பொய்கையில்
துன்னும் மேதி படியத் துதைந்தெழும்
கன்னி வாளை கமுகின்மேற் பாய்வன
மன்னு வான்மிசை வானவில் போலுமால். 19

காவி னிற்பயி லுங்களி வண்டினம்
வாவி யிற்படிந் துண்ணும் மலர்மது
மேவி அத்தடம் மீதெழப் பாய்கயல்
தாவி அப்பொழி லிற்கனி சாடுமால். 20

---

5 வாய்மடுத் தயில்வார் என்றும் பாடம்.

சாலிநீள் வயலின் ஓங்கித் தந்நிகர் இன்றி மிக்கு
வாலிதாம் வெண்மை உண்மைக் கருவினும் வளத்த வாகிச்
சூல்முதிர் பசலை கொண்டு சுருள்விரித் தூனுக் கன்பர்
ஆலின சிந்தை போல அலர்ந்தன கதிர்க ளெல்லாம். 21

பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமிற் கூடி னார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகா தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம். 22

அரிதரு செந்நெற் சூட்டின் அடுக்கிய அடுக்கல் சேர்ப்பார்
பரிவுறத் தடிந்த பன்மீன் படர்நெடுங் குன்று செய்வார்
சுரிவளை சொரிந்த முத்தின் சுடர்ப்பெரும் பொருப்பு யர்ப்பார்
விரிமலர்க் கற்றை வேரி பொழிந்திழி வெற்பு வைப்பார். 23

சாலியின் கற்றை துற்ற தடவரை முகடு சாய்த்துக்
காலிரும் பகடு போக்குங் கரும்பெரும் பாண்டில் ஈட்டம்
ஆலிய முகிலின் கூட்டம் அருவரைச் சிமயச் சாரல்[1]
மேல்வலங் கொண்டு சூழுங் காட்சியின் மிக்க தன்றே. 24

வைதெரிந் தகற்றி ஆற்றி மழைப்பெயல்[2] மானத் தூற்றிச்
செய்யபொற் குன்றும வேறு நவமணிச் சிலம்பும் என்னக்
கைவினை மள்ளர் வானங் கரக்கவாக் கியநெற் குன்றால்
மொய்வரை உலகம் போலும் முளரிநீர் மருத வைப்பு. 25

அரசுகொள் கடன்கள் ஆற்றி மிகுதிகொண் டறங்கள் பேணிப்
பரவருங் கடவுட் போற்றிக் குரவரும் விருந்தும் பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி விளங்கிய குடிகள் ஓங்கி
வரைபுரை மாடம்நீடி மலாந்துள பதிகள் எங்கும். 26

கரும்படு களமர் ஆலைக் கமழ்நறும் புகையோ மாதர்
சுரும்பெழ அகிலால் இட்ட தூபமோ யூப வேள்விப்
பெரும்பெயர்ச் சாலை தோறும் பிறங்கிய புகையோ வானின்
வருங்கரு முகிலோ சூழ்வ மாடமும் காவும் எங்கும். 27

[1] சிகரச் சாரல் என்றும் பாடம். [2] மழைபெயல என்றும் பாடம்.

நாளிகே ரஞ்செ ருந்தி நறுமலர் நரந்தம் எங்கும்
கோளிசா லந்த மாலங் குளிர்மலர்க் குரவம் எங்கும்
தாளிரும் போந்து சந்து தண்மலர் நாகம் எங்கும்
நீளிலை வஞ்சி காஞ்சி நிறைமலர்க் கோங்கம் எங்கும். 28

சூதபா டலங்கள் எங்கும் சூழ்வழை ஞாழல் எங்கும்
சாதிமா லதிகள் எங்கும் தணதளிர் நறவம் எங்கும்
மாதவி சரளம் எங்கும் வகுளசண் பகங்கள் எங்கும்
போதவிழ் கைதை எங்கும் பூகபுன் னாகம் எங்கும். 29

மங்கல வினைகள் எங்கும் மணஞ்செய்கம் பலைகள் எங்கும்
பங்கய வதனம் எங்கும் பண்களின் மழலை எங்கும்
பொங்கொளிக் கலன்கள் எங்கும் புதுமலர்ப் பந்தர் எங்கும்
செங்கயல் பழனம் எங்கும் திருமகள் உறையுள் எங்கும். 30

மேகமும் களிறும் எங்கும் வேதமும் கிடையும் எங்கும்
யாகமும் சடங்கும் எங்கும் இன்பமும் மகிழ்வும் எங்கும்
யோகமும் தவமும் எங்கும் ஊசலும் மறுகும் எங்கும்
போகமும் பொலிவும் எங்கும் புண்ணிய முனிவர் எங்கும். 31

பண்டரு விபஞ்சி எங்கும் பாதசெம் பஞ்சி எங்கும்
வண்டறை குழல்கள் எங்கும் வளரிசைக் குழல்கள் எங்கும்
தொண்டர்தம் இருக்கை எங்கும் சொல்லுவ திருக்கை எங்கும்
தண்டலை பலவும் எங்கும் தாதகி பலவும் எங்கும். 32

மாடுபோ தகங்கள் எங்கும் வண்டுபோ தகங்கள் எங்கும்
பாடும்அம் மனைகள் எங்கும் பயிலும்அம் மனைகள் எங்கும்
நீடுகே தனங்கள் எங்கும் நிதிநிகே தனங்கள் எங்கும்
தோடுசூழ் மாலை எங்கும் துணைவர்சூழ் மாலை எங்கும். 33

வீதிகள் விழவின் ஆர்ப்பும் விரும்பினர் விருந்தின் ஆர்ப்பும்
சாதிகள் நெறியில் தப்பா தனயரும் மனையில் தப்பா[1]
நீதிய புள்ளும் மாவும் நிலத்திருப் புள்ளு மாவும்
ஓதிய எழுத்தாம் அஞ்சும் உறுபிணி வரத்தாம் அஞ்சும். 34

[1] தப்பார் என்றும் பாடம்.

நற்றமிழ் வரைப்பின் ஓங்கு[1] நாம்புகழ் திருநா டென்றும்
பொற்றடந் தோளால் வையம் பொதுக்கடிந் தினிது காக்கும்
கொற்றவன் அநபா யன்பொற் குடைநிழற் குளிர்வ தென்றால்
மற்றதன் பெருமை நம்மால் வரம்புற விளம்ப லாமோ. 35

## 3. திருநகரச் சிறப்பு *

சொன்ன நாட்டிடைத் தொன்மையில் மிக்கது
மன்னு மாமல ராள்வழி பட்டது
வன்னி யாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னி யார்திரு வாரூர்த் திருநகர். 1

வேத ஓசையும் வீணையின் ஓசையும்
சோதி வானவர் தோத்திர ஓசையும்
மாதர் ஆடல் மணிமுழ வோசையும்
கீத ஓசையு மாய்க்கிளர் வுற்றவே.[2] 2

பல்லி யங்கள் பரந்த ஒலியுடன்
செல்வ வீதிச் செழுமணித் தேரொலி
மல்லல் யானை ஒலியுடன் மாவொலி
எல்லை இன்றி எழுந்துள எங்கணும். 3

மாட மாளிகை சூளிகை மண்டபம்
கூட சாலைகள் கோபுரம் தெற்றிகள்
நீடு சாளர நீடரங் கெங்கணும்
ஆடல் மாதர் அணிசிலம் பார்ப்பன. 4

அங்கு ரைக்கென் னளவப் பதியிலார்
தங்கள் மாளிகை யின்னொன் றுசம்புவின்
பங்கி னாள்திருச் சேடி பரவையாம்
மங்கை யார்அவ தாரஞ்செய் மாளிகை. 5

---

[1] வரைப்பினிங்கு என்றும், வரைப்பினீங்கு என்றும் பாடம்.
* இது, திருவாரூர்ச் சிறப்பு என்றும், மனுநீதிகண்ட புராணம் என்றும் பிரதிகளில் உள்ளது. [2] கிளர்வுற்றதே என்றும் பாடம்.

படர்ந்த பேரொளிப் பன்மணி வீதிபார்
இடந்த ஏனமும் அன்னமும் தேடுவார்
தொடர்ந்து கொண்டவன தொண்டர்க்குத் தூதுபோய்
நடந்த செந்தா மரையடி நாறுமால். 6

செங்கண் மாதர் தெருவில் தெளித்தசெங்
குங்கு மத்தின் குழம்பை அவர்குழல்
பொங்கு கோதையிற் பூந்துகள் வீழ்ந்துடன்
அங்கண் மேவி அளறு புலர்த்துமால். 7

உள்ளம் ஆர்உரு காதவர் ஊர்விடை
வள்ள லார்திரு வாரூர் மருங்கெலாம்
தெள்ளும் ஓசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள். 8

விளக்கம் மிக்க கலன்கள் விரவலால்
துளக்கில் பேரொலி யால்துன்னு பண்டங்கள்
வளத்தொ டும்பல வாறு மடுத்தலால்
அளக்கர் போன்றன ஆவண வீதிகள். 9

ஆர ணங்களே அல்ல மறுகிடை
வார ணங்களும் மாறி முழங்குமால்
சீர ணங்கிய தேவர்க ளேயலால்
தோர ணங்களில் தாமமுஞ் சூழுமால். 10

தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர்
வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர்
வீழ்ந்த இன்பத் துறையுள்[1] விரவுவார்
சூழ்ந்த பல்வே றிடத்ததத் தொல்நகர். 11

நிலம கட்கழ கார்திரு நீள்நுதல்
திலகம் ஒப்பது செம்பியர் வாழ்பதி
மலர்ம கட்குவண் தாமரை போலமலர்ந்(து)
அலகில் சீர்த்திரு வாரூர் விளங்குமால். 12

அன்ன தொல்நக ருக்கர சாயினான்
துன்னு செங்கதி ரோன்வழித் தோன்றினான்

[1] துறையில் என்றும் பாடம்.

மன்னு சீர்அந பாயன் வழிமுதல்
மின்னும் மாமணிப் பூண்மனு வேந்தனே. 13

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்
கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலான்
விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணி லாதன மாண இயற்றினான். 14

கொற்ற ஆழி குவலயஞ் சூழ்ந்திடச்
சுற்று மன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்றம் நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்ற நீதியுந் தன்பெயர் ஆக்கினான். 15

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்கும் ஆகி இருந்தவர் பூசனைக்(கு)
அங்கண் வேண்டும நிபந்தமா ராய்ந்துளான்[1]
துங்க ஆகமம் சொன்ன முறைமையால். 16

அறம்பொரு ளின்ப மான அறநெறி வழாமற் புல்லி
மறங்கடிந் தரசர் போற்ற வையகம் காக்கும் நாளில்
சிறந்தநல் தவத்தால் தேவி திருமணி வயிற்றின[2] மைந்தன்
பிறந்தனன் உலகம் போற்றப் பேர்அரிக் குருளை அன்னான். 17

தவமுயன் றரிதில் பெற்ற தனிஇளங் குமரன் நாளுஞ்
சிவமுயன் றடையுந் தெய்வக் கலைபல திருந்த ஓதிக்
கவனவாம் புரவி[3] யானை தேர்படைத் தொழில்கள் கற்றுப்
பவமுயன் றதுவும பேறே எனவரும பண்பின் மிக்கான். 18

அளவில்தொல் கலைகள் முற்றி அரும்பெறல் தந்தை மிக்க
உளமகிழ காதல் கூர ஓங்கிய குணத்தால் நீடி
இளவர சென்னுந் தன்மை எய்துதற் கணிய னாகி
வளரிளம் பரிதி போன்று வாழுநாள் ஒருநாள் மைந்தன். 19

திங்கள்வெண் கவிகை மன்னன் திருவளர் கோயில் நின்று
மங்குல்தோய் மாடவீதி மன்னிளங் குமரர் சூழக்

[1] ஆராய்ந்தனன என்றும் பாடம். [2] வயிறறு என்றும் பாடம்.
[3] கவனவெம்புரவி என்றும் பாடம்.

கொங்கலர் மாலை தாழ்ந்த[1] குங்குமங் குலவு தோளான்[2]
பொங்கிய தானை சூழத் தேர்மிசைப் பொலிந்து போந்தான். 20

பரசுவந் தியர்முன்[3] சூதர் மாகதர் ஒருபால் பாங்கர்
விரைநறுங் குழலார் சிந்தும வெள்வளை ஒருபால் மிக்க
முரசொடு சங்கம் ஆர்ப்ப முழங்கொலி ஒருபால் வென்றி
அரசிளங் குமரன் போதும் அணிமணி மாட வீதி. 21

தனிப்பெருந் தருமம் தானோர் தயாஇன்றித் தானை மன்னன்
பனிப்பில்சிந் தையினில் உண்மைப் பான்மைசோதித்தால்என்ன
மனித்தர்தன் வரவு காணு வண்ணமோர் வண்ணம் நல்ஆன்
புனிற்றிளங் கன்று துள்ளிப் போந்ததம் மறுகி னூடே.[4] 22

அம்புனிற் றாவின் கன்றோர் அபாயத்தின் ஊடு போகிச்
செம்பொனின் தேர்க்கால் மீது விசையினால் செல்லப் பட்டே[5]
உம்பரின் அடையக் கண்டங் குருகுதாய் அலமந் தோடி
வெம்பிடும் அலறும் சோரும் மெய்ந்நடுக் குற்று வீழும் 23

மற்றது கண்டு மைந்தன் "வந்ததிங் கபாயம்" என்று
சொற்றடு மாறி நெஞ்சில் துயருழந் தறிவ ழிந்து
"பெற்றமுங் கன்றும் இன்றென் உணர்வெனும் பெருமை மாளச்
செற்ற,என்செய்கேன்"என்று தேரினின் றிழிந்து வீழ்ந்தான் 24

அலறுபேர் ஆவை நோக்கி ஆருயிர் பதைத்துச் சோரும்
நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த் திரங்கி நிற்கும்
"மலர்தலை உலகங் காக்கும் மனுவெனும் என்கோ மானுக்(கு)
உலகில்இப் பழிவந் தெய்தப் பிறந்தவா ஒருவன்" என்பான். 25

"வந்தஇப் பழியை மாற்றும் வகையினை மறைநூல் வாய்மை
அந்தணர் விதித்த ஆற்றால் ஆற்றுவ தறமே ஆகில்
எந்தைஈ தறியா முன்னம் இயற்றுவன்" என்று மைந்தன்
சிந்தைவெந் துயரந் தீர்ப்பான் திருமறை யவர்முன் சென்றான்.26

தன்னுயிர்க் கன்று வீயத் தளர்ந்தஆத் தரியா தாகி
முன்நெருப் புயிர்த்து விம்மி முகத்தினில் கண்ணீர் வார

பா - ம—[1] தாழ்ந்து. [2] குங்குமக் குவவுத்தோளான். [3] வந்திகண் ; வந்திகர். [4] மறுங்கினூடே. [5] செல்லப்பட்டங்கு.

மன்னுயிர் காக்குஞ் செங்கோல் மனுவின்பொற் கோயில் வாயில்
பொன்னணி மணியைச் சென்று கோட்டினால் புடைத்த தன்றே.

பழிப்பறை முழக்கோ ஆர்க்கும் பாவத்தின் ஒலியோ வேந்தன்
வழித்திரு மைந்தன் ஆவி கொளவரும் மறலி ஊர்திக்
கழுத்தணி மணியின் ஆர்ப்போ என்னத்தன் கடைமுன் கேளாத்
தெழித்தெழும் ஓசை மன்னன் செவிப்புலம் புக்க போது. 28

ஆங்கது கேட்ட வேந்தன் அரியணை இழிந்து போந்து
பூங்கொடி வாயில் நண்ணக் காவலர் எதிரே போற்றி
"ஈங்கிதோர் பசுவந் தெய்தி, இறைவ! நின் கொற்ற வாயில்
தூங்கிய மணியைக் கோட்டால் துளக்கிய"தென்று சொன்னார்.

மன்னவன் அதனைக் கேளா வருந்திய பசுவை நோக்கி,
"என் இதற் குற்ற" தென்பான் அமைச்சரை [1] இகழ்ந்து நோக்க,
முன்னுற நிகழ்ந்த எல்லாம் அறிந்துளான் முதிர்ந்த கேள்வித்,
தொன்னெறி அமைச்சன் மன்னன் தாளிணை தொழுது சொல்வான். 30

"வளவ! நின் புதல்வன் ஆங்கோர் மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில்தேர்த் தானை சூழ அரசுலாந் தெருவில் போங்கால்
இளையஆன் கன்று தேர்க்கால் இடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து விளைத்ததித் தன்மை" என்றான். 31

அவ்வுரை கேட்ட வேந்தன் ஆவுறு துயரம் எய்தி
வெவ்விடந் தலைக்கொண் டாற்போல் வேதனை அகத்து மிக்"கிங்
கிவ்வினை விளைந்த வா"றென் [2] றிடருறும் இரங்கும் ஏங்கும் [ன்.
"செவ்விதென் செங்கோல்!" என்னும்தெருமரும்தெளியும்தேறா

"மன்னுயிர் புரந்து வையம் பொதுக்கடிந் தறத்தில் நீடும்
என்னெறி நன்றால்" என்னும் "என்செய்தால் தீரும்" என்னும்
தன்னிளங் கன்று காணாத் தாய்முகங் கண்டு சோரும்
அந்நிலை அரசன் உற்ற துயரம்ஓர் அளவிற் றன்றால். 33

மந்திரிகள் அதுகண்டு மன்னவனை அடிவணங்கிச்
"சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்

---

பா - ம்—[1] தென்றென் றமைச்சரை. [2] விளைந்த வாவென்.

கொந்தலர்த்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை
அந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்தல் அறம்''என்றார். 34

"வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ?
இழக்கின்றேன் மைந்தனைஎன் றெல்லீருஞ் சொல்லியஇச்
சழக்கின்று நானிசைந்தால்[1] தருமந்தான் சலியாதோ?" 35

"மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ?" 36

"என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயஇசைந்தே[2]
அன்னியன்ஓர் உயிர்கொன்றால் அவனைக்கொல் வேனானால் [தை
தொன்மனுநூல்தொடைமனுவால் துடைப்புண்ட தெனும்வார்த்
மன்னுலகில் பெறமொழிந்தீர்! மந்திரிகள்! வழக்''கென்றான். 37

என்றரசன் இகழ்ந்துரைப்ப எதிர்நின்ற மதிஅமைச்சர்
"நின்றநெறி உலகின்கண் இதுபோல்முன் நிகழ்ந்ததால்
பொன்றுவித்தல் மரபன்று மறைமொழிந்த அறம்புரிதல்
தொன்றுதொடு நெறியன்றோ? தொல்நிலங்கா வல!" என்றார்.38

அவ்வண்ணம் தொழுதுரைத்த அமைச்சர்களை முகம்நோக்கி,
மெய்வண்ண தெரிந்துணர்ந்த மனுவென்னும் விறல்வேந்
தன்[3], "இவ்வண்ணம் பழுதுரைத்தீர்" என்றெரியின் இடைத்
தோய்ந்த, செவ்வண்ணக் கமலம்போல் முகம்புலர்ந்து செயிர்த்
துரைப்பான். 39

"அவ்வுரையில் வருநெறிகள் அவைநிற்க அறநெறியின்
செவ்வியஉண் மைத்திறம்நீர் சிந்தைசெயா துரைக்கின்றீர்
எவ்வுலகில் எப்பெற்றம் இப்பெற்றித் தாம்இடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி எறிந்துவிழுந் ததுஎ''விளம்பீர். 40

"போற்றிசைத்துப் புரந்தரன்மால் அயன்முதலோர் புகழ்ந்தி
றைஞ்ச, வீற்றிருந்த பெருமானார் மேவியுறை திருவாரூர்த்,

பா - ம்—[1] நானியைந்தால். [2] இசைந்தேன். [3] திறல்வேந்தன்.

தோற்றமுடை உயிர்கொன்றான் ஆதலினால் துணிபொருள்தான்,
ஆற்றவுமற் றவற்கொல்லும் அதுவேயாம் எனநினைமின்'' 41

எனமொழிந்து "மற்றிதனுக் கினியிதுவே செயல்இவ்ஆன்
மனம்அழியுந் துயர்அகற்ற மாட்டாதேன் வருந்தும்இது
தனதுறுபேர் இடர்யானும் தாங்குவதே கருமம[1]''என [ருர்.
அனகன்அரும் பொருள்துணிந்தான் அமைச்சரும்அஞ்சினர்அகன்

மன்னவன்தன் மைந்தனைஅங் கழைத்தொருமந் திரிதன்னை
"முன்னிவனை அவ்வீதி முரண்தேர்க்கால் ஊர்க''என
அன்னவனும் அதுசெய்யா தகன்றுதனஆ ருயிர்துறப்பத்
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்தான். 43

ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளான்என் பதும்உணரான்
தருமம்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமம்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோ?மற் றெளிதோதான்! 44

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூ மழைசொரிந்தார்[2]
அண்ணலவன் கண்ணெதிரே அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான். 45

சடைமருங்கில் இளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கில் உமையாளும் எம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையும்முன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்கொடுத்தான் 46

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடன்எழலும்
இன்னபரி சானன்என் றறிந்திலன்வேந் தனும்யார்க்கும்
முன்னவனே முன்நின்றால் முடியாத பொருளுளதோ. 47

அடிபணிந்த திருமகனை ஆகமுற எடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயரம் நீங்கினான் நிலவேந்தன்

---

பா - ம்—[1] தருமம். [2] பூ மழை பொழிந்தார்.

மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரல்நீங் கியதன்றே. 48

பொன்தயங்கு மதிலாரூர்ப் பூங்கோயில் அமர்ந்தபிரான்
வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே அருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தனஅடியார்க்(கு)
என்றும்எளி வரும்பெருமை ஏழுலகும் எடுத்தேத்தும். 49

இனையவகை அறநெறியில் எண்ணிறந்தோர்க் கருள்புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேல்
புனையும்உரை நம்மளவில் புகலலாந் தகைமையதோ?
அனையதனுக் ககமலராம் அறவனார் **பூங்கோயில்.** 50

## 4. திருக்கூட்டச் சிறப்பு

**பூ**த நாயகர் புற்றிடங் கொண்டவர்
ஆதி தேவர் அமர்ந்த**பூங் கோயிலிற்**
சோதி மாமணி நீள்சுடர் முன்றில்சூழ்
மூதெ யில்திரு வாயில்முன் னையது [1] 1

**பூ**வார் திசைமுகன் இந்திரன் பூமிசை
மாவாழ் அகலத்து மால்முதல் வானவர்
ஓவா தெவரும் நிறைந்துறைந் துள்ளது
**தேவா சிரியன்** எனுந்திருக் காவணம். 2

அரந்தை தீர்க்கும் அடியவர் மேனிமேல்
நிரந்த **நீறொளி** யால்**நிறை தூய்மை**யால்
புரந்த **அஞ்செழுத் தோசை** பொலிதலால்
பரந்த ஆயிரம் **பாற்கடல்** போல்வது. 3

அகில காரணர் தாள்பணி வார்கள்தாம்
அகில லோகமும் ஆளற் [2] குரியர்என்(று)
அகில லோகத்து ளார்கள் அடைதலின்
**அகில லோகமும் போல்வ** ததனிடை. 4

---

பா - ம்— [1] முனானது. [2] ஆடற்.

அத்தர் வேண்டிமுன் ஆண்டவர் அன்பினால்
மெய்த்த ழைந்து விதிர்ப்புறு சிந்தையார்
கைத்தி ருத்தொண்டு செய்கடப் பாட்டினார்
இத்தி றத்தவர் அன்றியும் எண்ணிலார். 5

மாசி லாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறுபோல உள்ளும் புனிதர்கள்
தேசி னால்எத் திசையும் விளக்கினார்
பேச ஒண்ணாப் பெருமை பிறங்கினார். 6

பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும்
மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்
கோதி லாத குணப்பெருங் குன்றனார் 7

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடுஞ் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார். 8

ஆரங் கண்டிகை ஆடையுங் கந்தையே
பாரம் ஈசன் பணிஅல தொன்றிலார்
ஈர அன்பினர் யாதுங் குறைவிலார்
வீரம் என்னால் விளம்புந் தகையதோ? 9

வேண்டு மாறு விருப்புறும் வேடத்தர்
தாண்ட வப்பெரு மான்தனித் தொண்டர்கள்
நீண்ட தொல்புக ழார்தம் நிலைமையை
ஈண்டு வாழ்த்துகேன் என்னறிந் தேத்துகேன். 10

இந்த மாதவர் கூட்டத்தை எம்பிரான்
அந்தம் இல்புகழ் ஆலால சுந்தரன்
சுந்த ரத்திருத் தொண்டத் தொகைத்தமிழ்
வந்து பாடிய வண்ணம் உரைசெய்வாம். 11

# 5. தடுத்தாட்கொண்ட புராணம்

கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த
அங்கணர் ஓலை காட்டி ஆண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதிஇரு மருங்கும ஓடிச்
செங்கயல் குழைகள் நாடும் திருமுனைப் பாடி நாடு. 1

பெருகிய நலத்தால்[1] மிக்க பெருந்திரு நாடு தன்னில்
அருமறைச் சைவம் ஓங்க அருளினால் அவத ரித்த
மருவிய தவத்தால் மிக்க வளம்பதி, வாய்மை குன்றாத்
திருமறை யவர்கள் நீடும் திருநாவ லூராம் அன்றே 2

மாதொரு பாக னார்க்கு வழிவழி அடிமை செய்யும்
வேதியர் குலத்துள்[2] தோன்றி மேம்படு சடைய னாக்(கு)
ஏதமில் கற்பின் வாழ்க்கை மனைஇசை ஞானி யார்பால்
தீதகன் றுலகம் உய்யத் திருஅவ தாரம் செய்தார். 3

தம்பிரான் அருளி னாலே தவத்தினால் மிக்கோர் போற்றும்,[3]
நம்பியா ரூரர் என்றே நாமமுஞ் சாற்றி மிக்க, ஐம்படை[4] சதங்
கை சாத்தி அணிமணிச் சுட்டி சாத்திச், செம்பொன் நாண்
அரையில் மின்னத் தெருவில்தேர் உருட்டு நாளில். 4

நரசிங்க முனையர் என்னும் நாடுவாழ் அரசர் கண்டு
பரவருங் காதல் கூரப் பயந்தவர் தம்பால் சென்று
விரவிய நண்பி னாலே வேண்டினர் பெற்றுத் தங்கள்
அரசிளங் குமரற் கேற்ப அன்பினால் மகன்மை கொண்டார்.[5] 5

பெருமைசால் அரசர் காதற் பிள்ளையாய்ப் பின்னும் தங்கள்
வருமுறை மரபில் வைகி வளர்ந்துமங் கலஞ்செய் கோலத்(து)
அருமறை முந்நூல் சாத்தி அளவில்தொல் கலைகள் ஆய்ந்து
திருமலி சிறப்பின் ஓங்கிச் சீர்மணப் பருவஞ் சேர்ந்தார். 6

தந்தையார் சடைய னார்தம் தனித்திரு மகற்குச் சைவ
அந்தணர் குலத்துள் தங்கள் அரும்பெரும் மரபுக் கேற்ப

பா - ம்—[1] வளத்தால். [2] குலத்தில். [3] பெற்று. [4] சாத்திமிக்க ஐம்படைச். [5] மகன்மைக்கொண்டார்.

வந்ததொல்[1] சிறப்பிற் புத்தூர்ச் சடங்கவி மறையோன் தன்பால்
செந்திரு அனைய கன்னி மணத்திறஞ் செப்பி விட்டார். 7

குலமுதல் அறிவின் மிக்கார்[2] கோத்திர முறையும் தேர்ந்தார்
நலமிகு முதியோர் சொல்லச் சடங்கவி நன்மை ஏற்று
மலர்தரு முகத்தன் ஆகி மணம்புரி செயலின் வாய்மை
பலவுடன் பேசி ஒத்த பண்பினால் அன்பு நேர்ந்தான். 8

மற்றவன் இசைந்த வார்த்தை கேட்டவர் வள்ளல் தன்னைப்
பெற்றவர் தம்பால் சென்று சொன்னபின் பெருகு சிந்தை
உற்றதோர் மகிழ்ச்சி எய்தி மணவினை உவந்து சாற்றிக்
கொற்றவர் திருவுக் கேற்பக் குறித்துநாள்[3]ஓலை விட்டார். 9

மங்கலம் பொலியச் செய்த மணவினை ஓலை ஏந்தி
அங்கயற் கண்ணி னாரும் ஆடவர் பலரும் ஈண்டிக்
கொங்கலர்ச் சோலை மூதூர் குறுகினார் எதிரே வந்து
பங்கய வதனி மாரும் மைந்தரும் பணிந்து கொண்டார். 10

மகிழ்ச்சியால் மணமீக் கூறி மங்கல வினைகள் எல்லாம்
புகழ்ச்சியால் பொலிந்து தோன்றப் போற்றிய தொழில ராகி
இகழ்ச்சியொன் றானும் இன்றி ஏந்துபூ மாலைப் பந்தர்
நிகழ்ச்சியின் மைந்தர் ஈண்டி நீள்முளை சாத்தி னார்கள். 11

மணவினைக் கமைந்த செய்கை மாதினைப் பயந்தார் செய்யத்
துணர்மலர்க[4] கோதைத் தாமச் சுரும்பணை தோளி னானைப்
புணர்மணத் திருநாள முன்னாட் பொருந்திய விதியி னாலே
பணைமுரசியமபவாழ்த்திப்பைம்பொன்நாண் காப்புச்சேர்த்தார்.

மாமறை விதிவ ழாமல் மணத்துறைக் கடன்கள் ஆற்றித்
தூமறை மூதூர்க் கங்குல் மங்கலந் துவன்றி ஆர்ப்பத்
தேமரு தொடையல் மார்பன் திருமணக் கோலங் காணக்
காமுறு மனத்தான் போலக் கதிரவன் உதயம் செய்தான். 13

காலைசெய் வினைகள் முற்றிக் கணிதநூற் புலவர் சொன்ன
வேலைவந் தணையும் முன்னர் விதிமணக் கோலம் கொள்வான்

---

பா - ம—[1] வநததோா. [2] அறிவின்மிககு; அறிவும்கக. [3] குறித்த நாள். [4] துவணமலர்க்.

நூலசைந் திலங்கு மார்பின் [1] நுணங்கிய கேள்வி மேலோன்
மாலையுந் தாரும் பொங்க மஞ்சன சாலை [2] புக்கான். 14

வாசநெய் யூட்டி மிக்க மலர்விரை அடுத்த தூநீர்ப்
பாசனத் தமைந்த [3] பாங்கர்ப் பருமணிப் பைம்பொன் திண்கால்
ஆசனத் தணிநீர் ஆட்டி அரிசனஞ் சாத்தி அன்பால்
ஈசனுக் கினியான் மேனி எழில்பெற விளக்கி னார்கள் 15

அகில்விரைத் தூப மேய்ந்த அணிகொள்பட் டாடை சாத்தி
முகில்நுழை மதியம்போலக் கைவலான் முன்கை சூழ்ந்த
துகில்கொடு குஞ்சி ஈரம் புலர்த்தித்தன் தூய செங்கை
உகிர்நுதி முறையில் போக்கி ஒளிர்நறுஞ் சிகழி ஆர்த்தான். 16

தூநறும் பசுங்கர்ப் பூரச் சுண்ணத்தால் வண்ணப் போதில்
ஆனதண் பனிநீர் கூட்டி [4] அமைத்தசந் தனச்சே றட்டி
மான்மதச் சாந்து தோய்ந்த மங்கலக் கலவை சாத்திப்
பான்மறை முந்நூல் மின்னப் பவித்திரஞ் சிறந்த கையான். 17

தூமலர்ப் பிணையல் மாலை துணர்இணர்க் கண்ணி கோதைத்
தாமம்என் றினைய வேறு தகுதியால் அமையச் சாத்தி
மாமணி அணிந்த தூய வளர்ஒளி இருள்கால் சீக்கும்
நாமநீள் கலன்கள் சாத்தி நன்மணக் கோலம் கொண்டான். 18

மன்னவர் திருவும் தங்கள் வைதிகத் திருவும் பொங்க
நன்னகர் விழவு கொள்ள நம்பியா ரூரர், நாதன்
தன்னடி மனத்துட் கொண்டு தகுந்திரு நீறு சாத்திப்
பொன்னணி மணியார் யோகப் புரவிமேற் கொண்டு போந்தார்.

இயம்பல துவைப்ப எங்கும் ஏத்தொலி எடுப்ப மாதர்
நயந்துபல் லாண்டு போற்ற நான்மறை ஒலியின் ஓங்க
வியந்துபார் விரும்ப வந்து விரவினர்க் கின்புஞ் செய்தே
உயர்ந்தவா கனயா னங்கள் மிசைக்கொண்டார் உழைய ராணர். 20

மங்கல கீத நாத மறையவர் குழாங்க ளோடு [5]
தொங்கலும் விரையும் சூழ்ந்த மைந்தரும் துவன்றிச் சூதும்

---

பா - ம்— [1] மார்பன். [2] மஞ்சனச்சாலை. [3] அமைத்த [4] கூட்ட.
[5] குழாங்கள் துழகது.

பங்கய முகையும் சாய்த்துப் பணைத்தெழுந் தணியில் மிக்க
குங்கும முலையி னுரும் பரந்தெழு கொள்கைத் தாகி 21

அருங்கடி எழுந்த போழ்தின் ஆர்த்தவெள் வளைக ளாலும்
இருங்குழை மகரத் தாலும் இலங்கொளி மணிக ளாலும்
நெருங்கிய பீலிச் சோலை நீலநீர்த்[1] தரங்கத் தாலும்
**கருங்கடல் கிளர்ந்த தென்னக் காட்சியிற் பொலிந்த தன்றே.** 22

நெருங்குதூ ரியங்கள் ஏங்க நிரைத்தசா மரைகள் ஓங்கப்[2]
பெருங்குடை மிடைந்து செல்லப் பிணங்குபூங் கொடிகள் ஆட
அருங்கடி மணம்வந் தெய்த அன்றுதொட் டென்றும் அன்பில்
வருங்குல மறையோர் புத்தூர் மணம்வந்த புத்தூ ராமால். 23

நிறைகுடம் தூபம் தீபம் நெருங்குபா லிகைகள் ஏந்தி
நறைமலர் அறுகு சுண்ணம் நறும்பொரி பலவும் வீசி
உறைமலி கலவைச் சாந்தின் உறுபுனல் தெளித்து வீதி
மறையவர் மடவார் வள்ளல் மணம்எதிர் கொள்ள வந்தார். 24

"கண்கள்எண் ணிலாத வேண்டுங் காளையைக் காண" என்பார்
"பெண்களில் உயர நோற்றாள் சடங்கவி பேதை" என்பார்
"மண்களி கூர வந்த மணம்கண்டு வாழ்ந்தோம்" என்பார்
பண்களில் நிறைந்த கீதம் பாடுவார் ஆடு வார்கள். 25

"ஆண்டகை அருளின் நோக்கின் வெள்ளந்துள் அலைந்தோம்" என்பார், "தாண்டிய பரியும் நம்பால் தகுதியின் நடந்த"[3] தென்பார், "பூண்டயங் கிவனே காணும் புண்ணிய மூர்த்தி" என்பார், ஈண்டிய மடவார் கூட்டம் இன்னன இசைப் பச் சென்றார். 26

வருமணக் கோலத் தெங்கள் வள்ளலார் தெள்ளும் வாசத்
திருமணப் பந்தர் முன்பு சென்றுவெண் சங்கம் எங்கும்
பெருமழைக் குலத்தின் ஆர்ப்பப் பரிமிசை இழிந்து பேணும்
ஒருமணத் திறத்தின் அங்கு நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன்.

---

பா - ம்—[1] நீல்நிறத். [2] சாமரைகள் தோரைப். [3] தாண்டிய மாவும் நம்பால் தகுதியின் அடைந்த.

ஆலுமறை சூழ்கயிலை யின்கண்அருள் செய்த[1]
சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்
மேலுற எழுந்துமிகு கீழுற அகழ்ந்து
மாலும்அய னுக்கும்[2] அரி யார்ஒருவர் வந்தார். 28

கண்ணிடை கரந்தகதிர் வெண்படம் எனச்சூழ்
புண்ணிய நுதல்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதிர் சாய்வதென மீதே[3]
வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க. 29

காதிலணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பின்அசை[4] நூலினொடு தோளின்
மீதுபுனை உத்தரிய வெண்துகில் நுடங்க
ஆதபம் மறைக்குடை அணிக்கரம் விளங்க. 30

பண்டிசரி கோவண உடைபபழமை கூரக்
கொண்டதொர் சழங்கலுடை ஆர்ந்தழகு கொள்ள
வெண்துகி லுடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழல் தள்ளுநடை கொள்ள. 31

மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனுமஅதன்படிவ மேயோ
மெய்த்தநெறி வைதிகம் விளைந்த[5]முத லேயோ
இத்தகைய வேடம்என ஐயமுற எய்தி. 32

வந்துதிரு மாமறை மணத்தொழில் தொடங்கும்
பந்தரிடை நம்பிஎதிர் பன்னுசபை முன்னின்(று)
"இந்தமொழி கேண்மின்எதிர் யாவர்களும்" என்றான்
முந்தைமறை ஆயிரம் மொழிந்ததிரு வாயான். 33

என்றுரைசெய் அந்தணனை எண்ணில்மறை யோரும்
மன்றல்வினை மங்கல மடங்கலனை யானும்
"நன்றுமது நல்வரவு நங்கள்தவம் என்றே
நின்றதிவண் நீர்மொழிமின் நீர்மொழிவ" தென்றார். 34

பா - ம்—[1] செய்தே. [2] மாலும் இருவர்க்கும். [3] சாய்வதென மாடே. [4] மார்பின்மிசை. [5] விளைத்த.

பின்னுகனும் நாவலர் பெருந்தகையை நோக்கி
"என்னிடையும் நின்னிடையும் நின்றஇசை வால்யான்
முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயல்தி" என்றான். 35

நெற்றிவிழி யான்மொழிய நின்றநிகர் இல்லான்
"உற்றதொர் வழக்கெனிடை நீயுடைய துண்டேல்
மற்றது முடித்தலதி யான்வதுவை செய்யேன்,
முற்றஇது சொல்லு'கென எல்லைமுடி வில்லான். 36

"ஆவதிது கேண்மின்மறை யோர்! என்அடி யான்இந்
நாவல்நகர் ஊரன்இது நான்மொழிவ" தென்றான்
தேவரையும் மாலயன் முதல்திருவின் மிக்கோர்
யாவரையும வேறடிமை யாவுடைய எம்மான். 37

என்றான் இறையோன் அதுகேட்டவர் எம்ம ருங்கும்
நின்றார் இருந்தார் "இவன் என்னினைந் தான்கொல்" என்று
சென்றார் வெகுண்டார் சிரித்தார், திருநாவ லூரான்
"நன்றால் மறையோன் மொழி" என்றெதிர் நோக்கி நக்கான். 38

நக்கான் முகம்நோக்கி நடுங்கி நுடங்கி யார்க்கும்
மிக்கான் மிசையுத் தரியத்துகில் தாங்கி மேற்சென்(று)
"அக்கா லம்உன் தந்தை தன்தந்தை ஆள்ஓலை ஈதால்
இக்கா ரியத்தை நீஇன்று[1] சிரித்ததென் ஏட"[2] என்ன. 39

மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி
நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியால் சிரிப்பு நீங்கி
"ஆசில்அந் தணர்கள் வேறோர் அந்தணர்க் கடிமை ஆதல்
பேசஇன் றுனனைக் கேட்டோம்[3] பித்தனோமறையோன்" என்றார்[4]

"பித்தனும் ஆகப் பின்னும் பேயனும் ஆக நீயின்(று)
எத்தனை தீங்கு சொன்னால்[5] யாதுமற் றவற்றால் நாணேன்
அத்தனைக் கென்னை ஒன்றும் அறிந்திலை யாகில் நின்று
வித்தகம் பேச வேண்டாம் பணிசெய வேண்டும்" என்றார். 41

---

பா - ம்—[1] இன்றுசீ. [2] ஏட என்றன. [3] கண்டோம். [4] என்ன.
[5] சொன்னாய்.

"கண்டதோர் வடிவால் உள்ளங் காதலசெய துருகா நிற்கும்;
கொண்டதோர் பித்த வார்த்தை கோபமும உடனே ஆக்கும்,
உண்டொரோள் ஓலை என்னும் அதன்உண்மை அறிவேன்" என்று
தொண்டனூர் "ஓலை காட்டு" கென்றனர் துணைவ னாரை. 42

"ஓலைகாட்" டென்று நம்பி உரைக்க"நீ ஓலை காணற்
பாலையோ அவைமுன் காட்டப் பணிசெயற் பாலை" என்ற
வேலையில் நாவ லூரர் வெகுண்டுமேல் விரைந்து சென்று
மாலயன் தொடரா தானை வலிந்துபின் தொடர லுற்றார். 43

ஆவணம் பறிக்கச் சென்ற அளவினில் அந்த ணாளன்
காவணத் திடையே ஓடக் கடிதுபின் தொடர்ந்து நம்பி
பூவணத் தவரை உற்றார் அவரலால் புரங்கள் செற்ற
ஏவணச் சிலையி னாரை யார்தொடர்ந் தெட்ட வல்லார்? 44

மறைகளா யினமுன் போற்றி மலர்ப்பதம் பற்றி நின்ற
இறைவனைத் தொடர்ந்து பற்றி எழுதும்ஆள் ஓலை வாங்கி
அறைகழல் அண்ணல் "ஆளாய் அந்தணர் செய்தல் என்ன
முறை"எனக்கீறி யிட்டார், முறையிட்டான் முடிவி லாதான் 45

அருமறை முறையிட் டின்னும் அறிவதற் கரியான பற்றி
ஒருமுறை முறையோ என்ன உழைநின்றார் விலககி "இந்தப்
பெருமுறை உலகில் இல்லா நெறிகொண்டு பிணங்கு கின்ற
திருமறை முனிவ ரேநீர் எங்குளீர் செப்பும்" என்றார். 46

என்றலும் நின்ற ஐயர் "இங்குளேன் இருப்புஞ் சேய[1]
தன்றிந்த வெணணெய் நல்லூர், அதுநிற்க, அறத்தா றின்றி
வன்றிறல் செய்தென் கையில் ஆவணம் வலிய வாங்கி
நின்றிவன் கிழித்துத் தானே நிரப்பினான் அடிமை" என்றான். 47

குழைமறை காதி னானைக் கோதில்ஆ ரூரர் நோக்கிப்
"பழையமன் றாடி போலும் இவன்"என்று பண்பின் மிக்க
விழைவுறு மனமும் பொங்க "வெண்ணெய்நல் லூரா யேல்உன்
பிழைநெறி வழக்கை ஆங்கே பேசநீ போதாய்" என்றார். 48

---

பா - ம்—[1] சேய்த்த.

வேதியன் அதனைக் கேட்டு[1] "வெண்ணெய்நல் லூரி லேநீ
போதினும் நன்று மற்றப் புனிதநான் மறையோர் முன்னர்
ஆதியில் மூல வோலை காட்டிநீ அடிமை யாதல்
சாதிப்பன்" என்று முன்னே தண்டுமுன் தாங்கிச் சென்றான். 49

செல்லுநான்[2] மறையோன் தன்பின் திரிமுகக் காந்தஞ்[3] சேர்ந்து
வல்லிரும் பணையு மாபோல் வள்ளலுங் கடிது சென்றான்
எல்லையில் சுற்றத் தாரும் "இதுஎன்னாம்" என்று செல்ல
நல்லஅந் தணர்கள் வாழும் வெண்ணெய்நல் லூரை நண்ணி. 50

வேதபா ரகரின் மிக்கார் விளங்குபேர் அவைமுன் சென்று
நாதனும்[4] மறையோன் சொல்லும் "நாவலூர் ஆரூ ரன்தான்
காதலென் அடியான் என்னக்[5] காட்டிய ஓலை கிறி
மூதறி வீர்முன் போந்தா னிதுமற்றென் முறைப்பா"டென்றான்.

அந்தணர் அவையில் மிக்கார் "மறையவர் அடிமை ஆதல்
இந்தமா நிலத்தில் இல்லை என்சொன்னாய் ஐயா" என்றார்
"வந்தவா றிசைவே அன்றோ வழக்கிவன் கிழித்த ஓலை
தந்தைதன் தந்தை நேர்ந்த(து)" என்றனன் தனியாய் நின்றான்.

"இசைவினால் எழுதும் ஓலை காட்டினான் ஆகில் இன்று
விசையினால் வலிய வாங்கிக் கிழிப்பது வெற்றி ஆமோ?
தசையெலாம் ஒடுங்க மூத்தான் வழக்கினைச் சாரச் சொன்னான்;
அசைவில்ஆ ரூரர் எண்ணம் என்" என்றார் அவையில் மிக்கார்.

"அனைத்துநூல் உணர்ந்தீர்! ஆதிசைவனென் றறிவீர்! என்னைத்
தனக்குவே றடிமை என்றிவ் வந்தணன் சாதித் தானேல்
மனத்தினா லுணர்தற் கெட்டா மாயைஎன் சொல்லு கேன்யான்
எனக்கிது தெளிய வொண்ணா தென்றனன்" எண்ணம் மிக்கான்.

அவ்வுரை அவையின் முன்பு நம்பியா ரூரர் சொல்லச்
செவ்விய மறையோர், நின்ற திருமறை முனியை நோக்கி
"இவ்வுல கின்கண் நீயின் றிவரையுன் னடிமை[6] என்ற
வெவ்வுரை எம்முன் பேற்றவேண்டும்" என் றுரைத்து மீண்டும்.

---

பா - ம்—[1] கேளா. [2] செல்லுமா. [3] திருமுகக் காந்தஞ். [4] நாத நான். [5] ஆகக். [6] நீரின் றிவரைநும் அடிமை.

ஆட்சியில் ஆவ ணத்தில் அன்றிமற் றயலார் தங்கள்
காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய் என்ன "முன்னே
மூட்சியிற் கிழித்த ஓலை படியோலை மூல ஓலை
மாட்சியிற் காட்ட வைத்தேன்" என்றனன் மாயை வல்லான்.

"வல்லையேல் காட்டிங்" கென்ன, மறையவன் "வலிசெய் யாமல்
சொலலநீர் வல்லீ ராகில காட்டுவேன்" என்று சொல்லச்
"செல்வநான்மறையோய்![1] நாங்கள் தீங்குற ஒட்டோம்"என்றார்
அல்லல்தீர்த் தாள நின்றார் ஆவணங் கொண்டு சென்றார். 57

இருள்மறை மிடற்றோன் கையில ஓலைகள் டவையோர் ஏவ
அருள்பெறு கரணத் தானும் ஆவணம் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி விரித்தனன்[2] தொன்மை நோக்கித்
தெருள்பெறு சவையோர் கேட்ப வாசகம் செப்பு கின்றான். 58

"அருமறை நாவல் ஆதி சைவன்ஆ ரூரன் செய்கை
பெருமுனி வெணணெய் நல்லூர்ப் பித்தனுக் கியானும் என்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்எ ழுத்து."

வாசகங் கேட்ட பின்னர் மற்றுமேல் எழுத்திட் டார்கள்
ஆசிலா எழுத்தை நோக்கி "அவையொக்கும்" என்ற பின்னர்
மாசிலா மறையோர் "ஐயா! மற்றுங்கள் பேர னார்தம்
தேசுடை எழுத்தே ஆகில் தெளியப்பார்த் தறிமின்"[3] என்றார்.

அந்தணர் கூற "இன்னும் ஆள்ஓலை இவனே காண்பான்
தந்தைதன் தந்தை தான்வே றெழுதுகைச் சாத்துண் டாகில்
இந்தஆ வணத்தி னோடும் எழுத்துநீர் ஒப்பு நோக்கி
வந்தது மொழிமின்" என்றான் வலியஆட் கொள்ளும் வள்ளல்.

திரண்டமா மறையோர் தாமும் திருநாவ லூரர் கோமுன்,
மருண்டது தெளிய மற்ற மறையவன் எழுத்தால் ஓலை, அரண்
தரு காப்பில் வேறோன் றழைத்துடன் ஒப்பு நோக்கி, "இரண்
டும்ஒத் திருந்த தென்னே! இனிச்செயல் இல்லை" என்றார். 62

பா - ம்—[1] மறையோர். [2] விரித்ததன். [3] தறிதி.

"நான்மறை முனிவ னார்க்கு நம்பியா ரூரர்! தோற்றீர்
பான்மையின் ஏவல் செய்தல் கடன்" என்று பண்பில் மிக்க
மேன்மையோர் விளம்ப, நம்பி "விதிமுறை இதுவே ஆகில்
யான் இதற் கிசையேன் என்ன[1] இசையுமோ" என்று நின்றார்.

திருமிகு மறையோர் நின்ற செழுமறை முனியை நோக்கி
"அருமுனி! நீமுன் காட்டும் ஆவணம் அதனில் எங்கள்
பெருமைசேர் பதியே யாகப் பேசிய துமக்கிவ் வூரில்
வருமுறை மனையும் நீடு வாழ்க்கையும் காட்டு" கென்றார். 64

பொருவரும் வழக்கால் வென்ற புண்ணிய முனிவர் "என்னை
ஒருவரும் அறியீ ராகில் 'போதும்'என றுரைத்துச சூழ்ந்த
பெருமறை யவர்கு ழாமும் நம்பியும் பின்பு செல்லத்
திருவருட் டுறையே புக்கார், கண்டிலர் திகைத்து நின்றார். 65

எம்பிரான் கோயில் நண்ண இலங்குநூல மார்பர் "எங்கள்
நம்பர்தங் கோயில் புக்க தென்கொலோ" என்று நம்பி
தம்பெரு விருப்பி னோடு தனித்தொடர்ந் தழைப்ப மாதோ(டு)
உம்பரின் விடைமேல் தோன்றி அவர்தமக் குணர்த்தல் உற்றார்.

"முன்புநீ நமக்குத் தொண்டன் முன்னிய வேட்கை கூரப்
பின்புநம் ஏவலாலே பிறந்தனை மண்ணின் மீது
துன்புறு வாழ்க்கை நின்னைத் தொடர்வறத் தொடர்ந்து வந்து
நன்புல மறையோர் முன்னர் நாம்தடுத் தாண்டோம்" என்றார்.

என்றெழும் ஓசை கேளா ஈன்றஆன் கனைப்புக் கேட்ட
கன்றுபோல கதறி நம்பி கரசர ணாதி அங்கம்
துன்றிய புளகம் ஆகத் தொழுதகை தலைமேல் ஆக
"மன்றுளீர்! செயலோ வந்து வலியஆட் கொண்ட" தென்றார்.

எண்ணிய ஓசை ஐந்தும் விசும்பிடை நிறைய எங்கும்
விண்ணவர் பொழிபூ மாரி மேதினி நிறைந்து விம்ம
மண்ணவர் மகிழ்ச்சி பொங்க மறைகளும் முழங்கி ஆர்ப்ப
அண்ணலை ஓலை காட்டி ஆண்டவர் அருளிச் செய்வார். 69

பா - ம்—[1] என்றல்.

"மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்
பெற்றனை; நமக்கும் அன்பிற பெருகிய சிறப்பின் மிக்க
அற்சனை பாட்டே ஆகும், ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடு" கென்றார் தூமறை பாடும் வாயார்.[1] 70

தேடிய அயனும் மாலும் தெளிவுறா[2] ஐந்தெழுத்தும்
பாடிய பொருளாய் உள்ளான் "பாடுவாய் நம்மை" என்ன
நாடிய மனத்த ராகி நம்பியா ரூரர், மன்றுள்
ஆடிய செய்ய தாளை அஞ்சலி கூப்பி நின்று. 71

"வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியா தேனுக் குணர்வுதந் துய்யக் கொண்ட
கோதிலா அமுதே! இன்றுன் குணபபெருங் கடலை நாயேன்
யாதினை அறிந்தென் சொல்லிப் பாடுகேன்" எனமொ ழிந்தார்.

அன்பனை அருளின் நோக்கி அங்கணர் அருளிச் செய்வார்
"முன்பெனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆத லாலே
என்பெயர் பித்தன் என்றே பாடுவாய்" என்றார்; நின்ற
வன்பெருந் தொண்டர் ஆண்ட வள்ளலைப பாடல் உற்றார். 73

கொத்தார்மலர்க் குழலாளொரு கூறாய்அடி யவர்பால்
மெய்த்தாயினும் இனியானைஅவ் வியன்நாவலர் பெருமான்
"பித்தாபிறை சூடி" எனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி முதலாம்உல கெல்லாம்உ(ய்)ய எடுத்தார். 74

முறையால்வரு மதுரத்துடன்[3] மொழிஇந்தள முதலில்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழ மையினால்
நிறைபாணியின் இசைகோள்புணர் நீடும்புகழ் வகையால்[4]
இறையான்மகிழ் இசைபாடினன் எல்லாம்நிகர் இல்லான். 75

சொல்லார்தமிழ் இசைபாடிய தொண்டன்தனை "இன்னும்
பல்லாறுல கினில்நம்புகழ் பா(டு)" என்றுறு பரிவில்
நல்லார்வெண்ணெய் நல்லூரருட் டுறைமேவிய நம்பன்
எல்லாவுல குய்யப்புரம் எய்தான்அருள் செய்தான். 76

---

பா - ம்—[1] வாயான். [2] தெளிவுறாது. [3] மருசத்துடன்; மருத்தத் துடன். [4] புகல் வகையால்.

அயலோர் தவம் முயல்வார்பிறர் அன்றேமணம் அழியும்
செயலால்நிகழ் புத்தூர்வரு சிவவேதியன் மகளும்
உயர்நாவலர் தனிநாதனை ஒழியாதுணர் வழியில்
பெயராதுயர் சிவலோகமும் எளிதாம்வகை பெற்றாள். 77

நாவலர்கோன் ஆரூரன் தனைவெண்ணெய் நல்லூரில்
மேவும்அருட் டுறையமர்ந்த வேதியராட் கொண்டதற்பின்
பூவலரும் தடம்பொய்கைத் திருநாவ லூர்புகுந்து
தேவர்பிரான் தனைப்பணிந்து திருப்பதிகம் பாடினார். 78

சிவனுறையும் திருத்துறையூர் சென்றணைந்து "தீவினையால்
அவநெறியிற்[1] செல்லாமே தடுத்தாண்டாய் அடியேற்குத்
தவநெறிதந் தருள்" என்று தம்பிரான் முன்னின்று
பவநெறிக்கு விலக்காகும் திருப்பதிகம் பாடினார். 79

புலன்ஒன்றும் படி தவத்திற் புரிந்தநெறி கொடுத்தருள
அலர்கொண்ட நறுஞ்சோலைத் திருத்துறையூர் அமர்ந்தருளும்
நிலவுந்தண் புனலும்ஒளிர் நீள்சடையோன் திருப்பாதம்
மலர்கொண்டு போற்றிசைத்து வந்தித்தார் வன்றொண்டர். 80

திருத்துறையூர் தனைப்பணிந்து சிவபெருமான் அமர்ந்தருளும்
பொருத்தமாம் இடம்பலவும் புக்கிறைஞ்சிப் பொற்புலியூர்
நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று
வருத்தமிகு காதலினால் வழிக்கொள்வான் மனங்கொண்டார்.

மலைவளர்சந் தகில்பீலி மலர்பரப்பி மணிகொழிக்கும்
அலைதருதண் புனற்பெண்ணை யாறுகடந் தேறியபின்
நிலவுபசும்[2] புரவிநெடுந் தேரிரவி மேல்கடலிற்
செலஅணையும் பொழுதணையத் திருவதிகைப் புறத்தணைந்தார்.

"உடையஅர(சு) உலகேத்தும் உழவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்(து)
அடையுமதற் கஞ்சுவன்" என் றந்நகரில் புகுதாதே
மடைவளர்தண் புறம்பணையிற் சித்தவட மடம்புகுந்தார். 83

---

பா - ம—[1] அவநெறியே. [2] இலகுபசும்.

வரிவளர்பூஞ் சோலைசூழ் மடத்தின்கண் வன்றொண்டர்
விரிதிரைநீர்க் கெடிலவட வீரட்டா னத்திறைதாள்
புரிவுடைய மனத்தினராய்ப் புடைஎங்கும் மிடைகின்ற
பரிசனமும் துயில்கொள்ளப் பள்ளியமர்ந் தருளினார். 84

அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளும் அங்கணரும்
முதுவடிவின் மறையவராய் முன்னொருவர் அறியாமே
பொதுமடத்தி னுட்புகுந்து பூந்தாரான் திருமுடிமேல்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போற்பயின்றார்.

அந்நிலைஆ ரூரன்உணர்ந் "தருமறையோய்! உன்னடிஎன்
சென்னியில்வைத் தனை"என்னத் "திசையறியா வகைசெய்த(து)
என்னுடைய மூப்புக்காண்" என்றருள அதற்கிசைந்து
தன்முடிஅப் பால்வைத்தே துயிலமர்ந்தான் தமிழ்நாதன். 86

அங்குமவன் திருமுடிமேல் மீட்டும்[1] அவர் தாள்நீட்டச்
செங்கயல்பாய் தடம்புடைசூழ் திருநாவ லூராளி
"இங்கென்னைப பலகாலும் மிதித்தனைநீ[2] யார்" என்னக்
கங்கைசடைக் கரந்தபிரான் "அறிந்திலையோ" எனக்கரந்தான்.

"செம்மாந்திங் கியானறியா தென்செய்தேன்" எனத்தெளிந்து
'தம்மானை அறியாத சாதியார உளரே' என்(று)
அம்மானைத் திருவதிகை வீரட்டா னத்தமர்ந்த
கைம்மாவின் உரியானைக் கழல்பணிந்து பாடினார். 88

பொன்திரளும் மணித்திரளும் பொருகரிவெண் கோடுகளும்
மின்திரண்ட வெண்முத்தும் விரைமலரும் நறுங்குறடும்
வன்திரைக ளாற்கொணர்ந்து திருவதிகை வழிபடலால்
தென்திசையில கங்கையெனும திருககெடிலம திளைத்தாடி. 89

அங்கணரை அடிபோற்றி அங்ககன்று மற்றந்தப்
பொங்குநதித் தென்கரைபோய்ப போர்வலித்தோள் மாவலிதன்
மங்கலவேள் வியில்பண்டு வாமனனாய் மண்இரநத
செங்கணவன் வழிபட்ட திருமாணிக் குழிஅணைந்தார்.[3] 90

---

பா - ம்—[1] மீண்டும். [2] மிதித்தநீ. [3] அடைநதார்.

பரம்பொருளைப் பணிந்துதாள் பரவிப்போய்ப பணிந்தவர்க்கு
வரந்தருவான் றிளைநகரை வணங்கினர்வண் டமிழ்பாடி
நரம்புடையாழ் ஒலிமுழவின் நாதஒலி வேதஒலி
அரம்பையர்தம் கீதஒலி அறாத்தில்லை மருங்கணைந்தார். 91

தேம லங்கலணி மாமணி மார்பிற் செம்மல் அங்கயல்கள்
செங்கம லத்தண்,[1] பூம லங்கஎதிர் பாய்வன மாடே புள்ள லம்பு
திரை வெள்வளை வாவித், தாம லங்குகள் தடம்பணை சூழும்
தண்[2]ம ருங்குதொழு வார்களதம் மும்மை, மாம லங்களறு விட
ருள் தில்லை மல்லல் அம்பதியின் எல்லை வணங்கி 92

நாக சூதவகு ளஞ்சர ளஞ்சூழ் நாளி கேரம்இல வங்க நரந்
தம், பூக ஞாழல்குளிர் வாழை மதூகம பொதுளும் வஞ்சிபல எங்
கும் நெருங்கி, மேக சாலமலி சோலைக ளாகி மீது கோகிலம்
மிடைந்து மிழற்றப், போக பூமியினும் மிக்கு விளங்கும் பூம்பு
றம்பணை கடந்து புகுந்தார். 93

வன்னி கொன்றைவழை சண்பகம் ஆரம் மலர்ப்ப லாசொடு
செருந்திமந் தாரம், கன்னி காரங்குர வங்கமழ் புன்னை கற்பு
பாடலம்[3] கூவிளம் ஓங்கித, துன்னு சாதிமரு மாலதி மௌவல்
துதைந்த நந்திகர வீரம் மிடைந்த, பன்ம லர்ப்புனித நந்த[4]
வனங்கள் பணிந்து சென்றனன் மணங்கமழ் தாரான். 94

இடம ருங்குதனி நாயகி காண ஏழுபெ ரும்புவனம் உய்ய
எடுத்து, நடந வின்றருள் சிலம்பொலி போற்றும் நான்ம றைப்
பதியை நாளும் வணங்கக், கடலவ லங்கொள்வது போல்புடை
சூழுங் காட்சி மேவிமிகு சேட்செல ஓங்கும், தடம ருங்குவளர்
மஞ்சிவர் இஞ்சித் தண்கி டங்கை எதிர் கண்டு மகிழ்ந்தார். 95

மன்று ளாடுமது வின்நசை யாலே மறைச்சு ரும்பறை
புறத்தின் மருங்கே, குன்று போலுமணி மாமதில் சூழுங் குண்ட
கழ்க்கமல வண்டலர் கைதைத், துன்று நீறுபுனை மேனிய வாகித்
தூய நீறுபுனை தொண்டர்கள் என்னச், சென்று சென்றுமுரல்
கின்றன கண்டு சிந்தை அன்பொடு திளைத்தெதிர் சென்றார். 96

---

பா-ம்—[1] திண். [2] தன். [3] கற்ப பாடலம், கறப பாடலிகள். [4] நந்தன.

பார்வி ளங்கவளர் நான்மறை[1] நாதம் பயின்ற பண்புமிக வெண்கொடி ஆடும்,[2] சீர்வி ளங்குமணி நாவொலி யாலும் திசைகள் நான்கெதிர் புறப்பட லாலும்,[3] தார்வி ளங்குவரை மார்பின்[4] அயன்பொன் சதுர்முகங்களென ஆயின[5] தில்லை, ஊர்வி ளங்கு திரு வாயில்கள் நான்கின் உத்த ரதிசை வாயில்[6]முன் எய்தி. 97

அன்பின் வந்தெதிர் கொண்டசீர் அடியார் அவர்க ளோநம்பி ஆரூரர் தாமோ, முனபி றைஞ்சின ரியாவரென றறியாமுறைமை யால்எதிர் வணங்கி மகிழ்ந்து, பின்பு கும்பிடும் விருப்பில் நிறைந்து பெருகு நாவல்நக ரார்பெரு மானும், பொன்பி றங்கு மணி மாளிகை நீடும் பொருவி றந்ததிரு வீதி[7] புகுந்தார். 98

அங்கண் மாமறை முழங்கும் மருங்கே ஆட ரம்பையர் அரங்கு முழங்கும், மங்குல் வானின்மிசை ஐந்தும் முழங்கும் வாச மாலைகளில வண்டு முழங்கும், பொங்கும் அன்பருவி கண்பொழி தொண்டர் போற்றி சைக்கும்ஒலி எங்கும்முழங்கும், திங்கள் தங்குசடை கங்கை முழங்கும் தேவ தேவர்புரி யுந்திரு வீதி. 99

போக நீடுநிதி மன்னவன் மன்னும் புரங்கள் ஒப்பன வரம்பில ஓங்கி, மாகம் முன்பருகு கின்றன போலும் மாளி கைக்குலம் மிடைந்த பதாகை, யோக சிந்தைமறை யோர்கள் வளர்க்கும் ஓம தூமம்உயர் வானில் அடுப்ப, மேக பந்திகளின் மீதிடை எங்கும் மின்னு டங்குவன என்ன விளங்கும். 100

ஆடு தோகைபுடை நாசிகள்[8] தோறும் அரணி தந்தசுடர் ஆகுதி தோறும், மாடு தாமமணி வாயில்கள் தோறும் மங்கலக்கலசம் வேதிகை தோறும், சேடு கொண்டஒளி தேர்நிரை தோறும் செந்நெல் அன்னமலை[9] சாலைகள் தோறும், நீடு தண்புனல்கள் பந்தர்கள் தோறும் நிறைந்த தேவர்கணம் நீளிடை தோறும் 101

---

பா - ம—[1] வருநானமறை. [2] ஆலும். [3] புலப்படலாலும். [4] மணி மார்பின். [5] ளெனல் ஆயின. [6] உததரத் திருவாயில் ; உத்தரத்திசையின் வாயில். [7] பொருவிகாத திருவாயில். [8] நாஞ்சில்கள். [9] அன்னமலி.

எண்ணில் பேர்உல கனைத்தினும் உள்ள எல்லை யில்அழகு சொல்லிய எல்லாம், மண்ணில் இப்பதியில் வந்தன என்ன மங்க லம்பொலி வளத்தன ஆகிப், புண்ணி யபபுனித அன்பர்கள் முன்பு புகழ்ந்து பாடல்புரி பொற்பின் விளங்கும், அண்ணல் ஆடுதிரு அம்பலம் சூழ்ந்த அம்பொன் வீதியினை நம்பி வணங்கி.

மால யன்சத மகன்பெருந் தேவர் மற்றும் உள்ளவர்கள் முற்றும் நெருங்கிச், சில மாமுனிவர் சென்றுமுன் துன்னித் திருப்பி ரம்பின் அடிகொண்டு திளைத்துக், காலம் நேர்படுதல் பார்த்தயல் நிற்பக் காதல் அன்பர்கண நாதர் புகும்பொற், கோல நீடுதிரு வாயி லிறைஞ்சிக் குவிதத செங்கைதலை மேற் கொடு புக்கார். 103

பெருமதில்[1] சிறந்த செம்பொன் மாளிகைமின் பிறங்குபே ரம்பலம் மேரு, வருமுறை வலங்கொண் டிறைஞ்சிய பின்னர் வணங்கிய மகிழ்வொடும் புகுந்தார், அருமறை முதலில நடு வினில் கடையில[2] அன்பாதம் சிநதையில அலர்ந்த, திருவளர் ஒளிசூழ் திருச்சிற்றம் பலம்முன் திருஅணுக் கன்திரு வாயில். 104

வையகம் பொலிய மறைச்சிலம் பார்பப[3] மன்றுளே மால யன் தேட, ஐயர்தாம் வெளியே ஆடுகின் றுரை அஞ்சலி மலர்த்தி முன் குவித்த,[4] கைகளோ திளைதத கண்களோ அநதக கர ணமோ கலநதஅன் புந்தச், செய்தவப் பெரியோன் சென்று தாழ்ந் தெழுந்தான் திருக்களிற் றுபபடி மருங்கு. 105

ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள அளப்பருங் கர ணங்கள் நான்கும், சிநதையே ஆகக் குணம்ஒரு மூன்றும் திருந்துசாத துவிகமே ஆக, இநதுவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில தனிப்பெருங கூத்தின், வநதபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலாநதார். 106

" தெண்ணிலா மலர்ந்த வேணியாய் உன்றன் திருநடம் கும் பிடப் பெற்று, மண்ணிலே வந்த பிறவியே எனக்கு வாலிதாய்

பா - ம்—[1] பெருமகிழ். [2] நடுவினிற் சிரத்தில. [3] சிலமபரற்ற. [4] முன் போற்றும்.

இன்பம்ஆம்'' என்று, கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக் கைம்மலர் உச்சிமேற் குவித்துப், பண்ணினால் நீடி அறிவரும் பதிகம் பாடினார் பரவினார் பணிந்தார். 107

தடுத்துமுன் ஆண்ட தொண்டனார் முன்பு தனிப்பெருந் தாண்டவம் புரிய, எடுத்தசே வடியார் அருளினால் "தரளம் எறிபுனல் மறிதிரைப் பொன்னி, மடுத்தநீள் வண்ணப் பண்ணை ஆரூரில வருக நம்பால்'' என வானில், அடுத்தபோ தினில்வந் தெழுந்ததோர் நாதம் கேட்டலும் அதுவுணர்ந் தெழுந்தார். 108

ஆடுகின் றவர்பேர் அருளினால் நிகழ்ந்த அப்பணி சென்னி மேற்கொண்டு, சூடுதங் கரங்கள் அஞ்சலி கொண்டு தொழுந் தொறும் புறவிடை கொண்டு, மாடுபே ரொளியின் வளரும் அம்பலத்தை வலங்கொண்டு வணங்கினர் போந்து, நீடுவான் பணிய உயர்ந்தபொன் வரைபோல் நிலைஎழு கோபுரங் கடந்து.

நின்றுகோ புரத்தை நிலமுறப் பணிந்து நெடுந்திரு வீதியை வணங்கி, மன்றலார் செல்வ மறுகினூ டேகி மன்னிய திருப்பதி அதனில், தென்றிசை[1] வாயில் கடந்துமுன் போந்து சேட்படுந்[2] திருவெல்லை இறைஞ்சிக், கொன்றை வார்சடையான் அருளையே நினைவார் கொள்ளிடத் திருநதி கடந்தார். 110

புறந்தருவார் போற்றிசைப்பப் புரிமுந்நூல் அணிமார்பர்
அறம்பயந்தாள் திருமுலைப்பால் அமுதுண்டு வளர்ந்தவர்தாம்
பிறந்தருளும் பெரும்பேறு பெற்றதென முற்றுலகில்
சிறந்தபுகழ்க் கழுமலமாம் திருபபதியைச் சென்றணைந்தார். 111

"பிள்ளையார் திருஅவதா ரஞ்செய்த பெரும்புகலி
உள்ளுநான் மிதியேன்''என் றாரெல்லைப் புறம்வணங்கி
வள்ளலார் வலமாக வரும்பொழுதின்[3] மங்கையிடங்
கொள்ளுமால் விடையானும் எதிர்காட்சி கொடுத்தருள. 112

மண்டியபே ரன்பினால் வன்றொண்டர் நின்றிறைஞ்சித்
'தெண்டிரைவே லையில்மிதநத திருத்தோணி புரததாரைக்

பா - ம்—[1] தென்திரு. [2] சேட்படு [3] பொழுது.

கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்த படி'என்று
பண்டரும்இன் னிசைபயின்ற திருப்பதிகம் பாடினார். 113

இருக்கோலம் இடும்பெருமான் எதிர்நின்றும் எழுந்தருள
வெருக்கோளுற் றதுநீங்க[1] ஆரூர்மேற் செலவிரும்பிப்
பெருக்கோதஞ் சூழ்புறவப் பெரும்பதியை வணங்கிப்போய்த்
திருக்கோலக் காவணங்கிச்[2] செந்தமிழ்மா லைகள்பாடி. 114

தேனார்க்கும் மலர்ச்சோலைத் திருப்புன்கூர் நம்பர்பால்
ஆனாப்பே ரன்புமிக அடிபணிந்து[3] தமிழ்பாடி
மானார்க்கும் கரதலத்தார் மகிழ்ந்தஇடம் பலவணங்கிக்
கானார்க்கும் மலர்த்தடஞ்சூழ் காவிரியின்[4] கரையணைந்தார். 115

வம்புலா மலர்அலைய[5]*மணிகொழித்து வந்திழியும்
பைம்பொன்வார் கரைப்பொன்னிப் பயில்தீர்த்தம் படிந்தாடித்
தம்பிரான் மயிலாடு துறைவணங்கித் தாவில்சீர்
அம்பர்மா காளத்தின்[6] அமர்ந்தபிரான் அடிபணிந்தார். 116

மின்னார்செஞ் சடைஅண்ணல் விரும்புதிருப் புகலூரை
முன்னாகப் பணிந்தேத்தி முதல்வன்தன் அருள்நினைந்து
பொன்னாரும் உத்தரியம் புரிமுந்நூல் அணிமார்பர்
தென்னாவ லூராளி திருவாரூர் சென்றணைந்தார். 117

தேராரும் நெடுவீதித் திருவாரூர் வாழ்வார்க்(கு)
"ஆராத காதலின்நம் ஆரூரன் நாமஅழைக்க
வாராநின் றானஅவனை மகிழ்ந்தெதிர்கொள் வீர்"என்று
நீராரும் சடைமுடிமேல் நிலவணிந்தார் அருள்செய்தார். 118

தம்பிரான் அருள்செய்யத்[7] திருத்தொண்டர் அதுசாற்றி
"எம்பிரா னார்அருள்தான் இருந்தபரி சிதுவானால்
நம்பிரா னார்ஆவார் அவரன்றே" எனும்நலத்தால்
உம்பர்நா டிழிந்ததெனை எதிர்கொள்ள உடன்எழுந்தார். 119

---

பா - ம்—[1] நீங்கி. [2] இறைஞ்சிச. [3] அடியடைந்து. [4] மலர்ச்
சோலைசூ காவிரியின். [5] மலர்மாலை. [6] அம்பொன்மா காளத்தின்.
[7] அருள்புரியத்.

மாளிகைகள் மண்டபங்கள் மருங்குபெருங் கொடிநெருங்கத்
தாளின்நெடுந் தோரணமும் தழைக்கமுகுங் குழைத்தொடையும்
நீளிலைய கதலிகளும் நிறைந்தபசும் பொற்றசும்பும்
ஒளிநெடு மணிவிளக்கும் உயர்வாயில் தொறும்நிரைத்தார். 120

சோதிமணி வேதிகைகள் தூநறுஞ்சாந் தணிநீவிக்
கோதில்பொரி பொற்சுண்ணங் குளிர்தரள மணிபரப்பித்
தாதிவர்பூந் [1] தொடைமாலைத் தண்பந்தர் களுஞ்சமைத்து
வீதிகள்நுண் துகள்அடங்க விரைப்பனிநீர் மிகத்தெளித்தார்.[2] 121

மங்கலகீ தம்பாட மழைநிகர்தூ ரியம்முழங்கச்
செங்கயற்கண் முற்றிழையார் தெற்றிதொறும் நடம்பயில
நங்கள்பிரான் திருவாரூர் நகர்வாழ்வார் நம்பியைமுன்
பொங்கெயிலநீள் திருவாயில் புறம்உறவந் தெதிர்கொண்டார். 122

வந்தெதிர் கொண்டு வணங்குவார்முன் வன்றொண்டர் அஞ்சலி கூப்பி வந்து,[3] சிந்தை களிப்புற வீதியூடு செல்வார் திருத்தொண்டர் தம்மை நோக்கி, ''எந்தை இருப்பதும் ஆரூர்அவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்''என்னும், சந்த இசைப்பதிகங்கள் பாடித் தம்பெருமான் திருவாயில் சார்ந்தார். 123

வானுற நீள்திரு வாயில்நோக்கி மண்ணுற ஐந்துறுப் பால் வணங்கித், தேனுறை[4] கற்பக வாசமாலைத் தேவாசிரியன் தொழுதிறைஞ்சி, ஊனும் உயிரும் உருககும் அன்பால் உச்சி குவித்த செங்கைகளோடும், தூநறுங் கொன்றையன் மூலட்டானம் சூழ் திரு மாளிகை வாயில் புக்கார். 124

புற்றிடங் கொண்ட புராதனனைப் பூங்கோயில் மேய பிரானை யார்க்கும, பற்றிடம் ஆய பரம்பொருளைப் பார்ப்பதி பாகனைப் பங்க யத்தாள், அர்ச்சனை செய்ய அருள்புரிந்த அண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி, நற்றமிழ் நாவலர் கோன்உடம்பால் நன்மையின் தன்மையை மெய்ம்மை பெற்றார்.[5] 125

---

பா - ம்—[1] தாதலிழ்பூர். [2] பனிநீர் மிசைவிட்டார். [3] கூப்பி நின்று. [4] தேனிறை. [5] பெற்றான்.

அன்பு பெருக உருகிஉள்ளம் அலையஅட் டாங்கபஞ் சாங்க மாக, முன்பு முறைமையி னுல்வணங்கி முடிவிலாக் காதல் முதிர ஓங்கி, நன்புலன் ஆகிய ஐந்துமஒன்றி நாயகன் சேவடி எய்தப் பெற்ற, இன்பவெள் ளத்திடை மூழ்கிநின்றே இன்னிசை வண்டமிழ் மாலை பாட. 126

வாழிய மாமறைப் புற்றிடங்கொள் மன்னவன் ஆரரு ளாலோர் வாக்குத், "தோழமை ஆக உனக்கு நம்மைத் தந்தனம் நாம்முன்பு தொண்டுகொண்ட, வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம் என்றும் புனைந்துநின் வேட்கைதீர, வாழிமண் மேல் விளை யாடுவாய்"என் றுரூரர் கேட்க எழுந்ததன்றே. 127

கேட்க விரும்பிவன் றொண்டர் என்றும் கேடிலா தானை இறைஞ்சி நின்றே, "ஆட்கொள வந்த மறையவனே! ஆரூர் அமர்ந்த அருமணியே!, வாட்கயல் கொணடகண் மங்கை பங்கா! மற்றுன் பெரிய கருணையன்றே!, நாட்கம லப்பதம் தந்ததின்று நாயினே னைபபொரு ளாக' என்றார். 128

என்று பலமுறை யால்வணங்கி எய்திய உள்ளக் களிப்பி னோடும், வென்றி அடல்விடை போலநடந்து வீதிவிடங்கப பெருமான் முன்பு, சென்று தொழுது துதித்து வாழ்ந்து திருமாளி கைவலம் செய்துபோந்தார், அன்று முதலடி யார்களெல்லாந் தம்பிரான் தோழர் என்றேஅறைந்தார். 129

மைவளர் கண்டர் அருளினாலே வண்டமிழ் நாவலர் தம்பெரு மான், சைவ விடங்கின் அணிபுனைந்து சாந்தமும் மாலையும் தாரும்ஆகி, மெய்வளர் கோலமெல் லாம்பொலிய மிக்கவிழுத்தவ வேந்தர் என்னத், தெய்வ மணிப்புற்று ளாரைப்பாடித் திளைத்து மகிழ்வொடுஞ் செல்லாநின்றார். 130

இதற்குமுன் எல்லை இல்லாத் திருநகர் இதனுள் வந்து
முதற்பெருங் கயிலை ஆதி முதல்வர்தம் பங்கி னுட்குப்
பொதுக்கடிந் துரிமை செய்யும் பூங்குழற் சேடி மாரில்
கதிர்த்த[1]பூண் ஏந்து கொங்கைக் கமலினி அவத ரித்தாள். 131

---

பா - ம்—[1] கதித்த.

கதிர்மணி பிறந்த தென்ன உருத்திர கணிகை மாராம்
பதியிலார் குலத்துள்[1] தோன்றிப் பரவையார் என்னும் நாமம்
விதியுளி விளக்கத் தாலே மேதகு சான்றோர் ஆன்ற
மதியணி புனிதன் நன்னாள் மங்கல அணியால் சாற்றி.[2] 132

பரவினர் காப்புப் போற்றிப் பயில்பெருஞ் சுற்றம், திங்கள்
விரவிய பருவம் தோறும் விழாஅணி எடுப்ப, மிக்கோர்
"வரமலர் மங்கை இங்கு வந்தனள்" என்று சிந்தை
தரவரு மகிழ்ச்சி பொங்கத தளர்நடைப பருவஞ் சேர்ந்தார்.[3] 133

மானிளம் பிணையோ? தெய்வ வளரிள முகையோ? வாசத்
தேனிளம் பதமோ? வேலைத் திரைஇளம் பவள வல்லிக்
கானிளம் கொடியோ? திங்கட்கதி ரிளங் கொழுந்தோ? காமன்
தானிளம் பருவம் கற்கும் தனிஇளந் தனுவோ என்ன. 134

நாடும்இன் பொற்பு வாய்ப்பு நாளுநாள் வளர்ந்து பொங்க
ஆடுமென் கழங்கும் பந்தும் அம்மனை ஊசல் இன்ன
பாடும்இன் னிசையும் தங்கள் பனிமலை வல்லி பாதம்
கூடும்அன் புருகப் பாடும் கொள்கையோர் குறிப்புத் தோன்ற

பிள்ளைமைப் பருவம் மீதாம் பேதைமைப் பருவம் நீங்கி, அளவுந்து கமைநத பொறபால அநங்கன்மெய்த் தனங்கள் ஈட்டம, கொள்ளமிக் குயர்வ போன்ற[4] கொங்கைகோங் கரும்பை வீழப்ப, உள்ளமெய்த் தன்மை முன்னை உண்மையும் தோன்ற உய்ப்பார். 136

பாங்கியர் மருங்கு சூழப் படரொளி மறுகு சூழத்
தேங்கமழ் குழலின் வாசம் திசையெலாம் சென்று சூழ
ஓங்குபூங் கோயில் உள்ளார் ஒருவரை அன்பி னோடும்
பூங்கழல் வணங்க என்றும் போதுவார் ஒருநாட போந்தார். 137

அணிசிலம் படிகள் "பார்வென் றடிப்படுத் தனம்"என் றார்ப்ப
மணிகிளர் காஞ்சி அல்குல் வரிஅர வுலகை வென்ற

---

பா-ம்—[1] குலத்தில். [2] சாத்தி, சாத்த. [3] பருவஞ்செய்து. [4] குயாவு போன்ற; குயர்வ போன்று.

துணிவுகொண் டார்ப்ப மஞ்சு சுரிகுழற் கழிய "விண்ணும் [தில்.
பணியும்" என் றினவண் டார்ப்பப் பரவையார் போதும் போ

புற்றிடம் விரும்பி னாரைப் போற்றினர் தொழுது செல்வார்
சுற்றிய பரிச னங்கள சூழஆ ரூருடைய நம்பி
நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்
விற்புரை நுதலின் வேற்கண் விளங்கிழை யவரைக் கண்டார்.

"கற்பகத்தின் பூங்கொம்போ? காமன்தன் பெருவாழ்வோ?
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ? புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ?
அற்புதமோ? சிவனருளோ? அறியேன்"என் றதிசயித்தார். 140

"ஓவியநான் முகன்எழுத ஒணுறுமை உள்ளத்தால்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ?
மூவுலகின் பயனாகி முன்னின்ற" தெனநினைந்து
நாவலர்கா வலர்நின்றார்; நடுநின்றார் படைமதனார். 141

தூண்டரள மணித்தோடும் தகைத்தோடும் கடைபிறழும்
கெண்டைநெடுங் கண்வியப்பக் கிளர்ஒளிப்பூண் உரவோனை
அண்டர்பிரான் திருவருளால் அயல்அறியா மனம் விரும்பப் [1]
பண்டைவிதி கடைகூட்டப் பரவையா ருங்கண்டார். 142

கண்கொள்ளாக கவின்பொழிந்த திருமேனி கதிர்விரிப்ப [(கு)
விண்கொள்ளாப பேரொளியான் எதிர்நோக்கும் மெல்லியலுக்
எண்கொள்ளாக் காதலின்முன் பெய்தாத தொருவேட்கை
மண்கொள்ளா நாண்மடம்அச சம்பயிர்ப்பை வலிந்தெழலும்.

"முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ? பெருகொளியால்
தன்னேரில் மாரனோ? தாரமாரபின் விஞ்சையனோ? [வனோ?
மின்னேர்செஞ் சடைஅண்ணல மெய்யருள்பெற றுடைய
என்னே! என் மனந்திரித்த இவன்யாரோ" என நினைந்தார்.

அண்ணலவன் தன்மருங்கே அளவிறந்த காதலினால்
உண்ணிறையும் குணநான்கும் ஒருபுடைசாய்ந் தனஎனினும்

---

பா - ம்—[1] அறியாமல மனம் விரும்பப், அறியா மனம் விரும்பிப்.

வண்ணமலர்க் கருங்கூந்தல் மடக்கொடியை வலிதாக்கிக்
கண்ணுதலைத் தொழும்அன்பே கைக்கொண்டு செலவுய்ப்ப. 145

பாங்கோடிச் சிலைவளைத்துப் படைஅநங்கன் விடுபாணம்
தாங்கோலி எம்மருங்கும் தடைசெய்ய மடவரலும்
தேங்கோதை மலர்க்குழல்மேல் சிறைவண்டு கலந்தார்ப்பப்
பூங்கோயில் அமர்ந்தபிரான் பொற்கோயில் போய்ப்புகுந்தாள்.[1]

வன்றொண்டர் அதுகண்(டு)"என் மனங்கொண்ட மயிலியலின்
இன்தொண்டைச் செங்கனிவாய இளங்கொடிதான் யார்"
அன்றங்கு முன்நின்றார் "அவர் நங்கை பரவையார் [என்ன,
சென்றும்பா தரத்தார்க்கும் சேர்வரியார்" எனச்செப்ப. 147

"பேர்பரவை பெணமையினில் பெரும்பரவை விரும்பல்குல்
ஆர்பரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
சீர்பரவை ஆயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட என்ஆசை எழுபரவை." 148

என்றினைய பலவுநினைந் தெம்பெருமான் அருள்வகையான், முன்தொடர்ந்து வருங்காதல் முறைமையினால் தொடக்குண்டு, "நன்றெனையாட் கொண்டவர்பால் நண்ணுவன்"என்றுள் மகிழ்ந்து, சென்றுடைய நம்பியுமபோய்த் தேவர்பிரான் கோயில்புக. 149

பரவையார் வலங்கொண்டு பணிந்தேத்தி முன்னரே
புரவலனார் கோயிலினின் றொருமருங்கு புறப்பட்டார்
விரவுபெருங் காதலினால் மெல்லியலார் தமைவேண்டி
அரவின்ஆ ரம்புனைந்தார் அடிபணிந்தார் ஆரூரர் 150

அவ்வாறு பணிந்தேத்தி "அணிஆரூர் மணிபுற்றின்
மைவாழுந் திருமிடற்று வானவர்பால் நின்றும்போந்(து)
எவ்வாறு சென்றாள்என் இனனுயிராம் அன்னம்"எனச்
செவ்வாய்வெண் நகைக்கொடியைத் தேடுவா ராயினார். 151

"பாச மாம்வினைப் பற்றறுப் பான்மிகும்
ஆசை மேலும்ஓர் ஆசை அளிப்பதோர்

---

பா - ம்—[1] போயப்புககாள்.

தேசின் மன்னிஎன் சிந்தை மயக்கிய [1]
ஈச னூர்அருள் எந்நெறிச் சென்றதே.'' 152

'' உம்பர் நாயகர் தங்கழல் அல்லது
நம்பு மாறறி யேனை நடுக்குற
வம்பு மால்செய்து வல்லியின் ஒல்கியின(று)
எம்பி ரான்அருள் எந்நெறிச் சென்றதே.'' 153

'' பந்தம் விடு தரும்பர மன்கழல்
சிந்தை ஆரவும் [2] உன்னும்என் சிந்தையை [3]
வந்து மால்செய்து மான்என வேவிழித்(து) [4]
எந்தை யாரஅருள் எந்நெறிச சென்றதே. 154

என்று சாலவும் ஆற்றலர் '' என்னுயிர்
நின்ற தெங் 'கென, நித்திலப் பூண்முலை
மன்றல் வார்குழல் [5] வஞ்சியைத் தேடுவான்
சென்று தேவா சிரியனைச் சேர்ந்தபின். 155

காவி நேர்வருங் கண்ணியை நண்ணுவான்
யாவ ரோடும் உரைஇயம் பாதிருந்(து)
'' ஆவி நல்குவர் ஆரூரை ஆண்டவர்
பூவின் மங்கையைத் தந்(து)''எனும் போழ்தினில். 156

நாட்டு நல்லிசை நாவலூ ரன்சிந்தை
வேட்ட மின்னிடை இன்னமு தந்தினைக்
காட்டு வன் [6] கட லைக்கடைந் தென்பபோல்
பூட்டும் ஏழுபரித் தேரோன் கடல்புக 157

எய்து மெனபெடை யோடிரை தேர்ந்துண்டு
பொய்கை யிற்பகல் போக்கிய புளளினம்
வைகு சேக்கைகண் மேற்செல வந்தது
பையுள் மாலை தமியோர் பனிப்புற. 158

பஞ்சின் மெலடிப் பாவையர் உளளமும்
வஞ்ச மாககள்தம் வல்வினை யும்மரன்

---

பா - ம்—[1] தேச மனனஎன் சிந்தை மயககுற. [2] சிந்தையார்வுற. [3] சிநதையில். [4] வேல்விழித்து. [5] மன்றலங்குழல். [6] காட்டுவேன்.

அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான். 159

"மறுவில் சிந்தைவன் றொண்டர் வருந்திடில்
இறும ருங்குலார்க் கியார்பிழைப் பார்" என்று
நறும லர்க்கங்குல் நங்கைமுன் கொண்டபுன்
முறுவல் என்ன முகிழ்த்தது வெண்ணிலா. 160

அரந்தை செய்வார்க் கழுங்கித்தம் ஆருயிர்
வரன்கை தீண்ட மலர்குல மாதர்போல்
பரந்த வெம்பகற் கொல்கிப் பனிமதிக்
கரங்கள் தீண்ட அலர்ந்த கயிரவம். 161

தோற்றும் மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே
சாற்றும் இன்பமும் தண்மையும் தந்துபோய்
ஆற்ற அண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்
நீறறின் பேரொளி போன்றது நீள்நிலா. 162

வாவி புள்ளொலி மாறிய [1] மாலையில்
நாவ லூரரும் நங்கை பரவையாம்
பாவை தந்த படர்பெருங் காதலும்
ஆவி சூழ்ந்த தனிமையும் ஆயினர். 163

"நந்தி ருக்கண் எரிதழ லிற்பட்டு
வெந்த காமன் வெளியே உருச்செய்து
வந்தென் முன்னின்று வாளி தொடுப்பதே!
எந்தை யார்அருள் இவ்வண்ண மோ?" என்பார். 164

"ஆர்த்தி கண்டும்என் மேல்நின் றழற்கதிர்
தூர்ப்ப தே!எனைத் தொண்டுகொண் டாண்டவர்
நீர்த்த ரங்க நெடுங்கங்கை நீள்முடிச்
சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி!" 165

"அடுத்து மேன்மேல் அலைத்தெழும் ஆழியே!
தடுத்து முன்எனை ஆண்டவர் தாம்உணக்

---

பா - ம்—[1] மாற்றிய.

கடுத்த நஞ்சுண் தரங்கக் கரங்களால்
எடுத்து நீட்டுநீ என்னை இன் றென்செயாய் ?'' 166

'' பிறந்த தெங்கள பிரான்மல யத்திடைச்
சிறந்த ணைந்தது தெய்வநீர் நாட்டினில் [1]
புறம்ப ணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம்ப யின்றதெங் கோ?தமிழ் மாருதம் !'' 167

இன்ன தன்மைய பின்னும் இயம்புவான்
மன்னு காதல னாகிய வள்ளல்பால்
தன்ன ரும்பெறல் நெஞ்சு தயங்கப்போம்
அன்னம் அன்னவள் செய்கை அறைகுவாம். 168

கனங்கொண்ட மணிகண்டர் கழல்வணங்கிக் கணவனை முன் பெறுவாள் போல, இனங்கொண்ட சேடியர்கள் புடைசூழ எய்துபெருங் காத லோடும், தனங்கொண்டு தளர்மருங்குற் பரவையும்வன் றொண்டர்பால் தனித்துச் சென்ற, மனங் கொணடு வரும்பெரிய மயல்கொண்டு தன்மணிமா ளிகையைச் சார்ந்தாள். 169

சீறடிமேல் நூபுரங்கள் அறிந்தனபோல் சிறிதளவே ஒலிப்ப முன்னர், வேறொருவர் உடன்பேசாள் மெல்லஅடி ஒதுங்கிமா ளிகையின் மேலால், ஏறிமர கதத்தூணத் திலங்கு மணி வேதிகையில் நலங்கொள் பொற்கால், மாறில்மலர்ச் சேக்கைமிசை மணிநிலா முன்றில்மருங் கிருந்தாள் வந்து. 170

அவ்வளவில் அருகிருந்த சேடிதனை முகநோக்கி [2] "ஆரூர் ஆண்ட, மைவிரவு கண்டரைநாம் வணங்கப்போம் மறுகெதிர் வந்தவரார் ?'' என்ன, "இவ்வுலகில் அந்தணராய் இருவர்தே டொருவர்தாம் எதிர்நின் றாண்ட, சைவமுதல திருத்தொண்டர்; தம்பிரான் தோழனார்; நம்பி'' என்றாள். 171

என்றவுரை கேட்டலுமே "எம்பிரான் தமரேயோ!'' என்று முன்னம், வன்றொண்டர் பால்வைத்த மனக்காதல் அள

பா - ம்—[1] நாட்டணி. [2] சேடிமுக நேர்நோக்கி.

வின்றி வளர்ந்து பொங்க, நின்றநிறை நாண்முதலாங் குணங் களுடன் நீங்கஉயிர் ஒன்றுந் தாங்கி, மின்றயங்கு நுண்ணிடை யாள் வெவ்வுயிர்த்து[1] மெல்லணைமேல் வீழ்ந்த போது. 172

ஆரநறுஞ் சேறாட்டி அரும்பனிநீர் நறுந்திவலை அருகு வீசி, ஈரஇளந் தளிர்க்குளிரி[2] படுத்துமட வார்செய்த இவையும் எல்லாம், பேரழலின் நெய்சொரிந்தால் ஒத்தன,மற் றதன்மீது சமிதை என்ன, மாரனும்தன் பெருஞ்சிலையின் வலிகாட்டி மலர் வாளி சொரிந்தான் வந்து 173

மலரமளித் துயிலாற்றாள், வருந்தென்றல் மருங்காற்றாள்; மங்குல் வானில், நிலவுமிழும் தழலாற்றாள், நிறையாற்றும் பொறையாற்றா[3] நீர்மை யோடும், கலவமயில் எனஎழுந்து கருங்குழலின் பரமாற்றாக் கைய ளாகி, இலவஇதழ்ச் செந்துவர் வாய் நெகிழ்ந்தாற்றா மையின்வழிதே இன்ன சொன்னாள். 174

"கந்தங் கமழ்மென் குழலீர்! இதுஎன்? கலைவாண் மதியம் கனல்வான் எனை இச், சந்தின் தழலைப் பனிநீர் அளவித் தடவுங் கொடியீர்! தவிரீர்! தவிரீர்!, வந்திங் குலவும் நிலவும் விரையார் மலயா னிலமும் எரியாய் வருமால், அந்தண் புனலும் அரவும் விரவும் சடையான் அருள்பெற் றுடையார் அருளார்.' 175

"புலரும் படியன் றிரவென் னளவும்; பொறையும் நிறை யும் இறையும் தரியா, உலரும் தனுவும் மனமும்; வினையேன் ஒருவேன்[4] அளவோ பெருவாழ் வுரையீர்!, பலரும் புரியும் துயர் தான் இதுவோ? படைமன் மதனார் புடைநின் றகலார்!, அலரும் நிலவும் மலரும் புகுயார் அருள்பெற் றுடையார் அவரோ அறியார்." 176

"தேரும் கொடியும் மிடையும் மறுகில் திருவா ரூரீர்![5] நீரே அல்லால், ஆரென் துயரம் அறிவார்? அடிகேள்![6] அடியேன் அயரும் படியோ இதுதான்?, நீரும் பிறையும் பொறிவாள் அரவின் நிரையும் நிரைவெண் டலையின் புடையே, ஊடும்

---

பா - ம—[1] வெய்துயிர்த்து. [2] தளிர்குளிரப். [3] பொறையாற்றள. [4] ஒருவென். [5] திருவாரூரார். [6] அடிகள்.

சடையீர்! விடைமேல் வருவீர்! உமதன் பிலர்போல் யானே உறுவேன்?" 177

என்றின் னனவே பலவும் புகலும் இருளார் அளகச் சுருளோ தியையும், வன்றொண் டரையும் படிமேல் வரமுன் பருள்வான் அருளும் வகையார் நினைவார்?, சென்றும் பர்களும் பணியும் செல்வத் திருவா ரூர்வாழ் பெருமான் அடிகள், "அன்றங் கவர்மன் றலைநீர் செயும்"என் றடியார் அறியும் படியால் அருளி. 178

மன்னும் புகழ்நா வலர்கோன் மகிழ "மங்கை பரவை தன்னைத் தந்தோம், இன்னவ் வகைநம் அடியார் அறியும் படியே உரைசெய் தனம்"என் றருளிப், பொன்னின் புரிபுன் சடையன்[1] விடையன் பொருமா கரியின் உரிவை புனைவான், அன்னந் நடையாள் பரவைக்(கு) "அணிய தாரூ ரன்பால் மணம்"என் றருள. 179

காமத் துயரில் கவல்வார் நெஞ்சிற் கரையில் இருளும் கங்குல் கழிபோம், யாமத் திருளும் புலரக் கதிரோன் எழுகாலையில்வந் தடியார் கூடிச், சேமத் துணையாம் அவர்பேர் அருளைத் தொழுதே திருநா வலர்கோன் மகிழத், தாமக் குழலாள் பரவை வதுவை தகுநீர் மையினால் நிகழச் செய்தார். 180

தென்னாவ லூர்மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாரும் கொடிமருங்குல் பரவையெனும் மெல்லியல்தன்
பொன்னாரும் முலையோங்கல் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோகம்[2] பரம்பரையின் விரும்பினார். 181

தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியிலுஞ் சிந்தையிலும் மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனும்
மின்னிடையாள் உடன்கூடி விளையாடிச் செல்கின்றார். 182

மாதுடன் கூட வைகி மாளிகை மருங்கு சோலை[3]
போதலர் வாவி மாடு செய்குன்றின் புடையோர் தெற்றிச்

பா - ம்—[1] புரிவன் சடையன். [2] பயில்போகம். [3] சோலைப்.

சீதளத் தரளப் பந்தர்ச் செழுந்தவி சிழிந்து தங்கள்
நாதர்பூங் கோயில் நண்ணிக் கும்பிடும் விருப்பால் நம்பி. 183

அந்தரத் தமரர் போற்றும்[1] அணிகிளர் ஆடை சாத்திச்
சந்தனத் தளறு தோய்ந்த குங்குமக் கலவை சாத்திச்
சுந்தரச் சுழியஞ் சாத்திச் சுடர்மணிக் கலன்கள் சாத்தி
இந்திரத் திருவின் மேலாம் எழில்மிக[2] விளங்கித் தோன்ற. 184

கையினிற் புனைபொற் கோலும்[3] காதினில் இலங்கு தோடும்
மெய்யினில் துவளு நூலும் நெற்றியில் விளங்கு நீறும்
"ஐயனுக் கழகிதாம்"என் றுயிழை மகளிர் போற்றச்
சைவமெய்த் திருவின் கோலந் தழைப்பவீ தியினைச் சார்ந்தார்.

"நாவலூர் வந்த சைவ நற்றவக் களிறே!" என்றும்
"மேவலர் புரங்கள் செற்ற விடையவர்க் கன்ப!" என்றும்
"தாவில்சீர்ப் பெருமை ஆரூர் மறையவர் தலைவ!" என்றும்
மேவினர் இரண்டு பாலும் வேறுவே றுயம்[4] போற்ற 186

கைக்கடா குரங்கு கோழி சிவல்கவு தாரி பற்றிப்
பக்கமுன் போது வார்கள் பயில்மொழி பயிற்றிச் செல்ல
மிக்கபூம் பிடகை கொள்வோர் விரையடைப் பையோர் சூழ
மைக்கருங்[5] கண்ணி னார்கள் மறுகநீள் மறுகில் வந்தார். 187

பொலங்கலப புரவி பண்ணிப் போதுவார் பின்பு போத, இலங்கொளி வலயப் பொற்றோள் இடையிடை மிடைந்து தொங்கல், நலங்கிளர் நீழல் சூழ நான்மறை முனிவ ரோடும், அலங்கலந் தோளி னான்வந் தணைந்தனன் அண்ணல் கோயில். 188

கண்ணுதல் கோயில் தேவா சிரியனுங் காவ ணத்து[6], விண்ணவர் ஒழிய மண்மேல் மிக்கசீர் அடியார் கூடி, எண்ணிலார் இருந்த போதில் "இவர்க்கியான் அடியே னாகப்[7], பண்ணுநாள் எந்நாள்" என்று பரமர்தாள் பரவிச்[8] சென்றார். 189

---

பா - ம்—[1] போற்ற. [2] எழில்பெற. [3] பொற்செண்டும். [4] வேறு வேறாகப். [5] மைத்தடங். [6] காவணத்துள். [7] அடியானாகப். [8] பரவச்; பணியச்.

“அடியவர்க் கடியய னாவேன்” என்னும்ஆ தரவு கூரக், கொடி
நெடுங் கொற்ற வாயில் பணிந்துகை குவித்துப் புக்கார், கடி
கொள்பூங் கொன்றை வேய்ந்தார் அவர்க்கெதிர் காணக் காட்டும்
படியெதிர் தோன்றி நிற்கப் பாதங்கள் பணிந்து பூண்டு. 190

மன்பெ ருந்திரு மாமறை வண்டுசூழ்ந்(து)[1]
அன்பர் சிந்தை அலர்ந்தசெந் தாமரை
நன்பெ ரும்பர மானந்த நன்மது
என்த ரத்தும் அளித்தெதிர் நின்றன. 191

ஞாலம் உய்ய நடமன்றுள் ஆடின;
காலன் ஆருயிர் மாளக் கறுத்தன;
மாலை தாழ்குழல் மாமலை யாள்செங்கை
சீல மாக வருடச் சிவந்தன. 192

நீதி மாதவர் நெஞ்சிற் பொலிந்தன,[2]
வேதி யாதவர் தம்மைவே திப்பன;
சோதி யாய்எழுஞ் சோதியுட் சோதிய,
ஆதி மாலயன்[3] காணா அளவின. 193

வேத ஆரணம் மேற்கொண் டிருந்தன;
பேதை யேன்செய் பிழைபொ றுத் தாண்டன;
ஏத மானவை தீர்க்க இசைந்தன,
பூத நாத! நின் புண்ட ரீகப்பதம். 194

இன்னவா றேத்து நம்பிக் கேறுசே வகனார் தாமும்
அந்நிலை அவர்தாம் வேண்டும் அதனையே அருள வேண்டி
பன்னுசீர் அடியார் தங்கள் வழித்தொண்டை உணர நல்கிப்
பின்னையும் அவர்கள் தங்கள் பெருமையை அருளிச் செய்வார்.

“பெருமையால் தம்மை ஒப்பார்; பேணலால் எம்மைப் பெற்றார்; ஒருமையால் உலகை வெல்வார்; ஊனமேல் ஒன்றும் இல்லார்; அருமையாம் நிலையில் நின்றார்; அன்பினால் இன்பம் ஆர்வார்; இருமையும் கடந்து நின்றார்; இவரைநீ அடைவாய்” என்று. 196

---

பா - ம்—[1] சூழ அன்பர். [2] பொலிவன. [3] மாலவன்.

நாதனார் அருளிச் செய்ய நம்பியா ரூரர் "நானிங்(கு)
ஏதந்தீர் நெறியைப் பெற்றேன்" என்றெதிர் வணங்கிப்போற்ற
"நீதியால் அவர்கள் தம்மைப் பணிந்துநீ நிறைசொல் மாலே
கோதிலா வாய்மை யாலே பா"டென அண்ணல் கூற. 197

தன்னையா ளுடைய நாதன் தானருள் செய்யக் கேட்டுச்
சென்னியால் வணங்கி நின்ற திருமுனைப் பாடி நாடர்
"இன்னவா றின்ன பண்பென் றேத்துகேன்? அதற்கி யானார்? [1]
பன்னுபா மாலை பாடும் பரிசெனக் கருள்செய்" என்ன. 198

தொல்லைமால் வரைபயந்த தூயாள்தன் திருப்பாகன்
அல்லல்தீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்கால்
"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேனென்(று)
எல்லையில்வண் புகழாரை எடுத்திசைப்பா மொழி" என்றார். 199

மன்னுசீர் வயல்ஆரூர் மன்னவரை வன்றொண்டர்
சென்னியுற அடிவணங்கித் திருவருள்மேற் கொள்பொழுதில்
முன்னமால் அயன்அறியா முதல்வர்தாம் எழுந்தருள
அந்நிலைகண் டடியவர்பால் சார்வதனுக் [2] கணைகின்றார். 200

தூரத்தே திருக்கூட்டம் பலமுறையால் தொழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி நின்றழியா [3]
விரத்தார் எல்லார்க்குந் தனித்தனிவே(று) அடியேன் என்(று)
ஆர்வத்தால் திருத்தொண்டத் தொகைப்பதிகம்அருள்செய்வார். [4]

தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத் தமிழ்மாலைச்
செம்பொருளால் திருத்தொண்டத் தொகையான [5] திருப்பதிகம்
உம்பர்பிரான் தானருளும் உணர்வுபெற உலகேத்த
எம்பெருமான் வன்றொண்டர் பாடிஅவர் எதிர்பணிந்தார். 202

உம்பர்நா யகரடியார் பேருவகை தாமெய்த
நம்பியா ரூரர்திருக் கூட்டத்தின் நடுவணைந்தார்;

---

பா - ம்—[1] இதற்கி யானார். [2] செல்வதனுக். [3] நின்றிழியா. [4] அருள் செய்தார். [5] தொகையான்ற. * இதனுடன் சுந்தரமூர்த்தி சுவாமிகள சரிதம் முடிவுபெறுமல, மேல்வரும ஏயாகோன கலிககாம நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், வெளளையானைச் சருக்கம் என்பவற்றால் முடிவு பெறும்.

தம்பிரான் தோழரவர் தாம்மொழிந்த தமிழ்முறையே
எம்பிரான் தமர்கள்திருத் தொண்டேத்தல் உறுகின்றேன். 203

சருக்கம் ஒன்றுக்குத் திருவிருத்தம்—349

## திருத்தொண்டத்தொகை*

பண் - கொல்லிக்கௌவாணம்

அடிமை

திருச்சிற்றம்பலம்

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

---

* இது, திருத்தொண்டர்களின் வரலாறும் பண்பும் இன்ன என்று தொகுத்துக் கூறும் பதிகம்; இதுவும், நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதியும் இத் திருத்தொண்டர் புராணம் எழுவதற்கு ஆதரவாக இருந்தவை ஆகும்.

மும்மை[1]யால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள்[2] மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 3

**திருநின்ற செம்மை[3]யே செம்மையாக் கொண்ட**
**திருநாவுக் கரையன்**றன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்[4]க்கும் அடியேன்
ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 4

வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா
**எம்பிரான் சம்பந்தன்** அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
**நம்பிரான் திருமூலன்** அடியார்க்கும் அடியேன்
**நாட்டமிகு தண்டிக்கும்** மூர்க்கர்க்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 5

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்

---

[1] மும்மை - விபூதி, உருத்திராட்சம், சடைமுடி. [2] தாதையை என்றும் பாடம். [3] திருநின்ற செம்மை - சிவத்தன்மை. [4] பேயார் - பேயுருவம் வேண்டிப் பெற்ற காரைக்காலம்மையார்.

**கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்**[1]க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 6

**பொய்யடிமை யில்லாத புலவர்**[2]க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 7

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையால் **நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன்** அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 8

கடல்சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் அடியார்க்கும் அடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடிப்
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும் அடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 9

---

[1] கழறிற்றறிவார் - யாவும் யாரும் கழறின அறியும் உணர்வைப் பெற்றவர்; சேரமான் பெருமாள் நாயனார். [2] பொய்யடிமையில்லாத புலவர் - கடைச சங்கப் புலவர்கள்: அவர்கள் கபிலர், பரணர், நக்கீரர் முதலியோர்.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
 பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
 திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
 முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்
 ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.[1] 10

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
 வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்
 திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
 இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
 ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தொண்டத் தொகைப் பதிகப் பாட்டுக்களின் முதற் குறிப்பு

பணித்தநற் றொண்டத் தொகைமுதல்
 தில்லை இலைமலிந்த
அணித்திகழ் மும்மை திருநின்ற
 வம்பறா வார்கொண்டதோர்
இணைத்திகழ் பொய்யடி மைக்கறைக
 கண்டன் கடல்சூழ்ந்தபின்
மணிதிகழ் சொற்பத்தர் மன்னிய
 சீர்மறை நாவனொடே.

—நம்பியாண்டார் நம்பி.

[1] இப்பாட்டுத் தொகையடியார்களைக் குறிப்பதாகும்.

# 2. தில்லைவாழந்தணர் சருக்கம்

°°○★○°°

## 1. தில்லைவாழந்தணர் புராணம்

ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி! போற்றி! 1

கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம்செய் கின்ற பூங்கழல் போற்றி! போற்றி! 2

போற்றிநீள் தில்லை வாழ்அந் தணர்திறம் புகல லுற்றேன்;
நீற்றினால் நிறைந்த கோல நிருத்தனுக் குரிய தொண்டாம்
பேற்றினார்; பெருமைக் கெல்லை ஆயினார் பேணி வாழும்
ஆற்றினார்; பெருகும் அன்பால் அடித்தவம் புரிந்து வாழ்வார். 3

பொங்கிய திருவில் நீடும் பொற்புடைப் பணிகள் ஏந்தி
மங்கலத் தொழில்கள் செய்து மறைகளால் துதித்து மற்றும்
தங்களுக் கேற்ற பண்பில் தரும்பணித் தலைநின் றுய்த்தே
அங்கணர் கோயில் உள்ளா அகம்படித் தொண்டு செய்வார். 4

வருமுறை எரிமூன் றோம்பி மன்னுயிர் அருளால் மல்க
தருமமே பொருளாக கொண்டு தத்துவ நெறியிற் செல்லும்
அருமறை நான்கி னோடா றங்கமும் பயின்று வல்லார்,
திருநடம் புரிவார்க் காளாம் திருவினாற் சிறந்த சீரார்[1] 5

மறுவிலா மரபின் வந்து மாறிலா ஒழுக்கம் பூண்டார்;
அறுதொழில் ஆட்சி யாலே அருங்கலி நீக்கி உள்ளார்;
உறுவது நீற்றின் செல்வம் எனக்கொளும் உள்ளம் மிக்கார்;
பெறுவது சிவன்பால் அன்பாம் பேறெனப் பெருகி வாழ்வார். 6

---

பா - ம்—[1] பொலிந்த சீரார்; சிறந்த சீரார்.

ஞானமே முதலா நான்கும் நவையறத் தெரிந்து மிக்கார்,
தானமும் தவமும் வல்லார்; தகுதியின் பகுதி சார்ந்தார்;
ஊனமேல் ஒன்றும் இல்லார்; உலகெலாம் புகழ்ந்து போற்றும்
மானமும் பொறையும் தாங்கி மனைஅறம் புரிந்து வாழ்வார். 7

செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வவே தியர்க ளானார்
மும்மைஆ யிரவர் தாங்கள் போற்றிட முதல்வ னாரை [லார்;
இம்மையே பெற்று வாழ்வார்;[1] இனிப்பெறும் பேறொன் றில்
தம்மையே தமக்கொப் பான நிலைமையால் தலைமை சார்ந்தார்.

இன்றிவர் பெருமை எம்மால் இயம்பலாம் எல்லைத் தாமோ?
தென்றமிழ்ப்பயனாய்உள்ளதிருத்தொண்டத் தொகைமுன்பாட
அன்றுவன் றொண்டர் தம்மை அருளிய ஆரூர் அண்ணல்
முன்திரு வாக்கால் கோத்த முதற்பொரு ளானார் என்றால். 9

அகலிடத் துயர்ந்த தில்லை அந்தணர் அகிலம் எல்லாம்
புகழ்திரு மறையோர் என்றும் பொதுநடம் போற்றி வாழ![2]
நிகழ்திரு நீல கண்டக் குயவனா நீடு வாய்மை
திகழும்அன் புடைய தொண்டர் செய்தவம் கூற லுற்றாம். 10

## 2. திருநீலகண்ட நாயனார் புராணம்

வேதியர் தில்லை மூதூர் வேட்கோவர் குலத்து வந்தார்;
மாதொரு பாகம் நோக்கி மன்னு[3]சிற் றம்ப லத்தே
ஆதியும் முடிவும் இல்லா அற்புதத் தனிக்கூத் தாடும்
நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கார். 1

பொய்கடிந் தறத்தின் வாழ்வார், புனற்சடை முடியார்க் கன்
மெய்யடி யார்கட் கான பணிசெயும் விருப்பில் நின்றார்; [பர்;[4]
வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்;
சைவமெய்த் திருவின் சார்வே பொருளெனச் சாரு நீரார். 2

---

பா - ம்—[1] பெற்று வாழ்ந்தார். [2] வாழ்க. [3] மல்கு [4] கன்பா.

அளவிலா மரபின்[1] வாழ்க்கை[2] மட்கலம் அமுதுக் காக்கி
வளரிளம் திங்கட் கண்ணி மன்றுளார் அடியார்க் கென்றும்
உளமகிழ் சிறப்பின் மல்க ஓடளித் தொழுகும் நாளில்
இளமைமீ தூர இன்பத் துறையினில் எளியர் ஆனார். 3

அவர்தங்கண் மனைவி யாரும் அருந்ததிக் கற்பின் மிக்கார்;
புவனங்கள் உய்ய ஐயர் பொங்குநஞ் சுண்ண யாம்செய்
தவமின்று தடுத்த தென்னத் தகைந்துதான் தரித்த தென்று
சிவன்எந்தை கண்டந் தன்னைத் "திருநீல கண்டம்" என்பார். 4

ஆனதங் கேள்வர் அங்கோர் பரத்தைபால் அணைந்து நண்ணை
மானமுன் பொருது வந்த[3] ஊடலால் மனையின் வாழ்க்கை
ஏனைய எல்லாஞ் செய்தே உடனுறை(வு) இசையார் ஆனார்;
தேனலர் கமலப் போதில் திருவினும் உருவம் மிக்கார்.[4] 5

மூண்டஅப் புலவி தீர்க்க[5] அன்பனார் முன்பு சென்று
பூண்டயங் கிளமென் சாயல் பொற்கொடி அனையார் தம்மை
வேண்டுவ இரந்து கூறி மெய்யுற அணையும் போதில்
"தீண்டுவீ ராயின்[6] எம்மைத் திருநீல கண்டம்" என்றார். 6

ஆதியார் நீல கண்டத் தளவுதாங் கொண்ட ஆர்வம்
பேதியா ஆணை கேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கி
ஏதிலார் போல நோக்கி "எம்மைஎன் றதனால் மற்றை
மாதரார் தமையும்[7] என்றன் மனத்தினும் தீண்டேன்" என்றார். 7

கற்புறு மனைவி யாரும் கணவனார்க் கான எல்லாம்
பொற்புற[8] மெய்யுறாமல் பொருந்துவ போற்றிச் செய்ய
இற்புறம் பொழியா தங்கண்[10] இருவரும் வேறு வைகி
அற்புறு புணர்ச்சி இன்மை அயலறி யாமை வாழ்ந்தார். 8

இளமையின் மிக்கு ளார்கள் இருவரும் அறிய நின்ற[11]
அளவில்சீர் ஆணை[12] போற்றி ஆண்டுகள் பலவுஞ் செல்ல

---

பா-ம்—[1] அளவிலாப் பொருளின். [2] மரபின் வந்த. [3] பொறுத்து வந்த, பொருதுவந்த. [4] உருவின்மிக்கார். [5] புலவிநீக்க. [6] திண்டுவீ ரானீர். [7] தம்மை. [8] பொற்புறு. [9] செய்தே. [10] பொழியாரங்கண். [11] அறியா நின்ற. [12] சீராணைப்.

வளமலி இளமை நீங்கி வடிவுறு மூப்பு வந்து
தளர்வொடு சாய்ந்தும் அன்பு தம்பிரான் நிறத்துச் சாய. 9

இந்நெறி ஒழுகும் நாளில் எரிதளிர்த் தென்ன நீண்ட
மின்னொளிர் சடையோன் தானுந் தொண்டரை விளக்கங் காண
நன்னெறி இதுவாம் என்று ஞாலத்தார்[1] விரும்பி உய்யும்
அந்நெறி காட்டும் ஆற்றல் அருட்சிவ யோகி யாகி. 10

கீளொடு கோவணம் சாத்திக் கேடிலா
வாள்விடு நீற்றொளி மலர்ந்த மேனிமேல்
தோளொடு மார்பிடைத் துவளும் நூலுடன்
நீளொளி வளர்திரு முண்ட நெற்றியும். 11

நெடுஞ்சடை கரந்திட நெறித்த பம்பையும்
விடுங்கதிர் முறுவல்வெண் ணிலவும் மேம்பட
இடும்பலிப் பாத்திரம் ஏந்து கையராய்
நடந்துவேட் கோவர்தம் மனையில்[2] நண்ணினார். 12

நண்ணிய தவச்சிவ யோக நாதரைக்
கண்ணுற நோக்கிய காதல் அன்பர்தாம்
புண்ணியத் தொண்டராம்[3] என்று போற்றிசெய்(து)
எண்ணிய வகையினால்[4] எதிர்கொண் டேத்தினார். 13

பிறைவளர் சடைமுடிப் பிரானைத் தொண்டரென்(று)
உறையுளில் அணைந்துபேர் உவகை கூர்ந்திட
முறைமையின் வழிபட மொழிந்த பூசைகள்
நிறைபெரு விருப்பொடு செய்து நின்றபின். 14

"எம்பிரான்! யான்செயும் பணியெது?" என்றனர்
வம்புலா மலர்ச்சடை வள்ளல் தொண்டனார்,
உம்பர்நா யகனும் "இவ் வோடுன் பால்வைத்து
நம்பி! நீ தருகநாம் வேண்டும் போ"தென்று 15

"தன்னை ஒப் பரியது, தலத்துத் தன்னுழைத்
துன்னிய யாவையுந் தூய்மை செய்வது,

பா - ம—[1] ஞாலத்தோர். [2] மனையை. [3] தொண்டர்தாம்.
[4] எண்ணியவ்வகையால்.

பொன்னினும மணியினும் போற்ற வேண்டுவ(து);
இன்னதன் மையதிது; வாங்கு நீ'' என. 16

தொல்லைவேட் கோவர்தங் குலத்துள் தோன்றிய
மல்குசீர்த் தொண்டனார் வணங்கி வாங்கிக்கொண்(டு)
ஒல்லையின் மனையிலோர் மருங்கு காப்புறும்
எல்லையில் வைத்துவந் திறையை எய்தினார். 17

வைத்தபின் மறையவ ராகி வந்தருள்
நித்தனார் நீங்கிட நின்ற தொண்டரும்
உய்த்துடன் போய்விடை கொண்டு மீண்டனர்
அத்தர்தாம் அம்பலம் அணைய மேவினார். 18

சாலநாள் கழிந்த பின்பு தலைவனார் தாம்முன் வைத்த
கோலமார் ஓடு தன்னைக் குறியிடத் தகலப் போக்கிச்
சீலமார் கொள்கை என்றும் திருந்துவேட் கோவர் தம்பால்
வாலிதாம் நிலைமை காட்ட முன்புபோல்[1] மனையில் வந்தார். 19

வந்தபின் தொண்ட னாரும் எதிர்வழி பாடு செய்து
"சிந்தைசெய் தருளிற் றெங்கள் செய்தவம்'' என்று நிற்ப
"முந்தைநாள் உன்பால் வைத்த மொய்யொளி விளங்கும் ஓடு
தந்துநில்'' என்றான் எல்லாம் தான்வைத்து வாங்க வல்லான்.

என்றவர் விரைந்து கூற இருந்தவர் ஈந்த ஓடு
சென்றுமுன் கொள்வான் புக்கார் கண்டிலர் திகைத்துநோக்கி
நின்றவர் தம்மைக் கேட்டார்; தேடியும் காணார்; மாயை
ஒன்றுமங் கறிந்தி லார்தாம்[2] உரைப்பதொன் றின்றி நின்றார். 21

மறையவ ராகி நின்ற மலைமகள் கேள்வன் தானும்
உறையுளிற் புக்கு நின்ற ஒருபெருந் தொண்டர் கேட்ப
"இறையிலிங் கெய்தப் புகாய்! தாழ்த்ததென்?'' என்ன வந்து
கறைமறை யிடற்றி னானைக் கைதொழு துரைக்க லுற்றார். 22

"இழையணி முந்நூல் மார்பின் எந்தை! நீர் தந்து போன,
விழைதகும்[3] ஓடு வைதத வேறிடம் தேடிக் காணேன்; பழைய

பா - ம்—[1] முன்பு வைத்த. [2] அறிந்திலாதார். [3] விழைதரும்.

மற் றதனில் நல்ல பாத்திரந் தருவன் கொண்டிப், பிழையினைப் பொறுக்க வேண்டும் பெரும ! என் றிறைஞ்சி நின்றார். 23

சென்னியால் வணங்கி நின்ற[1] தொண்டரைச் செயிர்த்து நோக்கி, "என்னிது மொழிந்த வாநீ? யான்வைத்த மண்ணோ டன்றிப், பொன்னினால் அமைத்துத் தந்தாய் ஆயினுங் கொள்ளேன், போற்ற, முன்னைநான் வைத்த ஓடே கொண்டுவா" என்றான் முன்னோன். 24

"கேடிலாப் பெரியோய் ! என்பால் வைத்தது கெடுத லாலே
நாடியும் காணேன் , வேறு நல்லதோர் ஓடு சால
நீடுசெல் வதுதான் ஒன்று தருகின்றேன் எனவும் கொள்ளா(து)
ஊடிநின் றுரைத்த தென்றன் உணர்வெலாம் ஒழித்த" தென்ன.

"ஆவதென்? உன்பால்[2] வைத்த அடைக்கலப் பொருளை வெளவிப், பாவகம் பலவும் செய்து பழிக்குநீ ஒன்றும் நாணாய்! யாவரும் காண உன்னை வளைத்துநான் கொண்டே அன்றிப், போவதும் செய்யேன்" என்றான் புண்ணியப் பொருளாய் நின்றான். 26

"வளத்தினால் மிக்க ஓடு வெளவினேன் அல்லேன்; ஒல்லை, உளத்தினும் களவி லாமைக் கென்செய்கேன்? உரையும்" என்னக், களத்துநஞ் சொளித்து நின்றான் "காதல் உன் மகனைப் பற்றிக், குளத்தினில் மூழ்கிப் போ" என் றருளினான் கொடுமை இல்லான். 27

"ஐயர் ! நீர் அருளிச் செய்த வண்ணமியான் செய்வ தற்குப்
பொய்யிலசீர்ப் புதலவன் இல்லை; என்செய்கேன்? புகலும் "
"மையறு சிறப்பின் மிக்க மனையவள் தன்னைப் பற்றி [என்ன,
மொய்யலர் வாவி புக்கு மூழ்குவாய்" எனமொ ழிந்தார். 28

கங்கைநதி கரந்தசடை கரந்தருளி எதிர்நின்ற
வெங்கண்விடை யவர்அருள வேட்கோவர் உரைசெய்வார் :
"எங்களிலஓர் சபதத்தால உடன்மூழ்க இசைவில்லை;
பொங்குபுனல யான்மூழ்கித் தருகின்றேன்; போதும்"என. 29

---

பா - ம்—[1] வணங்கிச் சொன்ன. [2] நின்பால்.

"தந்ததுமுன் தாராதே கொள்ளாமைக் குன்மனைவி
அந்தளிர்ச்செங் கைப்பற்றி அலைபுனலில் மூழ்காதே
சிந்தைவலித் திருக்கின்றாய்! தில்லைவாழ் அந்தணர்கள்
வந்திருந்த பேரவையில்[1] மன்னுவன்யான்" எனச்சென்றார்.[2] 30

நல்லொழுக்கம் தலைநின்றார் நான்மறையின் துறைபோனார்
தில்லைவாழ் அந்தணர்கள் வந்திருந்த திருந்தவையில்
எல்லையிலான் முன்செல்ல இருந்தொண்டர் அவர்தாமும்
மல்குபெருங் காதலினால் வழக்குமே[3] லிட்டணைந்தார். 31

அந்தணனாம் எந்தைபிரான் அருமறையோர் முன்பகர்வான்
"இந்தவேட் கோவன்பால் யான்வைத்த பாத்திரத்தைத்
தந்தொழியான், கெடுத்தானேல் தன்மனைவி கைப்பற்றி
வந்துமூழ் கியுந்தாரான்; வலிசெய்கின் றான்" என்றார். 32

நறைகமழுஞ் சடைமுடியும் நாற்றோளும் முக்கண்ணும்
கறைமருவுந் திருமிடறுங் கரந்தருளி எழுந்தருளும்[4]
மறையவன்இத் திறம்மொழிய மாமறையோர் உரைசெய்வார்
"நிறையுடைய வேட்கோவர்! நீர்மொழியும் புகுந்த"தென. 33

"நீணிதியாம் இதுவென்று நின்றஇவர் தரும்ஓடு
பேணிநான் வைத்தஇடம் பெயர்ந்துகரந் ததுகாணேன்,
பூணணிநூல் மணிமார்பீர்! புகுந்தபரி சிது" என்று
சேணிடையும் நீங்கடையாத் திருந்தொண்டர் உரைசெய்தார்.

திருவுடை அந்த ணாளர் செப்புவார் "திகழ்ந்த நீற்றின்
உருவுடை இவர்தாம் வைத்த ஓட்டினைக் கெடுத்தீ ராகில்
தருமிவர் 'குளத்தில் மூழ்கித் தருக'என் றுரைத்தா ராகில்
மருவிய மனைவி யோடு மூழ்குதல் வழக்கே' என்றார். 35

அருந்தவத் தொண்டர்[5] தாமும் அந்தணர் மொழியக் கேட்டுத்
திருந்திய மனைவி யாரைத் தீண்டாமை செப்ப மாட்டார்
"பொருந்திய வகையால் மூழ்கித் தருகின்றேன் போதும்" என்று
பெருந்தவ முனிவ ரோடும் பெயர்ந்துதம் மனையைச் சார்ந்தார்.

---

பா-ம்—[1] திருந்தவையின் [2] எனச் சொன்னார். [3] வழக்கினமே.
[4] எதிர்நிறை. [5] அரும்பெருந் தொண்டர்.

மனைவியார் தம்மைக் கொண்டு மறைச்சிவ யோகி யார்முன்
சினவிடைப் பாகர் மேவும் திருப்புலீச் சுரத்து முன்னர்
நனைமலர்ச் சோலை வாவி நண்ணித்தம் உண்மை காப்பார்
புனைமணி வேணுத் தண்டின் இருதலை பிடித்துப் புக்கார். 37

தண்டிரு தலையும் பற்றிப் புகும்அவர் தம்மை நோக்கி
வெண்டிரு நீற்று முண்ட வேதியர் "மாதைத் தீண்டிக்
கொண்டுடன் மூழ்கிர்" என்னக் கூடாமை பாரோர் கேட்கப்[1]
பண்டுதம் செய்கை சொல்லி மூழ்கினார் பழுதி லாதார். 38

வாவியின் மூழ்கி ஏறுங் கணவரும் மனைவி யாரும்
மேவிய மூப்பு நீங்கி விருப்புறும் இளமை பெறறுத்
தேவரும் முனிவர் தாமும சிறப்பொடு பொழியுந் தெய்வப்
பூவின்மா மழையின் மீள மூழ்குவார் போன்று தோன்ற. 39

அந்நிலை அவரைக் காணும் அதிசயம் கண்டார் எல்லாம்
முன்னிலை நின்ற வேத முதல்வரைக் கண்டார் இல்லை,
"இந்நிலை இருந்த வண்ணம் என்?" என மருண்டு நின்றார்
துன்னிய விசும்பி னூடு துணையுடன் விடைமேற் கண்டார். 40

---

கண்டனர், கைக ளாரத் தொழுதனர், கலந்த காதல்
அண்டரும் ஏத்தி னார்கள், அன்பர்தம் பெருமை நோக்கி
விண்டரும் பொலிவு காட்டி விடையின்மேல் வருவார் தம்மைத்
தொண்டரும் மனைவி யாரும் தொழுதுடன் போற்றி நின்றார். 41

மன்றுளே திருக்கூத் தாடி அடியவர் மனைகள் தோறும்
சென்றவர் நிலைமை காட்டுந் தேவர்கள் தேவர் தாமும்
"வென்றஐம் புலனால் மிக்கீர்! விருப்புடன் இருக்க நம்பால்
என்றும்இவ் இளமை நீங்கா" தென்றெழுந் தருளி னாரே. 42

விறலுடைத் தொண்ட னாரும் வெண்ணகைச் செவ்வாய் மென்
அறலியற் கூந்த லாளாம்[2] மனைவியும அருளின் ஆர்ந்த [றோள்
திறலுடைச் செய்கை செய்து சிவலோகம் அதனை எய்திப்
பெறலரும் இளமை பெற்றுப் பேரின்பம் உற்றார் அன்றே. 43

---

பா - ம்—[1] கேட்பப். [2] கூர்தலாராம்.

அயலறி யாத வண்ணம் அண்ணலார் ஆணை உய்த்த, மய லில்சீர்த்[1] தொண்ட ரை யான்அறி வகையால் வாழ்த்திப், புயல்வளர் மாட நீடும் பூம்புகார் வணிகர் பொய்யில், செயல் இயற் பகையார் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன். 44

## 3. இயற்பகை நாயனார் புராணம்

சென்னி வெண்குடை நீடந பாயன் திருக்கு லம்புகழ் பெருக்கிய சிறப்பின், மன்னு தொலபுகழ் மருதநீர் நாட்டு வயலவ ளநதர இயல்பினில அளித்துப், பொன்னி நலநதி மிக்க நீர் பாய்ந்து புணரி தன்னையும் புனிதமாக் குவதோர், நன்னெ டும்பெருந் தீர்த்தமுன் னுடைய நலஞ்சி றந்தது வளம்புகார் நகரம். 1

அக்கு லபபதிக் குடிமுதல் வணிகர், அளவில் செல்வத்து வளமையின் அமைந்தார், செககர் வெண்பிறைச் சடையவர் அடிமைத் திறத்தின் மிக்கவர், மறைச்சிலம் படியார், மிக்க சீரடி யார்கள்யா ரெனினும்[2] வேண்டும் யாவையும் இல்லையென் னாதே, இக்க டற்படி நிகழமுன் கொடுக்கும் இயல்பின் நின் றவர், உலகியற பகையார். 2

ஆறு சூடிய ஐயர்மெய யடிமை அளவி லாததோர் உளம் நிறை அருளால், நீறு சேர்திரு மேனியர் மனத்து நினைத்த யாவை யும் வினைப்பட[3] முடித்து, மாறி லாதநன் னெறியினில் விளங் கும்[4] மனைய றம்புரி மகிழ்ச்சியின் வந்த, பேறெ லாம்அவர் ஏவினசெய்யும் பெருமை யேஎனப் பேணிவாழ் நாளில். 3

ஆயு[5] நுண்பொரு ளாகியும் வெளியே அம்ப லத்துள்[6] நின் றாடுவார் உம்பர், நாய கிக்குமஃ தறியவோ? பிரியா நங்கை தானறி யாமையோ? அறியோம், தூய நீறுபொன் மேனியில் விளங்கத் தூர்த்த வேடமும் தோன்றவே தியராய், மாய[7] வண் ணமே கொண்டுதந் தொண்டர் மறுத வண்ணமும் காட்டுவான் வந்தார். 4

---

பா-ம்—[1] மயலிலாத். [2] யாரேனும். [3] வினைப்படி. [4] விளங்க. [5] ஆய. [6] அம்பலத்து. [7] மாயை.

வந்து தண்புகார் வணிகர்தம் மறுகின் மருங்(கு)இ யற்பகை யார்மனை புகுத, "எந்தை எம்பிரான் அடியவர் அணைந்தார்" என்று நின்றதோர் இன்பஆ தரவால், சிந்தை அன்பொடு சென் றெதிர் வணங்கிச் சிறப்பின் மிக்கஅர்ச் சனைகள்முன் செய்து, "முந்தை எம்பெருந் தவத்தினா லென்கே?[1] முனிவர் இங்கெழுந் தருளிய" தென்றார். 5

என்று கூறிய இயற்பகை யார்முன் எய்தி நின்றஅக் கைதவ மறையோர், "கொன்றை வார்சடை யாரடி யார்கள் குறித்து வேண்டின குணமெனக் கொண்டே, ஒன்றும் நீர்எதிர் மறு(து) உவந் தளிகரும் உண்மை கேட்டுநும் பாலொன்று வேண்டி, இன்று நான்இங்கு வந்தனன் அதனுக் கிசைய லாம்எனில் இயம்பலாம்" என்றார். 6

என்ன அவ்வுரை கேட்டியற் பகையார் "யாதும் ஒன்றும் என் பக்கலஉண டாகில், அன்ன தெம்பிரான் அடியவர் உடைமை; ஐயம் இல்லை, நீர் அருள்செயும்"[2] என்ன, "மன்னு காதல்உன் மனைவியை வேண்டிவந்த திங்"கென அங்கணர்[3] எதிரே, சொன்ன போதிலும் முன்னையின் மகிழ்ந்து தூய தொண்டனார் தொழுதுரை செய்வார். 7

இதுஎ னக்குமுன் புள்ளதே வேண்டி எம்பி ரான்செய்த[4] பேறெனக்" கென்னாக், கதுமெ னச்சென்று தம்மனை வாழக் கைக் கற்பினர்[5] மேம்படு காதலி யாரை, "விதிம ணக்குல மடந்தை! இன் றுனைஇம் மெய்த்த வர்க்குநான் கொடுத்தனன்" என்ன, மதும லர்க்குழல் மனைவியார் கலங்கி மனந்தெ ளிந்தபின் மற்றிது மொழிவார்.[6] 8

"இன்று நீரெனக் கருள்[7] செய்த திதுவேல் என்னு யிர்க் கொரு நாத![8] நீர் உரைத்த, தொன்றை நான்செயும் அத்தனை யல்லால்[9] உரிமை வேறுள தோஎனக்(கு)?" என்று, தன் தனிப்

பா - ம—[1] தவத்தினாலே கொல; என்கொல். [2] செய்யும். [3] அந்தணர். [4] எம்பிரான் தந்த. [5] கற்பு. [6] மொழிந்தார். [7] நீரென்னை யருள். [8] நாதா. [9] நான் செய்வதலதுமை யல்லால்.

பெருங் கணவரை வணங்கத் தாழ்ந்து தொண்டனார் தாமெதிர் வணங்கச் சென்று மாதவன் சேவடி பணிந்து திகைத்து நின் றனள் திருவினும் பெரியாள். 9

மாது தன்னை முன் கொடுத்தமா தவர்தாம் மனம கிழ்ந்து பே ருவகையின் மலர்ந்தே, "யாது நான் இனிச் செய்பணி?" என்றே[1] இறைஞ்சி நின்றவர் தம்மெதிர் நோக்கிச், சாதி வேதிய ராகிய தலைவர் "தையல் தன்னையான் தனிக்கொடு போகக்,காதல் மேவிய சுற்றமும் பதியும் கடக்க நீதுணை போதுக!" என்றார். 10

என்றவர் அருளிச் செய்ய "யானேமுன் செய்குற் றேவல்
ஒன்றிது தன்னை என்னை உடையவர் அருளிச் செய்ய
நின்றது பிழையாம்" என்று நினைந்துவே றிடத்துப் புக்குப்
பொன்றிகழ் அறுவை சாத்திப் பூங்கச்சுப் பொலிய வீக்கி. 11

வாளொடு பலகை ஏந்தி வந்தெதிர் வணங்கி மிக்க
ஆளரி ஏறு போல்வார் அவரைமுன் போக்கிப் பின்னே
தோளிணை துணையே யாகப் போயினார் துன்னி னாரை
நீளிடைப் படமுன் கூடி நிலத்திடை வீழ்த்த நேர்வார். 12

மனைவியார் சுற்றத தாரும் வள்ளலார் சுற்றத் தாரும்
"இனையதொன் றியாரே செய்தார்? இயற்பகை பித்த னானால்
புனையிழை தன்னைக் கொண்டு போவதாம் ஒருவன்" என்று
துனைபெரும பழியை மீட்பான தொடர்வதற் கெழுந்து சூழ்வார்.

வேலொடு வில்லும் வாளும் சுரிகையும் எடுத்து மிக்க
காலென விசையிற் சென்று கடிநகர்ப் புறத்துப் போகிப்
பாலிரு மருங்கும் ஈண்டிப பரந்தஆர்ப் பரவம பொங்க[2]
மால்கடல் கிளர்ந்த தென்ன வந்தெதிர் வளைத்துக் கொண்டார்.

வழிவிடுந் துணைபின் போத வழித்துணை யாகி யுள்ளார்
கழிபெருங் காதல் காட்டிக் காரிகை யுடன்போம் போதில்
"அழிதகன்! போகேல், ஈண்டஎவ் வருங்குலக்[3] கொடியை விட்டுப்
பழிவிட நீபோ" என்று பகர்ந்தெதிர் நிரந்து[4] வந்தார். 15

---

பா - ம்—[1] தான் என்று. [2] பொங்கி. [3] ஈண்ட அருங்குலக. [4]நிரைந்து.

மறைமுனி அஞ்சி னான்போல் மாதினைப் பார்க்க மாதும்
"இறைவனே! அஞ்ச வேண்டாம்; இயற்பகை வெல்லும்" என்ன
அறைகழல் அண்ணல்[1] கேளா "அடியனேன் அவரை எல்லாம்
தறையிடைப் படுத்துகின்றேன்; தளர்ந்தருள் செய்யேல்" என்று.

பெருவிறல் ஆளி என்னப் பிறங்கெரி சிதற நோக்கிப்
பரிபவப் பட்டு வந்த படர்பெருஞ் சுற்றத் தாரை
"ஒருவரும் எதிர்நில லாமே[2] ஓடிப்போய்ப் பிழையும்; அன்றேல்
எரிசுடர் வாளிற் கூறுய்த் துடிக்கின்றீர்" என்று நேர்ந்தார்.[3] 17

"ஏடா! நீ என்செய் தாயால்? இத்திறம்[4] இயம்பு கின்றாய்;
நாடுறு பழியும் ஒன்னார் நகையையும் நாணாய்; இன்று
பாடவம் உரைப்ப துன்றன் மனைவியைப் பனவற்(கு) ஈந்தோ?
கூடவே மடிவ தன்றிக் கொடுக்கயாம் ஒட்டோம்" என்றார். 18

மற்றவர் சொன்ன மாற்றம் கேட்டலும் மனத்தின் வந்த
செற்றமுன் பொங்க "உங்கள் உடற்றுணி எங்குஞ் சிந்தி
முற்றுநும் உயிரை எல்லாம் முதல்விசும் பேற்றிக் கொண்டு
நற்றவர் தம்மைப் போக விடுவன்" என் றெழுந்தார் நல்லோர்.

நேர்ந்தவர் எதிர்ந்த போது நிறைந்தஅச்[5] சுற்றத் தாரும்,
சார்ந்தவர் தம்முன்[6] செல்லார் தையலைக் கொண்டு பெற்றம்,
ஊர்ந்தவர் படிமேற் செல்ல உற்றெதிர் உடன்று பொங்கி,
ஆர்ந்தவெஞ் சினத்தால் மேற்சென் றடர்ந்தெதிர் தடுத்தார் அன்றே. 20

சென்றவர் தடுத்த போதில் இயற்பகை யார்முன் சீறி
வன்றுணை வாளே யாகச் சாரிகை[7] மாறி வந்து
துன்றினர் தோளும் தாளும் தலைகளும் துணித்து வீழ்த்து
வென்றடு புலியே றென்ன அமர்விளை யாட்டில் மிக்கார். 21

மூண்டுமுன் பலராய் வந்தார் தனிவந்து முட்டி னார்கள்
வேண்டிய திசைகள் தோறும் வேறுவே றமர்செய் போழ்தில்

---

பா - ம்—[1] அனபர். [2] நில்லாதே [3] துணிகின்றீர் என்று நோக்தார். [4] இத்திறல். [5] நிறைதவச். [6] முன்பு. [7] சாரியை.

ஆண்டகை வீரா தாமே அனைவர்க்கும் அனைவ ராகிக்
காண்டகு விசையிற் பாய்ந்து கலந்துமுன் துணித்து வீழ்த்தார்.

சொரிந்தன குடல்கள் எங்கும், துணிந்தன உடல்கள் எங்கும்,
விரிந்தன தலைகள் எங்கும், மிடைந்தன கழுகும் எங்கும்;
எரிந்தன விழிகள் எங்கும், எதிர்பபவர்[1] ஒருவர் இன்றித்
திரிந்தனர் களனில் எங்கும் சிவன்கழல் புனைந்த வீரர். 23

மாடலை குருதி பொங்க மடிந்தசெங் களத்தின் நின்றும்
ஆடுறு செயலின் வந்த கிளைஞரோ டணைந்தார் தம்மில்
ஓடினார் உள்ளார் உய்ந்தார், ஒழிந்தவர் ஒழிந்தே மாண்டார்;
நீடிய வாளும் தாமும் நின்றவர் தாமே நின்றார். 24

திருவுடை மனைவி யாரைக் கொடுத்திடைச்[2] செறுத்து முன்பு
வருபெருஞ் சுற்றம் எல்லாம் வாளினால் துணிதது மாட்டி[3]
அருமறை முனியை நோக்கி "அடிகள்நீர் அஞ்சா வண்ணம்
பொருவருங் கானம் நீங்க விடுவன்" என் றுடனே போந்தார். 25

இருவரால் அறிய ஒண்ணு ஒருவர்பின் செல்லும் ஏழை
பொருதிறல் வீரர் பின்பு போகமுன்[4] போகும் போதில்
அருமறை முனிவன்[5] சாய்க்கா டதன்மருங் கணைய மேவித்
திருமலி தோளி னானை "மீள்" எனச் செப்பி னானே. 26

தவமுனி தன்னை மீளச் சொன்னபின் தலையால் ஆர
அவன்மலர்ப் பதங்கள் சூடி அஞ்சலி கூப்பி நின்று
புவனமூன் றுய்ய வந்த பூசுரன் தன்னை ஏத்தி
"இவனருள் பெறபபெற்றேன்"என் றியற்பகையாரும்மீண்டார்.

செய்வதற் கரிய செய்கை செய்தநற் றொண்டர் போக
மைதிகழ் கண்டன் எண்டோள் மறையவன் மகிழ்ந்து நோக்கிப்
"பொய்தரும் உள்ளம் இல்லான் பார்க்கிலன் போனான்" என்று
மெய்தரு சிந்தை யாரை மீளவும் அழைக்க லுற்றான். 28

"இயற்பகை முனிவா ஓலம்! ஈண்டு[6] நீ வருவாய் ஓலம்!
அயர்ப்பிலா தானே ஓலம்! அன்பனே ஓலம்! ஓலம்!

---

பா-ம்—[1] எதிர்ந்தவர். [2] கொடுத்திடச். [3] மாற்றி. [4] போதமுன். [5] முனிவர். [6] ஈண்ட.

செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம் !" என்றான்
மயக்கறு மறைஓ விட்டு மாலயன் தேட நின்றான். 29

அழைத்தபேர் ஓசை கேளா "அடியனேன் வந்தேன்! வந்தேன்!
பிழைத்தவர் உளரேல் இன்னும் பெருவலித் தடக்கை வாளின்
இழைத்தவ ராகின் றார்" [1]என் றியற்பகை யார்வந் தெய்தக்
குழைப்பொலி காதி னானும் மறைந்தனன் கோலங் கொள்வான்.

சென்றவர் முனியைக் காணார், சேயிழை தன்னைக் கண்டார்,,
பொன்றிகழ் குன்று வெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்த
தென்னத, தன்றுணை யுடனே வானில் தலைவனை விடைமேற்
கண்டார்,, நின்றிலர், தொழுது வீழ்ந்தார், நிலத்தினின் றெழுந்
தார், நேர்ந்தார். 31

"சொல்லுவ தறியேன் வாழி! தோற்றிய தோற்றம் போற்றி!
வல்லைவந் தருளி என்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி!
எல்லையில இன்ப வெள்ளம் எனக்கருள் செய்தாய் போற்றி!
தில்லையம் பலத்து ளாடும் சேவடி போற்றி" என்ன. 32

விண்ணிடை நின்ற வெள்ளை விடையவர் அடியார் தம்மை
"எண்ணிய உலகு தன்னில் இப்படி நம்பால் அன்பு
பண்ணிய பரிவு கண்டு[2] மகிழ்ந்தனம், பழுதி லாதாய!
நண்ணிய மனைவி யோடு நம்முடன் போது" கென்று. 33

திருவளர் சிறப்பின் மிக்க திருத்தொண்டர் தமக்குந் தேற்றம்[3]
மருவிய தெய்வக் கற்பின் மனைவியார் தமக்குந் தக்க
பெருகிய அருளின் நீடு[4] பேறளித் திமையோர் ஏத்தப்
பொருவிடைப் பாகர் மன்னும் பொற்பொது அதனுட் புக்கார். 34

வானவர் பூவின் மாரி பொழியமா மறைகள் ஆர்ப்ப
ஞானமா முனிவர் போற்ற நலமிகு சிவலோ கத்தில்
ஊனமில் தொண்டர் கும்பிட் டுடன்உறை பெருமை பெற்றார்
ஏனைய சுற்றத் தாரும் வானிடை இன்பம் பெற்றார். 35

இன்புறு தாரந் தன்னை ஈசனுக் கன்பர் என்றே
துன்புறு துதவும் தொண்டர் பெருமையைத் தொழுது வாழ்த்தி

---

பா - ம்—[1] ராகி நின்றார். [2] பரிவு நோக்கி. [3] தோற்றம். [4] நீடும்.

அன்புறு மனத்தால் நாதன் அடியவர்க் கன்பு நீடு
மன்புகழ் இளையை மாறன் வளத்தினை வழுத்த லுற்றேன். 36

# 4. இளையான்குடி மாற நாயனார் புராணம்

அம்பொன் நீடிய அம்ப லத்தினில் ஆடு வார்அடி சூடுவார் தம்பி ரான்அடி மைத்தி றத்துயர் சால்பின் மேன்மை தரித்துளார், நம்பு வாய்மையில் நீடு சூத்திர நற்கு லஞ்செய் தவத்தினால்,[1] இம்பர் ஞாலம் விளக்கி னார்இளை யான்கு டிப்பதி மாறனார்.

ஏரின் மல்கு வளத்தி னால்வரும் எல்லை இல்லதொர் செல்வமும், நீரின் மல்கிய வேணி யார்அடி யார்தி றத்து நிறைந்ததோர் சீரின் மல்கிய அன்பின் மேன்மை திருந்த[2] மன்னிய சிந்தையும், பாரின் மல்க விரும்பி மற்றவை[3] பெற்ற நீடு பயன்கொள்வார். 2

ஆரம் என்பு புனைந்த ஐயர்தம் அன்பர் என்பதொர் தன்மையால், நேர வந்தவர் யாவ ராயினும் நித்த மாகிய பத்திமுன், கூர வந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத்(து), ஈரம் மென்மது ரப்ப தம்பரி வெய்த முன்னுரை செய்தபின். 3

கொண்டு வந்து மனைப்பு குந்து குலாவு பாதம் விளக்கியே, மண்டு காதலின் ஆத னத்திடை வைத்த ருச்சனை செய்தபின், உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்தி றத்தினில்[4] ஒப்பிலா, அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில் அமுது செய்ய அளித்துளார். 4

ஆளும் நாயகர் அன்பர் ஆனவர் அளவி லார்உளம் மகிழவே, நாளு நாளும் நிறைந்து வந்து நுகர்ந்த தன்மையின் நன்மையால், நீளு மாநிதி யின்ப ரப்பு நெருங்கு செல்வம் நிலாவிளங், கேளி னார்அள கைக்கி ருத்திய தோழ னாரென வாழுநாள். 5

---

பா - ம்—[1] தவத்தினர். [2] திருந்தி. [3] மற்றிவை. [4] திறத்தன.

செல்வம் மேவிய நாளில் இச்செயல் செய்வ தன்றியும் மெய்
யினால், அல்லல் நல்குர வான போதினும் வல்லர் என்றறி
விக்கவே, மல்லல் நீடிய செல்வம் மெல்ல மறைந்து நாடொறும்
மாறிவந்(து), ஒல்லை யில்[1]வறு மைப்ப தம்புக உன்னி னார்தில்லை
மன்னினார். 6

இன்ன வாறுவ ளஞ்சு ருங்கவும் **எம்பி ரான்இளை யான்குடி,
மன்னன் மாறன் மனஞ்சு ருங்கு தல்இன்றி** உள்ளன மாறியும்,
தன்னை மாறி இறுக்க உள்ள கடன்கள் தக்கன கொண்டுபின்,
முன்னை மாறில் திருப்ப ணிக்கண் முதிர்ந்த கொள்கைய[2]
ராயினார். 7

மற்ற வர்[3]செயல் இன்ன தன்மைய தாக மாலய னைஅக்,
கொற்ற ஏனமும் அன்ன முந்தெரி யாத கொள்கைய ராயினார்,
பெற்ற ஊர்வதும் இன்றி நீடிய பேதை யாளுடன் இன்றிஓர்,
நற்ற வத்தவர் வேட மேகொடு ஞாலம் உய்ந்திட நண்ணினார். 8

மாரிக் காலத் திரவினில் வைகியோர்
தாரிப் பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித் தில்லம் அடைத்தபின் பண்புற
வேரித் தாரான் விருந்தெதிர் கொண்டனன். 9

ஈர மேனியை நீக்கி இடங்கொடுத்
தார இன்னமு தூட்டுதற் காசையால்
தார மாதரை நோக்கித் "தபோதனர்
தீர வேபசித் தார்செய்வ தென்"என்று.[4] 10

"நமக்கு முன்பிங் குணவிலை யாயினும்
இமக்கு லககொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாமஇன் அடிசில் தகவுற
அமைக்கு மாறெங்ங னே? அணங் கே!"என. 11

மாது கூறுவள் "மற்றொன் றுங் காண்கிலேன்;
ஏதி லாரும் இனித்தரு வாரில்லை,

பா-ம்—[1] ஒல்லைவல் [2] செய்கைய. [3] மற்றவன். [4] தென்னென.

போதும் வைகிற்றுப் போம்இடம் வேறிலை,
தீது செய்வினை யேற்கென் செயல்?''என்று. 12

"செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலும் ஆகும்,மற்(று)
அல்ல தொன்றறி யேன்''என் றயர்வுற. 13

மற்ற மாற்றம் மனைவியார் கூறமுன்[1]
பெற்ற செல்வம் எனபபெரி துள்மகிழ்ந்(து)
உற்ற காதலி னுல்ஒருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத தொடங்குவார் 14

பெருகு வானம் பிறங்க மழைபொழிந்(து)
அருகு நாப்பண் அறிவருங் கங்குல்தான்
கருகு மையிரு ளினகணம் கட்டுவிட்(டு)
உருகு கின்றது போன்ற துலகெலாம். 15

எண்ணும் இவ்வுல கத்தவர் யாவரும்
துண்ணெ னும்படி தோன்றமுன் தோன்றிடில்[2]
வண்ண நீடிய மைக்குழம் பாம்என்று
நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து 16

உள்ளம் அன்புகொண் டூக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் துக்குறி யின்வழிப
புள்ளு றங்கும் வயலபுகப் போயினார்
வள்ள லார்இளை யானகுடி மாறனார். 17

காலி னுல்தட விச்சென்று கைகளால்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரி இடாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச் சுமந்தொல்லை மீண்டனர். 18

வந்தபின் மனைவி யாரும் வாய்தலின் நின்று வாங்கிச்
சிந்தையில் விரும்பி நீரில் சேற்றினை அலம்பி ஊற்றி

---

பா - ம்—[1] கூறலும். [2] தோன்றிமுன தோய்ந்திடில்.

"வெந்தழல் அடுப்பின் மூட்ட[1] விறகில்லை" என்ன மேலோர்
அந்தமில் மனையில் நீடும் அலகினை அறுத்து வீழ்த்தார். 19

முறித்தவை அடுப்பின் மாட்டி[2] முளைவித்துப் பதமுன் கொள்ள
வறுத்தபின் அரிசி யாக்கி வாக்கிய உலையிற் பெய்து
வெறுப்பில்இன் அடிசில் ஆக்கி மேம்படு கற்பின் மிக்கார்
"கறிக்கினி என்செய் கோம்!" என் றிறைஞ்சினார் கணவ னாரை.

வழிவரும் இளைப்பி னோடும் வருத்திய[3] பசியி னாலே
"அழிவுறும் ஐயன்" என்னும் அன்பினிற் பொலிந்து சென்று
குழிநிரம் பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப
பழிமுதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு நல்க. 21

மனைவியார் கொழுநர் தந்த மனமகிழ் கறிகள் ஆய்ந்து
புனலிடைக் கழுவித் தக்க புனிதபாத் திரத்துக் கைமமை
வினையினால்[4] வேறு வேறு கறியமு தாக்கிப் பண்டை
நினைவினால் குறையை நேர்ந்து[5] திருவமு தமைத்து நின்று. 22

கணவனார் தம்மை நோக்கிக் கறியமு தான காட்டி
"இணையிலா தாரை ஈண்ட அமுதுசெய் விப்போம்" என்ன
உணர்வினால் உணர ஒண்ணா ஒருவரை உணர்த்த வேண்டி
அணையமுன் சென்று நின்றங் கவர்துயில் அகற்ற லுற்றார். 23

"அழுந்திய இடருள் நீங்கி அடியனேன் உய்ய என்பால்
எழுந்தருள் பெரியோய்! ஈண்ட அமுதுசெய் தருள்க" என்று
தொழும்பனார் உரைத்த போதில் சோதியாய் எழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாரும் தொண்டரும் திகைத்து நின்றார். 24

மாலயற் கரிய நாதன் வடிவொரு சோதி யாகச்
சாலவே மயங்கு வார்க்குச் சங்கரன் தான்ம கிழ்ந்தே
ஏலவார் குழலாள் தன்னோ டிடபவா கனனாய்த் தோன்றிச்
சீலமார் பூசை செய்த திருத்தொண்டர் தம்மை நோக்கி. 25

"அன்பனே! அன்பர் பூசை அளித்தநீ அணங்கி னோடும்,
என்பெரும் உலகம்[6] எய்தி இருநிதிக் கிழவன் தானே, முன்

---

பா - ம்—[1] மாட்ட. [2] மூட்ட. [3] வருந்திய. [4] வினையினில். [5] நோர்ந்து. [6] தலத்தை; உலகை.

பெரு நிதியம் ஏந்தி மொழிவழி ஏவல் கேட்ப, இன்பமார்ந்
திருக்க'' என்றே அருள்[1] செய்தான் எவர்க்கும் மிக்கான். 26

இப்பரி சிவர்க்குத் தக்க வகையினால் இன்பம் நல்கி
முப்புரஞ் செற்றார் அன்பர் முன்பெழுந் தருளிப் போனார்
அப்பெரி யவர்தந் தூய அடியிணை தலைமேற் கொண்டு
மெய்ப்பொருட் சேதி வேந்தன் செயலினை விளம்ப லுற்றேன். 27

---

## 5 மெய்ப்பொருள் நாயனார் புராணம்

---

சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாகர் அன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு
காதலால் ஈசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார். 1

அரசியல் நெறியின் வந்த அறநெறி[2] வழாமல் காத்து[3]
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகள் மாற்றி
உரைதிறம் பாத நீதி ஓங்குநீர் மையினின் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையான் அன்பர் வேடமே சிந்தை செய்வார்.

மங்கையைப் பாக மாக உடையவர்[4] மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி ஏழிசைப் பாடல் ஆடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கள்நா யகருக் கன்பர் தாளலால் சார்பொன் றில்லார். 3

தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகும் என்று
நாடிய மனத்தி னோடு நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்.[5] 4

இன்னவா றொழுகும் நாளில் இகல்திறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும் ஆசையால் அமர்மேற் கொண்டு

---

பா - ம்—[1] திருப்பீராம்'' என்றருள். [2] வந்திங் கறநெறி. [3] புல்லி. [4] வைத்தவர். [5] வாழ்ந்தார்.

பொன்னணி ஓடை யானைப் பொருபரி காலாள் மற்றும்
பன்முறை இழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனான். 5

இப்படி இழந்த மாற்றான் இகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீலம் அறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே அற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை எண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான்.[1] 6

மெய்யெலாம் நீறு பூசி வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி ஏந்தி
மைபொதி விளக்கே என்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்த நாதன்.[2] 7

மாதவ வேடங் கொண்ட வன்கணான் மாடந் தோறும்
கோதைசூழ் அளக பாரக் குழைக்கொடி ஆட மீது
சோதிவெண் கொடிகள் ஆடுஞ் சுடர்நெடு மறுகிற் போகிச்
சேதியர் பெருமான் கோயில் திருமணி வாயில் சேர்ந்தான். 8

கடையுடைக் காவ லாளர் கைதொழு தேற[3] நின்றே
"உடையவர் தாமே வந்தார், உள்ளெழுந் தருளும்" என்னத்
தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்தன் [என்றான்.
"இடைதெரிந் தருள வேண்டும் துயில்கொளும் இறைவன்"

என்றவன் கூறக் கேட்டே "யான்அவற் குறுதி[4] கூற
நின்றிடு நீயும்" என்றே அவனையும் நீக்கிப் புக்குப்
பொன்றிகழ் பள்ளிக் கட்டில் புரவலன் துயில மாடே
மன்றலங் குழல்மென் சாயல் மாதேவி இருப்பக் கண்டான் 10

கண்டுசென் றணையும் போது கதுமென இழிந்து[5] தேவி
வண்டலர் மாலை யானை எழுப்பிட உணர்ந்து மன்னன
"அண்டர்நா யகனார் தொண்ட ராம்"எனக் குவித்த செங்கை
கொண்டெழுந்தெதிரே[6] சென்று கொள்கையின் வணங்கி நின்று. 11

"மங்கலம் பெருக மற்றென் வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற தென்கொலோ?" என்று கூற

---

பா - ம்—[1] செல்வான். [2] முத்தி நாதன; புத்தி நாதன் [3] தொழுதேத்தி. [4] இவற்குறுதி. [5] எழுந்து. [6] கொண்டிழிந் தெதிரே.

"உங்கள்நா யகனார் முன்னம் உரைத்தஆ கமநூல் மண்மேல்
எங்குமில் லாத தொன்று கொடுவந்தேன் இயம்ப" என்றான். 12

"பேறெனக் கிதன்மேல் உண்டோ? பிரான்அருள் செய்த இந்த
மாறிலா கமத்தை வாசித் தருள்செய வேண்டும்" என்ன
"நாறுபூங் கோதை மாது தவிரவே நானும் நீயும்
வேறிடத் திருக்க[1] வேண்டும்" என்றவன் விளம்ப, வேந்தன்.

திருமகள் என்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
புரிவுடன்[2] விரைய அந்தப் புரத்திடைப் போக ஏவித்
தருதவ வேடத் தானைத் தவிசின்மேல் இருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி "இனியருள் செய்யும்" என்றார். 14

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்,
புத்தகம் அவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதில்,
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தஅப் பரிசே செய்ய,
"மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள்" எனத் தொழுது வென்றார். 15

மறைத்தவன் புகுந்த போதே மனம்அங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கண் கூடி வாளினால் எறிய லுற்றான்,
நிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படும் அளவில் "தத்தா! நமர்" எனத் தடுத்து வீழ்ந்தார்.

வேதனை எய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனுந் தத்தன் தானும் தலையினால் வணங்கித் தாங்கி,
"யாதுநான் செய்கேன்?" என்ன "எம்பிரான் அடியார் போக
மீதிடை விலக்கா வண்ணம் கொண்டுபோய் விடுநீ" என்றார். 17

அத்திறம் அறிந்தார் எல்லாம் "அரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் தன்னைக்கொல்வோம்" எனப்புடைச் சூழ்ந்தபோது
தத்தனும் அவரை எல்லாம் தடுத்துடன் கொண்டு போவான்
"இத்தவன் போகப் பெற்ற திறைவன தாணை" என்றான். 18

அவ்வழி அவர்கள் எல்லாம் அஞ்சியே அகன்று[3] நீங்கச்,
செவ்விய நெறியில் தத்தன் திருநகர் கடந்து போந்து, கைவடி

பா - ம்—[1] திருத்தல். [2] பரிவுடன். [3] அகல.

நெடுவாள் ஏந்தி ஆளுறாக் கானஞ் சேர, வெவ்வினைக் கொடியோன் தன்னை விட்டபின்[1] மீண்டு போந்தான். 19

மற்றவன் கொண்டு போன வஞ்சனை வேடத் தான்மேற்
செற்றவர் தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச் சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவன் முன்பு சென்றான் கோமகன் குறிப்பில் நின்றான்.

சென்றடி வணங்கி நின்று "செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி விட்டனன்" என்று கூற
"இன்றெனக்(கு)ஐயன் செய்த தியார்செய்ய வல்லார்?" என்று
நின்றவன் தன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார். 21

அரசியல் ஆயத் தார்க்கும் அழிவுறும் காத லார்க்கும்
விரவிய செய்கை தன்னை[2] விளம்புவார் "**விதியினாலே
பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீர்**" என்று
புரவலர் மன்று ளாடும் பூங்கழல் சிந்தை செய்தார். 22

தொண்டனார்க்(கு) இமயப் பாவை துணைவனார் அவர்முன் தம்மைக், கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க, அண்டவா னவர்கட் கெட்டா அருட்கழல் நீழல் சேரக், கொண்டவா றிடைய றாமல்[3] கும்பிடுங் கொள்கை ஈந்தார். 23

**இன்னுயிர் செகுக்கக் கண்டும் எம்பிரான் அன்பர் என்றே, நன்னெறி காத்த சேதி நாதனார் பெருமை** தன்னில், என்னுரை செய்தே னாக, **இகல்விறன் மிண்டர்** பொற்றாள், சென்னிவைத் தவர்முன் செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன். 24

---

# 6. விறன்மிண்ட நாயனார் புராணம்

**விரை**செய் நறும்பூந் தொடையிதழி வேணி யார்தங் கழல் பரவிப்,[4] பரசு பெறுமா தவமுனிவன் **பரசு ராமன் பெறுநாடு,**

---

**பா-ம்**—[1] விட்டவன் [2] எல்லாம். [3] கொண்டவா இடையறாமல்; கொண்டவர் இடையறாமல். [4] கழல்பரசிப்.

திரைசெய் கடலின் பெருவளனும் திருந்து நிலனின் செழுவள னும், வரையின் வளனும் உடன்பெருகி மல்கு நாடு **மலைநாடு** 1

**வாரி** சொரியுங் கதிர்முத்தும் வயல்மென் கரும்பிற் படு முத்தும், வேரல் விளையுங் குளிர்முததும் வேழ மருப்பின் ஒளிர் முத்தும், மூரல் எனச்சொல்[1] வெண்முத்த நகையார் தெரிந்து முறைகோக்கும், சேரர் திருநாட் டூர்களின்முன் சிறந்த மூதூர் **செங்குன்றூர்.** 2

**என்னும்** பெயரின் விளங்கியுல கேறும் பெருமை யுடையது தான், அன்னம் பயிலும் வயலுழவின் அமைந்த வளத்தால் ஆய்ந்தமறை, சொன்ன நெறியின வழியொழுகும் தூய குடி மைத் தலைநின்றூர், மன்னுங் குலத்தின் மாமறைநூல் மரபிற் பெரியோர் வாழ்பதியாம் 3

அப்பொற் பதியி னிடைவேளாண் குலத்தை விளக்க அவ தரித்தார்,, செப்பற் கரிய பெருஞ்சீர்த்திச் **சிவனார் செய்ய கழல பற்றி, எப்பற் றினையும் அறஎறிவார** எல்லை தெரிய ஒண்ணுதார், **மெய்ப்பத் தர்கள்பாற் பரிவுடையார்;** எம்பி ரானூர், **விறனை மிண்டர்.** 4

நதியும் மதியும் புனைந்தசடை நம்பர் விரும்பி நலம்சிறந்த, பதிகள எங்கும் கும்பிட்டுப் படரும் காதல் வழிச்செல்வார், முதி ரும் அன்பிற் பெருந்தொண்டர் முறைமை நீடு திருக்கூட்டத்(து), எதிர்முன் பரவும அருள்பெற்றே இறைவர் பாதம் தொழப் பெற்றூர். 5

பொன்தாழ் அருவி மலைநாடு கடந்து கடல்சூழ் புவிஎங்கும், சென்(று)ஆள் உடையார் அடியவர்தம் **திண்மை ஒழுக்க நடை** செலுத்தி, வன்தாள் மேருச் சிலைவளைத்துப புரங்கள் செற்ற[2] வைதிகத்தேர், நின்றூர் இருந்த திருவாரூர் பணிந்தார் **நிகரொன் றில்லாதார்.** 6

**திருவார்** பெருமை திகழ்கின்ற "தேவா சிரிய னிடைப் பொலிந்து, மருவா நின்ற **சிவனடியார்[3] தம்மைத் தொழுது**

---

பா - ம்—[1] மூரல் முறுவல். [2] செற்று [3] சீரடியார்.

வநதணையா(து), ஒருவா ரெதுங்கும் வன்றொண்டன் புறகென்"றுரைப்பச்[1] சிவனருளால், பெருகா நின்ற பெரும் பேறுபெற்றார்; மற்றும் பெறநின்றார். 7

சேணார் மேருச் சிலைவளைத்த சிவனார் அடியார் திருக்கூட்டம், பேணு தேசும் ஊரனுக்கும் "பிரானும் தன்மைப் பிறைசூடிப், பூணார் அரவம் புனைந்தார்க்கும் புற"கென் றுரைக்க மற்றவர்பால், கோணு அருளைப் பெற்றார்மற் றினியார் பெருமை கூறுவார். 8

ஞாலம் உய்ய நாம்உய்ய நம்பி சைவ நன்னெறியின், சீலம் உய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள், ஓலம் இடவும்[2] உணர்வரியார் "அடியார் உடனும் உள"தென்றால்,[3] ஆலம் அமுது செய்தபிரான் அடியார் பெருமை அறிந்தாரார்? 9

ஒக்க நெடுநாள் இவ்வுலகில் உயர்ந்த சைவப் பெருந் தன்மை, தொக்க நிலைமை[4] நெறிபோற்றித் தொண்டு பெற்ற விறன்மிண்டர், தக்க வகையால் தம்பெருமான் அருளி னாலே தாள்நிழற்கீழ், மிக்க கணநா யகராகுந் தன்மை பெற்று விளங்கினார். 10

வேறு பிறிதென்? திருத்தொண்டத் தொகையால் உலகு விளங்கவரும், பேறு தனக்குக் காரணராம் பிரானார் விறன்மிண்டரின்[5] பெருமை, கூறும் அளவென் அளவிற்றே? அவர்தாள் சென்னி மேற்கொண்டே, ஆறை வணிகர் அமர்நீதி அன்பர் திருத்தொண் டறைகுவாம்.[6] 11

---

# 7. அமர்நீதி நாயனார் புராணம்

---

சீரில் நீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக்
காரின் மேவிய[7] களிஅளி மலர்ப்பொழில் சூழ்ந்து

---

பா - ம்—[1] புறம் பென்றுரைப்பச். [2] இட்டும். [3] உளமென்றால். [4] தலைமை. [5] விறன்மிண்டரைப். [6] செய்கை அறைகுவாம். [7] நீடிய.

தேரின் மேவிய[1] செழுமணி வீதிகள் சிறந்து
பாரில் நீடிய பெருமைசேர் பதிபழை யாறை. 1

மன்னும் அப்பதி வணிகர்தங் குலத்தினில் வந்தார்
பொன்னும் முத்தும்நன் மணிகளும் பூந்துகில் முதலா
எந்நி லத்தினும் உள்ளன வருவளத் தியல்பால்[2]
அந்நி லைக்கண்மிக் கவர்அமர் நீதியார் என்பார். 2

சிந்தை செய்வது சிவன்கழல் அல்லதொன் றில்லார்;
அந்தி வணணர்தம் அடியவர்க் கமுதுசெய் வித்துக்
கந்தை கீளுடை கோவணம் கருத்தறிந் துதவி
வந்த செல்வததின் வளத்தினால் வரும்பயன் கொள்வார். 3

முக்கண் நக்கராம் முதல்வனா ரவர்திரு நல்லூர்
மிக்க சீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கித்
தக்க அன்பாகள் அமுதுசெய் திருமடம் சமைத்தார்;
தொக்க சுற்றமும் தாமும்வந் தணைந்தனர் தூயோர். 4

மருவும் அன்பொடு வணங்கினர் மணிகண்டர் நல்லூர்த்
திருவி ழாஅணி சேவித்துத் திருமடத் தடியார்
பெருகும் இன்பமோ டமுதுசெய் திடஅருள் பேணி
உருகு சிந்தையின் மகிழ்ந்துறை நாளிடை ஒருநாள். 5

பிறைத்த ளிர்ச்சடைப் பெருந்தகைப் பெருந்திரு நல்லூர்க்
கறைக்க ளததிறை கோவணப் பெருமைமுன் காட்டி
நிறைத்த அன்புடைத் தொண்டர்க்கு நீடருள் கொடுப்பான்
மறைக்கு லத்தொரு பிரமசா ரியின்வடி வாகி. 6

செய்ய புன்சடை[3] கரந்ததோர் திருமுடிச் சிகையும்
சைவ வெண்டிரு நீற்றுமுண் டகத்தொளித் தழைப்பும்
மெய்யின் வெண்புரி நூலுடன் விளங்குமான் தோலும்
கையில் மன்னிய பவித்திர மரகதக் கதிரும். 7

முஞ்சி நாணுற முடிந்தது சாத்திய அரையில்
தஞ்ச மாமறைக் கோவண ஆடையின் தசைவும்[4]

---

பா - ம்—[1] நீடிய. [2] வருவளத் தியல்பாம். [3] வெண்சடை.
[4] அசைவும.

வஞ்ச வல்வினைக் கறுப்பறும் மனத்தடி யார்கள்
நெஞ்சில் நீங்கிடா அடிமலர் நிலம் பொலிய. 8

கண்ட வர்க்குறு காதலின் மனங்கரைந் துருகத்
தொண்டர் அன்பெனுந் தூநெறி வெளிப்படுப் பாராய்த்
தண்டின் மீதிரு கோவண நீற்றுப்பை தருப்பை
கொண்டு வந்(து)அமர் நீதியார் திருமடங் குறுக 9

வடிவு காண்டலும் மனத்தினும் மிகமுக[1] மலர்ந்து
கடிது வந்தெதிர் வணங்கி "இம் மடத்தினிற் காணும்
படியி லாதநீர் அணையமுன் பயில்தவம் என்னோ
அடிய னேன்செய்த(து)?" என்றனர் அமர்நீதி அன்பர். 10

பேணும் அன்பரை நோக்கி "நீர் பெருகிய அடியார்க்(கு)
ஊணும் மேன்மையில் ஊட்டி நற் கந்தைகீள் உடைகள்[2]
யாணர் வெண்கிழிக் கோவணம் ஈதல்கேட் டும்மைக்[3]
காண வந்தனம்" என்றனன் கண்ணுதற் கரந்தோன். 11

என்று தம்பிரான் அருள்செய "இத்திரு மடத்தே
நன்று நான்மறை நற்றவர்[4] அமுதுசெய் தருளத்
துன்று வேதியர் தூய்மையின் அமைப்பதும் உளதால்
இன்று நீரும்இங் கமுதுசெய் தருளும்" என் றிறைஞ்ச 12

வணங்கும் அன்பரை நோக்கிஅம் மறையவர் இசைந்தே
"அணங்கு நீர்ப்பொன்னி ஆடிநான் வரமழை வரினும்
உணங்கு கோவணம் வைத்துநீர் தாரும்" என் றொருவெண்
குணங்கொள் கோவணம் தண்டினில் அவிழ்த்தது கொடுப்பார்.

"ஓங்கு கோவணப் பெருமையை உள்ளவா றுமக்கே
ஈங்கு நான்சொல்ல[5] வேண்டுவ தில்லை! நீர் இதனை
வாங்கி நான்வரும் அளவும்உம் மிடத்திக ழாதே
ஆங்கு வைத்துநீர் தாரும்" என் றவர்கையிற் கொடுத்தார். 14

கொடுத்த கோவணங் கைக்கொண்டு கோதிலா அன்பர்
"கடுப்பில் இங்கெழுந் தருளும்நீர் குளித்"தெனக் கங்கை

பா - ம்—[1] முகமிக. [2] கந்தைகள் உடைகீள். [3] ஈவது கேட்டுக்-
[4] பெருந்தவர். [5] சொல.

மடுத்த தும்பிய வளர்சடை மறைத்தஅம் மறையோர்
அடுத்த தெண்டிரைப் பொன்னிநீர் ஆடவென் றகன்றார்.[1] 15

தந்த கோவணம் வாங்கிய தனிப்பெருந் தொண்டர்
முந்தை அந்தணர் மொழிகொண்டு முன்புதாம் கொடுக்கும்
கந்தை கீளுடை கோவணம் அன்றியோர் காப்புச்
சிந்தை செய்துவே றிடத்தொரு சேமத்தின்[2] வைத்தார். 16

போன வேதியர் வைத்தகோ வணத்தினைப் போக்கிப்
பான லந்துறைப் பொன்னிநீர் படிந்துவந் தாரோ ?
தூந றுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்துவந் தாரோ ?
வான நீர்மழை பொழிந்திட நனைந்துவந் தணைந்தார். 17

கதிர்இ ளம்பிறைக் கண்ணியர் நண்ணிய பொழுதில்
முதிரும் அன்புடைத் தொண்டர்தாம் முறைமையின் முன்னே
அதிக நன்மையின் அறுசுவைத் திருவமு தாக்கி
எதிரெ ழுந்துசென் றிறைஞ்சிட நிறைந்தநூல் மார்பர். 18

தொண்டர் அன்பெனுந் தூயநீர் ஆடுதல் வேண்டி
“மண்டு தண்புனல் மூழ்கிய ஈரத்தை மாற்றத
தண்டின் மேலதும்[3] ஈரம்,நான் தந்தகோ வணத்தைக்
கொண்டு வாரும்”என் றுரைத்தனர், கோவணக் கள்வர். 19

ஐயர் கைதவம் அறிவுறு தவர்கடி தணுகி[4]
எய்தி நோக்குறக்[5] கோவணம் இருந்தவே றிடத்தில்
மையில் சிந்தையர் கண்டிலர்; “வைத்தகோ வணம்முன்
செய்த தென்”என்று திகைத்தனர், தேடுவா ரானார். 20

“பொங்கு வெண்கிழிக் கோவணம் போயின நெறிமேல்
சங்கை இன்றியே தப்பின” தென்றுதம் சரக்கில்
எங்கு நாடியும் கண்டிலர்; என்செய்வார் ? நின்றார்;
அங்கண் வேதியர் பெருந்தொடக் கினில்[6]அகப் பட்டார். 21

மனைவி யாரொடு மன்னிய கிளைஞரும் தாமும்
இனைய தொன்றுவந் தெய்திய தென இடர் கூர்ந்து

பா - ம்—[1] ஆடுதற் ககன்றார். [2] சேமத்து. [3] மேலுளது. [4] தணுக. [5] எய்தமுன் சென்று. [6] பெருந்துடக்கினில், பெருந்துவக்கினில்.

நினைவ தொன்றிலர் வருந்தினர்; நிற்கவும் மாட்டார்;
புனைய வேறொரு கோவணங் கொடுபுறப் பட்டார். 22

அத்தர் முன்புசென்(று) "அடிகள்! நீர் தந்தகோ வணத்தை
வைத்தி டத்துநான் கண்டிலன், [1] மற்றுமோ ரிடத்தில்
உய்த்தொ ளித்தனர் இலலை; அஃதொழிந்தவா[2] றறியேன்;
இத்த கைத்தவே றதிசயம் கண்டிலேன்" என்று 23

"வேறு நல்லதோர் கோவணம் விரும்பிமுன் கொணர்ந்தேன்;
கீறு கோவணம் அன்று, நெய் தமைத்தது; கிளர்கொள்
நீறு சாத்திய நெற்றியீர்! மற்றது கொண்டு
மாறு சாத்திஎன் பிழைபொறுப் பீர்"என வணங்க 24

நின்ற வேதியர் வெகுண்(டு)"அமர் நீதியார்! நிலைமை
நன்று!, சாலவும் நாளிடை கழிந்ததும் அன்றால்;
இன்று நான்வைத்த கோவணங் கொண்டதற் கெதிர்வே(று)
ஒன்று கொள்கென உரைப்பதே? [3] நீர்"என உரையா. 25

"நல்ல கோவணம் கொடுப்பன்என் றுலகின்மேல் நாளும்
சொல்லு வித்ததென் கோவணம கொள்வது துணிந்தோ?
ஒல்லை ஈங்குறு வாணிபம் [4] அழகிதே உமக்கு!" என்(று) [5]
எல்லை இல்லவன் எரிதுள்ளி னலஎன வெகுண்டான். 26

மறிக ரந்துதண டேந்திய மறையவர் வெகுளப்
பொறிக லங்கிய உணர்வின ராய்முகம் புலர்ந்து
"சிறிய என்பெரும் பிழைபொறுத் தருள்செய்வீர்! அடியேன்
அறிய வந்ததொன் றன்"றென அடிபணிந் தயர்வார். 27

"செயத்த கும்பணி செய்வன், இக் கோவணம் அன்றி
நயதத குந்தன நல்லபட் டாடைகள் மணிகள
உயர்த்த கோடிகொண் டருளும்"என் றுடம்பினில் அடங்காப்
பயத்தொ டுநடுக்குந் தடிமிசைப் பலமுறை பணிந்தார். 28

பணியும் அன்பரை நோக்கிஅப் பரம்பொரு ளானார்
தணியும் உளளத்த ராயினர் போன்று"நீர் தந்த

பா - ம்—[1] கணடிலேன். [2] நான் ஒளித்தவா; அஃதொளித்தவா. [3] உரைப்பதேன். [4] வாணிகம். [5] அழகீதுமகசென்று.

மணியும் பொன்னும்நல் ஆடையும் மற்றும்என் செய்ய?
அணியும் கோவணம் நேர்தர அமையும்''என் றருள. 29

மலர்ந்த சிந்தைய ராகிய வணிகரே றனையார்
''அலர்ந்த வெண்ணிறக் கோவணம் அதற்குநே ராக
இலங்கு பூந்துகில் கொள்வதற் கிசைந்தருள் செய்யீர்,[1]
நலங்கொள் கோவணந் தரும்பரி சியா''தென நம்பர். 30

''உடுத்த கோவணம் ஒழியநாம் உங்கையில் தரநீர்
கெடுத்த தாகமுன் சொல்லும்அக் கிழித்தகோ வணநேர்
அடுத்த கோவணம் இது''என்று தண்டினில் அவிழா
எடுத்து ''மற்றிதன் எடையிடுங் கோவணம்'' என்றார். 31

''நன்று சால!''என் றன்பரும் ஒருதுலை நாட்டக்
குன்ற வில்லியார் கோவணம் ஒருதட்டில் இட்டார்,
நின்ற தொண்டருங்[2] கையினில் நெய்தகோ வணந்தட்(டு)
ஒன்றி லேஇட நிறைநிலா தொழிந்தமை கண்டார். 32

நாடும் அன்பொடு நாயன்மார்க் களிக்கமுன் வைத்த
நீடு கோவணம் அடையநே ராகவொன் றின்றாக்
கோடு தட்டின்மீ திடஇடக் கொண்டெழுந் ததுகண்(டு)
ஆடு சேவடிக் கடியரும் அற்புதம் எய்தி 33

''உலகில் இல்லதோர் மாயை!இக் கோவணம் ஒன்றுக்(கு)
அலகில கோவணம் ஒத்தில!''[3] என்றதி சயித்துப்
பலவும் மென்துகில்[4] பட்டுடன் இடஇட உயர
இலகு பூந்துகிற பொதிகளை எடுத்துமேல் இட்டார் 34

முட்டில் அன்பர்தம் அன்பிடுந் தட்டுக்கு முதல்வர்
மட்டு நின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்கால்
பட்டொ டுந்துகில் அநேககோ டிகளிடும் பத்தர்
தட்டு மேறபடத் தாழ்ந்தது கோவணத் தட்டு 35

ஆன தன்மைகண் டடியவர் அஞ்சிஅந் தணர்முன்
''தூாந றுந்துகில் வர்க்கநூல் வர்க்கமே[5] முதலா

---

பா - ம்—[1] செய்தீர். [2] நிறை அன்பரும். [3] ஒக்கில. [4] வெண் துகில். [5] வருக்கநூல் வருக்கமே.

மானம் இல்லன குவிக்கவுந் தட்டின்மட் டிதுவால்,
ஏனை என்தனம் இடப்பெற வேண்டும்''என் றிறைஞ்ச. 36

மங்கை பாகராம் மறையவர் மற்றதற் கிசைந்தே
"இங்கு நாம்இனி வேறொன் றுசொல்லுவ தென்கொல்?
அங்கு மற்றுங்கள தனங்களி னாகிலும் இடுவீர்,
எங்கள் கோவணம் நேர்நிற்க வேண்டுவ" தென்றார். 37

நல்ல பொன்னொடும் வெள்ளியும் நவமணித் திரளும்
பல்வ கைத்திறத் துலோகமும் புணர்ச்சிகள் பலவும்
எல்லை யில்பொருள்[1] சுமந்தவர் இடஇடக் கொண்டே
மல்கு தட்டுமீ தெழுந்தது, வியந்தனர் மண்ணோர். 38

தவநி றைந்தநான் மறைப்பொருள்[2] நூல்களாற் சமைந்த
சிவன்வி ரும்பிய கோவண மிடுஞ்செழுந் தட்டுக்(கு)
அவனி மேலமர் நீதியார் தனமெலாம் அன்றிப்
புவனம் யாவையும் நேர்நிலா என்பது புகழோ? 39

நிலைமை மற்றது நோக்கிய நிகரிலார் நேர்நின்(று)
"உலைவில் பல்நற மொன்றொழி யாமைஉய்த் தொழிந்தேன்;
தலைவ! யானும்என் மனைவியும் சிறுவனும் தகுமேல்
துலையில் ஏறிடப் பெறுவதுன் அருள்''எனத் தொழுதார். 40

பொச்ச மில்லடி மைத்திறம் புரிந்தவர் எதிர்நின்(று)
அச்ச முன்புற உரைத்தலும், அங்கணர் அருளால்
நிச்ச யித்தவர் நிலையினைத் துலையெனுஞ் சலத்தால்[3]
இச்ச ழக்கினின் றேற்றுவார் ஏறுதற் கிசைந்தார். 41

மனம கிழ்ந்(து)அவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கிப்
புனைம லர்க்குழல் மனைவியார் தம்மொடு புதல்வன்
தனையு டன்கொடு[4] தனித்துலை வலங்கொண்டு தகவால்
இனைய செய்கையில் ஏறுவார் கூறுவார் எடுத்து 42

"இழைத்த அன்பினில் இறைதிரு நீற்றுமெய் யடிமை
பிழைத்தி லோம்எனிற் பெருந்துலை நேர்நிற்க!'' என்று

பா - ம்—[1] எல்லை தீர்தனம்; எல்லையிலதனம். [2] தவநிறைந்து நாற்பொருள் மறை. [3] கலத்தால். [4] தனையிடக்கொடு.

மழைத்த டம்பொழில் திருநல்லூர் இறைவரை வணங்கித்
தழைத்த அஞ்செழுத் தோதினா ஏறினார் தட்டில். 43

மண்டு காதலின் மற்றவர் மகிழ்ந்துடன் ஏற
அண்டர் தம்பிரான் திருஅரைக் கோவணம் அதுவும்
கொண்ட அன்பினிற் குறைபடா அடியவர் அடிமைத்
தொண்டும் ஒத்தலால் ஒத்துநேர் நின்றதத் துலைதான். 44

மதிவி ளங்கிய தொண்டர்தம் பெருமையை மண்ணோர்
துதிசெய் தெங்கணும் அதிசயம் உறஎதிர் தொழுதார்,
கதிர்வி சும்பிடை[1] கரந்திட நிரந்த [2]கற் பகத்தின்
புதிய பூமழை இமையவர் மகிழ்வுடன் பொழிந்தார். 45

அண்டர் பூமழை பொழியமற் றதனிடை ஒளித்த
முண்ட வேதியர் ஒருவழி யான்முதல நல்லூர்ப்
பண்டு தாம்பயில் கோலமே விசும்பினிற் பாகங்
கொண்ட பேதையுந் தாமுமாய்க்[3] காட்சிமுன் கொடுத்தார். 46

தொழுது போற்றிஅத் துலைமிசை நின்றுநேர் துதிக்கும்
வழுவில் அன்பரும் மைந்தரும் மனைவியார் தாமும்
முழுதும் இன்னருள் பெற்றுத்தம் முன்தொழு திருக்கும்
அழிவில் வான்பதங் கொடுத்தெழுந் தருளினார் ஐயர். 47

நாதர் தம்திரு வருளினால் நறபெருந் துலையே
மீது கொணடெழு விமானம தாகிமேற செல்லக்
கோதில் அன்பருங் குடும்பமும் குறைவறக கொடுத்த
ஆதி மூர்த்தியா ருடன்சிவ புரியினை அணைந்தார். 48

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

மலர்மிசை அயனும் மாலும் காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூர் ஆவணப் பழமை காட்டி
உலகுய்ய ஆண்டு கொள்ளப் பெற்றவர் பாதம் உன்னித்
தலைமிசை வைத்து வாழும் தலைமைநந் தலைமை யாகும். 49

சருக்கம் இரண்டுக்குத் திருவிருத்தம்—550

---

பா - ம—[1] விசும்பிடைக். [2] நிரைந்த, நிறைந்த. [3] தாமுமாங்.

## 3. இலைமலிந்த சருக்கம்

∘∘○○★○○∘∘

# 8. எறிபத்த நாயனார் புராணம்

மல்லல்நீர் ஞாலந் தன்னுள் மழவிடை யுடையான் அன்பர்க்(கு)
ஒல்லைவந் துற்ற செய்கை உற்றிடத் துதவும் நீரார்
எல்லையில் புகழின் மிக்க எறிபத்தர் பெருமை எம்மால்[1]
சொல்லலாம் படித்தன் றேனும் ஆசையால் சொல்ல லுற்றாம்.[2] 1

பொன்மலைப் புலிவென் றோங்கப்[3] புதுமலை இடித்துப் போற்றும்
அந்நெறி வழியே யாக அயல்வழி அடைத்த சோழன்
மன்னிய அநபா யன்சீர் மரபின்மா நகர மாகும்
தொன்னெடுங் கருவூர் என்னுஞ் சுடர்மணி வீதி மூதூர். 2

மாமதில் மஞ்சு சூழும், மாளிகை நிரைவிண் சூழும்,
தூமணி வாயில் சூழும், சோலையில் வாசஞ் சூழும்,
தேமலர் அளகஞ் சூழும், சிலமதி தெருவிற் சூழும்[4];
தாமகிழ்ந் தமரர் சூழுஞ் சதமகன் நகரந் தாழ. 3

கடகரி துறையி லாடும், களிமயில் புறவி லாடும்,
அடர்மணி அரங்கி லாடும், அரிவையர் குழல்வண் டாடும்;
படரொளி மறுகி லாடும், பயில்கொடி கதிர்மீ தாடும்,
தடநெடும் புவிகொண் டாடும் தனிநகர் வளமை ஈதால். 4

மன்னிய சிறப்பின் மிக்க வளநகர் அதனில்[5] மல்கும்
பொன்னியல் புரிசை சூழ்ந்து சுரர்களும் போற்றும் பொற்பால்
துன்னிய அன்பின் மிக்க தொண்டர்தஞ் சிந்தை நீங்கா
அந்நிலை அரனார் வாழ்வ(து) ஆனிலை என்னுங் கோயில். 5

பொருட்டிரு மறைக டந்த புனிதரை இனிதக் கோயில்
மருட்டுறை மாற்றும் ஆறரல் வழிபடுந் தொழில ராகி
இருட்கடு ஒடுங்கு கண்டத் திறையவர்க்[6] குரிமை பூண்டார்க்(கு)[7]
அருட்பெருந் தொண்டு செய்வார் அவர்எறி பத்த ராவார். 6

---

பா - ம்—[1] என்றல். [2] சொலலலுற்றேன். [3] நின்றோங்கப். [4] தெருவு சூழும், தெருவுசூ சூழும். [5] தன்னில். [6] திறைவருக். [7] பூண்ட.

மழைவளர் உலகில் எங்கும் மன்னிய சைவம் ஓங்க
அழலவிர் சடையான் அன்பர்க் கடாதன அடுத்த போது
முழையரி என்னத் தோன்றி முரண்கெட எறிந்து நீர்க்கும்
பழமறை பரசுந் தூய பரசுமுன் எடுக்கப் பெற்றார். 7

அண்ணலார் நிகழும் நாளில் ஆனிலை அடிக ளார்க்குத்
திண்ணிய அன்பு கூர்ந்த [1] சிவகாமி யாண்டார் என்னும்
புண்ணிய முனிவ னார்தாம் பூப்பறித் தலங்கல் சாத்தி
உண்ணிறை காத லோடும் ஒழுகுவார் ஒருநாள் முன்போல். 8

வைகறை உணர்ந்து போந்து புனல்மூழ்கி வாயுங் கட்டி
மொய்ம்மலர் [2] நெருங்கு வாச நந்தன வனத்து முன்னிக்
கையினில் தெரிந்து நல்ல கமழ்முகை [3] அலரும் வேலைத்
தெய்வநா யகர்க்குச் சாத்தும் திருப்பள்ளித் தாமம் கொய்து. 9

கோலப்பூங் கூடை [4] தன்னை நிறைத்தனர் கொண்டு நெஞ்சில்
வாலிய நேசங் கொண்டு மலர்க்கையில் தண்டுங் கொண்டங்(கு)[5]
ஆலய மதனை நோக்கி அங்கணர்க் கமைத்துச் சாத்தும்
காலைவந் துதவ வேண்டிக் கடிதினில் வாரா நின்றார். 10

மற்றவர் அணைய இப்பால் வளநகர் அதனில் மன்னும்
கொற்றவர் வளவர் தங்கள் குலப்புகழ்ச் சோழ னார்தம்
பற்றலர் முனைகள் சாய்க்கும் பட்டவர்த் தனமாம் பண்பு
பெற்றவெங் களிறு கோலம் பெருகுமா நவமி முன்னாள்.[6] 11

மங்கல விழவு கொண்டு வருநதித் துறைநீ ராடிப்
பொங்கிய களிப்பி னோடும் பொழிமதஞ் சொரிய, நின்றார்
எங்கணும் இரியல் போக எதிர்பரிக் காரர் ஓடத்
துங்கமால் வரைபோல் தோன்றித் துண்ணென அணைந்த தன்றே.

வென்றிமால் யானை தன்னை மேல்கொண்ட பாக ரோடுஞ்
சென்றொரு தெருவின் முட்டிச் [7] சிவகாமி யார்முன் செல்ல

பா - ம்— [1] அன்பு பூண்ட. [2] மொய்யலர். [3] கமழ் முகம். [4] பூக்கூடை. [5] கொண்டே. [6] நவமி நன்னாள்; நவமி நாளின். [7] முட்டச்.

வன்றனித்[1] தண்டில் தூங்கும் மலர்கொள்பூக் கூடை[2] தன்னைப் பின்றொடர்ந் தோடிச் சென்று பிடித்துமுன்[3] பறித்துச் சிந்த.

மேல்கொண்ட பாகர் கண்டு விசைகொண்ட களிறு சண்டக்,[4] கால்கொண்டு போவார் போலக் கடிதுகொண் டகலப் போக, நூல்கொண்ட மார்பின் தொண்டர் நோக்கினர் பதைத்துப் பொங்கி, மால்கொண்ட களிற்றின் பின்பு தண்டுகொண் டடிக்க வந்தார். 14

அப்பொழு ததனைய வொட்டா தடற்களி றகன்று போக, மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்ல மாட்டார், தப்பினர் விழுந்து கையால் தரையடித் தெழுந்து நின்று, செப்பருந் துயரம் நீடிச்[5] செயிர்த்துமுன் "சிவதா" என்பார். 15

"களியா னையின்ஈர் உரியாய்![6] சிவதா!
எளியார் வலியாம் இறைவா! சிவதா!
அளியார் அடியார் அறிவே! சிவதா!
தெளிவார் அமுதே! சிவதா சிவதா! 16

ஆறும் மதியும் அணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே?
வேறுள்[7] நினைவார் புரம்வெந் தவியச்
சீறுஞ் சிலையாய்! சிவதா! சிவதா! 17

தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரும்
மஞ்சே எனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய்! சிவதா! சிவதா! 18

நெடியோன் அறியா நெறியார் அறியும்
படியால் அடிமைப் பணிசெய் தொழுகும்
அடியார் களில்யான் ஆரா அணைவாய்?[8]
முடியா முதலாய்!" எனவே மொழிய.[9] 19

---

பா - ம்—[1] வன்றிறல். [2] பூங்கூடை. [3] பிடித்துடன். [4] களிறு பூண்ட. [5] துயரம் எய்திச். [6] நீடுரியாய். [7] வேறும். [8] அணைவார். [9] முதல்வா எனவே மொழியா.

என்றவ ருரைத்த மாற்றம் எறிபத்தர் எதிரே வாரா
நின்றவர் கேளா, மூளும்[1] நெருப்புயிர்த் தழன்று பொங்கி
"மன்றவர் **அடியார்க் கென்றும் வழிப்பகை களிறே யன்றோ**
கொன்றது[2] வீழ்ப்பன்" என்று கொலைமழு[3] எடுத்து வந்தார்.

வந்தவர் அழைத்த தொண்டர் தமைக்கண்டு வணங்கி "உம்மை
இந்தவல் இடும்பை செய்த யானைஎங் குற்ற(து)?" என்ன
"எந்தையார் சாத்தும் பூவை என்கையிற் பறித்து மண்மேல்
சிந்திமுன் பிழைத்துப் போகா நின்றதித் தெருவே" என்றார். 21

"இங்கது பிழைப்ப தெங்கே? இனி" என எரிவாய் சிந்தும்
அங்கையின் மழுவும் தாமும் அனலும்வெங் காலும்[4] என்னப்
பொங்கிய விசையிற் சென்று பொருகரி தொடர்ந்து பற்றும்[5]
செங்கண்வாள அரியிற் கூடிக் கிடைத்தனர் சீற்ற மிக்கார். 22

"கண்டவர் இதுமுன்(பு) அண்ணல் உரித்தஅக் களிறேபோலும்!
அண்டரும் மண்ணு ளோரும் தடுக்கினும் அடர்த்துச் சிந்தத்[6]
துண்டித்துக் கொல்வேன்" என்று சுடர்மழு வலத்தில் வீசிக்
கொண்டெழுந் தார்த்துச் சென்று காலினாற் குலுங்கப்பாய்ந்தார்.

பாய்தலும் மிசைகொண் டுய்க்கும் பாகரைக் கொண்டு சீறிக்
காய்தழல்[7] உமிழ்கண் வேழம் திரிந்துமேற் கதுவ **அச்சம்**
**தாய்தலை அன்பின் முன்பு நிற்குமே!** தகைந்து பாய்ந்து
தோய்தனித் தடக்கை வீழ மழுவினால் துணிந்தார் தொண்டர்.

கையினைத் துணித்த போது கடலெனக் கதறி வீழ்ந்து
மைவரை அனைய வேழம் புரண்டிட மருங்கு வந்த
வெய்யகோல் பாகர் மூவர் மிசைகொண்டார் இருவ ராக
ஐவரைக் கொன்று நின்றார் அருவரை அனைய தோளார். 25

வெட்டுண்டு பட்டு வீழ்ந்தார் ஒழியமற் றுள்ளார்[8] ஓடி
மட்டவிழ் தொங்கல் மன்னன் வாயிற்கா வலரை நோக்கிப்
"பட்டவர்த் தனமும் பட்டுப் பாகரும் பட்டார்" என்று
முட்டநீர் கடிது புக்கு முதல்வனுக் குரையும்" என்றார். 26

---

பா - ம்—[1] கேளா முன்னம். [2] கொன்றதை. [3] **கொடுமழு.**
[4] வன்காலும். [5] செல்லும். [6] சிந்தித். [7] காய் கனல். [8] **வேறுள்ளார்.**

மற்றவர் மொழிந்த மாற்றம் மணிக்கடை காப்போர் கேளாக்
கொற்றவன் தன்பால் எய்திக்[1] குரைகழல் பணிந்து போற்றிப்[2]
"பற்றலர் இலாதாய்! நின்பொற் பட்டமால் யானை வீழச்
செற்றனர் சிலராம் என்று செப்பினர் பாகர்" என்றார். 27

வளவனும் கேட்ட போதில் மாறின்றி மண்காக் கின்ற
கிளர்மணித் தோள்அ லங்கல் சுரும்பினங் கிளர்ந்து பொங்க
அளவில்சீற் றத்தி னாலே "யார்செய்தார்" என்றுங் கேளான்
இளஅரி ஏறு போல எழில்மணி[3] வாயில் நீங்க. 28

தந்திரத் தலைவர் தாமுந் தலைவன்றன் நிலைமை கண்டு
வந்துறச் சேனை தன்னை வல்விரைந் தெழமுன் சாற்ற
அந்தரத் தகல மெல்லாம் அணிதுகிற் பதாகை தூர்ப்ப[4]
எந்திரத் தேரும்[5] மாவும் இடைஇடை களிறு மாகி. 29

வில்லொடு வேல்வாள் தண்டு பிண்டிபா லங்கள் மிக்க
வல்லெழு முசலம் நேமி மழுக்கழுக் கடைமுன் னான
பல்படைக் கலன்கள் பற்றிப் பைங்கழல் வரிந்த வன்கண்
எல்லையில் படைஞர் கொட்புற் றெழுந்தனர் எங்கும் எங்கும் 30

சங்கொடு தாரை காளம் தழங்கொலி முழங்கு பேரி
வெங்குரல் பம்பை கண்டை வியன்துடி திமிலை தட்டி [பின்
பொங்கொலிச் சின்னம் எல்லாம் பொருபடை மிடைந்த பொற்
மங்குல்வான் கிளர்ச்சி நாண[6] மருங்கெழுந் தியம்பி மலக. 31

தூரியத் துவைப்பும்[7] முட்டுஞ் சுடர்ப்படை ஒலியும் மாவின்
தார்மணி இசைப்பும்[8] வேழ முழககமும் தடந்தேர்ச் சீரும்[9]
வீரர்தஞ் செருக்கின் ஆர்ப்பும் மிக்கெழுந் தொன்றும் எல்லைக்
காருடன் கடைநாட் பொங்குங் கடலெனக் கலித்த அன்றே. 32

பண்ணுறும் உறுப்பு நான்கில் பரந்தெழு சேனையெல்லாம் மண்ணிடை இறுகால் மேன்மேல் வந்தெழுந் ததுபோல் தோன்றத், தண்ணளிக் கவிகை மன்னன் தானைபின் தொடரத்

பா - ம்—[1] வந்து. [2] பணிந்து நின்று; போற்றி நின்று. [3] எரிமணி. [4] போர்ப்ப. [5] வெந்திறல் தேரும். [6] மான. [7] தூரியந் துவைப்ப. [8] அசைப்பும். [9] சீறும்.

தானுர், அண்ணலம் புரவி மேற்கொண் டரசமா வீதி சென்
ருன். 33

கடுவிசை முடுகிப் போகிக்[1] களிற்றெடும் பாகர் வீழ்ந்த
படுகளம் குறுகச் சென்ருன், பகைப்புலத் தவரைக் காணுன்;
விடுசுடர் மழுவொன் றேந்தி வேறிரு தடக்கைக் தாய
அடுகளி றென்ன நின்ற அன்பரை முன்பு கண்டான். 34

பொன்றவழ அருவிக் குன்றம் எனப்புரள் களிற்றின் முன்பு
நின்றவர் மன்றுள என்றும் நிருத்தமே பயிலும் வெள்ளிக்
குன்றவர் அடியா ராறுர்; கொன்றவர் இவரென் ருேரான்;
"வென்றவ ரியாவர்?" என்ருன் வெடிபடமுழங்குஞ் சொல்லான்.

அரசன்ஆங் கருளிச் செய்ய அருகுசென் றணைந்து பாகர்
"விரைசெய்தார் மாலை யோய்! நின் விறற்களிற் றெதிரே நிற்கும்
திரைசெய்நீர் உலகின் மன்ன ர் யாருளார்? தீங்கு செய்தார்
பரசுமுன் கொண்டு நின்ற இவர்"எனப் பணிந்து சொன்னுர். 36

"குழையணி காதி னுனுக் கன்பராங் குணத்தின் மிக்கார்
பிழைபடின் அன்றிக் கொல்லார்; பிழைத்ததுண்" டென்றுட் கொண்டு
மழைமத யானைச் சேனை[2] வரவினை மாற்றி மற்ற
உழைவயப் புரவி மேல்நின் றிழிந்தனன் உலக மன்னன். 37

"மைத்தடங் குன்று போலும் மதக்களிற் றெதிரே இந்த
மெய்த்தவர் சென்ற போது வேருென்றும் புகுதா விட்ட
அத்தவ முடையேன் ஆனேன், அம்பல வாணர் அன்பர்
இத்தனை முனியக் கெட்டேன்! என்கொலோ பிழை?என் றஞ்சி.

செறிந்தவர் தம்மை நீக்கி அன்பர்முன் தொழுது சென்(று)"ஈ(து)
அறிந்திலேன் அடியேன், அங்குக் கேட்டதொன்(று), அதுதான்
மறிந்தஇக் களிற்றின் குற்றம் பாகரோ டிதனை மாள நிற்க;
எறிந்ததே போது மோதான்? அருள்செயும்" என்று நின்ருர்.39

மன்னவன் தன்னை நோக்கி வானவர் ஈசர் நேசர், "சென்னி!
இத் துங்க வேழம் சிவகாமி யாண்டார் கொய்து, பன்னகா பர

பா - ம்—[1] போங்கித். [2] யானை சேனை.

ணர்ச் சாத்தக் கொடுவரும் பள்ளித் தாமம், தன்னைமுன் பறித்
துச் சிந்தத் தரைப்படத் துணித்து வீழ்த்தேன்.'' 40

"மாதங்கம் திங்கு செய்ய வருபரிக் காரர் தாமும், மீதங்குக்
கடாவு[1] வாரும் விலககிடா தொழிந்து பட்டார்,, ஈதிங்கு
நிகழ்ந்த'' தென்றார் எறிபத்தர் என்ன அஞ்சிப், பாதங்கள்
முறையால் தாழ்ந்து பருவரைத் தடந்தோள் மன்னன். 41

''அங்கணர் அடியார் தம்மைச் செய்தஇவ் வபரா தத்துக்(கு)
இங்கிது தன்றாற்[2] போதா(து); என்னையுங் கொல்ல வேண்டும்;
மங்கல மழுவால் கொல்கை வழக்குமன்(று) இதுவாம்'' என்று
செங்கையால் உடைவாள் வாங்கிக் கொடுத்தனர் தீர்வு நேர்வார்.

வெந்தழற் சுடர்வாள் நீட்டும் வேந்தனை நோக்கிக் "கெட்டேன்!
அந்தமில் புகழான் அன்புக் களவின்மை கண்டேன்'' என்று
தந்தவாள் வாங்க மாட்டார் தன்னைத்தான் துறக்கும் என்று
சிந்தையால் உணர்வுற் றஞ்சி வாங்கினார் தீங்கு தீர்ப்பார்.[3] 43

வாங்கிய தொண்டர் முன்பு மன்னனார் தொழுது நின்றே
''ஈங்கெனை வாளி னாற்கொன் றென்பிழை தீர்க்க வேண்டி
ஓங்கிய உதவி செய்யப் பெற்றனன் இவர்பால்'' என்றே
ஆங்கவர் உவப்பக் கண்ட[4] எறிபத்தர் அதனுக் கஞ்சி. 44

''வன்பெருங் களிறு பாகர் மடியவும் உடைவா ளைத்தந்(து)
என்பெரும் பிழையி னாலே என்னையுங் கொல்லும் என்னும்
அன்பனார் தமக்குத் தீங்கு[5] நினைந்தனன்'' என்று கொண்டு
''முன்பென துயிர்செ குத்து முடிப்பதே முடி''வென் றெண்ணி.

புரிந்தவர் கொடுத்த வாளை அன்பர்தங் கழுத்தில் பூட்டி
அரிந்திட லுற்ற போதில் அரசனும் "பெரியோர் செய்கை
இருந்தவா றிதுஎன்? கெட்டேன்!'' என்றெதிர் கடிதிற் சென்று
பெருந்தடந் தோளால் கூடிப் பிடித்தனன் வாளுங் கையும். 46

வளவனார் விடாது பற்ற மாதவர் வருந்து கின்ற[6]
அளவிலாப் பரிவில் வந்த இடுக்கணை அகற்ற வேண்டிக்

---

பா - ம்—[1] கடவு. [2] இங்கிவை தம்மாற். [3] தீர்வு தீர்ப்பார். கண்ட. [5] தம்மைத் தீங்கு. [6] வருந்தி நிற்ப.

களமணி களத்துச் செய்ய கண்ணுதல் அருளால் வாக்குக்
கிளரொளி விசும்பின் மேல்வந் தெழுந்தது பலருங் கேட்ப. 47

"தொழுந்தகை அன்பின் மிக்கீர்! தொண்டினை மண்மேற் காட்டச், செழுந்திரு மலரை இன்று சினக்கரி சிந்தத் திங்கட், கொழுந்தணி வேணிக் கூத்தர் அருளினல் கூடிற்"றென்றங்(கு), எழுந்தது பாக ரோடும் யானையும் எழுந்த தன்றே. 48

ஈரவே பூட்டும் வாள்விட் டெறிபத்தர் தாமும் அந்த[1]
நேரியர் பெருமான் தாள்மேல் விழுந்தனர், நிருபர் கோனும்
போர்வடி வாளைப் போக எறிந்(து)அவர் கழல்கள் போற்றிப்[2]
பார்மிசைப் பணிந்தான்; விண்ணோர் பனிமலர்மாரிதூர்த்தார். 49

இருவரும் எழுந்து வானில் எழுந்தபே ரொலியைப் போற்ற
அருமறைப் பொருளா யுள்ளார் அணிகொள்பூங் கூடை தன்னில்
மருவிய பள்ளித் தாமம் நிறைந்திட அருள மற்(று)அத்
திருவருள் கண்டு[3] **வாழ்ந்து** சிவகாமி யாரும் நின்றார். 50

மட்டவிழ் அலங்கல் வென்றி மன்னவர் பெருமான் முன்னர்
உட்டரு களிப்பி னோடும் உறங்கிமீ தெழுந்த[4] தொத்து
முட்டவெங் கடங்கள் பாய்ந்து முகிலென முழங்கிப் பொங்கும்
பட்டவர்த் தனத்தைக கொண்டு பாகரும் அணைய வந்தார். 51

ஆனசீர்த் தொண்டர் கும்பிட்(டு) "அடியனேன் களிப்ப இந்த, மானவெங் களிற்றில் ஏறி மகிழ்ந்தெழுந்[5] தருளும்" என்ன, மேன்மையப் பணிமேற் கொண்டு வணங்கிவெண் குடையின் நிழல், யானைமேற் கொண்டு சென்றார் இவுளிமேற் கொண்டு வந்தார். 52

அந்நிலை எழுந்த சேனை ஆர்கலி ஏழும் ஒன்றாய்
மன்னிய ஒலியின் ஆர்ப்ப மண்ணெலாம் மகிழ்ந்து வாழ்த்தப்[6]
பொன்னெடும் பொதுவில் ஆடல் நீடிய புனிதர் பொற்றாள்
சென்னியிற் கொண்டு சென்னி திருவளர் கோயில் புக்கான். 53

---

பா - ம—[1] வாவள விட்டெறி பத்தர் தாமும். [2] பற்றிப். [3] கோண்டு. [4] உறங்கிய தெழுந்த. [5] களிற்றை ஏறி மனமகிழ்ர். [6] பொங்கப்.

தம்பிரான் பணிமேற் கொண்டு சிவகாமி யாருஞ் சார
எம்பிரான் அன்ப ரான எறிபத்தர் தாமும் "என்னே !
அம்பலம் நிறைந்தார் தொண்டர் அறிவதற் கரியார்" என்று
செம்பியன் பெருமை உன்னித் திருப்பணி நோக்கிச் சென்றார். 54

மற்றவர் இனைய வான [1] வன்பெருந் தொண்டு மண்மேல்
உற்றிடத் தடியார் முன்சென் றுதவியே நாளு நாளும்
நற்றவக் கொள்கை தாங்கி நலமிகு கயிலை வெற்பிற்
கொற்றவர் [2] கணத்தின் முன்னாங் கோமுதல் தலைமை பெற்றார்.

ஆளுடைத் தொண்டர் செய்த ஆண்மையும் தம்மைக் கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற வளவனார் பெருமை தானும்
நாளுமற் றவர்க்கு நல்கும் நம்பர்தாம் அளக்கி லன்றி [3]
நீளும்இத் தொண்டின் [4] நீர்மை நினைக்கில்ஆர் அளக்க வல்லார்?

தேனாருந் தண்பூங் கொன்றைச் செஞ்சடை யவர்பொற் றாளில்
ஆனாத காதல் அன்பர் எறிபத்தர் அடிகள் சூடி [5]
வானாருந் தேவர் போற்றும் மன்றுளார் நீறு போற்றும்
ஏனாதி நாதர் செய்த திருத்தொழில் [6] இயம்ப லுற்றேன். 57

## 9. ஏனாதிநாத நாயனார் புராணம்

புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப் புவியளிக்கும்
தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்
வண்டறைபூஞ் சோலைவயல் மருதத் தண்பணைசூழ்ந்(து)
எண்டிசையும் ஏறியசீர் எயின்மூதூர் [7] எயினனூர். 1

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலில்
தாழக் கதிர்ச்சாலி தானோங்குந் தன்மையதாய் [8]
வாழக் குடிதழைத்து மன்னியஅப் பொற்பதியில்
ஈழக் குலச்சான்றார் ஏனாதி நாதனார். 2

பா - ம் — [1] இனையதான. [2] கொற்றவக். [3] அளத்தலன்றி. [4] தொண்டர். [5] போற்றி. [6] திருப்பணி. [7] சீர்மூதூர். [8] தன்மையவாய்.

தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டின்
நன்மைக்கண் நின்ற நலம்என்றுங் குன்றாதார்
மன்னர்க்கு வென்றி வடிவாட் படைபயிற்றுந
தன்மைத் தொழிலவிஞ்சை யிலதலைமை சார்ந்துள்ளார். 3

வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லாம்
நாளும் பெருவிருப்பால்[1] நண்ணுங் கடப்பாட்டில்
தாளும் தடமுடியும் காணுதார் தம்மையுந்தொண்(டு)
ஆளும் பெருமான் அடித்தொண்டர்க் காக்குவார். 4

நள்ளார் களும்போற்றும் நன்மைத் துறையின்கண்
எள்ளாத செய்கை இயல்பின் ஒழுகுநாள்
தள்ளாத தங்கள் தொழிலுரிமைத் தாயத்தின்
உள்ளான அதிசூரன்[2] என்பான் உளனானான். 5

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்கள் தன்னிற் கடந்துள்ளார் இல்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்(து)
உற்றுலகில் தன்னையே சால மதித்துள்ளான். 6

தாளுள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆளுத செய்தொழிலாம் ஆசிரியத் தன்மைவளம்
மேனுளுந் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனாதி நாதர்திறத்(து) ஏலா இகல்புரிந்தான். 7

கதிரோன் எழமழுங்கிக் கால்சாயுங் காலை
மதிபோல் அழிந்துபொறா மற்றவனுஞ் சுற்றப்
பதியோ ருடன்கூடப் பண்ணி அமர்மேற்[3] சென்(று)
எதிர்போர் விளைப்பதற்கே எண்ணித் துணிந்தெழுந்தான்.[4] 8

தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத் தொடுந்துணையாங்
கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத் தொடுஞ்சென்று
"வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வ"தென
மூள்கின்ற செற்றத்தான் முன்கடையில் நின்றழைத்தான். 9

---

பா - ம் —[1] பெருவிருப்பின். [2] அர்சூரன். [3] பண்ணியலார்மேற்; பண்ணியவர்மேற். [4] எண்ணியது துணிந்தான்.

வெங்கட் புலிகிடந்த வெம்முழையிற் சென்றழைக்கும்
பைங்கட் குறுநரியே போலவான் படைகொண்டு[1]
பொங்கிப் புறஞ்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
அங்கட் கடைநின் றழைத்தான் ஒலிகேளா. 10

"ஆர்கொல் பொரஅழைத்தார்?" என்றரியேற் றிற்கிளர்ந்து[2]
சேர்வு பெறக்கச்சில் செறிந்தவுடை மேல்வீக்கி
வார்கழலுங் கட்டி வடிவாட் பலகைகொடு
போர்முனையில் ஏனாதி நாதர் புறப்பட்டார். 11

புறப்பட்ட போதின்கட் போர்த்தொழில்கள்[3] கற்கும்
விறற்பெருஞ்சீர்க் காளையர்கள் வேறிடத்து[4] நின்றார்
மறப்படைவாட் சுற்றத்தார் கேட்டோடி வந்து
செறற்கரும்போர் வீரர்க் கிருமருங்குஞ் சேர்ந்தார்கள். 12

வந்தழைத்த மாற்றான் வயப்புலிப்போத் தன்னார்முன்
"நந்தமது வாட்பயிற்று நற்றாயங் கொள்ளுங்கால்
இந்தவெளி மேற்கை வகுத்திருவேம் பொருபடையும்
சந்தித் தமர்விளைத்தால்[5] சாயாதார் கொள்வ"தென. 13

என்றுபகைத் தோனுரைப்ப ஏனாதி நாதர்"அது
நன்றுனக்கு வேண்டுமேல் நண்ணுவன்"என் றுள்மகிழ்ந்து
சென்றவன்முன் சொன்ன செருக்களத்துப் போர்குறிப்பக்
கன்றி இருபடையும்[6] கைவகுத்து நேர்மலைவார். 14

மேக ஒழுங்குகள முன்கொடு மின்னிரை தம்மிடை யேகொடு
மாக மருங்கினும் மண்ணினும் வல்லுரு மேறெதிர் செல்வன
வாக நெடும்பல கைக்குல மாள்வினை வாளுடை யாடவர்
காக மிடைந்த களத்திரு கைகளின் வந்து கலந்தனர். 15

கால்கழல் கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்கள் அடக்கிய
வாளொளி வட்ட முனைத்திட[7] வந்திரு கைகளின் முந்தினர்;
வேலொடு வேலெதிர் நீள்வன, மேவிய பாதலம் விட்டுயர்
ஞாலமு றும்பணி வீரர்கள் நாகமிர் கின்றன ஒத்தன. 16

---

பா - ம்—[1] புடை சூழ்ந்து. [2] யேற்றிற் சினந்து. [3] தொழில்வாள். [4] வேறிடத்தில். [5] அமர்மலைந்தால். [6] இருபுடையும். [7] முனைந்திட.

வெங்கண் விறற்சிலை வீரர்கள் வேறிரு கையிலும் நேர்பவர்
தங்கள் சிலைக்குலம் உந்தின தாவில் சரங்கள் நெருங்குவ
பொங்கு சினத்தெரி யிற்புகை போகு கொடிக்கள் வளைத்தெதிர்
செங்கண் விழிக்கனல் சிந்திய சீறு பொறிச்செல வொத்தன. 17

வாளொடு நீள்கை துடித்தன, மார்பொடு வேல்கள் குளித்தன;
தோளொடு வாளி நிலத்தன; தோலொடு தோல்கள் தகைத்தன,[1]
தாளொடு வார்கழல் இற்றன; தாரொடு சூழ்சிரம் அற்றன;
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில். 18

குருதியின் நதிகள் பரந்தன; குறையுடல் ஓடி[2] அலைந்தன;
பொருபடை அறுதுணி சிந்தின, புடைசொரி குடர்உடல்பம்பின,
வெருவர எருவை நெருங்கின, விசியறு துடிகள் புரண்டன;
இருபடை தனினும்[3] எதிர்ந்தவர் எதிரெதிர் அமர்செய் பறந்தலை.

நீளிடை முடுகி நடந்தெதிர் நேரிரு வரிலொரு வன்றொடர்
தாளிரு தொடையற முன்பெயர் சாரிகை முறைமைதடிந்தனன்;
வாளொடு விழுமுடல் வென்றவன் மார்பிடை அறமுன் எறிந்திட
ஆளியின் அவனு மறிந்தனன்,[4] ஆயினர் பலருள ரெங்கணும்.20

கூர்முனை அயில்கொடு முட்டினர் கூடிமுன் உருவிய தட்டுடன்
நேருரம் உருவ உரப்புடன்[5] நேர்பட எதிரெதிர் குத்தினர்
ஆருயிர் கழியவும் நிற்பவர் ஆண்மையில் இருவரும் ஒத்தமை
போரடு படைகொ டளப்பவர் போல்பவர் அளவிலர் பட்டனர்.

பொற்சிலை வளைய எதிர்ந்தவர் புற்றர வனைய சரம்பட [னர்
விற்படை துணியவும் நின்றிலர் வெற்றிகொள் சுரிகை வழங்கி
முற்றிய பெருவளன் இன்றியும்[6] முற்படு கொடைநிலை நினறிட
உற்றன உதவிய பண்பினர் ஒத்தனர் உளர்சில கண்டகர்[7] 22

அடல்முனை மறவர் மடிந்தவர் அலர்முகம் உயிருள வென்றுறு, படர்சிறை சுலவு கருங்கொடி படர்வன[8] சுழல்வன துன்றலில், விடுசுடர் விழிகள் இரும்புசெய் வினைஞர்தம் உலை

பா - ம்—[1] தகைந்தன. [2] ஒழுகி. [3] இருபடையினினும். [4] மிறந்தனன்; மரிந்தனன். [5] உறைப்புடன். [6] நின்றற. [7] கண்டர்கள். [8] பயில்வன.

யின் முகம்பொதி, புடைமிடை கரியிடை தங்கிய[1] புகைவிடு தழலை நிகர்த்தன.[2] 23

திண்படை வயவர் பிணம்படு செங்கள மதனிடை முன் சிலர், புண்படு வழிசொரி யுங்குடர் பொங்கிய கழுகு பருந் தொடு, கொண்டெழு பொழுதினும் முன்செயல் குன்றுதல் இலர்தலை நின்றனர், விண்படர் கொடிவிடு பண்பயில் விஞ்சையர் குமரரை வென்றனர். 24

இம்முனைய வெம்போரில் இருபடையின் வாள்வீரர்
வெம்முனையில் வீடியபின் வீடாது மிக்கொழிந்த
தம்முடைய பல்படைஞர் பின்னாகத் தாமுன்பு
தெம்முனையில் ஏனாதி நாதர் செயிர்த்தெழுந்தார். 25

வெஞ்சினவாள் தீயுமிழ வீரக் கழல்கலிப்ப
நஞ்சணிகண் டர்க்கன்பர் தாமெதிர்ந்த ஞாட்பின்கண்
எஞ்சிஎதிர் நின்ற இகல்முனையில் வேலுழவர்
தஞ்சிரமுந் தோளுரமுந் தாளுரமும் தாந்துணித்தார்.[3] 26

தலைப்பட்டார் எல்லாருந் தனிவீரர் வாளிற்
கொலைப்பட்டார், முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைபபட்ட ஆர்வமுதற் குற்றம்போ லாயினர். 27

இந்நிலைய வெங்களத்தில் ஏற்றழிந்த மானத்தால்
தன்னுடைய பல்படைஞர்[4] மீண்டார் தமைக்கொண்டு
மின்னொளிவாள் வீசி விறல்வீரர் வெம்புலியே(று)
அன்னவர்தம் முன்சென்(று)[5] அதிசூரன் நேரடர்ந்தான். 28

மற்றவர்தஞ் செய்கை வடிவாள் ஒளிகாணச்
சுற்றிவரும் வட்டணையில் தோன்றா வகைகலந்து
பற்றியடர்க் கும்பொழுதில் தானும் படைபிழைத்துப்
பொற்றடந்தோள் வீரர்க்(கு) உடைந்து புறகிட்டான்.[6] 29

---

பா - ம்—[1] பொங்கிய. [2] தழலை நிகர்ந்தன, தழல்நிகர் கின்றன. [3] தாளும் விழத்துணித்தார். [4] புல்படைஞர். [5] முன்வந்து. [6] புறமிட் டான்.

போன அதிசூரன் போரில் அவர்க்கழிந்த
மானமிக மீதூர மண்படுவான் கண்படான்
ஆனசெயல் ஓரிரவுஞ் சிந்தித்(து) அலமந்தே[1]
"ஈனமிகு வஞ்சனையால் வெல்வன்" என எண்ணினான். 30

சேட்டாருங் கங்குல் புலர்காலை தீயோனும்
"நாட்டாரைக் கொல்லாதே நாம்இருவேம் வேறிடத்து
வாட்டாயங் கொள்போர் மலைக்க வருக" எனத்
தோட்டார்பூந் தாரார்க்குச் சொல்லிச் செலவிட்டான்.[2] 31

இவ்வாறு கேட்டலுமே ஏனாதி நாதனார்
"அவ்வாறு செய்தல் அழகி"தென அமைந்து
"கைவாள் அமர்விளைக்கத் தான்கருதும் அக்களத்தில்[3]
வெவ்வாள் உரவோன் வருக"என மேற்கொள்வார். 32

சுற்றத்தார் யாரும் அறியா வகைசுடர்வாள்
பொற்பலகை யுந்தாமே கொண்டு புறம்போந்து
மற்றவன்முன் சொல்லி வரக்குறித்த அக்களத்தே
பற்றலனை முன்வரவு பார்த்துத் தனிநின்றார். 33

தீங்கு குறித்தழைத்த தீயோன் "திருநீறு
தாங்கிய நெற்றியினார் தங்களையே எவ்விடத்தும்
ஆங்கவருந் தீங்கிழையார்" என்ப தறிந்தானாய்ப்
பாங்கில் திருநீறு பண்டு பயிலாதான். 34

வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
உண்ணெஞ்சில் வஞ்சக் கறுப்பும் உடன்கொண்டு
வண்ணச் சுடர்வாள்[4] மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப்போர் வீரர்க்குச் சொன்னஇ டம்புகுந்தான். 35

வென்றி மடங்கல் விடக்குவர முன்பார்த்து
நின்றாற்போல் நின்ற[5] நிலைகண்டு தன்நெற்றி
சென்று கிடைப்பளவுந் திண்பலகை யான்மறைத்தே[6]
முன்றனிவீ ரர்க்கெதிரே மூண்டான் மறம்பூண்டான். 36

---

பா - ம்— [1] அலமருவான் ; தலம் வருவான். [2] சொல்லிவரவிட்டான். [3] அக்களத்தே. [4] வண்ணக் கதிர்வாள். [5] நின்றார். [6] மறைத்து.

அடல்விடையே றென்ன அடர்த்தவனைக் கொல்லும்
இடைதெரிந்து தாள்பெயர்க்கும் ஏனாதி நாதர்
புடைபெயர்ந்த மாற்றான் பலகை புறம்போக்கக்
கடையவன்தன் நெற்றியின்மேல் வெண்ணீறு தாங்கண்டார். 37

கண்டபொழு தே"கெட்டேன்! முன்பிவர்மேற் காணாத
வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன், வேறினிஎன்?
அண்டர்பிரான் சீரடியார் ஆயினார்" என்றுமனங்
கொண்(டு)"இவர்தங் கொள்கைக் குறிவழிநிற் பேன்" என்று.

கைவா ளுடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் "நிராயுதரைக் கொன்றா எனுந்தீமை
எய்தாமை வேண்டும் இவர்க்"கென் றிரும்பலகை
நெய்வா ளுடன்அடர்த்து நேர்வார்போல் நேர்நின்றார் 39

அந்நின்ற தொண்டர் திருவுள்ளம் ஆரறிவார்?
முன்னின்ற பாதகனும் தன்கருத்தே முற்றுவித்தான்;
இந்நின்ற தன்மை அறிவார்[1] அவர்க்[2]கருள
பின்னின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார். 40

மற்றினிநாம் போற்றுவதென்? வானோர் பிரான்அருளைப்
பற்றலர்தங் கைவாளால் பாசம் அறுத்தருளி
உற்றவரை என்றும் உடன்பிரியா அன்பருளிப்
பொற்றொடியாள் பாகனார் பொன்னம் பலம்அணைந்தார். 41

தம்பெருமான் சாத்துந் திருநீற்றுச் சார்புடைய
எம்பெருமான் ஏனாதி நாதர் கழல்இறைஞ்சி
உம்பர்பிரான் காளத்தி உத்தமர்க்குக் கண்ணப்பும்[3]
நம்பெருமான் செய்தபணி நாந்தெரிந்த வாறு[4]ரைப்பாம். 42

---

# 10. கண்ணப்ப நாயனார் புராணம்

---

மேவலர் புரங்கள் செற்ற விடையவர் வேத வாய்மைக்
காவலர் திருக்கா ளத்திக் கண்ணப்பர் திருநா டென்பர்

---

பா - ம்—[1] அறிந்தார். [2] இவர்க். [3] கண்ணப்ப. [4] நாந்தெளிந்தபடி.

நாவலர் புகழ்ந்து போற்றும் நல்வளம் பெருகி[1] நின்ற
பூவலர் வாவி சோலை[2] சூழ்ந்தபொத் தப்பி நாடு.[3] 1

இத்திரு நாடு தன்னில் இவர்திருப் பதியா தென்னில்
நித்தில அருவிச் சாரல் நீள்வரை சூழ்ந்த பாங்கர்
மத்தவெங் களிற்றுக் கோட்டு வன்றொடர் வேலி கோலி
ஒத்தபேர் அரணஞ் சூழ்ந்த முதுபதி உடுப்பூர் ஆகும். 2

குன்றவர் அதனில் வாழ்வார் கொடுஞ்செவி ஞமலி யார்த்த
வன்திரள்[4] விளவின் கோட்டு வார்வலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியும் எண்கும் கடமையும் மானின் பார்வை
அன்றியும் பாறை முன்றில் ஐவனம் உணங்கும் எங்கும். 3

வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்றலைச் சிறும கார்கள் புரிந்துடன் ஆட லன்றி
அன்புறு காதல் கூர அணையுமான் பிணைக ளோடும்
இன்புற மருவி ஆடும் எயிற்றியர் மகளிர் எங்கும். 4

வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் தோறும்
கொல்லெறி குத்தென் றார்த்துக் குழுமிய ஓசை யன்றிச்
சில்லரித் துடியும் கொம்பும் சிறுகண் ஆகுளியுங் கூடிக்
கல்லெனும் ஒலியின் மேலும் கறங்கிசை அருவி எங்கும். 5

ஆறலைத் துண்ணும் வேடர் அயற்புலங் கவர்ந்து கொண்ட
வேறுபல் உருவின் மிக்கு விரவும் ஆன்நிரைக ளன்றி
ஏறுடை வானந் தன்னில் இடிக்குரல் எழிலி யோடு
மாறுகொள் முழக்கங் காட்டும் மதக்கைமா[5] நிரைகள் எங்கும். 6

மைச்செறிந் தனைய மேனி வன்றொழில் மறவர் தம்பால்
அச்சமும் அருளும் என்றும் அடைவிலார் உடைவன் தோலார்
பொச்சையின் நறவும் ஊனின் புழுக்கலும் உணவு கொள்ளும்
நச்சழற் பகழி வேடர்க் கதிபதி நாகன் என்பான். 7

பெற்றியால் தவமுன் செய்தா னாயினும் பிறப்பின் சார்பால்
குற்றமே குணமா வாழ்வான்; கொடுமையே தலைநின் றுள்ளான்;

---

பா - ம்—[1]போற்றநல்வளம் பெருக. [2]வாலிச்சோலை. [3]போத்தப்பிநாடு. [4]வன்றிறல். [5]மதக்கைம்மா.

விற்றொழில் விறலின் மிக்கான், வெஞ்சின மடங்கல் போல்வான்;
மற்றவன் குறிச்சி வாழ்க்கை மனைவியுந் தத்தை என்பாள். 8

அரும்பெறல் மறவர் தாயத் தான்றதொல் குடியில் வந்தாள்;
இரும்புலி எயிற்றுத் தாலி இடையிடை மனவு கோத்துப்
பெரும்புறம் அலையப் பூண்டாள், பீலியும் குழையும் தட்டச்
சுரும்புறு படலை முச்சிச் சூர்அரிப் பிணவு போல்வாள். 9

பொருவருஞ் சிறப்பின் மிக்கார் இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவரும் கூற[1] அதற்படு காத லாலே
முருகலர் அலங்கற் செவ்வேல் முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன் நெறியில் நிற்பார். 10

வாரணச் சேவ லோடும் வரிமயிற் குலங்கள் விட்டுத்
தோரண மணிகள் தூக்கிச் சுரும்பணி கதம்பம் நாற்றிப்
போரணி நெடுவே லோற்குப் புகழ்புரி குரவை தூங்கப்
பேரணங் காடல் செய்து பெருவிழா எடுத்த பின்றை.[2] 11

பயில்வடுப் பொலிந்த யாக்கை வேடர்தம் பதியாம் நாகற்(கு)
எயிலுடைப் புரங்கள் செற்ற எந்தையார் மைந்த ரான
மயிலுடைக் கொற்ற ஊர்தி வரையுரங் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி அண்ணலார் அருளி னாலே. 12

கானவர் குலம்வி ளங்கத் தத்தைபால் கருப்பம் நீட
ஊனமில் பலிகள் போக்கி[3] உறுகடன் வெறியாட் டோடும்
ஆனஅத் திங்கள் செல்ல அளவில்செய் தவத்தி னாலே
பான்மதி உவரி ஈன்றா லெனமகப் பயந்த போது. 13

கரிப்பரு மருப்பின் முத்தும் கழைவிளை செழுநீர் முத்தும்
பொருப்பினின் மணியும் வேடர் பொழிதரு மழையே யன்றி
வரிச்சுரும் பலைய வானின் மலர்மழை பொழிந்த தெங்கும்;
அரிக்குறுந் துடியே யன்றி அமரர்துந் துபியும் ஆர்த்த. 14

அருவரைக் குறவர் தங்கள் அகன்குடிச் சீறூர் ஆயம்
பெருவிழா எடுத்து மிக்க பெருங்களி கூருங் காலைக்

பா - ம்—[1] சொல்ல. [2] எடுத்த பின்னர். [3] பலிகளோக்கி; பலிகளோச்சி.

கருவரை காள மேகம் ஏந்திய தென்னத் தாதை [டான்.
பொருவரைத் தோள்க ளாரப்[1] புதல்வனை எடுத்துக் கொண்

கருங்கதிர் விரிக்கும் மேனிக் காமரு குழவி தானும்
இரும்புலிப் பறழின் ஓங்கி இறவுளர் அளவே யன்றி
அரும்பெறல் உலக மெல்லாம் அளப்பரும் பெருமை காட்டித்
தருங்குறி பலவுஞ் சாற்றுந் தன்மையிற் பொலிந்து தோன்ற.16

அண்ணலைக் கையில் ஏந்தற்(கு) அருமையால "உரிமைப் பேருந், திண்ணன் என் றியம்பும்" என்னத் திண்சிலை வேடர் ஆர்த்தார்,, புண்ணியப் பொருளா யுள்ள பொருவில்சீர் உருவி னானை, கண்ணினுக(கு) அணியாத் தங்கள் கலன்பல அணிந் தார் அன்றே. 17

வரையுறை கடவுட் காப்பு மறக்குடி மரபில் தங்கள், புரை யில்தொல் முறைமைக் கேற்பப் பொருந்துவ போற்றிச் செய்து, விரையிளந் தளிருஞ் சூட்டி வேம்பிழைத் திடையே கோத்த, அரைமணிக் கவடி கட்டி அழகுற வளர்க்கும் நாளில். 18

வருமுறைப் பருவந் தோறும் வளமிகு சிறப்பில் தெய்வப்
பெருமடை கொடுத்துத் தொக்க பெருவிறல் வேடர்க் கெல்லாம்
திருமலி துழனி பொங்கச் செழுங்களி மகிழ்ச்சி[2] செய்தே
அருமையிற் புதல்வர்ப் பெற்ற ஆர்வமுந் தோன்ற உய்த்தார்.19

ஆண்டெதிர் அணைந்து செல்ல விடும்அடித் தளர்வு நீங்கிப்
பூண்டிகழ சிறுபுன் குஞ்சிப புலியுகிர்ச் சுட்டி சாத்தி
மூண்டெழு சினத்துச் செங்கண் முளவுமுள் அரிந்து கோத்த
நாண்டரும் எயிற்றுத் தாலி நலங்கிளர் மார்பில் தூங்க. 20

பாசொளி மணியோ டார்த்த பன்மணிச் சதங்கை ஏங்கக்
காசொடு தொடுத்த காப்புக் கலன்புனை அரைஞாண் சேர்த்தித்
தேசுடை மருப்பில் தண்டை செறிமணிக் குதம்பை மின்ன
மாசறு கோலங் காட்டி மறுகிடை யாடும் நாளில். 21

தண்மலர் அலங்கல் தாதை தாய்மனங் களிப்ப வந்து
புண்ணியக் கங்கை நீரில் புனிதமாம் திருவாய் நீரில்

பா - ம்—[1] பெருவலித் தோள்க ளார்ப்பப். [2] கழி மகிழ்ச்சி.

உண்ணனைந் தமுதம் ஊறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல
வண்ணமென் பவளச்[1] செவ்வாய் குதட்டியே வளரா நின்றார். 22

பொருபுலிப் பார்வைப பேழ்வாய் முழையெனப் பொற்கை நீட்டப், பரிவுடைத் தந்தை கணடு பைந்தழை கைககொண் டோச்ச, இருசுடர்க் குறுகண் தீர்க்கும் எழிலவர் கண்ணீர் மல்கி, வருதுளி முததம் அத்தாய் வாய்முத்தம கொள்ள மாற்றி.

துடிக்குற டுருட்டி ஓடித தொடக்குநாய்ப் பாசறு சுற்றிப்
பிடித்தறுத் தெயினப் பிள்ளைப் பேதையர் இழைத்த வண்டல்
அடிச்சிறு தளிரால் சிந்தி அருகுறு சிறுவ ரோடும்
குடிச்செறு[2] குரம்பை எங்கும் குறுநடைக் குறும்பு செய்து. 24

அனையன பலவும் செய்தே ஐந்தின்மேல் ஆன ஆண்டின்
வனைதரு வடிவார் கண்ணி மறச்சிறு மைந்த ரோடும்
சினைமலர்க் காவு ளாடிச் செறிகுடிக் குறிச்சி சூழ்ந்த
புனைமருப் புழலை வேலிப் புறச்சிறு கானிற் போகி. 25

கடுமுயற் பறழி னோடுங் கானஏ னத்தின் குட்டி
கொடுவரிக் குருளை செந்நாய் கொடுஞ்செவிச் சாப மான[3]
முடுகிய விசையி லோடித் தொடர்ந்துடன்[4] பற்றி முற்றத்
திடுமரத் திரளிற்[5] கட்டி வளர்ப்பன எண்ணி லாத. 26

அலர்பகல் கழிந்த அந்தி ஐயவிப் புகையும் ஆட்டிக்
குலமுது குறத்தி ஊட்டிக கொண்டுகண் துயிறறிக் கங்குல்
புலரஊன் உணவு நல்கிப் புரிவிளை யாட்டின் விட்டுச்
சிலமுறை யாண்டு செல்லச் சிலைபயில் பருவஞ் சேர்ந்தார். 27

தந்தையும் மைந்த னாரை நோக்கித்தன் தடித்த தோளால்
சிந்தையுள் மகிழப் புல்லிச் சிலைத்தொழில் பயிற்ற வேண்டி
முந்தைஅத் துறையில் மிக்க முதியரை அழைத்துக் கூட்டி
வந்தநாட் குறித்த தெல்லாம் மறவர்க்குச் சொல்லி விட்டான். 28

''வேடர்தங் கோமான் நாதன் வென்றிவேள் அருளால் பெற்ற, சேடரின் மிகக செய்கைத் திண்ணன்வில் பிடிக்கின்

பா - ம்—[1] குதலைச். [2] செறி. [3] சரபமான. [4] தொடர்ந்துமுன். [5] மரத்தாளிற்.

நன்'' என்(று), ஆடியல் துடியும் சாற்றி அறைந்தபேர் ஓசை
கேட்டு, மாடுயர் மலைகள் ஆளும் மறக்குலத் தலைவ ரெல்லாம். 29

மலைபடு மணியும் பொன்னும் தரளமும் வரியின் தோலும்
கொலைபுரி களிற்றுக் கோடும் பீலியின் குவையும் தேனும்
தொலைவில்பல் நறவும் ஊனும் பலங்களும் கிழங்கும் துன்றச்
சிலைபயில்[1] வேடர் கொண்டு திசைதொறும் நெருங்க வந்தார். 30

மல்கிய வளங்கள் எல்லாம் நிறைந்திட மாறில் சீறூர்
எல்லையில் அடங்கா வண்ணம் ஈண்டினர் கொணர்ந்தார்; எங்கும்
"பல்பெருங் கிளைஞர் போற்றப் பராய்க்கடன் பலவும் செய்து[2]
வில்விழா எடுக்க'' என்று விளம்பினான்[3] வேடர் கோமான். 31

பான்மையில் சமைத்துக் கொண்டு படைக்கலம் வினைஞர் ஏந்தத்
தேனலர் கொன்றை யார்தந் திருச்சிலைச் செம்பொன் மேரு
வானது கடலின் நஞ்சம் ஆக்கிட அவர்க்கே பின்னும்
கானஊன் அமுதம் ஆக்கும் சிலையினைக் காப்புச் சேர்த்தார். 32

சிலையினைக் காப்புக் கட்டும் திண்புலி நரம்பிற் செய்த
நலமிகு காப்பு நன்னாள் நாகனார் பயந்த நாகர்[4]
குலம்விளங் கரிய குன்றின் கோலமுன் கையிற் சேர்த்தி
மலையுறை மாக்கள் எல்லாம் வாழ்த்தெடுத் தியம்பி னார்கள். 33

ஐவன அடிசில் வெவ்வே றமைந்தன[5] புற்பாற் சொன்றி
மொய்வரைத் தினைமென் சோறு மூங்கில்வன் பதங்கள் மற்றும்
கைவினை எயின ராக்கிக் கலந்தஊன் கிழங்கு துன்றச்[6]
செய்வரை உயர்ப்ப எங்கும் கலந்தனர் சினவில் வேடர். 34

செந்தினை இடியும் தேனும் அருந்துவார்; தேனில் தோய்த்து
வெந்தஊன் அயில்வார், வேரி விளங்கனிக் கவளம் கொள்வார்;
நந்திய ஈயல் உண்டி நசையொடு மிசைவார், வெவ்வே(று)
அந்தமில் உணவின் மேலோர் ஆயினர் அளவி லார்கள். 35

அயல்வரைப் புலத்தின்[7] வந்தார் அருங்குடி இருப்பின் உள்ளார்
இயல்வகை உணவில் ஆர்ந்த எயிற்றியர் எயினர் எல்லாம்

---

பா - ம் —[1] சிலையுடை. [2] பலவும் நேர்ந்து; மிகவும் செய்து. [3] விளம்பினன். [4] நாகக. [5] அமைத்தன. [6] கிழங்குகூடச். [7] புறத்தின்.

உயர்கதிர் உச்சி நீங்க ஒழிவில்பல் நறவு மாந்தி
மயலுறு களிப்பின் நீடி வரிசிலை விழவு கொள்வார். 36

பாசிலைப் படலை சுற்றிப் பன்மலர்த் தொடையல் சூடிக்
காசுடை வடத்தோல் கட்டிக் கவடிமெய்க் கலன்கள் பூண்டார்[1]
மாசில்சீர்[2] வெட்சி முன்னா வருதுறைக்[3] கண்ணி சூடி
ஆசில்ஆ சிரியன் ஏந்தும் அடற்சிலை மருங்கு சூழ்ந்தார். 37

தொண்டக முரசும் கொம்பும் துடிகளும் துளைகொள் வேயும்
எண்டிசை நிறைந்து விம்ம எழுந்தபேர் ஒலியி னோடும்
திண்டிறல் மறவர் ஆர்ப்புச் சேண்விசும் பிடித்துச் செல்லக்
கொண்டசீர் விழவு பொங்கக் குறிச்சியை வலங்கொண் டார்கள்.

குன்றவர் களிகொண் டாடக்[4] கொடிச்சியர் துணங்கை ஆடத்
துன்றிய மகிழ்ச்சி யோடுஞ் சூர்அர மகளிர் ஆட
வென்றிவில் விழவி னோடும் விருப்புடை ஏழா நாளாம்[5]
அன்றிரு மடங்கு செய்கை அழகுற அமைத்த பின்னர்.[6] 39

வெங்கதிர் விசும்பின் உச்சி மேவிய பொழுதில்[7] எங்கும், மங்கல வாழ்த்து மல்க மருங்குபல் லியங்கள் ஆர்ப்பத், தங்கள் தொல் மரபின் விஞ்சைத் தனுத்தொழில் வலவர் தம்பால், பொங்கொளிக் கரும்போர் ஏற்றைப் பொருசிலை பிடிப்பித் தார்கள். 40

பொற்றட வரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன் செய்த
விற்றொழிற் களத்தில்[8] நண்ணி விதிமுறை வணங்கி மேவும்
அற்றைநாள் தொடங்கி நாளும் அடற்சிலை ஆண்மை முற்றக்
கற்றனா[9] என்னை யாளுங் கானவாக் கரிய சிங்கம். 41

வண்ணவெஞ் சிலையும் மற்றப் படைகளும் மலரக் கற்றுக், கண்ணகல் சாயல் பொங்கக் கலைவளர் திங்க ளேபோல், எண்ணிரண் டாண்டின் செவ்வி எய்தினார் எல்லை இல்லாப்,

பா - ம—[1] பூண்டு. [2] மாசிலா. [3] வருநறைக; வருந்துறைக். [4] வரிகொண்டாடக். [5] ஏழாநாளின். [6] அமைத்த பின்றை, [7] போதில். [8] களத்தை. [9] கற்றனன்.

புணணியந் தோன்றி[1] மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார். *42*

*இவ்வண்ணந் திண்ணனார் நிரம்பு நாளில் இருங்குறவர் பெருங்குறிச்சிக் கிறைவன் ஆய, மைவண்ண வரைநெடுந்தோள் நாகன் தானும் மலையெங்கும் வனமெங்கும் வரம்பில் காலம், கைவண்ணச் சிலைவேட்டை யாடித் தெவ்வர் கணநிரைகள் பலகவர்ந்து கானங் காத்து, மெய்வண்ணந் தளர்மூப்பின் பருவம் எய்தி வில்லுழவின் பெருமுயற்சி மெலிவா னானன்.*[2] *43*

*அங்கண்மலைத் தடஞ்சாரற் புனங்கள் எங்கும் அடலேனம் புலிகரடி கடமை ஆமா, வெங்கண்மரை கலையொடுமான் முதலா*[3] *யுள்ள மிருகங்கள் மிகநெருங்கி*[4] *மீதூர் காலைத், "திங் கள்முறை வேட்டைவினை தாழ்த்த" தென்று சிலைவேடர்*[5] *தாமெல்லாந் திரண்டு சென்று, தங்கள்குல முதற்றலைவ னாகி யுள்ள தண்தெரியல் நாகன்பால் சார்ந்து சொன்னார்.* *44*

*சொன்னவுரை கேட்டலுமே நாகன் தானும் சூழ்ந்துவரும் தன்மூப்பின் தொடர்வு நோக்கி, முன்னவர்கட் குரைசெய்வான் "மூப்பி னாலே முனபுபோல் வேட்டையினில் முயல கில்லேன்;*[6] *என்மகனை உங்களுக்கு நாத னாக எல்லீருங் கைக்கொண்மின் !" என்ற போதின், அன்னவரும் இரங்கிப்பின் மகிழ்ந்து தங்கோன் அடிவணங்கி இம்மாற்றம் அறைகின் றார்கள்.* *45*

*"இத்தனைகா லமும்நினது சிலைக்கீழ்த் தங்கி இனிதுண்டு தீங்கின்றி இருந்தோம், இன்னும், அத்த! நின*[7] *தருள்வழியே நிற்ப தல்லால் அடுத்தநெறி வேறுளதோ? அதுவே அன்றி, மெய்த்தவிறல் திண்ணனையுன் மரபில் சால மேம்படவே பெற் றளித்தாய்; விளங்கு மேன்மை, வைத்தசிலை மைந்தனை ஈண் டழைத்து நுங்கள் வரையாட்சி அருள்" என்றார் மகிழ்ந்து வேடர்.* *46*

---

பா - ம்—[1] புணணியநதிரண்டு. [2] மெலிவதானான். [3] கலைகளோடு முதலா. [4] பலநெருங்கி. [5] சினவேடர். [6] முயல்கிலேனான். [7] உன.

சிலைமறவர் உரைசெய்ய நாகன் தானும் திண்ணனைமுன் கொண்டுவரச் செப்பி விட்டு, "மலைமருவு நெடுங்கானில் கன்னி வேட்டை மகன்போகக் காடுபலி மகிழ வூட்டத், தலைமரபின் வழிவந்த தேவ ராட்டி தனைஅழைமின்" என அங்குச் சார்ந் தோர் சென்று, நிலைமையவள் தனக்குரைப்ப நரைமூ தாட்டி நெடிதுவந்து விருப்பினொடுங் கடிது வந்தாள். 47

கானில்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக் கலைமருப்பின் அரிந்த குழை காதிற் பெய்து, மானின்வயிற் றரிதாரத் திலகம் இட்டு மயிற் கழுத்து மனவுமணி வடமும் பூண்டு, தானிழிந்து திரங்கிமுலை சரிந்து தாழத தழைப்பீலி மரவுரிமேல் சார எய் திப், பூநெருங்கு தோரைமலி சேடை நல்கிப் போர்வேடர் கோமானைப் போற்றி நின்றாள். 48

நின்றமுது குறக்கோலப் படிமத் தாளை நேர்நோக்கி "அன்னை! நீ நிரப்பு நீங்கி, நன்றினிதின் இருந்தனையோ?"[1] என்று கூறும் நாகன் எதிர் நலம்பெருக வாழ்த்தி "நல்ல, மென் தசையும் ஈயலொடு நறவும் வெற்பில் விளைவளனும் பிறவள னும் வேண்டிற் றெல்லாம், அன்றுநீ வைத்தபடி பெற்று வாழ் வேன் அழைததபணி என்?" என்றாள் அணங்கு சார்ந்தாள். 49

"கோட்டமில்என் குலமைந்தன் திண்ணன் எங்கள் குலத் தலைமை யான்கொடுப்பக் கொண்டு பூண்டு, பூட்டுறுவெஞ் சிலை வேடர் தம்மைக் காக்கும் பொருப்புரிமை புகுகின்றான்; அவனுக் கென்றும், வேட்டைவினை எனக்குமே லாக வாய்த்து வேறுபுலங் கவர்வென்றி மேவு மாறு, காட்டிலுறை தெய்வங்கள் விரும்பி உண்ணக் காடுபலி ஊட்" டென்றான் கவலை இல்லான். 50

மற்றவன்தன் மொழிகேட்ட வரைச்சூ ராட்டி "மன மகிழ்ந்திங்[2] கன்போடு வருகின் றேனுக்(கு), எற்றையினுங் குறி கள்மிக நல்ல ஆன இதனாலே உன்மைந்தன் திண்ண னான், வெற்றிவரிச் சிலையோன்நின் அளவி லன்றி மேம்படுகின் றான்" என்று விரும்பி வாழ்த்திக், கொற்றவன தெய்வங்கள் மகிழ ஊட்ட வேண்டுவன குறைவின்றிக் கொண்டு போனாள்.

---

பா - ம்—[1] நன்றும்'னிதிருந்தவனையே. [2] மன மகிழ்ந்து நானிங்.

தெய்வநிகழ் குறமுதியாள் சென்ற பின்பு திண்ணனார் சிலைத்தாதை அழைப்பச் சீர்கொள், மைவிரவு நறுங்குஞ்சி வாசக் கண்ணி மணிநீல மலையொன்று வந்த தென்னக, கைவிரவு சிலை வேடர் போற்ற வந்து காதல்புரி தாதைகழல் வணங்கும் போதில், செய்வரை [1]போற் புயமிரண்டும் செறியப் புல்லிச் செழும்புலித்தோல் இருகையின்முன் [2] சேர வைத்தான். 52

முன்னிருந்த மைந்தன் முகம் நோக்கி நாகன் "மூப்பெனை வந் தடைதலினால் முன்பு போல, என்னுடைய முயற்சியினால் வேட்டை யாட இனிஎனக்குக் கருத்தில்லை; எனக்கு மேலாய், மன்னுசிலை மலையர்குலக் காவல் பூண்டு மாறெறிந்து மாவேட்டை ஆடி என்றும், உன்னுடைய மரபுரிமை தாங்கு வாய்" என் றுடைதோலுஞ் சுரிகையுங்கைக் கொடுத்தான் அன்றே. 53

தந்தைநிலை உட்கொண்டு தளர்வு கொண்டு தங்கள்குலத் தலைமைக்குச் சார்வு [3] தோன்ற, வந்தகுறை பாடதனை நிரப்பு மாறு மனங்கொண்ட குறிப்பினால் மறுமை கொண்டு, முந்தை யவன் கழல் வணங்கி முறைமை தந்த முதற்சுரிகை உடை தோலும் வாங்கிக் கொண்டு, சிந்தைபரங் கொளநின்ற திண்ண னார்க்குத் திருத்தாதை முகமலர்ந்து செப்பு கின்றான். 54

"நம்முடைய குலமறவர் சுற்றத் தாரை நான்கொண்டு பரிததன்மேல் நலமே செய்து, தெம்முனையில அயற்புலங்கள் கவாந்து கொண்ட [4] திண்சிலையின் வளமொழியாச் சிறப்பின் வாழ்வாய்!, வெம்முனையின் [5] வேட்டைகளும் உனக்கு வாய்க் கும்; விரைந்துநீ தாழாதே வேட்டை ஆட, இம்முரண்வெஞ் சிலைவேடர் தங்க ளோடும் எழுக!" என விடைகொடுத்தான் இயல்பில் நின்றான். [6] 55

செங்கண்வயக் கோளரியே(று) அன்ன திண்மைத் திண்ணா னார் செய்தவத்தின் பெருமை பெற்ற, வெங்கண்விறல் தாதை

---

பா - ம்—[1] செவ்வரை. [2] இருக்கையினில். [3] சாய்வு. [4] கொண்டு. [5] வெம்முனையில். [6] இயல்பின் மிக்கான்.

கழல் வணங்கி நின்று விடைகொண்டு புறம்போந்து வேட ரோடும், மங்கலநீர்ச் சுனைபடிந்து மனையின் வைகி வைகிருளின் புலர்காலை வரிவிற் சாலைப், பொங்குசிலை அடல்வேட்டைக் கோலங் கொள்ளப் புனைதொழிற்கை வினைஞரொடும்[1] பொலிந்து புக்கார். 56

நெறிகொண்ட குஞ்சிச சுருள்துஞ்சி நிமிர்ந்து பொங்க
முறிகொண்ட கண்ணிக்கிடை மொய்யொளிப் பீலி சேர்த்தி
வெறிகொண்ட முல்லைப் பிணைமீது குறிஞ்சி வெட்சி
செறிகொண்ட வண்டின்குலஞ் சீர்கொளப் பின்பு செய்து. 57

முன்நெற்றியின் மீது முருந்திடை வைத்த குன்றி
தன்னிற்புரி கொண்ட மயிர்க்கயி றுரச் சாத்தி
மின்னில்திகழ் சங்கு விளங்குவெண் டோடு காதின்
மன்னிப்புடை நின்றன மாமதி போல வைக. 58

கண்டத்திடை வெண்கவ டிக்கதிர் மாலை சேரக்
கொண்டக்கொடு பன்மணி கோத்திடை ஏனக் கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கை வன்தோல்
தண்டைச்செயல் பொங்கிய சன்னவீ ரந்த யங்க. 59

மார்பிற்சிறு தந்த மணித்திரள் மாலை தாழத்
தாரிற்பொலி தோள்வல யங்கள் தழைத்து மின்னச்
சேர்விற்பொலி கங்கண மீது திகழ்ந்த முன்கைக்
கார்விற்செறி[2] நாண்எறி கைச்செறி கட்டி கட்டி. 60

அரையிற்சர ணத்துரி ஆடையின் மீது பௌவத்
திரையிற்படு வெள்ளல கார்த்து விளிம்பு சேர்த்தி
நிரையிற்பொலி நீளுடை தோல்சுரி கைப்பு றஞ்சூழ்
விரையில்துவர் வார்விசி போக்கி அமைத்து வீக்கி. 61

வீரக்கழல் காலின் விளங்க அணிந்து பாதம்
சேரத்தொடு நீடு செருப்பு விருப்பு வாய்ப்பப்
பாரப்பெரு[3] வில்வலங் கொண்டு பணிந்து திண்ணன்
சாரத்திருத் தாள்மடித் தேற்றி[4] வியந்து தாங்கி. 62

---

பா - ம்—[1] வினைஞருடன். [2] சிறு. [3] பாரப்பொரு. [4] மடுத்தேற்றி.

அங்கப்பொழு திற்புவ னத்திடர் வாங்க ஓங்கித்
துங்கப்பெரு மாமழை போன்று துண்ணென் ருெலிப்ப
வெங்கட்சின நீடு விலங்கு விலங்கி நீங்கச்
செங்கைத்தலத் தால்தட விச்சிறு நாண்எ றிந்தார். 63

பல்வேறு வாளி புதைபார்த் துடன்போத ஏவி
வில்வேட ராயத் துடிமேவி ஒலிக்கு முன்றில்
சொல்வேறு வாழ்த்துத் திசைதோறுந் துதைந்து விம்ம
வல்லேறு போல்வார் அடல்வாளி தெரிந்து நின்ருர். 64

மானச்சிலை வேடர் மருங்கு நெருங்கு போதில்
யானற்குல மாமல ரிற்படர் சோதி யார்முன்
தேனற்றசை தேறல் சருப்பொரி மற்று முள்ள
கானப்பலி நேர்கட வுட்பொறை யாட்டி வந்தாள். 65

நின்றெங்கு மொய்க்குஞ் சிலைவேடர்கள் நீங்கப்[1] புக்குச்
சென்றங்கு வள்ளல் திருநெற் றியிற்சேடை சாத்தி
"உன்றந்தை தந்தைக்கும் இந்நன்மைகள் உள்ள வல்ல
நன்றும்பெரி துன்விறல் நம்மள வன்(று)" இதென்ருள். 66

அப்பெறறியில் வாழ்த்தும் அணங்குடை யாட்டி தன்னைச், செப்பற்கரி தாய சிறப்பெதிர் செய்து போக்கிக், கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேகம் என்ன, மெய்ப்பொற் புடைவேட் டையின் மேற்கொண டெழுந்து போந்தார். 67

தாளில்வாழ் செருப்பர்தோல் தழைத்தநீடு தானையார்
வாளியோடு சாபம்மேவு கையர்வெய்ய வன்கணுர்
ஆளியேறு போலஏகும் அண்ணலார்முன் எண்ணிலார்
மீளிவேடர் நீடுகூட்டம் மிக்குமேல் எழுந்ததே. 68

வன்ருெடர்ப்பி ணித்தபாசம் வன்கைமள்ளர் கொள்ளவே
வென்றிமங்கை வேடர்வில்லின் மீதுமேவு பாதமுன்
சென்றுநீளு மாறு[2] போல்வ செய்யநாவின் வாயவாய்
ஒன்ருெடொன்று நேர்படாமல் ஓடுநாய்கள் மாடெலாம். 69

---

பா - ம—[1] சினவேடரை நீக்கிப். [2] மீளு மா று.

போர்வலைச் சிலைத்தொழிற் புறத்திலே விளைப்பவச்
சார்வலைத் தொடக்கறுக்க ஏகும்ஐயர் தம்முனே
கார்வலைப் படுத்தகுன்று கானமா வளைக்கநீள்
வார்வலைத் திறஞ்சுமந்து வந்தவெற்பர் முந்தினார். 70

நண்ணிமா மறைக்குலங்கள் நாடவென்று நீடும்அத்
தண்ணிலா அடம்புகொன்றை [1] தங்குவேணி யார்தமைக்
கண்ணில்நீடு பார்வையொன்று கொண்டுகாணும் அன்பர்முன்
எண்ணில்பார்வை கொண்டுவேடர் எம்மருங்கும் ஏகினார். 71

கோடுமுன் பொலிக்கவும் குறுங்கணு குளிக்குலம்
மாடுசென் றிசைப்பவும் மருங்குபம்பை கொட்டவும்
சேடுகொண்ட கைவிளிச் சிறந்தஓசை செல்லவும்
காடுகொண் டெழுந்தவேடு கைவளைந்து சென்றதே. [2] 72

நெருங்குபைந் தருக்குலங்கள் நீடுகாடு கூடநேர்
வருங்கருஞ் சிலைத்தடக்கை மானவேடர் சேனைதான்
பொருந்தடந் திரைக்கடற் பரப்பிடைப் புகும்பெருங்
கருந்தரங்க நீள்புனற் களிந்திகன்னி ஓதமே. 73

தென்றிசைப் பொருப்புடன் செறிந்தகானின் மானினம்
பன்றிவெம் மரைக்கணங்கள் [3] ஆதியான பல்குலம்
துன்றிநின்ற என்றடிச் சுவட்டின்ஒற்றர் சொல்லவே
வன்றடக்கை வார்கொடெம் மருங்கும்வேடர் ஓடினார். 74

ஓடியெறிந்து வாரொழுக்கி யோசனைப் பரப்பெலாம்
நெடியதிண் வலைத்தொடக்கு நீளிடைப் பிணித்துநேர்
கடிகொளப் பரந்தகாடு காவல்செய் தமைத்தபின்
செடிதலைச் சிலைக்கைவேடர் திண்ணனார்முன் நண்ணினார். 75

வெஞ்சிலைக்கை வீரனாரும் வேடரோடு கூடிமுன்
மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா
அஞ்சுவித் தடர்க்குநாய்கள் அட்டமாக விட்டுநீள்
செஞ்சரத்தி னேடுசூழல் செய்தகானுள் எய்தினார். 76

---

பா - ம்— [1] அரும்பு கொன்றை. [2] வேடர் கைவளைந்து சென்றனர். [3] மரைக்குலங்கள்.

வெய்யமா எழுப்பஏவி வெற்பராயம் ஓடிநேர்
எய்யும்வாளி முன்தெரிந்து கொண்டுசெல்ல எங்கணும்
மொய்குரல் துடிக்குலங்கள் பம்பைமுன் சிலைத்தெழக்
கைவிளித் ததிர்த்துமா எழுப்பினார்கள் கானெலாம். 77

ஏனமோடு மானினங்கள் எண்குதிண் கலைக்குலம்
கானமேதி யானைவெம் புலிக்கணங்கள் கான்மரை
ஆனமா அநேகமா வெருண்டெழுந்து பாயமுன்
சேனைவேடர் மேலடர்ந்து சீறிஅம்பில் நூறினார்.[1] 78

தாளறுவன இடைதுணிவன தலைதுமிவன கலைமா;
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா;
நீளுடல்விடு சரம்உருவிட நிமிர்வனமிடை கடமா;
மீளிகொள்கணை படும்உடலெழ விழுவனபல உழையே. 79

வெங்கணைபடு பிடர்கிழிபட விசைஉருவிய கயவாய்
செங்கனல்விட[2] அதனொடுகணை செறியமுன் இரு கருமா
அங்கெழுசிரம் உருவியபொழு தடலெயிறுற அதனைப்
பொங்கியசின மொடுகவர்வன புரைவனசில புலிகள். 80

பின்மறவர்கள் விடுபகழிகள் பிறகுறவயி றிடைபோய்
முன்நடுமுக மிசையுருவிட முடுகியவிசை யுடன்அக்
கொன்முனைஅடு சரமினமெதிர் குறுகியமுகம் உருவத்
தன்னெதிரெதிர் பொருவனநிகர் தலையனபல கலைகள். 81

கருவரைஒரு தனுவொடுவிசை கடுகியதென முனைநேர்
குரிசில்முன்விடும் அடுசரம்எதிர் கொலைபயில்பொழு தவையே
பொருகரியொடு சினஅரியிடை புரையறவுடல்[3] புகலால்
வரும்இரவொடு பகல்அணவன எனமிடையும்அவ் வனமே. 82

நீளிடைவிசை மிசைகுதிகொள நெடுமுகில்தொட எழுமான்
தாளுறுகழல் மறவர்கள்விடு[4] சரம்நிரைதொடர்[5] வனதாம்
வாள்விடுகதிர் மதிபிரிவுற[6] வருமெனவிழும் உழையைக்
கோளொடுபயில் பணிதொடர்நிலை கொளவுளஎதிர் பலவே. 83

---

பா - ம்—[1] அம்பு நூறினார். [2] செங்கனல்பட. [3] புரையறுமுடல்.
[4] வயவர்கள் விடு. [5] நிறைதொடர். [6] பரிவுற; பரிவற.

கடல்விரிபுனல் கொளவிழுவன கருமுகிலென நிரையே
படர்வொடுசெறி தழைபொதுளிய பயில்புதல்வனம் அதன்மேல்
அடலுறுசரம் உடலுறவரை யடியிடம்அல மரலால்
மிடைகருமரை கரடிகளொடு விழுவனவன மேதி. 84

பலதுறைகளின் வெருவரலொடு பயில்வலையற நுழைமா
உலமொடுபடர் வனதகையுற [1] உறுசினமொடு கவர்நாய்
நிலவியஇரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளின்அள வுளவே. 85

துடியடியன மடிசெவியன துறுகயமுனி தொடரார்;
வெடிபடவிரி சிறுகுருளைகள் மிசைபடுகொலை விரவார்;
அடிதளர்வுறு கருவுடையன அணைவுறுபிணை அலையார்;
கொடியனஎதிர் முடுகியும்உறு கொலைபுரிசிலை மறவோர். 86

இவ்வகைவரு கொலைமறவினை எதிர்நிகழ்வுழி அதிரக்
கைவரைகளும் வெருவுறமிடை கான்எழுவதொர் ஏனம்
பெய்கருமுகி லெனஇடியொடு பிதிர்கனல்விழி சிதறி
மொய்வலைகளை அறநிமிர்வுற முடுகியகடு விசையில். 87

போமதுதனை அடுதிறலொடு பொருமறவர்கள் அரியே(று)
ஆமவர் [2] தொடர் வுறும்விசையுடன் அடிவழிசெலும் அளவில்
தாமொருவரும் அறிகிலரவர் தனிதொடர்வுழி அதன்மேல்
ஏமுனைஅடு சிலைவிடலைகள் இருவர்கள்அடி பிரியார். 88

நாடியகழல் வயவர்களவர் நாணனும்நெடு வரிவில்
காடனும்எனும் இருவரும்மலை காவலரொடு கடிதில்
கூடினர்விடு பகழிகளொடு கொலைஞமலிகள் வழுவி
நீடியசரி படர்வதுதரு நீழலின்விரை கேழல். 89

குன்றியைநிகர் முன்செறஎரி கொடுவிழிஇடி குரல்நீள்
பன்றியும்அடல் வன்திறலொடு படர்நெறிநெடி தோடித்
துன்றியதொரு குன்றடிவரை சுலவியநெறி சூழல்
சென்றதனிடை நின்றதுவலி தெருமர [3] மரம் நிரையில். 90

---

பா - ம்—[1] தகைவுற. [2] அரியே—தாமவர். [3] வழிதெருமர.

அத்தருவளர் சுழலிடையடை அதன்நிலையறி பவர்முன்
கைத்தெரிகணை யினிலடுவது கருதலர்விசை கடுகி
மொய்த்தெழுசுடர் விடுசுரிகையை முனைபெறஎதிர் உருவிக்
குத்தினருடல் முறிபடவெறி குலமறவர்கள் தலைவர். 91

வேடர்தங் கரிய செங்கண் வில்லியார் விசையிற் குத்த,
மாடிரு துணியாய் வீழ்ந்த வராகத்தைக் கண்டு நாணன்,
"காடனே! இதன்பின் இன்று காதங்கள் பலவந் தெய்த்தோம்,,
ஆடவன் கொன்றான் அச்சோ!" என்(று)அவர் அடியில்
தாழ்ந்தார். 92

மற்றவர் திண்ணனார்க்கு மொழிகின்றார் "வழிவந் தாற்ற
உற்றது பசிவந் தெம்மை உதவிய இதனைக் காய்ச்சிச்
சற்றுநீ அருந்தி யாமும் தின்றுதண் ணீர்குடித்து
வெற்றிகொள் வேட்டைக் காடு குறுகுவோம் மெல்ல" என்றார்.

என்றவர் கூறநோக்கித் திண்ணனார் "தண்ணீர் எங்கே
நன்றும்இவ் வனத்தில் உள்ள(து)?" என்றுரை செய்ய நாணன்
"நின்றஇப் பெரிய தேக்கின் அப்புறஞ் சென்றால் நீண்ட
குன்றினுக் கயலே ஓடுங் குளிர்ந்தபொன் முகலி" என்றான். 94

பொங்கிய சினவில் வேடன் சொன்னபின் "போவோம் அங்கே;
இங்கிது தன்னைக் கொண்டு போதுமின்" என்று தாமும்
அங்கது நோக்கிச் சென்றார், காவதம் அரையிற் கண்டார்
செங்கண்ஏ றுடையார் வைகுந் திருமலைச் சாரல சோலை. 95

"நாணனே! தோன்றும் குன்றில் நண்ணுவேம்"[1] என்ன நாணன்
"காணநீ போதின் நல்ல காட்சியே காணும்; இந்தச்
சேணுயர் திருக்கா ளத்தி மலைமிசை எழுந்து செவ்வே
கோணமில் குடுமித் தேவர் இருப்பர்; கும் பிடலாம்" என்றான்.

"ஆவதென்? இதனைக் கண்டிங் கணைதொறும் என்மேற் பாரம்
போவதொன் றுளது போலும்; ஆசையும் பொங்கி மேன்மேல்
மேவிய நெஞ்சம் வேறோர் விருப்புற விரையா நிற்கும்;[2]
தேவரங் கிருப்ப தெங்கே? போ"கென்றார் திண்ணனார்தாம். 97

பா - ம்—[1] நண்ணுவோம். [2] விளையா நிற்கும்.

உரைசெய்து விரைந்து செல்ல அவர்களும் உடனே போந்து
கரைவளர் கழையின் முத்தும் கார்அகில் குறடும் சந்தும்
வரைதரு மணியும் பொன்னும் வயிரமும் புளினந் தோறும்
திரைகள்முன் திரட்டி வைத்த திருமுக லியினைச் சார்ந்தார். 98

ஆங்கதன் கரையின் பாங்கோர் அணிநிழற் கேழல் இட்டு
வாங்குவில் காடன் தன்னை மரக்கடை தீக்கோல் பண்ணி
"ஈங்குநீ நெருப்புக் காண்பாய் இம்மலை ஏறிக் கண்டு
நாங்கள்வந் தணைவோம்" என்று நாணனும் தாமும் போந்தார்.

அளிமிடை கரைசூழ் சோலை அலர்கள்கொண் டணைந்த ஆற்றின்
தெளிபுனல் இழிந்து சிந்தை தெளிவுறும் திண்ண னார்தாம்
களிவரும் மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு
குளிர்வரு நதியூ டேகிக் குலவரைச் சாரல் சேர்ந்தார். 100

கதிரவன் உச்சி நண்ணக் கடவுள்மால் வரையின் உச்சி, அதிர்தரும் ஓசை ஐந்தும் ஆர்கலி முழக்கங் காட்ட, "இதுஎன்கொல்? நாணா!" என்றார்க்(கு) "இம்மலைப் பெருநதேன் சூழ்ந்து, மதுமலர் ஈக்கள் மொய்த்து மருங்கெழும் ஒலிகொல்" என்றான். 101

முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்ப மான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம் பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
என்புநெக் குருகி உள்ளத் தெழுபெரு வேட்கை யோடும். 102

நாணனும் அன்பும் முன்பு நளிர்வரை ஏறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பானம் ஏறி
ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல ஐயர்
நீணிலை மலையை ஏறி நேர்படச் செல்லும் போதில். 103

திங்கள்சேர் சடையார் தம்மைச் சென்றவர் காணா முன்னே
அங்கணர் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம் எய்தத்[1]
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய ஒளியின் நீழல் பொருவில்அன் புருவம் ஆனார். 104

---

பா - ம்—[1] எய்தித்.

மாகமார் திருக்கா ளத்தி மலைஎழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டார்; எழுந்தபே ருவகை அன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடும்
மோகமாய் ஓடிச் சென்றார், தழுவினார், மோந்து நின்றார். 105

நெடிதுபோ துயிர்த்து நின்று நிறைந்தெழு மயிர்க்கால் தோறும்
வடிவெலாம் புளகம் பொங்க மலர்க்கண்ணீர் அருவி பாய
'அடியனேற் கிவர்தாம் இங்கே அகப்பட்டார் அச்சோ''! என்று
படியிலாப் பரிவு தானோர் படிவமாம் பரிசு தோன்ற. 106

"வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதி யார்போல்
கைம்மலை கரடி வேங்கை அரிதிரி கானம் தன்னில்
உம்முடன் துணையாய் உள்ளார் ஒருவரும் இன்றிக் கெட்டேன்!
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே!'' என்று நைந்தார். 107

கைச்சிலை விழுந்த தோரார் காளையார் மீள "இந்தப்
பச்சிலை யோடு பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து
மச்சிது செய்தார் யாரோ?'' என்றலும் மருங்கு நின்ற
அச்சிலை நாணன் தானும் "நானிது அறிந்தேன்'' என்பான். 108

"வன்றிறல் உந்தை யோடு மாவேட்டை ஆடிப் பண்டிக்
குன்றிடை வந்தோம் ஆகக் குளிர்ந்தநீர் இவரை ஆட்டி
ஒன்றிய இலைப்பூச் சூட்டி ஊட்டிமுன் பறைந்தோர் பார்ப்பான்
அன்றிது செய்தான்; இன்றும் அவன்செய்த தாகும்''[1] என்றான்.

உண்ணிறைந் தெழுந்த தேனும் ஒழிவின்றி ஆரா அன்பில்
திண்ணனார் "திருக்கா ளத்தி நாயனார்க் கினிய செய்கை
எண்ணிய இவைகொலாம்'' என்றிதுகடைப் பிடித்துக்கொண்டவ்
அண்ணலைப் பிரிய மாட்டா அளவில்[2] ஆ தரவு நீட. 110

"இவர்தமைக் கண்டே னுக்குத் தனியராய் இருந்தார், என்னே!
இவர்தமக் கமுது செய்ய இறைச்சியும் இடுவார் இல்லை;
இவர்தமைப் பிரிய ஒண்ணா(து), என்செய்கேன்? இனியான் சால
இவர்தமக் கிறைச்சி கொண்டிங் கெய்தவும் வேண்டும்'' என்று.

---

பா-ம்—[1] செய்தானதும். [2] பிரியமாட்டாதளவில்.

போதுவர், மீண்டு செல்வர்; புல்லுவர், மீளப் போவர்;
காதலின் நோக்கி நிற்பர்; கன்றகல் புனிற்றுப் போல்வர்;
"நாதனே! அமுது செய்ய நல்லமெல் இறைச்சி நானே
கோதறத் தெரிந்து வேறு கொண்டிங்கு வருவேன்" என்பார்.

"ஆர்தம ராக நீரிங் கிருப்பதென் றகல மாட்டேன்;
நீர்பசித் திருக்க இங்கு நிற்கவுங் கில்லேன்" என்று
சோர்தரு கண்ணீர் வாரப் போய்வரத் துணிந்தா ராகி
வார்சிலை எடுத்துக் கொண்டு மலர்க்கையால் தொழுது போந்தார்.

முன்புநின் றரிதில் நீங்கி மொய்வரை இழிந்து நாணன்
பின்புவந் தணைய முன்னைப் பிறதுறை வேட்கை நீங்கி
அன்புகொண் டுய்ப்பச் செல்லும் அவர்திரு முகலி யாற்றின்
பொன்புனை கரையி லேறிப் புதுமலர்க் காவிற் புக்கார். 114

காடனும் எதிரே சென்று தொழுது"தீக் கடைந்து வைத்தேன்;
கோடுடை ஏனம் உங்கள் குறிப்படி உறுப்பை எல்லாம்
மாடுற நோக்கிக் கொள்ளும்; மறித்துநாம் போகைக் கின்று
நீடநீர் தாழ்த்த தென்னோ?" என்றலும் நின்ற நாணன். 115

"அங்கிவன் மலையில் தேவர் தம்மைக்கண் டணைத்துக் கொண்டு, வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும்(பு) என்ன நீங்கான், இங்கும்அத் தேவர் தின்ன இறைச்சிகொண் டேகப் போந்தான், நங்குலத் தலைமை விட்டான்; நலப்பட்டான் தேவர்க்(கு)" எனறுன்.[1] 116

"என்செய்தாய் திண்ணா! நீதான் என்னமால் கொண்டாய்? எங்கள், முன்பெரு முதலி யல்லை யோ?" என, முகத்தை நோக்கார், வன்பெரும் பன்றி தன்னை எரியினில் வதக்கி மிக்க, இன் புறு தசைகள் வெவ்வே றம்பினால் ஈர்ந்து கொண்டு. 117

கோலினிற் கோத்துக் காய்ச்சிக் கொழுந்தசை பதத்தில் வேவ
வாலிய சுவைமுன் காண்பான் வாயினில் அதுக்கிப் பார்த்துச்
சாலவும் இனிய எல்லாம் சருகிலை இணைத்த கல்லை
ஏலவே கோலிக் கூட[2] அதன்மிசை இடுவார் ஆனார். 118

---

பா-ம்—[1] தேவர்க்கின்னம். [2] கோலிக்கூடா; கோலிக்கூட்டி.

மருங்குநின் றவர்கள் பின்னும் "மயல்மிக முதிர்ந்தான், என்னே!
அரும்பெறல் இறைச்சி காய்ச்சி அதுக்கிவே றுமிழா நின்றான்,
பெரும்பசி யுடைய னேனும் பேச்சிலன் எமக்கும் பேறு
தரும்பரி சுணரான்; மற்றைத் தசைபுறத் தெறியா நின்றான்."

"தேவுமால் கொண்டான் இந்தத் திண்ணனை; மற் றிதனைத
தீர்க்கல், ஆவதொன் றறியோம், தேவ ராட்டியை நாக னோடு,
மேவிநாங் கொணர்ந்து தீர்க்க வேண்டும்அவ் வேட்டைக்கானில்,[1]
ஏவல்ஆட் களையுங் கொண்டு போதும்" என் றெண்ணிப்
போனார். 120

கானவர் போன தோரார் கடிதினில் கல்லை யின்கண்
ஊனமு தமைத்துக் கொண்டு மஞ்சனம் ஆட்ட உன்னி
மாநதி நன்னீர் தூய வாயினிற் கொண்டு கொய்த
தூநறும் பள்ளித் தாமங் குஞ்சிமேல் துதையக கொண்டார்.

தனுஒரு கையில் வெய்ய சரத்துடன் தாங்கிக் கல்லைப்
புனிதமெல் இறைச்சி நல்ல போனகம் ஒருகை ஏந்தி
"இனியஎம் பிரானார் சாலப் பசிப்பர்" என் றிரங்கி ஏங்கி
நனிவிரைந் திறைவர் வெற்பை நண்ணினார் திண்ண னார்தாம்.

இளைத்தனர் நாய னாரென் றீண்டச்சென் றெய்தி வெற்பின்
முளைத்தெழு முதலைக் கண்டு முடிமிசை மலரைக் காலில்
வளைத்தபொற் செருப்பால் மாற்றி வாயின்மஞ் சனநீர் தன்னை
விளைத்தஅன் புமிழ்வார் போல விமலனார் முடிமேல் விட்டார்.

தலைமிசைச் சுமந்த பள்ளித் தாமத்தைத் தடங்கா ளத்தி
மலைமிசைத் தம்பி ரானார் முடிமிசை வணங்கிச் சாத்திச்
சிலைமிசைப் பொலிந்த செங்கைத் திண்ணனார் சேர்த்த கல்லை
இலைமிசைப் படைத்த ஊனின் திருவமு தெதிரே வைத்து. 124

"கொழுவிய தசைகள் எல்லாங் கோலினில் தெரிந்து
கோத்தங்(கு), அழலுறு பதத்திற் காய்ச்சிப் பல்லினால் அதுக்கி
நாவில், பழகிய இனிமை பார்த்துப் படைத்தஇவ் இறைச்சி
சால, அழகிது; நாய னீரே! அமுதுசெய் தருளும்" என்றார். 125

---

பா - ம்—[1] காட்டில்.

அன்னஇம் மொழிகள் சொல்லி அமுதுசெய் வித்த வேடர்
மன்னனர், "திருக்கா ளத்தி மலையினர்க் கினிய நல்லூன்
இன்னமும் வேண்டும்" என்னும் எழுபெருங் காதல் கண்டு
பன்னெடுங் கரங்கள் கூப்பிப் பகலவன் மலையில் தாழ்ந்தான்.

அவ்வழி அந்தி மாலை அணைதலும் "இரவு சேரும், வெவ் விலங் குள" என் றஞ்சி மெய்ம்மையின் வேறு கொள்ளாச், செவ்விய அன்பு தாங்கித் திருக்கையில் சிலையும் தாங்கி, மை வரை என்ன ஐயர் மருங்குநின் றகலா நின்றார். 127

சார்வருந் தவங்கள் செய்து முனிவரும் அமரர் தாமும்
கார்வரை அடவி சேர்ந்தும் காணுதற் கரியார் தம்மை
ஆர்வமுன் பெருக ஆரா அன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்றார் நீளிருள் நீங்க நின்றார். 128

கழைசொரி தரளக் குன்றிற் கதிர்நில வொருபால் பொங்க, முழையர(வு) உமிழ்ந்த செய்ய மணிவெயில் ஒருபால் மொய்ப் பத், தழைகதிர்ப் பரிதியோடுஞ் சந்திரன் தலைஉ வாவில், குழை யணி காதர் வெற்பைக்[1] கும்பிடச் சென்றால் ஒக்கும். 129

விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலை பொங்க
மாரகதம் ஒளிகொள் நீல மணிகளும் இமைக்குஞ் சோதி
பொரஇரு சுடருக் கஞ்சிப் போயின புடைகள் தோறும்
இரவிருள் ஒதுங்கி னலே போன்றுள தெங்கும் எங்கும். 130

செந்தழல் ஒளியிற் பொங்கும்[2] தீபமா மரங்க ளாலும்
மந்திகள் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலும்[3]
ஐந்தும்ஆ றடக்கி யுள்ளார் அரும்பெருஞ் சோதி யாலும்
எந்தையார் திருக்கா ளத்தி மலையினில் இரவொன் றில்லை. 131

வருங்கறைப் பொழுது நீங்கி மல்கிய[4] யாமஞ் சென்று
சுருங்கிட அறிந்த புள்ளின் சூழ்சிலம் போசை கேட்டுக்
கருங்கடல் என்ன நின்ற[5] கண்துயி லாத வீரர்
அரும்பெறல் தம்பி ரானர்க் கமுதுகொண் டணைய வேண்டி. 132

---

பா - ம்—[1] வெற்புச். [2] தோன்றும். [3] மணியொளி விளக்கத் தாலும். [4] வைகிய. [5] நின்று.

ஏறுகாற் பன்றி யோடும் இருங்கலை புனமான் மற்றும்
வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரகி னாலே
ஊறுசெய் காலம் சிந்தித் துருமிகத் தெரியாப் போதின்
மாறடு சிலையுங் கொண்டு வள்ளலைத் தொழுது போந்தார். 133

மொய்காட்டும் இருள்வாங்கி முகங்காட்டும் தேர்இரவி
மெய்காட்டும் அன்புடைய வில்லியார் தனிவேட்டை
எய்காட்டின் மாவளைக்க இட்டகருந் திரைஎடுத்துக்
கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி எழும்போதில். 134

எய்தியசீர் ஆகமத்தில் இயம்பியபூ சனைக்கேற்பக்
கொய்தமல ரும்புனலும் முதலான கொண்டணைந்தார்
மைதழையுங் கண்டத்து மலைமருந்தை வழிபாடு
செய்துவருந் தவமுடைய முனிவர்சிவ கோசரியார். 135

வந்துதிரு மலையின்கண் வானவர்நா யகர்மருங்கு
சிந்தைநிய மத்தோடுஞ் செல்கின்றார் திருமுன்பு
வெந்தஇறைச் சியும்எலும்பும் கண்டகல மிதித்தோடி
"இந்தஅனு சிதங்கெட்டேன்! யார்செய்தார்?" என்றழிவார்.

"மேவநேர் வர[1] அஞ்சா வேடுவரே இதுசெய்தார்,
தேவதே வேசனே[2]! திருமுன்பே இதுசெய்து
போவதே! இவ்வண்ணம் புகுதநீர் திருவுள்ளம்
ஆவதே?" எனப்பதறி அழுதுவிழுந் தலமந்தார். 137

"பொருப்பில்எழுஞ் சுடர்க்கொழுந்தின் பூசனையும் தாழ்க்கநான்
இருப்பதினி என்?"என்றவ் விறைச்சிஎலும் புடன்இலையும்
செருப்படியும் நாயடியும் திருவலகால் மாற்றியபின்
விருப்பினொடுந் திருமுகலிப் புனல்மூழ்கி விரைந்தணைந்தார். 138

பழுதுபுகுந் ததுதீரப் பவித்திரமாம் செயல்புரிந்து
தொழுதுபெறு வனகொண்டு தூயபூ சனைதொடங்கி
வழுவில்திரு மஞ்சனமே முதலாக வரும்பூசை
முழுதுமுறை மையின்முடித்து முதல்வனார் கழல்பணிந்தார். 139

---

பா - ம்—[1] மேவனோவா. [2] தேவதேவீசனே.

பணிந்தெழுந்து "தனிமுதலாம் பர"னென்று பன்முறையால்
துணிந்தமறை மொழியாலே துதிசெய்து சுடர்த்திங்கள்
அணிந்தசடை முடிக்கற்றை அங்கணரை விடைகொண்டு
தணிந்தமனத் திருமுனிவர் தபோவனத்தினிடைச் சார்ந்தார். 140

இவ்வண்ணம் பெருமுனிவர் ஏகினார்; இனிஇப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறமொழிவேன் தீவினையின் திறமொழிவேன்.

திருமலையின் புறம்போன திண்ணனார் செறிதுறுகல்
பெருமலைக ளிடைச்சரிவில்[1] பெரும்பன்றி புனமேய்ந்து
வருவனவும் துணிபடுத்து மானினங்கள் கானிடைநின்(று)
ஒருவழிச்சென் றேறுதுறை ஒளிநின்று கொன்றருளி. 142

பயில்விளியால் கலைஅழைத்துப் பாடுபெற ஊடுருவும்
அயில்முகவெங் கணைபோக்கி அடியொற்றி மரையினங்கள்
துயிலிடையிற் கிடையெய்து தொடர்ந்துகட மைகளெய்து
வெயில்படுவெங் கதிர்முதிரத் தனிவேட்டை வினைமுடித்தார்.

பட்டவன விலங்கெல்லாம் படர்வனத்தில் ஒருசூழல்
இட்டருகு தீக்கடைகோல் இருஞ்சுரிகை தனையுருவி
வெட்டிநறுங் கோற்றேனும்[2] மிகமுறித்துத் தேக்கிலையால்
வட்டமுறு பெருங்கல்லை மருங்குபுடை படஅமைத்தார். 144

இந்தனத்தை முறித்தடுக்கி எரிகடையும் அரணியினில்
வெந்தழலைப் பிறப்பித்து மிகவளர்த்து மிருகங்கள்
கொந்திஅயில் அலகம்பால் குட்டமிட்டுக்[3] கொழுப்பரிந்து
வந்தனகொண் டெழுந்தழலில் வக்குவன வக்குவித்து. 145

வாயம்பால் அழிப்பதுவும் வகுப்பதுவும் செய்தவற்றின்
ஆயஉறுப் பிறைச்சியெலாம் அரிந்தொருகல் லையில்இட்டுக்
காயநெடுங் கோல்கோத்துக் கனலின்கண் உறக்காய்ச்சித்
தூயதிரு அமுதமைக்கச் சுவைகாணல் உறுகின்றார். 146

பா - ம்—[1] சரியில். [2] கோற்றேனை. [3] குட்டமிடும்.

எண்ணிறந்த கடவுளருக் கிடும்உணவு கொண்டூட்டும்
வண்ணஎரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
அண்ணலார்க் காம்பரிசு தாம்சோதித் தமைப்பதற்குத்[1]
திண்ணனூர் திருவாயில் அமைத்தாரூன் திருவமுது. 147

நல்லபத முறவெந்து நாவின்கண் இடும்இறைச்சி
கல்லையினிற் படைத்துத்தேன் பிழிந்துகலந் ததுகொண்டு
வல்விரைந்து திருப்பள்ளித் தாமமுந்தூய் மஞ்சனமும்
ஒல்லையினின் முன்புபோல் உடன்கொண்டு வந்தணைந்தார். 148

வந்துதிருக் காளத்தி மலையேறி வனசரர்கள்[2]
தந்தலைவ னுரிமையோர் தலைவனூர் தமையெய்தி
அந்தணனூர் பூசையினை முன்புபோல் அகற்றியபின்
முந்தைமுறை தம்முடைய பூசனையின் செயல்முடிப்பார். 149

ஊனமுது கல்லையுடன் வைத்"திதுமுன் னையின்நன்றால்;
ஏனமொடு மான்கலைகள் மரைகடமை இவையிற்றில்
ஆனவுறுப் பிறைச்சிஅமு(து); அடியேனும் சுவைகண்டேன்,
தேனுமுடன் கலந்ததிது தித்திக்கும்" எனமொழிந்தார். 150

இப்பரிசு திருவமுது செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியில் ஒழுகுவார்
எப்பொழுதும் மேன்மேல்வந் தெழும்அன்பால் காளத்தி
அப்பர்எதிர் அல்லுறங்கார் பகல்வேட்டை ஆடுவார். 151

மாமுனிவர் நாடோறும் வந்தணைந்து வனவேந்தர்
தாமுயலும் பூசனைக்குச் சாலமிகத் தளர்வெய்தித்
தீமையென அதுநீக்கிச் செப்பியஆ கமவிதியால்
ஆமுறையில் அர்ச்சனைசெய்(து) அந்நெறியில் ஒழுகுவரால். 152

நாணனொடு காடனும்போய் நாகனுக்குச் சொல்லியபின்
ஊணும்உறக் கமும்இன்றி அணங்குறைவா னையுங்கொண்டு
பேணுமக னார்தம்பால் வந்தெல்லாம் பேதித்துக்
காணுநெறி தங்கள்குறி வாராமல் கைவிட்டார். 153

---

பா - ம்—[1] சோதித்தமைப்பார் போல். [2] வனவேடர்.

முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்[1]
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கைத்
தன்பரிசும் வினைஇரண்டும் சாருமல மூன்றும்அற
அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ ? 154

அந்நிலையில் அன்பனார் அறிந்தநெறி பூசிப்ப
மன்னியஆ கமப்படியால மாமுனிவர் அருச்சித்“திங்(கு)
என்னுடைய நாயகனே ! இதுசெய்தார் தமைக்காணேன் ;
உன்னுடைய திருவருளால் ஒழித்தருள வேண்டும்”என. 155

அன்றிரவு கனவின்கண் அருள்முனிவர்[2] தம்பாலே
மின்திகழுஞ் சடைமவுலி வேதியர்தாம் எழுந்தருளி
“வன்திறல்வே டுவன்என்று மற்றவனை நீநினையேல் ,
நன்றவன்தன் செயல்தன்னை[3] நாமுரைப்பக் கேள்”என்று. 156

“அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்
அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம்என்றும்
அவனுடைய நிலைஇவ்வா றறிநீ”என் றருள்செய்வார்.[4] 157

“பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மேல்
அருப்புறுமென் மலர்முன்னை அவைநீக்கும் ஆதரவால்
விருப்புறும்அன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றென[5] வீழ்ந்த
செருப்படிஅவ் விளம்[6] பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்.” *

“உருகியஅன் பொழிவின்றி நிறைந்தஅவன் உருவென்னும்
பெருகியகொள் கலமுகத்தில் பிறங்கியினி தொழுகுதலால்
ஒருமுனிவன் செவிஉமிழும்[7] உயர்கங்கை முதல்தீர்த்தப்
பொருபுனலின் எனக்கவன்தன் வாயுமிழும் புனல்புனிதம்.” 159

“இம்மலைவந் தெனையடைந்த கானவன்தன் இயல்பாலே
மெய்ம்மலரும் அன்புமேல் விரிந்தனபோல் விழுதலால்

பா - ம்— [1] நோக்கின். [2] அருமுனிவர். [3] நன்றுமவன் தன் செயலை ; அன்னவன்றன் செயல் தன்னை. [4] செய்தார். [5] கடல்பெரு கிற்றென. [6] என் இளம் ; எம்இளம். * 158 முதல் 162 வரையுள்ள ஐந்து செய்யுட்களும் வெள்ளிப் பாடல்கள் என்பர். [7] செவியிலுமிழ்.

செம்மலர்மேல் அயனொடுமால்[1] முதல்தேவர் வந்துபுனை
எம்மலரும் அவன்தலையால் இடுமலர்போல் எனக்கொவ்வா." 160

"வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ எனும்அன்பால்
நையுமனத் தினிமையினில் நையமிக மென்றிடலால்
செய்யுமறை[2] வேள்வியோர் முன்புதருந் திருந்தவியில்
எய்யும்வரிச் சிலையவன்தான் இட்டஊன் எனக்கினிய." 161

"மன்பெருமா மறைமொழிகள் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கும்
இன்பமொழித் தோத்திரங்கள் மந்திரங்க ளியாவையினும்
முன்பிருந்து மற்றவன்தன் முகமலர அகநெகிழ[3]
அன்பினினைந் தெனையல்லால் அறிவுறா மொழிநல்ல." 162

"உனக்கவன்தன் செயல்காட்ட நாளைநீ ஒளித்திருந்தால்
எனக்கவன்தன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண்கின்றாய்,
மனக்கவலை ஒழி" கென்று மறைமுனிவர்க் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியார் எழுந்தருளிப் போயினார். 163

கனவுநிலை நீங்கியபின் விழித்துணர்ந்து கங்குலிடைப்
புனைதவத்து மாமுனிவர் புலர்வளவுங் கண்துயிலார்
மனமுறுமற் புதமாகி வரும்பயமும் உடனாகித்
துனைபுரவித[4] தனித்தேர்மேல் தோன்றுவான் கதிர்தோன்ற.

முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனல்மூழ்கிப்
பன்முறையும் தம்பிரான் அருள்செய்த படிநினைந்து
மன்னுதிருக காளத்தி மலைஏறி முன்புபோல்
பின்னுகனைப் பூசித்துப் பின்பாக ஒளித்திருந்தார். 165

கருமுகில் என்ன நின்ற கண்படா வில்லி யார்தாம்
வருமுறை ஆறாம் நாளில் வரும்இர வொழிந்த காலை
அருமறை முனிவ னார்வந் தணைவதன் முன்னம்[5] போகித்
தருமுறை முன்பு போலத் தனிப்பெரு வேட்டை யாடி. 166

மாறில்ஊன் அமுதும் நல்ல மஞ்சனப் புனலும் சென்னி
ஏறுநாண் மலரும் வெவ்வே றியல்பினில அமைத்துக் கொண்டு

---

பா - ம்—[1] அயன்நெடுமால். [2] செய்ய மறை. [3] நெகிழ்ந்த.
[4] கவனபுரவித். [5] முன்பு.

தேறுவார்க் கமுத மான செல்வனார் திருக்கா ளத்தி
ஆறுசேர் சடையார் தம்மை அணுகவந் தணையா நின்றார். 167

"இத்தனை பொழுது[1] தாழ்த்தேன்" எனவிரைந் தேகு
வார்முன், மொய்த்தபல் சகுனம் எல்லாம் முறைமுறை தீங்கு
செய்ய, "இத்தகு தீய புட்கள் ஈண்டமுன் உதிரங் காட்டும்,
அத்தனுக் கென்கொல் கெட்டேன்! அடுத்ததென்" றணையும்
போதில். 168

அண்ணலார் திருக்கா ளத்தி அடிகளார் முனிவ னார்க்குத்
திண்ணனார் பரிவு காட்டத் திருநய னத்தில் ஒன்று
துண்ணென உதிரம் பாய இருந்தனர்; தூரத் தேஅவ்
வண்ணவெஞ் சிலையார் கண்டு வல்விரைந் தோடிவந்தார். 169

வந்தவர் குருதி கண்டார்; மயங்கினார்; வாயில் நன்னீர்
சிந்திடக் கையில் ஊனுஞ் சிலையுடன் சிதறி வீழக்
கொந்தலர் பள்ளித் தாமம் குஞ்சியின் றலைந்து சோரப்
பைந்தழை அலங்கல் மார்பர் நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார்.

விழுந்தவர் எழுந்து சென்று துடைத்தனர் குருதி, வீழ்வ(து)
ஒழிந்திடக் காணார், செய்வ தறிந்திலர் உயிர்த்து மீள
அழிந்துபோய் வீழ்ந்தார்; தேறி "யாரிது செய்தார்?" என்னா
எழுந்தனர், திசைகள் எங்கும் பார்த்தனர், எடுத்தார் வில்லும்.

வாளியுந் தெரிந்து கொண்"டிம் மலையிடை எனக்கு மாறா
மீளிவெம் மறவர் செய்தார் உளர்கொலோ? விலங்கின் சாதி
ஆளிமுன் னாகி யுள்ள விளைத்தவோ? அறியேன்" என்று
நீளிருங் குன்றைச் சாரல் நெடிதிடை நேடிச் சென்றார். 172

வேடரைக் காணார், தீய விலங்குகள் மருங்கும் எங்கும்
நாடியுங் காணார்; மீண்டும்[2] நாயனார் தம்பால் வந்து
நீடிய சோகத் தோடு நிறைமலர்ப் பாதம் பற்றி
மாடுறக் கட்டிக் கொண்டு கதறினார் கண்ணீர் வார. 173

'பாவியேன் கண்ட வண்ணம் பரமனார்க் கடுத்த தென்னோ?
ஆவியின் இனிய எங்கள் அத்தனார்க் கடுத்த தென்னோ?

பா-ம்—[1] பொழுதும். [2] மீள.

மேவினுர்[1] பிரிய மாட்டா விமலனுர்க் கடுத்த தென்னே?
ஆவதொன் றறிகி லேன்யான், என்செய்கேன்'' என்று பின்னும்.

''என்செய்தால் திரு மோதான்? எம்பிரான் திறத்துத் தீங்கு, முன்செய்தார் தம்மைக் காணேன், மொய்கழல் வேடர் என்றும், மின்செய்வார் பகழிப் புண்கள் தீர்க்குமெய் மருந்து தேடிப்,[2] பொன்செய்தாழ் வரையிற் கொண்டு வருவன்நான்'' என்று போனுர். 175

நினைத்தனர் வேறு வேறு நெருங்கிய வனங்கள் எங்கும், இனத்திடைப் பிரிந்த செங்கண் ஏறென வெருக்கொண் டெய்திப், புனத்திடைப் பறித்துக் கொண்டு பூதநா யகன்பால் வைத்த, மனத்தினுங் கடிது வந்தம்[3] மருந்துகள் பிழிந்து[4] வார்த்தார். 176

மற்றவர் பிழிந்து[5] வார்த்த மருந்தினுல் திருக்கா ளத்திக், கொற்றவர் கண்ணிற் புண்ணீர் குறைபடா திழியக் கண்டும்,[6] ''இற்றையின் நிலைமைக் கென்னே'' இனிச்செயல் என்று பார்ப்பார், ''உற்றநோய் தீர்ப்ப தூனுக் கூ''னெனும் உரைமுன் கண்டார். 177

''இதநமினி என்கண் அம்பால் இடந்தப்பின் எந்தை யாரகண, அதற்கிது மருந்தாய்ப் புண்ணீர் நிற்கவும் அடுக்கும்'' என்று, மதர்த்தெழும் உள்ளத் தோடு மகிழ்ந்துமுன் இருந்து தங்கண், முதற்சர மடுத்து[7] வாங்கி முதல்வர்தங் கண்ணில அபப. 178

நின்றசெங் குருதி கண்டார், நிலத்தினின் றேறப் பாய்ந்தார்;
குன்றென வளர்ந்த[8] தோள்கள் கொட்டினுர், கூத்தும் ஆடி
'' நன்றுநான் செய்த இந்த மதி '' என நகையுந் தோன்ற
ஒன்றிய களிப்பி னுலே உன்மத்தர் போல மிக்கார். 179

வலத்திருக் கண்ணில் தங்கண் அப்பிய வள்ள லார்தம்
நலத்தினைப் பின்னுங் காட்ட நாயனுர் மற்றைக் கண்ணில்

---

பா - ம்—[1] மேவினர். [2] நாடிப். [3] வந்து. [4] பிசைந்து. [5] பிசைந்து. [6] தொழுகக் கண்டே. [7] முதற்சரம் எடுத்து. [8] வளரும்.

உலப்பில்செங் குருதி பாயக் கண்டனர் உலகில் வேடர்
குலப்பெருந் தவத்தால் வந்து [1] கொள்கையின் உம்பர் மேலார்.

கண்டபின் "கெட்டேன்! எங்கள் காளத்தி யார்கண் ஒன்று
புண்டரு குருதி நிற்க மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டுமற் றிதனுக் கஞ்சேன் மருந்துகை கண்டேன்; இன்னும்
உண்டொரு கண்; அக் கண்ணை இடந்தப்பி ஒழிப்பேன்" என்று.

கண்ணுதல் கண்ணில் தங்கண் இடந்தப்பிற் காணும் நேர்பா(டு)
எண்ணுவார் தம்பி ரான்தன் திருக்கண்ணில் இடக்கால் ஊன்றி
உண்ணிறை விருப்பி னோடும் [2] ஒருதனிப் பகழிகொண்டு
திண்ணனார் கண்ணில் ஊன்றத் தரித்திலா தேவ தேவர். 182

செங்கண்வெள் விடையின் பாகர், திண்ணனார் தம்மை யாண்ட
அங்கணர், திருக்கா ளத்தி அற்புதர் திருக்கை, அன்பர் [3]
தங்கண்முன் இடக்குங் கையைத் தடுக்கமுன் [4] றடுக்கு நாக
நங்கணர் அமுத வாக்குக் "கண்ணப்ப நிறக" என்ற. [5] 183

கானவர் பெருமா னார்தங் கண்ணிடந் தப்பும் போதும்
ஊனமு துகந்த ஐயர் உற்றுமுன் பிடிக்கும் போதும் [6]
ஞானமா முனிவர் கண்டார்; நான்முகன் முதலா யுள்ள
வானவர் வளர்பூ மாரி [7] பொழிந்தனர் மறைகள் ஆர்ப்ப. 184

பேறினி இதன்மேல் உண்டோ? பிரான்திருக் கண்ணில் வந்த, ஊறுகண் டஞ்சித் தங்கண் இடந்தப்ப உதவுங் கையை, ஏறுயர்த் தவர் [8] தங் கையால் பிடித்துக்கொண்(டு) "என்வ லத்தில், மாறிலாய்! நிற்க" என்று மன்னுபேர் அருள்பு ரிந்தார்.

மங்குல்வாழ் திருக்கா ளத்தி மன்னனார் கண்ணிற் புண்ணீர்
தங்கணால் மாற்றப் பெற்ற தலைவர்தாள் தலைமேற் கொண்டே
கங்கைவாழ் சடையார் வாழுங் கடவூரிற் கலய னாராம்
பொங்கிய புகழின் மிக்கார் திருத்தொண்டு புகல லுற்றேன். 186

---

பா - ம்— [1] வந்த. [2] காதலோடும். [3] அம்பால். [4] தடுக்கு முன்; தடுக்க முன. [5] என நிற. [6] பிடித்த போதும். [7] பூவின் மாரி. [8] ஏறு கைத்தவர்.

# 11. குங்குலியக்கலய நாயனார் புராணம்

வாய்ந்தநீர் வளத்தால் ஓங்கி மன்னிய பொன்னி நாட்டின்
ஏய்ந்தசீர் மறையோர் வாழும் எயிற்பதி எறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி இருப்பது கடவூர் ஆகும். 1

வயலெலாம் விளைசெஞ் சாலி; வரம்பெலாம் வளையின் முத்தம்[1],
அயலெலாம் வேள்விச் சாலை, அணையெலாங் கழுநீர்க் கற்றை,
புயலெலாங் கமுகின்கா(டு);அப் புறமெலாம்அதன்சீர்போற்றல்,
செயலெலாந் தொழில்கள் ஆறே செழுந்திருக் கடவூர் என்றும்.

குடங்கையின் அகன்ற[2] உண்கட் கடைசியர் குழமி ஆடும்
இடம்படு பண்ணை தோறும் எழுவன மருதம் பாடல்;
வடம்புரி முந்நூல் மார்பின் வைதிக மறையோர் செய்கைச்
சடங்குடை இடங்கள் தோறும் எழுவன சாமம் பாடல. 3

தூங்கநீள் மருப்பின் மேதி படிந்துபால் சொரிந்த வாவிச்
செங்கயல் பாய்ந்து வாசக் கமலமுந தீம்பால் நாறும்
மங்குல்தோய் மாடச் சாலை[3] மருங்கிறை ஓதுங்கும் மஞ்சும்
அங்கவை பொழிந்த நீரும் ஆகுதிப் புகைப்பால நாறும். 4

மருவிய திருவின் மிக்க வளம்பதி அதனில் வாழ்வார்
அருமறை முந்நூல் மார்பின்[4] அந்தணா கலயர் என்பார்
பெருநதி அணியும் வேணிப் பிரான்கழல் பேணி நாளும்
உருகிய அன்பு கூர்ந்த சிந்தையார் ஒழுக்கம் மிக்கார். 5

பாலனும் மறையோன் பற்றப்[5] பயங்கெடுத் தருளும் ஆற்றால்
மாலுநான் முகனும் காணா வடிவுகொண் டெதிரே வந்து
காலனார் உயிர்செற் றார்க்குக் கமழ்ந்தகுங் குலியத் தூபம்
சாலவே நிறைந்து விம்ம இடும்பணி தலைநின் றுள்ளார். 6

---

பா - ம்—[1] மலையின் முத்தம். [2] நெடிய. [3] மாடச்சோலை. [4] மார்பர். [5] பாலநான் மறையோன் போற்ற.

கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுதல் எம்பி ராற்குப்
பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல
அங்கவர் அருளி னலே வறுமைவந் தடைந்த பின்னும்
தங்கள்நா யகர்க்குத் தாம்முன் செய்பணி தவாமை உய்த்தார். 7

இந்நெறி ஒழுகு நாளில் இலம்பாடு நீடு செல்ல
நன்னிலம் முற்றும் விற்றும் நாடிய அடிமை விற்றும்
பன்னெடுந் தனங்கள் மாளப் பயில்மனை வாழ்க்கை தன்னில்
மன்னிய சுற்றத் தோடு மக்களும் வருந்தி ஞர்கள். 8

யாதொன்றும் இல்லை யாகி இருபகல் உணவு மாறிப்
பேதுறும் மைந்த ரோடும் பெருகுசுற் றத்தை நோக்கிக்
காதல்செய் மனைவி யார்தங் கணவனுர் கலய னர்கைக்
கோதில்மங் கலநூல் தாலி கொடுத்து'நெற் கொள்ளும்' என்ருர் 9

அப்பொழு ததனைக் கொண்டு நெற்கொள்வான் அவரும் போக
ஒப்பில்குங் குலியங் கொண்டோர் வணிகனும் எதிர்வந் துற்ருன்;
"இப்பொதி என்கொல்?" என்ருர்க் குள்ள [1]வா றியம்பக் கேட்டு
முப்புரி வெண்ணூல் [2] மார்பர் முகமலர்ந் திதனைச் சொன்னர். 10

"ஆறுசெஞ் சடைமேல் வைத்த அங்கணர் பூசைக் கான [3],
நாறுகுங் குலியம் ஈதேல் [4] நான்இன்று பெற்றேன், நல்ல
பேறுமற் றிதன்மேல் உண்டோ? பெறுப்பேறு பெற்று வைத்து,
வேறினிக் கொள்வ தென்?"என் றுரைத்தெழும் விரும்பின் மிக்கார். 11

"பொன்தரத் தாரும்" என்று புகன்றிட வணிகன் தானும்
"என்தர இசைந்த(து)?" என்னத் தாலியைக் கலயர் ஈந்தார்;
அன்றவன் அதனை வாங்கி அப்பொதி கொடுப்பக் கொண்டு
நின்றிலர் விரைந்து [5] சென்ருர் நிறைந்தெழு களிப்பி னேடும். 12

விடையவர் வீரட் டானம் விரைந்துசென் றெய்தி என்னை
உடையவர் எம்மை[6] யாளும் ஒருவர்தம் பண்டா ரத்தில்

---

பா - ம்—[1] என்ருர் உள்ள. [2] முந்நூல். [3] கேற்ற. [4] ஈதே.
[5] மகிழ்ந்து. [6] நம்மை.

அடைவுற ஒடுக்கி எல்லாம் அயர்த்தெழும் அன்பு பொங்கச்
சடையவர் மலர்த்தாள் போற்றி இருந்தனர் தமக்கொப்பில்லார்

அன்பர்அங் கிருப்ப நம்பர் அருளினால் அளகை வேந்தன்
தன்பெரு நிதியந் தூர்த்துத் தரணிமேல் நெருங்க எங்கும்
பொன்பயில் குவையும் நெல்லும் பொருவில்பல் வளனும் பொங்க
மன்பெருஞ் செல்வம் ஆக்கி வைத்தனன் மனையில் நீட. 14

மற்றவர் மனைவி யாரும் மக்களும் பசியால் வாடி
அற்றைநாள் இரவு தன்னில் அயர்வுறத் துயிலும் போதில்
நற்றவக் கொடிய னார்க்குக் கனவிடை நாதன் நல்கத்
தெற்றென உணர்ந்து செல்வங் கண்டபின் சிந்தை செய்வார் 15

கொம்பனார் இல்லம் எங்கும் குறைவிலா நிறைவிற் காணும்
அம்பொனின் குவையும் நெல்லும் அரிசியும் முதலா யுள்ள
எம்பிரான் அருளாம் என்றே இருகரங் குவித்துப் போற்றித்
தம்பெருங் கணவ னார்க்குத் திருவமு தமைக்கச் சார்ந்தார் 16

காலனைக் காய்ந்த செய்ய காலனார், கலய னாராம்
ஆலும்அன் புடைய சிந்தை அடியவர் அறியும் ஆற்றால்
"சாலநீ பசித்தாய் உன்றன் தடநெடு மனையில் நண்ணிப்
பாலின்இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக" என்றார். 17

கலையனார் அதனைக் கேளாக் கைதொழு திறைஞ்சிக் கங்கை
அலைபுனற் சென்னி யார்தம் அருள்மறுத் திருக்க அஞ்சித்
தலைமிசைப் பணிமேற் கொண்டு சங்கரன் கோயில் நின்று
மலைநிகர் மாட வீதி மருங்குதம் மனையைச் சார்ந்தார். 18

இல்லததிற் சென்று புக்கார் இருநிதிக் குவைகள் ஆர்ந்த
செல்வத்தைக் கண்டு நின்று திருமனை யாரை நோக்கி [என்ன
"வில்லொத்த நுதலாய்! இந்த விளைவெலாம் என்கொல் ?"
"அல்லொத்த கண்டன் எம்மான் அருள்தர வந்த" தென்றார்.

மின்னிடை மடவார் கூற மிக்கசீர்க் கலய னார்தாம்
மன்னிய பெருஞ்செல் வத்து வளமலி சிறப்பை நோக்கி
"என்னையும் ஆளும் தன்மைத் தெந்தை[1] எம் பெருமான் ஈசன்
தன்னருள் இருந்த வண்ணம்" என்றுகை தலைமேற கொண்டார்.

பா - ம்—[1] தன்மைக் கெந்தை.

பதுமநற் றிருவின் மிக்கார் பரிகலந் திருத்திக் கொண்டு
கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும்
விதிமுறை தீபம் ஏந்தி மேவும்இன் அடிசில் ஊட்ட
அதுநுகர்ந் தின்பம் ஆர்ந்தார் அருமறைக் கலய னார்தாம். 21

ஊர்தொறும் பலிகொண் டுய்க்கும் ஒருவன தருளி னாலே
பாரினில் ஆர்ந்த செல்வம் உடையராம் பண்பில் நீடிச்
சீருடை அடிசில் நல்ல செழுங்கறி தயிர்நெய் பாலால்
ஆர்தரு காதல் கூர அடியவர்க் குதவும் நாளில். 22

செங்கண்வெள் ளேற்றின் பாகன் திருப்பனந் தாளில் மேவும்
அங்கணன் செம்மை கண்டு கும்பிட அரசன் ஆர்வம்
பொங்கித்தன் வேழம் எல்லாம் பூட்டவும் நேர்நில் லாமைக்
கங்குலும் பகலும் தீராக் கவலையுற் றழுங்கிச் செல்ல. 23

மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தாம் நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின் றன்னென் றரசனை விரும்பித் தாமும்
மின்னெறித் தனைய வேணி விகிர்தனை வணங்க வந்தார். 24

மழுவுடைச் செய்ய கையர் கோயில்கள் மருங்கு சென்று
தொழுதுபோந் தன்பி னோடுந் தொன்மறை நெறிவ ழாமை
முழுதுல கினையும் போற்ற மூன்றெரி புரபபோர் வாழும்
செழுமலர்ச் சோலை வேலித் திருப்பந் தாளிற் சேர்ந்தார். 25

காதலால் அரசன் உற்ற வருத்தமுங் களிற்றி னோடும்
தீதிலாச் சேனை [1] செய்யுந் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே எய்த்து வீழ்ந்திளைப் பதுவும் நோக்கி
மாதவக் கலயர் தாமும் மனத்தினில் வருத்தம் எய்தி. 26

சேனையும் ஆனை பூண்ட திரளும்எய்த் தெழாமை நோக்கி
"யானும்இவ் விளைப்புற் றெய்க்கும் இதுபெற வேண்டும்" என்று
தேனலர் கொன்றை யார்தந் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினல் வருந்த லுற்றார். 27

---

பா - ம்—[1] தீதில்வன் சேவை.

நண்ணிய ஒருமை அன்பின் நாருறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி இழுத்தபின் திறம்பி நிற்க
ஒண்ணுமோ? கலய னார்தம் ஒருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றார்; அமரரும் விசும்பில் ஆர்த்தார். 28

பார்மிசை நெருங்க எங்கும் பரப்பினர் பயில்பூ மாரி,
தேர்மலி தானை மன்னன் சேனையும் களிறும் எல்லாம்
கார்பெறு கானம் போலக் களித்தன ; கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன் தொண்டர் மலரடி தலைமேல் வைத்து. 29

"விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரில் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர் ;
மண்பகிர்ந் தவனுங் [1] காணா மலரடி இரண்டும் யாரே
பண்புடை அடியார் அல்லால பரிந்துநேர் காண வல்லார்?" 30

என்றுமெய்த் தொண்டர் தம்மை ஏத்தியங் கெம்பி ரானுக்(கு)
ஒன்றிய பணிகள் மற்றும் உள்ளன பலவுஞ் செய்து
நின்றவெண் கவிகை மன்னன் நீங்கவும் நிகரில் அன்பர்
மன்றிடை ஆடல் செய்யும் மலர்க்கழல் வாழ்த்தி வைகி. 31

சிலபகல் கழிந்த பின்பு திருக்கட வூரில் நண்ணி
நிலவுதம் பணியில் தங்கி நிகழுநாள் நிகரில் காழித்
தலைவராம் பிள்ளை யாருந தாண்டகச் சதுர ராகும்
அலர்புகழ் அரசுங் கூட அங்கெழுந் தருளக் கண்டு. 32

மாறிலா மகிழ்ச்சி பொங்க எதிர்கொண்டு மனையில் எய்தி
ஈறிலா அன்பின் மிக்கார்க கின்னமு தேற்கும் [2] ஆற்றால்
ஆறுநற் சுவைகள் ஓங்க அமைத்தவர் அருளே அன்றி
நாறுபூங் கொன்றை வேணி நம்பர்தம் அருளும் பெற்றார். 33

கருப்புவில் லோனைக் கூற்றைக் காய்ந்தவர் கடவூர் மன்னி
விருப்புறும் அன்பு மேன்மேல் மிக்கெழும் வேட்கை கூர
ஒருப்படும் உள்ளத் தன்மை உண்மையால் தமக்கு நேர்ந்த
திருப்பணி பலவுஞ் செய்து சிவபத நிழலிற் சேர்ந்தார். 34

பா - ம—[1] மண்புகுந்தவனும். [2] கின்னமுதொக்கும்.

தேனக்க கோதை மாதர் திருநெடுந் தாலி மாறிக்
கூனற்றண் பிறையி னார்க்குக் குங்குலி யங்கொண் டுய்த்த
பான்மைத்திண் கலய னாரைப் பணிந்(து)அவர் அருளி னாலே
மானக்கஞ் சாறர் மிக்க வண்புகழ் வழுத்த லுற்றேன். 35

## 12. மானக்கஞ்சாற நாயனார் புராணம்

மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது
நூலாறு நன்குணர்வார்[1] ஆம்பாடும் நோன்மையது
கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகும்
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர். 1

கண்ணீலக் கடைசியர்கள் கடுங்களையிற் பிழைத்தொதுங்கி
உண்ணீர்மைப் புணர்ச்சிக்கண் உறைத்துமலர்க் கண்சிவக்கும்
தண்ணீர்மென் கழுநீர்க்குத் தடஞ்சாலி தலைவணங்கும்
மண்ணீர்மை நலஞ்சிறந்த வளவயல்கள் உளஅயல்கள். 2

புயல்காட்டுங் கூந்தல்சிறு புறங்காட்டப் புனமயிலின்
இயல்காட்டி இடைஒதுங்க இனங்காட்டும் உழத்தியர்கண்
முயல்காட்டும மதிதோற்கும் முகங்காட்டக் கண்மூரிக்
கயல்காட்டுந் தடங்கள்பல கதிர்காட்டுந் தடம்பணைகள். 3

சேறணிதண் பழனவயல் செழுநெல்லின் கொழுங்கதிர்போய்
வேறருகு மிடைவேலிப் பைங்கமுகின் மிடறுரிஞ்சி
மாறெழுதிண் குலைவளைப்ப வண்டலைதண் டலையுழவர்
தாறரியும் நெடுங்கொடுவாள் அணையவுள தனிஇடங்கள். 4

பாங்குமணிப்[2] பலவெயிலும் சுலவெயிலும் உளமாடம்;
ஞாங்கரணி துகிற்கொடியும் நகிற்கொடியும் உளஅரங்கம்;
ஓங்குநிலைத்[3] தோரணமும் பூரணகும் பமும்உளவால்
பூங்கணைவீ தியிலஅணைவோர் புலமறுகுஞ் சிலமறுகு. 5

---

பா - ம்—[1] நன்குணர்வோர். [2] பாங்கின்மணிப். [3] ஓங்குமணித்.

மனைசாலும் நிலையறத்தின் வழிவந்த[1] வளம்பெருகும்
வினைசாலும் உழவுதொழில் மிக்கபெருங் குடி துவன்றிப்
புனைசாயல் மயிலனையார் நடம்புரியப் புகல்முழவம்[2]
கனைசாறு மிடைவீதிக் கஞ்சாறு விளங்கியதால். 6

அப்பதியில் குலப்பதியாய் அரசர்சே னாபதியாம்
செப்பவருங் குடிவிளங்கத் திருஅவதா ரஞ்செய்தார்
மெய்ப்பொருளே அறிந்துணர்ந்தார் விழுமியவே ளாண்குடிமை
வைப்பனைய மேன்மையினார் மானக்கஞ் சாறனார். 7

பணிவுடைய வடிவுடையார், பணியினொடும் பனிமதியின்
அணிவுடைய சடைமுடியார்க் காளாகும் பதம்பெற்ற
தணிவில்பெரும் பேறுடையார்; தம்பெருமான் கழல்சார்ந்த
துணிவுடைய தொண்டர்க்கே ஏவல்செயுந் தொழில்பூண்டார். 8

மாறில்பெருஞ் செல்வத்தின்[3] வளம்பெருக மற்றதெலாம்
ஆறுலவுஞ் சடைக்கற்றை அந்தணர்தம்[4] அடியாராம்
ஈறில்பெருந் திருவுடையார் உடையாரென் றியாவையுநேர்
கூறுவதன் முன்அவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்ளார். 9

விரிகடல்சூழ் மண்ணுலகை[5] விளக்கியஇத் தன்மையராம்
பெரியவர்க்கு முன்சிலநாட் பிள்ளைப்பே றின்மையினால்
அரியறியா மலர்க்கழல்கள் அறியாமை அறியாதார
வருமகவு பெறற்பொருட்டு மனத்தருளால் வழுத்தினார் 10

குழைக்கலையும வடிகாதில் கூத்தனார் அருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்
இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த இபபிறவிக் கொடுஞ்சூழல்
பிழைக்குநெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்.

பிறந்தபெரு மகிழ்ச்சியினால் பெருமூதூர் களிசிறப்பச்
சிறந்தநிறை மங்கலதூ ரியம்முழங்கத் தேவர்பிரான்
அறந்தலைநின் றவர்க்கெல்லாம் அளவில்வளத் தருள்பெருக்கிப்
புறந்தருவார் போற்றிசைப்பப்[6] பொற்கொடியை வளர்க்கின்றார்.

---

பா - ம்—[1] வழிவந்து. [2] புனைமுழவம். [3] செல்வத்து. [4] அங்கணர் தம். [5] மண்ணுலகில். [6] புறந்தருவார் பலர்போற்ற.

காப்பணியும் இளங்குழவிப் பதநீங்கிக் கமழ்சுரும்பின்
பூப்பயிலுஞ் சுருட்குழலும் பொலங்குழையும் உடன்தாழ
யாப்புறுமென் சிறுமணிமே கலையணிசிற் றுடையுடன்
கோப்பமைகிண் கிணியசையக் குறுந்தளிர்மெல் லடியொதுங்கி

புனைமலர்மென் கரங்களினால் போற்றியதா தியர்நடுவண்
மனையகத்து மணிமுன்றில் மணற்சிற்றில் இழைத்துமணிக்
கனைகுரல்நூ புரம்அலையக் கழன்முதலாப் பயின்றுமுலை
நனைமுகஞ்செய் முதற்பருவம் நண்ணினள்அப் பெண்அமுதம். 14

உறுகவின்மெய்ப் புறம்பொலிய ஒளிநுசுப்பை முலைவருத்த,
முறுவல்புற மலராத[1] முகிண்முத்த நகையென்னும், நறுமுகை
மென் கொடிமருங்குல் நளிர்ச்சுருள்அந்[2] தளிர்ச்செங்கை, மறு
வில்குலக் கொழுந்தினுக்கு மணப்பருவம் வந்தணைய. 15

திருமகட்கு மேலவிளங்கும் செம்மணியின் தீபம்எனும்
ஒருமகளை மண்ணுலகில்[3] ஓங்குகுல மரபினராய்க்
கருமிடற்று மறையவனூர் தமராய கழல்ஏயர்
பெருமகற்கு மகட்பேச[4] வந்தணைந்தார் பெருமுதியோர் 16

வந்தமூ தறிவோரை மானக்கஞ் சாறனார்
முந்தைமுறை மையின்விரும்பி மொழிந்தமணத் திறங்கேட்டே
" எந்தமது மரபினுக்குத் தரும்பரிசால் ஏயும் "எனச்
சிந்தைமகிழ் வுறவுரைத்து மணநேர்ந்து செலவிட்டார். 17

சென்றவருங் கஞ்சாறர் மணம்இசைந்த படிசெப்பக்
குன்றனைய புயத்தேயர் கோனாரும் மிகவிரும்பி
நின்றநிலை மையின்இரண்டு திறத்தார்க்கும் நேர்வாய[5]
மன்றல்வினை மங்கலநாள் மதிநூல்வல் லவர்வகுத்தார். 18

மங்கலமாஞ் செயலவிரும்பி மகட்பயந்த வள்ளலார்
தங்குலநீள் சுற்றமெலாந் தயங்குபெருங் களிசிறப்பப்
பொங்கியவெண் முளைப்பெய்துபொலங்கலங்க ளிடைநெருங்கக்
கொங்கலர்தண் பொழில்மூதூர் வதுவைமுகங் கோடித்தார். 19

---

பா - ம்—[1] மகலாத. [2] சுருளும். [3] மன்னுலகில். [4] பேசி. [5] நேராய.

கஞ்சாறர் மகட்கொடுப்பக் கைப்பிடிக்க வருகின்ற
எஞ்சாத புகழ்ப்பெருமை ஏயர்குலப் பெருமானும்
தஞ்சால்பு நிறைசுற்றம் தலைநிறைய முரசியம்ப
மஞ்சாலும் மலர்ச்சோலைக் கஞ்சாற்றின் மருங்கணைய. 20

வள்ளலார் மணம்அவ்வூர் மருங்கணையா முன்மலர்க்கண்
ஒள்ளிழையைப் பயந்தார்தந் திருமனையில் ஒருவழியே
தெள்ளுதிரை நீநலகம் உய்வதற்கு மற்றவர்தம்
உள்ளநிலைப் பொருளாய உம்பர்பிரான் தாம்அணைவார். 21

முண்டநிறை நெறறியின்மேல் முண்டித்த திருமுடியில்
கொண்டசிகை முச்சியின்கண் [1] கோத்தணிந்த எற்புமணி
பண்டொருவன் உடல்அங்கம் பரித்தநாள் அதுகடைந்த
வெண்டரளம் எனக்காதின் மிசைஅசையுங் குண்டலமும். 22

அவ்வென்பின் ஒளிமணிகோத் தணிந்ததிருத் தாழ்வடமும்
பைவன்பேர் [2] அரவொழியத் தோளில்இடும் பட்டிகையும்
மைவந்த நிறக்கேச வடப்பூணு நூலும் [3] மனச்
செவ்வன்பர் பவமாற்றுந் திருநீற்றுப் பொக்கணமும். 23

ஒருமுன்கைத் தனிமணிகோத் தணிந்தஒளிர் சூத்திரமும்
அருமறைநூற் கோவணத்தின் மிசைஅசையுந் [4] திருவுடையும் [5]
இருநிலத்தின் மிசைதோய்ந்த எழுதரிய திருவடியும்
திருவடியில் [6] திருப்பஞ்ச முத்திரையும் திகழ்ந்திலங்க. 24

பொடிமூடு தழல்எனனத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்க்
கொடிநீடு மறுகணைந்து தம்முடைய குளிர்கமலத்
தடிநீடும் மனத்தன்பர் தம்மனையின் அகம்புகுந்தார். 25

வந்தணைந்த மாவிரத முனிவரைக்கண் டெதிரெழுந்து
சிந்தைகளி கூர்ந்துமகிழ் சிறந்தபெருந் தொண்டனார்
"எந்தைபிரான் புரிதவத்தோர் இவ்விடத்தே எழுந்தருள [தார்.
உய்ந்தொழிந்தேன் அடியேன்" என் றுருகிய அன்பொடுபணிந்

---

பா - ம் — [1] சிகை சிகையின்கண் ; சிகை சிகழியின்கண். [2] பை வளர்பேர். [3] பூணநூலும். [4] அசைந்த. [5] திருவுடை. [6] திருவடிவில்.

நற்றவராம் பெருமானுர் நலமிகும்அன் பரைநோக்கி
"உற்றசெயல் மங்கலம்இங் கொழுகுவதென்" என "அடியேன்
பெற்றதொரு பெண்கொடிதன் வதுவை" எனப் பெருந்தவரும்
"மற்றுமக்குச் சோபனம்ஆ குவ"தென்று வாய்மொழிந்தார். 27

ஞானச்செய் தவரடிமேற் பணிந்துமனை யகம்நண்ணி
மானக்கஞ் சாறனுர் மணக்கோலம் புனைந்திருந்த
தேனக்க மலர்க்கூந்தல் திருமகளைக் கொண்டணைந்து
பானற்கந் தரமறைத்து வருமவரைப் பணிவித்தார். 28

தஞ்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன், மஞ்சுதழைத் தெனவளர்ந்த[1] மலர்க்கூந்தல் புறம்நோக்கி, அஞ்சலிமெய்த் தொண்டரைப்பார்த் "தணங்கிவள்தன் மயிர்நமக்குப், பஞ்சவடிக் காம்" என்ருர் பரவஅடித் தலங்கொடுப்பார். 29

அருள்செய்த மொழிகேளா அடற்சுரிகை தனைஉருவிப், "பொருள்செய்தாம் எனப்பெற்றேன்" எனக்கொண்டு பூங்கொடிதன், இருள்செய்த கருங்கூந்தல் அடியில்அரிந் தெதிர்நின்ற, மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட. 30

வாங்குவார் போல்நின்ற மறைப்பொருளாம் அவர்மறைந்து
பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடையேறி
ஓங்கியவிண் மிசைவந்தார்; ஒளிவிசும்பின்[2] நிலன்நெருங்கத்[3]
தூங்கியபொன் மலர்மாரி, தொழும்பர்தொழு தெதிர்விழுந்தார்

விழுந்தெழுந்து மெய்ம்மறந்த மெய்யன்பர் தமக்குமதிக்
கொழுந்தலைய விழுங்கங்கை குதித்தசடைக் கூத்தனுர்
"எழும்பரிவு நம்பக்கல் உனக்கிருந்த பரிசிந்தச்
செழும்புவனங் களில்ஏறச் செய்தோம்"என் றருள்செய்தார். 32

மருங்குபெருங் கணநாதர் போற்றிசைப்ப வானவர்கள்
நெருங்கவிடை மேற்கொண்டு நின்றவர்முன் நின்றவர்தாம்
ஒருங்கியநெஞ் சொடுகரங்கள் உச்சியின்மேற் குவித்தையர்
பெருங்கருணைத் திறம்போற்றும் பெரும்பேறு நேர்பெற்ருர். 33

---

பா - ம்—[1] அலர்ந்த. [2] விசும்பு. [3] நிலம்நெருங்கத்.

தொண்டனார் தமக்கருளிச் சூழ்ந்திமையோர் துதிசெய்ய
இண்டைவார் சடைமுடியார் எழுந்தருளிப் போயினார்
வண்டுவார் குழற்கொடியைக் கைப்பிடிக்க[1] மணக்கோலங்
கண்டவர்கள் கண்களிப்பக் கலிக்காம னார்புகுந்தார். 34

வந்தணைந்த ஏயர்குல மன்னவனார் மற்றந்தச்
சிந்தைநினை வரியசெயல் செறிந்தவர்பால் கேட்டருளிப்
புந்தியினில்[2] மிகஉவந்து புனிதனார் அருள்போற்றிச்
சிந்தைதளர்ந் தருள்செய்த திருவாக்கின் திறங்கேட்டு. 35

மனந்தளரும் இடர்நீங்கி வானவர்நா யகர்அருளால்
புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து
தனம்பொழிந்து[3] பெருவதுவை உலகெலாந் தலைசிறப்ப
இனம்பெருகத் தம்முடைய எயின்மூதூர் சென்றணைந்தார். 36

ஒருமகள் கூந்தல் தன்னை வதுவைநாள் ஒருவர்க் கீந்த
பெருமையார் தன்மை[4] போற்றும் பெருமைஎன் அளவிற் றாமே?
மருவிய கமரிற் புக்க மாவடு விடேல்! என் னோசை
உரிமையால் கேட்க வல்லார் திறம்இனி உரைக்க லுற்றேன். 37

---

## 13. அரிவாட்டாய நாயனார் புராணம்

---

வரும்பு னற்பொன்னி நாட்டொரு வாழ்பதி
சுரும்பு வண்டொடு சூழ்ந்து முரன்றிட
விரும்பு மென்க ணுடையவாய் விட்டுநீள்
கரும்பு தேன்பொழி யுங்கண மங்கலம். 1

செந்நெல் லார்வயல் கட்டசெந் தாமரை
முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திடத்
துன்னு மள்ளர்கைம் மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார். 2

---

பா - ம்—[1] கைப்பிடிக்கும். [2] புந்தியினன். [3] பொழிந்த.
[4] தம்மை.

வளத்தில் நீடும் பதியதன் கண்வரி
உளர்த்தும் ஐம்பால் உடையோர் முகத்தினும்
களத்தின் மீதும் கயல்பாய் வயலயல்
குளத்தும் நீளுங் குழையுடை[1] நீலங்கள். 3

அக்கு லப்பதி தன்னில் அறநெறித்
தக்க யாமனை வாழ்க்கையில் தங்கினார்
தொக்க மாநிதித் தொன்மையில் ஓங்கிய
மிக்க செல்வத்து வேளாண தலைமையார். 4

தாய னாரெனும் நாமம் தரித்துளார்,
சேய காலந் தொடர்ந்துந் தெளிவிலா
மாய னார்மன் னிளைத்தறி யாதஅத்
தூய நாண்மலர்ப் பாதந் தொடர்ந்துளார். 5

மின்னு செஞ்சடை வேதியர்க் காமென்று
செந்நெல இன்னமு தோடுசெங் கீரையும்
மன்னு பைந்துணர் மாவடு வுங்கொணர்ந்
தன்ன என்றும் அமுதுசெய் விப்பரால். 6

இந்த நன்னிலை இன்னல்வந் தெய்தினும்
சிந்தை நீங்காச் செயலின் உவந்திட
முந்தை வேத முதல்வர் அவர்வழி
வந்த செல்வம் அறியாமை மாற்றினார். 7

மேவு செல்வம் களிறுண் விளங்கனி
ஆவ தாகி அழியவும் அன்பினால்
பாவை பங்கர்க்கு[2] முன்பு பயின்றஅத்
தாவில்[3] செய்கை தவிர்ந்திலர் தாயனார். 8

அல்லல் நல்குர வாயிடக் கூலிக்கு
நெல்அ றுத்துமெய்ந் நீடிய அன்பினால்
நல்ல செந்நெலிற் பெற்றன நாயனார்க்(கு)
ஒல்லை இன்னமு தாக்கொண் டொழுகுவார். 9

---

பா - ம்—[1] நீடும் குழையடை. [2] பாகர்க்கு. [3] இத்-தாவில்.

சாலி தேடி[1] அறுத்தவை தாம்பெறும்
கூலி எல்லாந் திருஅமு தாக்கொண்டு
நீல நெல்லரி கூலிகொண் டுண்ணுநாள்
மால யற்கரி யாரது மாற்றுவார். 10

நண்ணிய வயல்கள் எல்லாம் நாடொறும் முன்னங் காண
வண்ணவார் கதிர்ச்செஞ் சாலி ஆக்கிட மகிழ்ந்து சிந்தை
அண்ணலார் அறுத்த கூலி கொண்(டு)"இஃ தடியேன் செய்த
புண்ணியம்" என்று போத அமுதுசெய் விப்பார் ஆனார். 11

வைகலும் உணவி லாமை மனைப்படப் பையினிற் புக்கு
நைகரம்[2] இல்லா அன்பின் நங்கைகை அடகு[3] கொய்து
பெய்கலத் தமைத்து வைக்கப் பெருந்தகை அருந்தித் தங்கள்
செய்கடன் முட்டா வண்ணந் திருப்பணி செய்யும் நாளில்.[4] 12

மனைமருங் கடகு மாள வடநெடு வான மீனே
அனையவர் தண்ணீர் வார்க்க அமுதுசெய் தன்ப னாரும்
வினைசெயல் முடித்துச் செல்ல மேவுநாள் ஒருநாள் மிக்க
முனைவனார் தொண்டர்க் கங்கு நிகழ்ந்தது மொழியப் பெற்றேன்.

முன்புபோல் முதல்வ னாரை அமுதுசெய் விகக மூளும்
அன்புபோல் தூய செங்நெல் அரிசிமா வடுமென் கீரை
துன்புபோம் மனத்துத தொண்டர் கூடையிற் சுமந்து போகப்[5]
பின்புபோம் மனைவி யார்ஆன் பெற்றஅஞ் சேந்திர சென்றார்.14

போதரா நின்ற போது புலர்ந்துகால் தளர்ந்து தப்பி
மாதரார் வருந்தி வீழ்வார் மட்கல மூடு கையால்
காதலால் அணைத்தும் எல்லாங் கமரிடைச் சிந்தக் கண்டு
பூதநா யகர்தந் தொண்டர் "போவதங் கினியேன்" என்று.[6] 15

நல்லசெங் கீரை தூய மாவடு அரிசி சிந்த
"அல்லல்தீர்த் தாள வல்லார் அமுதுசெய் தருளும் அப்பே(று)

---

பா - ம்—[1] நேடி. [2] நைகுறல். [3] நங்கை மற்றடகு; நங்கையா ரடகு. [4] செலுத்து நாளில். [5] போதப்; செல்லப். [6] கினியேன் ன்று.

எல்லையில் தீமை யேன்இங் கெய்திடப் பெற்றி லேன்''என்(று)
ஒல்லையில் அரிவாள் பூட்டி ஊட்டியை அரிய லுற்றார். 16

''ஆட்கொள்ளும்[1] ஐயா தாமிங் கமுதுசெய் திலர்கொல்''
என்னாப், பூட்டிய அரிவாள் பற்றிப் புரையற விரவும் அன்பு,
காட்டிய நெறியின் உள்ளந் தண்டறக் கழுத்தி னோடே, ஊட்டி
யும் அரியா நின்றார் உறுபிறப் பரிவார் ஒத்தார். 17

மாசறு சிந்தை அன்பர் கழுத்தரி அரிவாள் பற்றும்
ஆசில்வண் கையை மாறற அம்பலத் தாடும் ஐயர்
வீசிய செய்ய கையும் மாவடு ''விடேல் விடே''லென்
னோசையும்[2] கமரில் நின்றும் ஒக்கவே எழுந்த அன்றே.[3] 18

திருக்கைசென் றரிவாள் பற்றும் திண்கையைப் பிடித்த போது
வெருக்கொடங் கூறு நீங்க வெவ்வினை விட்டு நீங்கிப்
பெருக்கவே மகிழ்ச்சி நீடத் தம்பிரான் பேணித் தந்த
அருட்பெருங் கருணை நோக்கி அஞ்சலி கூப்பி நின்று. 19

''அடியனேன் அறிவி லாமை கண்டும்என் அடிமை வேண்டிப்
படிமிசைக் கமரில் வந்திங் கமுதுசெய் பரனே போற்றி !
துடியிடை பாக மான தூயநற சோதி போற்றி !
பொடியணி பவள மேனிப் புரிசடைப் புராண போற்றி !'' 20

என்றவர் போற்றி செய்ய இடபவா கனராய்த்[4] தோன்றி
''நன்றுநீ புரிந்த செய்கை; நன்னுத லுடனே கூட
என்றுநம்[5] உலகில் வாழ்வாய்'' என்றவர் உடனே நண்ண
மன்றுளே ஆடும் ஐயர் மழவிடை உகைத்துச் சென்றார். 21

பரிவுறு சிந்தை அன்பர் பரம்பொரு ளாகி யுள்ள
பெரியவர் அமுது செய்யப் பெற்றிலேன் என்று மாவின்
வரிவடு விடேலெ னாமுன் வன்கழுத் தரிவாள் பூட்டி
அரிதலால் '' அரிவாட் டாயர் '' ஆயினார் தூய நாமம். 22

முன்னிலை கமரே யாக முதல்வனார் அமுது செய்யச்
செங்நெலின் அரிசி சிந்தச் செவியுற வடுவின் ஓசை

---

பா - ம்—[1] ஆட்கொள்ளும். [2] ளோசையும். [3] எழுந்ததன்றே.
[4] இடபவா கனனாய்த். [5] ஒன்றிநம்.

அந்நிலை கேட்ட தொண்டர் அடியிணை தொழுது வாழ்த்தி
மன்னும்ஆ னாயர் செய்கை அறிந்தவா வழுத்த லுற்றேன். 23

# 14. ஆனாய நாயனார் புராணம்

மாடு விரைப்பொலி சோலையின் வான்மதி வந்தேறச்
சூடு பரப்பிய பண்ணை வரம்பு சுரும்பேற
ஈடு பெருக்கிய போர்களின் மேகம் இளைத்தேற
நீடு வளத்தது மேன்மழ நாடெனும் நீர்நாடு. 1

நீவி நிதம்ப உழத்தியர் நெய்க்குழல் மைச்சூழல்
மேவி உறங்குவ மென்சிறை வண்டு; விரைக்கஞ்சப்
பூவில் உறங்குவ நீள்கயல்; பூமலி தேமாவின்
காவின் நறுங்குளிர் நீழல் உறங்குவ கார்மேதி. 2

வன்னிலை மள்ளர் உகைப்ப எழுந்த மரக்கோவை [1]
பன்முறை வந்தெழும் ஓசை பயின்ற முழக்கத்தால்
அன்னம் மருங்குறை தண்டுறை வாவி அதன்பாலைக்
கன்னல் அடும்புகை யால்முகில் செய்வ கருப்பாலை. 3

பொங்கிய மாநதி நீடலை உந்து புனற்சங்கம்
துங்க இலைக்கத லிப்புதல் மீது தொடக்கிப்போய்த்
தங்கிய பாசடை சூழ்கொடி யூடு தவழ்ந்தேறிப்
பைங்கமு கின்தலை முத்தம் உதிர்க்குவ [2] பாளையென. 4

அல்லி மலர்ப்பழ னத்தயல் நாகிள ஆன்ஈனும்
ஒல்லை முழுப்பை உகைப்பின் உழக்கு குழக்கன்று
கொல்லை மடக்குல [3] மான்மறி யோடு குதித்தோடும்
மல்கு வளத்தது முல்லை யுடுத்த மருங்கோர்பால். 5

கண்மலர் காவிகள் பாய இருப்பன கார்முல்லைத்
தண்ணகை வெண்முகை மேவு சுரும்பு; தடஞ்சாலிப்
பண்ணை எழுங்கயல் பாய இருப்பன காயாவின்
வண்ண நறுஞ்சினை மேவிய வன்சிறை [4] வண்டானம். 6

பா - ம்—[1] மரககோவைப். [2] உகுப்பன. [3] மடக்குறு. [4] அஞ்சிறை.

பொங்கரில் வண்டு புறம்பலை சோலைகள் மேலோடும்
வெங்கதிர் தங்க விளங்கிய மேன்மழ நன்னாடாம்
அங்கது மண்ணின் அருங்கல மாக அதற்கேயோர்
மங்கல மானது மங்கல மாகிய வாழ்மூதூர். 7

ஒப்பில் பெருங்குடி நீடிய தன்மையில் ஓவாமே
தப்பில் வளங்கள் பெருக்கி அறம்புரி சால்போடும்
செப்ப உயர்ந்த சிறப்பின் மலிந்தது சீர்மேவும்
அப்பதி மன்னிய ஆயர் குலத்தவர் ஆனாயர். 8

ஆயர் குலத்தை விளக்கிட வந்துத யஞ்செய்தார்;
தூய சுடர்த்திரு நீறு விரும்பு தொழும்புள்ளார்;
வாயினின் மெய்யின் வழுத்து மனத்தின் வினைப்பாலிற்
பேயுட னாடு பிரானடி அல்லது பேணாதார். 9

ஆனிரை கூட அகன்புற விற்கொடு சென்றேறிக்
கானுறை தீய விலங்குறு நோய்கள் கடிந்தெங்கும்
தூநறு[1] மென்புல் அருந்தி விரும்பிய தூநீருண்(டு)
ஊனமில் ஆயம் உலப்பில பல்க அளித்துள்ளார். 10

கன்றொடு பால்மறை நாகு கறப்பன பாலாவும்
புன்றலை மென்சினை ஆனொடு நீடு புனிற்றாவும்
வென்றி விடைக்குல மோடும் இனந்தொறும் வெவ்வேறே
துன்றி நிறைந்துள சூழ லுடன்பல தோழங்கள். 11

ஆவின் நிரைக்குலம் அப்படி பல்க அளித்தென்றும்
கோவலர் ஏவல் புரிந்திட ஆயர் குலம்பேணும்
காவலர் தம்பெரு மானடி அன்புறு கானத்தின்
மேவு துளைக்கரு விக்குழல் வாசனை மேற்கொண்டார். 12

முந்தைமறை நான்மரபின் மொழிந்தமுறை எழுந்தவேய்
அந்தமுதல் நாலிரண்டில் அரிந்துநரம் புறுதானம்
வந்ததுளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
அந்தமில்சீர் இடையீட்டின் அங்குலிஎண் களின்[2] அமைத்து. 13

பா - ம்—[1] தூநிறை. [2] களில்.

எடுத்தகுழற் கருவியினில் எம்பிரான் எழுத்தஞ்சும்[1]
தொடுத்தமுறை ஏழிசையின் சுருதிபெற வாசித்துத்
தடுத்தசரா சரங்களெலாந் தங்கவருந் தங்கருணை
அடுத்தஇசை அமுதளித்துச் செல்கின்றார் அங்கொருநாள். 14

வாசமலர்ப் பிணைபொங்க மயிர்நுழுதி மருங்குயர்ந்த
தேசுடைய சிகழிகையிற் செறிகண்ணித் தொடைசெருகிப்
பாசிலைமென் கொடியின்வடம் பயிலநறு விலிபுனைந்து
காசுடைநாண்[2] அதற்கயலே கருஞ்சுருளின் புறங்கட்டி. 15

வெண்கோடல் இலைச்சுருளிற் பைந்தோட்டு விரைத்தோன்றித்
தண்கோல மலர்புனைந்த வடிகாதின் ஒளிதயங்கத்
திண்கோல நெற்றியின்மேல் திருநீற்றின் ஒளிகண்டோர்
கண்கோடல் நிறைந்தாராக் கவின்விளங்க மிசையணிந்து. 16

நிறைந்தநீ றணிமார்பின் நிரைமுல்லை முகைசுருக்கிச்
செறிந்தபுனை வடந்தாழத் திரள்தோளின் புடைஅலங்கல்
அறைந்தசுரும் பிசைஅரும்ப அரையுடுத்த மரவுரியின்
புறந்தழையின் மலிதானைப் பூம்பட்டுப பொலிந்தசைய. 17

சேவடியில் தொடுதோலும் செங்கையினில் வெண்கோலும்
மேவும்இசை வேய்ங்குழலும் மிகவிளங்க வினைசெய்யும்
காவல்புரி வல்லாயர் கன்றுடைஆன் நிரைசூழப்
பூவலர்தார்க் கோவலனார் நிரைகாக்கப் புறம்போந்தார். 18

நீலமா மஞ்ஞை ஏங்க நிரைக்கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லை கோபம[3]வாய் முறுவல் காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப் பயோதரம் அசைய வந்தாள்
ஞாலநீ டரங்கி லாடக் காரெனும் பருவ நல்லாள். 19

எம்மருங்கு நிரைபரப்ப எடுத்தகோ லுடைப்பொதுவர்
தம்மருங்கு தொழுதணையத் தண்புறவில் வருந்தலைவர்
அம்மருங்கு தாழ்ந்தசினை அலர்மருங்கு மதுவுண்டு
செம்மருந்தண் சுரும்புசுழல் செழுங்கொன்றை மருங்கணைந்தார்.

பா - ம்—[1] எழுத்தைந்தும். [2] காசறுநாண். [3] முல்லைக்கோபம்.

சென்றணைந்த ஆனாயர் செய்தவிரைத் தாமமென
மன்றல்மலர்த் துணர்தூக்கி மருங்குதாழ் சடையார்போல்
நின்றநறுங் [1] கொன்றையினை நேர்நோக்கி நின்றுருகி
ஒன்றியசிந் தையில்அன்பை உடையவர்பால் மடைதிறந்தார்.

அன்பூறி மிசைப்பொங்கும் [2] அமுதஇசைக் குழலொலியால்
வன்பூதப் படையாளி எழுத்தைந்தும் வழுத்தித்தாம்
முன்பூதி வருமளவின் முறைமையே எவ்வுயிரும்
என்பூடு கரைந்துருக்கும் இன்னிசைவேய்ங் கருவிகளில். 22

எழுவிர லிடையிட்ட இன்னிசைவங் கியம்எடுத்துத்
தாழுமலர் வரிவண்டு தாதுபிடிப் பன [3] போலச்
சூழுமுரன் றெழநின்று தூயபெருந் தனித்துளையில்
வாழியநந் தோன்றலார் மணிஅதரம் வைத்தூத. 23

முத்திரையே முதலனைத்தும் முறைத்தானஞ் சோதித்து
வைத்ததுளை ஆராய்ச்சி வக்கரனை [4] வழிபோக்கி
ஒத்தநிலை உணர்ந்ததற்பின் ஒன்றுமுதல் படிமுறையாம் [5]
அத்தகைமை ஆரோசை அமரோசை களின்அமைத்தார் [6]. 24

மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி
ஏறியதா ரமும்உழையும் கிழமைகொள இடுந்தானம்
ஆறுலவுஞ் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசைபெருகக்
கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினில்நிறுத்தி. 25

ஆயஇசைப் புகல்நான்கின் அமைந்தபுகல் வகையெடுத்து
மேயதுளை பற்றுவன விடுப்பனவாம் விரல்நிரையிற்
சேயவொளி யிடையலையத் திருவாளன் எழுத்தஞ்சுந்
தூயஇசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார். 26

மந்தரத்தும் மத்திமத்தும் தாரத்தும் வரன்முறையால்
தந்திரிகள் மெலிவித்தும் சமங்கொண்டும் வலிவித்தும்
அந்தரத்து விரற்றொழில்கள் அளவுபெற அசைத்தியக்கிச்
சுந்தரச்செங் கனிவாயும் துளைவாயும் தொடக்குண்ண. 27

---

பா - ம் — [1] நின்றதொரு. [2] மிசைபொங்கும். [3] தாவிப் பிடிப்பன. [4] வக்காவண. [5] படிமுறையால். [6] அமைத்து.

எண்ணியநூற் பெருவண்ணம் இடைவண்ணம் வனப்பென்னும்
வண்ணஇசை வகையெல்லாம் மாதுரிய நாதத்தில்
நண்ணியபா ணியும்இயலும் தூக்குநடை முதற்கதியில்
பண்ணமைய எழும்ஓசை எம்மருங்கும் பரப்பினார். 28

வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறைஅஞ் செழுத்தாக ஒழுகி[1]யெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்
தெள்ளமுதின் உடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க. 29

ஆனிரைகள் அறுகருந்தி அசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையில் பற்றும்இளங் கன்றினமும்
தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமும்
மான்முதலாம் கான்விலங்கும் மயிர்முகிழ்த்து வந்தணைய. 30

ஆடுமயில் இனங்களும்அங் கசைவயர்ந்து மருங்கணுக
ஊடுசெவி இசைநிறைந்த உள்ளமொடு புள்ளினமும்
மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகும்
கூடியவண்[2] கோவலரும் குறைவினையின் துறைநின்றார். 31

பணிபுவனங் களிலுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்,
மணிவரைவாழ் அரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்;
தணிவில்ஒளி விஞ்சையர்கள் சாரணர்கின் னரர்அமரர்
அணிவிசும்பில் அயர்வெய்தி விமானங்கள் மிசைஅணைந்தார். 32

சூரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து
கரமலரின் அமுதூட்டுங் கனிவாய்மென் கிள்ளையுடன்
விரவுநறுங்[3] குழல்அலைய விமானங்கள் விரைந்தேறிப்
பரவியஏ ழிசைஅமுதம் செவிமடுத்துப் பருகினார். 33

நலிவாரும் மெலிவாரும் உணர்வொன்றாய் நயத்தலினால்
மலிவாய்வெள் ளெயிற்றரவம் மயில்மீது மருண்டுவிழும்;
சலியாத நிலைஅரியும் தடங்கரியும் உடன்சாரும்;
புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும். 34

பா - ம்—[1] ஓங்கி. [2] கூடியவன். [3] விரவநறுங்.

பருவியகால் விசைத்தசையா; மரங்கள்மலர்ச் சினைசலியா;
கருவரைவீழ் அருவிகளும் கான்யாறும் கலித்தோடா;
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா;
இருவிசும்பி னிடைமுழங்கா, எழுகடலும் இடைதுளும்பா. 35

இவ்வாறு நிற்பனவும் சரிப்பனவும் இசைமயமாய்
மெய்வாழும் புலன்கரண மேவியவொன் றாயினவால்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையார் அடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருகக. 36

மெய்யன்பர் மனத்தன்பின் விளைந்தஇசைக் குழலோசை
வையந்தன் னையும்நிறைத்து வானம்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவில் நடம்புரியும்
ஐயன்றன் திருச்செவியின் அருகணையப் பெருகியதால் 37

ஆனாயர் குழலோசை கேட்டருளி அருட்கருணை
தானாய திருவுள்ளம் உடையதவ வல்லியுடன்
கானாதி காரணராம் கண்ணுதலார் விடையுகைத்து
வானாறு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடைதாழ. 38

திசைமுழுதுங் கணநாதர் தேவர்கட்கு முன்நெருங்கி
மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே
அசையஎழுங் குழல்நாதத் தஞ்செழுத்தால் தமைப்பரவும்
இசைவிரும்பும் கூத்தனார் எழுந்தருளி எதிர்நின்றார். 39

முன்னின்ற மழவிடைமேல் முதல்வனார் எப்பொழுதும்
செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல்வா சனைகேட்க
"இந்நின்ற நிலையேநம் பாலணைவாய்" எனஅவரும்
அந்நின்ற நிலைபெயர்ப்பார் ஐயர்திரு மருங்கணைந்தார். 40

விண்ணவர்கள் மலர்மாரி மிடைந்துலகம் மிசைவிளங்க
எண்ணிலரு முனிவர்குழாம் இருக்குமொழி எடுத்தேத்த
அண்ணலார் குழற்கருவி அருகிசைத்தங் குடன்செல்லப்
புண்ணியனார் எழுந்தருளிப் பொற்பொதுவி னிடைப்புக்கார். 41

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

நீதுகொள் வினைக்கு வாரோம் செஞ்சடைக் கூத்தர் தம்மைக், காதுகொள் குழைகள வீசும் கதிர்நில(வு) இருள்கால் சீப்ப, மாதுகொள் புலவி நீக்க மனையிடை இருகால் செல்லத், தூதுகொள் பவராம் நம்மைத் தொழும்புகொண் டுரிமை கொள்வார். 42

சருக்கம் மூன்றுக்குத் திருவிருத்தம் - 972



## 4. மும்மையால் உலகாண்ட சருக்கம்

°°○○★○○°°

# 15. மூர்த்தி நாயனார் புராணம்

சீர்மன்னு செல்வக் குடிமல்கு சிறப்பின் ஓங்கும்
கார்மன்னு சென்னிக் கதிர்மாமணி மாட வைப்பு
நார்மன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர் போற்றும்
பார்மன்னு தொன்மைப் புகழ்பூண்டது பாண்டி நாடு. 1

சாயுந்தளிர் வல்லி மருங்குல் நெடுந்த டங்கண்
வேயும்படு தோளியர் பண்படும்[1] இன்சொற் செய்ய
வாயும்படும், நீள்கரை மண்பொருந் தண்பொ ருந்தம்
பாயுங்கட லும்படும், நீர்மை பணித்த முத்தம். 2

மொய்வைத்த வண்டின் செறிசூழல் முரன்ற சந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்த மந்த
மெய்வைத்த காலுந் தரும்;ஞாலம் அளந்த மேன்மைத்
தெய்வத்தமி ழும்தருஞ் செவ்வி மணஞ்செ யீரம். 3

சூழு மிதழ்ப்பங்கய மாகஅத் தோட்டின் மேலாள்
தாழ்வின்றி என்றுந் தனிவாழ்வதத் தையல் ஒப்பார்
யாழின் மொழியிற் குழலின்னிசை யுஞ்சு ரும்பும்
வாழும் நகரம் மதுராபுரி என்ப தாகும். 4

சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய அங்கண் மூதூர்
நூல்பா யிடத்தும் உள;நோன்றலை மேதி பாயப்
பால்பாய் முலைதோய் மதுப்பங்கயம் பாய எங்குஞ்
சேல்பாய் தடத்தும் உள;செய்யுள்மிக் கேறு சங்கம். 5

பந்தாநிலம் வந்தசை பந்தரின் மாடமுன்றில்
பந்தாடிய மங்கையர் பங்கயச் செங்கை தாங்கும்
சந்தார்முலை மேலன, தாழ்குழை வாள்மு கப்பொற்
செந்தாமரை மேலன; நித்திலஞ் சேர்ந்த கோவை. 6

---

பா - ம்—[1] மண்படும்.

மும்மைப் புவனங்களின் மிக்கதன் றேஅம் மூதூர்
மெய்ம்மைப் பொருளாந் தமிழ்நூலின் விளங்கு வாய்மைச்
செம்மைப் பொருளுந் தருவார்திரு வால வாயில்
எம்மைப் பவந்தீர்ப் பவர்சங்கம் இருந்த தென்றால் 7

அப்பொற் பதிவாழ் வணிகக்குலத்[1] தான்ற தொன்மைச்
செப்பத் தகுசீர்க் குடிசெய்தவஞ் செய்ய வந்தார்
எப்பற் றினையும்அறுத்(து) ஏறுகைத் தேறு வார்தாள்
மெய்ப்பற் றெனப்பற்றி விடாத விருப்பின் மிக்கார். 8

நாளும்பெருங் காதல் நயப்புறும் வேட்கை யாலே
கேளும் துணையும் முதற்கேடில் பதங்க ளெல்லாம்
ஆளும்பெரு மான்அடித் தாமரை அல்ல தில்லார்
மூளும்பெரு கன்பெனும் மூர்த்தியார் மூர்த்தி யார்தாம். 9

அந்திப் பிறைசெஞ் சடைமேலணி ஆல வாயில்
எந்தைக் கணிசந் தனக்காப்பிடை என்றும் முட்டா
அந்தச் செயலின் நிலைநின் றடியா ருவப்பச்
சிந்தைக் கினிதாய திருப்பணி செய்யும் நாளில். 10

கானக் கடிசூழ் வடுகக்கரு நாடர் காவன்
மானப் படைமன்னன் வலிந்து நிலங்கொள் வானாய்
யானைக் குதிரைக் கருவிப்படை வீரர் திண்டேர்[2]
சேனைக் கடலுங் கொடுதென்றிசை நோக்கி வந்தான். 11

வந்துற்ற பெரும்படை மண்புதை யப்ப ரப்பிச்
சந்தப்பொதி யில்தமிழ் நாடுடை மன்னன் வீரம்
சிந்தச்செரு வென்றுதன் னாணை செலுத்து மாற்றால்
கந்தப்பொழில் சூழ்மது ராபுரி காவல் கொண்டான். 12

வல்லாண்மையின் வண்டமிழ் நாடு வளம்ப டுத்தி[3]
நில்லாநிலை ஒன்றிய இன்மையின் நீண்ட மேரு
வில்லான்அடி மைத்திற மேவிய நீற்றின் சார்பு
செல்லாதரு கந்தர் திறத்தினிற் சிந்தை தாழ்ந்தான். 13

---

பா - ம்—[1] வணிகர்குலத். [2] திரண்ட. [3] வளம்படுத்து.

தாழுஞ்சமண் கையர் தவத்தைமெய் யென்று சார்ந்து
வீழுங்கொடி யோன்அது வன்றியும் வெய்ய முன்னைச்
சூழும்வினை யால்அர வஞ்சுடர்த் திங்க ளோடும்
வாழுஞ்சடை யான்அடி யாரையும் வன்மை செய்வான். 14

செக்கர்ச்சடை யார்விடை யார்திரு வால வாயுள்
முக்கட்பர னார்திருத் தொண்டரை மூர்த்தி யாரை
மைக்கற்புரை நெஞ்சுடை வஞ்சகன் வெஞ்ச மண்பேர்
எக்கர்க்குட னாகி இகழ்ந்தன செய்ய எண்ணி. 15

அந்தம்இல வாமிறை செய்யவும் அன்ப னார்தாம்
முந்தைம்முறை மைப்பணி முட்டலர் செய்து வந்தார்,
தந்தம் பெருமைக் களவாகிய சார்பில் நிற்கும்
எந்தம் பெருமக் களையாவர் தடுக்க வல்லார்? 16

எள்ளுஞ்செயல் வன்மைகள் எல்லையில் லாத செய்யத்
தள்ளுஞ்செய லில்லவர் சந்தனக் காப்புத் தேடிக் [செய்வான்;
கொள்ளுந்துறை யும்அடைத் தான்கொடுங் கோன்மை
தெள்ளும்புனல் வேணியர்க் கன்பருஞ் சிந்தை நொந்து. 17

"புன்மைச் செயல்வல் அமண்குண்டரிற் போது போக்கும்
வன்மைக் கொடும்பா தகன்மாய்ந்திட வாய்மை வேத
நன்மைத் திருநீற் றுயர்நன்னெறி தாங்கு மேன்மைத்
தன்மைப் புவிமன் னரைச்சார்வதென்(று)?" என்று சார்வார்.

காய்வுற்ற செற்றங்கொடு கண்டகன் காப்ப வுஞ்சென்(று)
ஆய்வுற்ற கொட்பிற் பகலெல்லை அடங்க நாடி
ஏய்வுற்ற நற்சந் தனமெங்கும் பெறுது சிந்தை
சாய்வுற்றிட வந்தனர் தம்பிரான் கோயில் தன்னில். 19

நட்டம்புரி வாரணி நற்றிரு மெய்ப்பூச் சின்று
முட்டும்பரி சாயினுந் தேய்க்குங்கை முட்டா தென்று
வட்டந்திகழ் பாறையின் வைத்து முழங்கை தேய்த்தார்
கட்டும்புறந் தோல்நரம் பென்பு கரைந்து தேய. 20

கல்லின்புறந் தேய்த்த முழங்கை கலுழ்ந்து சோரி
செல்லும்பரப் பெங்கணும் என்பு திறந்து மூளை

புல்லும்படி கண்டு பொறுத்திலர் தம்பி ரானார் ;
அல்லின்கண் எழுந்த(து) உவந்தருள் செய்த வாக்கு. 21

"அன்பின் துணி வால்இது செய்திடல் ; ஐய ! உன்பால்
வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண் எல்லாங் கொண்டு
முன்பின்னல் புகுந்தன முற்றவும் நீத்துக் காத்துப்
பின்புன்பணி செய்துநம் பேருல கெய்து" கென்ன. 22

இவ்வண்ணம் எழுந்தது கேட்டெழுந் தஞ்சி முன்பு
செய்வண்ணம் ஒழிந்திடத் தேய்ந்தபுண் ஊறு தீர்ந்து
கைவண்ணம் நிரம்பின வாசமெல் லாங்க லந்து
மெய்வண்ண விளங்கொளி எய்தினர் மூர்த்தி யார்தாம். 23

அந்நாள் இர வின்கண் அமண்புகல் சார்ந்து வாழும்
மன்னுகிய போர்வடு கக்கரு நாடர் மன்னன்
தன்னாளும் முடிந்தது சங்கரன் சார்பி லோர்க்கு
மின்னுமென நீடிய மெய்ந்நிலை யாமை வெல்ல. 24

இவ்வா றுலகத்தின் இறப்ப உயர்ந்த நல்லோர்
மெய்வா முலகத்து விரைந்தணை வார்க ளேபோல்
அவ்வா றரனார் அடியாரை அலைத்த தீயோன்
வெவ்வாய் நிரயத் திடைவீழ[1] விரைந்து விந்தான். 25

முழுதும்பழு தேபுரி மூர்க்கன் உலந்த போதின்
எழுதுங்கொடி போல்பவ ருட்பட ஏங்கு சுற்றம்[2]
முழுதும்[3]புலர் வுற்றது ; மற்றவன் அன்ன மாலைப்
பொழுதும்புலர் வுற்றது ; செங்கதிர் மீது போத. 26

அவ்வேலையில் அங்கண் அமைச்சர்கள் கூடித் தங்கள்
கைவேறுகொள் ஈம வருங்கடன் காலை முற்றி
வைவேலவன் றன்குல மைந்தரும் இன்மை யாலே
செய்வேறுவி னைத்திறஞ் சிந்தனை செய்து தேர்வார். 27

"நாமுஞ்செய லின்றொரு மன்னவன் தாங்க வேண்டும் ;
கூழும்குடி யும்முத லாயின கொள்கைத் தேனும்

பா - ம்—[1] வீழ்வான். [2] எங்குஞ் சுற்றம். [3] அழுதும்.

சூழும்படை மன்னவன் தோளிணைக்[1] காவ லின்றி
வாழுந்தகைத் தன்றிந்த வையகம்'' என்று சொன்னார். 28

''பன்முறை உயிர்கள் எல்லாம் பாலித்து ஞாலங் காப்பான்
தன்னெடுங் குடைக்கீழ்த் தத்தம் நெறிகளில் சரித்து வாழும்
**மன்னரை இன்றி வைகும் மண்ணுல கெண்ணுங் காலை**
**இன்னுயிர் இன்றி வாழும் யாக்கையை ஒக்கும்''** என்பார். 29

இவ்வகை பலவும் எண்ணி ''இங்கினி அரசர் இல்லை;
செய்வகை இதுவே'' என்று தெளிபவர் ''சிறப்பின் மிக்க
மைவரை அனைய வேழங் கண்கட்டி விட்டால் மற்றக்
கைவரை கைக்கொண் டார்மண் காவல்கைக் கொள்வார்'' என்று

செம்மாண்வினை அர்ச்சனை நான்முறை செய்து ''தோளால்
**இம்மாநிலம் ஏந்தஓர் ஏந்தலை ஏந்து''** கென்று
பெய்ம்மாமுகில் போல்மதம் பாய்பெரு கோடை நெற்றிக்
கைம்மாவை நறுந்துகில் கொண்டுகண் கட்டி விட்டார். 31

கண்கட்டி விடுங்களி யானைஅக் காவல் மூதூர்
மண்கொட்புற வீதி மருங்கு திரிந்து போகித
திண்பொற்றட மாமதில் சூழ்திரு வால வாயின்
விண்பிற்பட ஓங்கிய கோபுரம் முன்பு மேவி.[2] 32

நீங்கும்இர வின்கண் நிகழ்ந்தது கண்ட தொண்டர்
''ஈங்கெம்பெரு மான்அரு ளாம்எனில் இந்த வையம்
தாங்கும்செயல் பூண்பன்''என் றுள்ளம் தளர்வு நீங்கிப்
பூங்கொன்றை மிலைந்தவர் கோயிற் புறத்து நிற்ப.[3] 33

வேழத் தரசங்கண் விரைந்து நடந்து சென்று
வாழ்வுற் றுலகஞ்செய் தவத்தினின் வள்ள லாரைச்
சூழ்பொற் சுடர்மாமணி மாநிலந் தோய முன்பு
தாழ்வுற் றெடுத்துப் பிடர்மீது தரித்த தன்றே. 34

மாதங்கம் எருத்தினில் வைத்தவர் தம்மைக் காணா
ஏதங்கெட எண்ணிய திண்மை அமைச்சர் எல்லாம்

---

பா - ம்—[1] தோளிணை. [2] மேவ. [3] புறத்தின் நிற்ப.

பாதங்களின் மீது பணிந்தெழுந் தார்கள் அப்போ(து)
ஓதங்கிளர் வேலையை ஒத்தொலி மிக்க தவ்வூர். 35

சங்கங்கள் முரன்றன தாரைகள்; பேரி யோடும்
எங்கெங்கும் இயம்பின பல்லியம்; எல்லை யில்ல
அங்கங்கு மலிந்தன வாழ்த்தொலி, அம்பொற் கொம்பின்
பங்கன்அரு ளால்உல காள்பவர் பாங்கர் எங்கும். 36

வெங்கட்களிற் றின்மிசை நின்றும் இழிச்சி வேரித்
தொங்கற்சுடர் மாலைகள் சூழ்முடி சூடு சாலை[1]
அங்கட்கொடு புக்கரி யாசனத் தேற்றி ஒற்றைத்
திங்கட்குடைக் கீழ்உரி மைச்செயல் சூழ்ந்து செய்வார். 37

மன்னுந் திசைவேதியில் மங்கல ஆகு திக்கண்
துன்னுஞ் சுடர்வன்னி வளர்த்துத் துதைந்த நூல்சூழ்
பொன்னின் கலசங்கள் குடங்கள் பூரித்த தூநீர்
உன்னுஞ் செயல்மந் திரயோகர்[2] நிறுத்தி னார்கள். 38

வந்துற்றெழு மங்கல மாந்தர்கள் தம்மை நோக்கிச்
சிந்தைச்சிவ மேதெளி யுநதிரு மூர்த்தி யார்தாம்
"முந்தைச்செய லாம்அமண் போய்முதற் சைவம் ஓங்கில்
இந்தப்புவி தாங்கிஇவ் வின்னர[3] சாள்வன்" என்றார். 39

அவ்வாறு மொழிந்தது கேட்ட அமைச்ச ரோடு
மெய்வாழ்தரு நூலறி வின்மிகு மாந்தர் தாமும்
"எவ்வா றருள் செய்தனை மற்றவை யன்றி யாவர்
செய்வார்? பெரியோய்!" எனச்சேவடி தாழ்ந்து செப்ப. 40

"வையம் முறைசெய் குவனாகில வயங்கு நீறே
செய்யும் அபிடே கமுமாக,[4] செழுங்க லன்கள்
ஐயன் அடையா ளமுமாக, அணிந்து தாங்கும்
மொய்புன் சடையா முடியேமுடி யாவ" தென்றார். 41

என்றிவ்வுரை கேட்டலும் எல்லையில் கல்வி யோரும்
வன்திண்மதி நூல்வளர் வாய்மை அமைச்சர் தாமும்

---

பா - ம்—[1] துடேசாலை. [2] யோகில. [3] இங்கின்னர. [4] மாகச்.

"நன்றிங்கருள் தான்" என நற்றவ வேந்தர் சிந்தை
ஒன்றும்அர சாள்உரி மைச்செய லான உய்த்தார். 42

மாடெங்கும் நெருங்கிய மங்கல ஓசை மல்கச்
சூடுஞ்சடை மௌலி அணிந்தவர் தொல்லை ஏனம்
தேடுங்கழ லார்திரு வாலவாய் சென்று தாழ்ந்து
நீடுங்களிற் றின்மிசை நீள்மறு கூடு போந்தார். 43

மின்னும்மணி மாளிகை வாயிலின் வேழ மீது
தன்னின்றும் இழிந்து தயங்கொளி மண்ட பத்திற்
பொன்னின்அரி மெல்லணைச் சாமரைக் காமர் பூங்கால்
மன்னுங்குடை நீழல் இருந்தனர் வையம் தாங்கி. 44

சூலவுந்துறை நீதி அமைச்சர் குறிப்பின் வைகக்
கலகஞ்செய் அமண்செய லாயின கட்டு நீங்கி[1]
நிலவுந்திரு நீற்று நெறித்துறை நீடு வாழ
உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்து மன்ன. 45

நுதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்கு நூலின்
பதமெங்கும் நிறைந்து விளங்கப் பவங்கள் மாற[2]
உதவுந்திரு நீறுயர் கண்டிகை கொண்ட வேணி
முதன்மும்மையி னால்உல காண்டனர் மூர்த்தியார்தாம். 46

ஏலங்கமழ் கோதையர் தந்திறம் என்றும் நீங்கும்
சீலங்கொடு வெம்புலன் தெவ்வுடன் வென்று நீக்கி
ஞாலந்தனி நேமி நடாத்தி நலங்கொள் ஊழிக்
காலம்உயிர் கட்கிட ரான கடிந்து காத்து. 47

பாதம்பர மன்னவர்[3] சூழ்ந்து பணிந்து போற்ற
ஏதம்பிணி யாவகை இவ்வுல காண்டு தொண்டின்
பேதம்புரி யாஅருட் பேரர சாளப் பெற்று
நாதன்கழற் சேவடி நண்ணினர் அண்ண லாரே. 48

அகல்பா றையின் வைத்து முழங்கையை அன்று தேய்த்த
இகலார்களிற் றன்பரை ஏத்தி முருக னாரம்

பா - ம்—[1] நீகக்கி. [2] மாற்ற; மாற்றி. [3] பாதம் பலமன்னர்கள்.

முகில்சூழ் நறுஞ்சோலையின் மொய்யொளி மாட வீதிப்
புகலூர்வரும் அந்தணர் தந்திறம் போற்ற லுற்றும். 49

# 16. முருக நாயனார் புராணம்

தாது சூழும் குழல்மலையாள்[1] தளிர்க்கை சூழும் திருமேனி. மீது சூழும் புனற்கற்றை வேணி நம்பர் விரும்புபதி, சோதி சூழு மணிமௌலிச் சோழர் பொன்னித் திருநாட்டுப், போது சூழுந் தடஞ்சோலைப் பொய்கை சூழும் பூம்புகலூர். 1

நாம மூதூர் மற்றதனுள் நல்லோர் மனம்போல் அவரணிந்த[2]
சேம நிலவு திருநீற்றின் சிறந்த வெண்மைத் திருந்தொளியால்
யாம இருளும் வெளியாக்கும் இரவே அல்ல; விரைமலர்மேல்
காமர் மதுவுண் சிறைவண்டும் களங்கம் இன்றி விளங்குமால். 2

நண்ணும் இசைதேர் மதுகரங்கள் நனைமென் சினையின் மருங்கலைய, வண்ண மதுரத் தேன்பொழிவ வாச மலர்வா யேயல்ல, தண்ணென் சோலை எம்மருங்கும் சாரும் மடமென் சாரிகையின், பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால். 3

வண்டு பாடப் புனல்தடத்து மலர்ந்து கண்ணீர் அரும்புவன, கொண்ட வாச முகைஅவிழ்ந்த குளிர்பங் கயங்க ளேயல்ல, அண்டர் பெருமான் திருப்பாட்டின் அமுதம் பெருகச் செவி மடுக்கும், தொண்டர் வதன பங்கயமும் துளித்த கண்ணீர் அரும்புமால். 4

ஆன பெருமை வளஞ்சிறந்த அந்தண் புகலூர் அதுதன்னில்
மான மறையோர் குலமரபின் வந்தார் முந்தை மறைமுதல்வர்
ஞான வரம்பின் தலைநின்றார் நாகம் புனைவார் சேவடிக்கீழ்
ஊனம் இன்றி நிறைஅன்பால் உருகு மனத்தார் முருகனார்.

அடைமேல் அலவன் துயிலுணர அலர்செங் கமல வயற் கயல்கள், மடைமேல் உகளும் திருப்புகலூர் மன்னி வாழுந்

பா - ம்—[1] குழல்மடவாள். [2] அரவணிந்தார்.

தன்மையராய், விடைமேல் வருவார்க் காளான[1] மெய்ம்மைத் தவத்தால் அவர்கற்றைச், சடைமேல் அணியத் திருப்பள்ளித் தாமம் பறித்துச் சாத்துவார். 6

புலரும் பொழுதின் முன்னெழுந்து புனித நீரில் மூழ்கிப்போய்
மலருஞ் செவ்வித் தமபெருமான் முடிமேல வான்நீர் ஆறுமதி
உலவு மருங்கு முருகுயிர்க்க, நகைக்கும் பதததின் உடன்பறித்து
அலகில் மலர்கள் வெவ்வேறு திருப்பூங் கூடை களிலமைப்பார்.

கோட்டு மலரும் நிலமலரும் குளிர்நீர் மலரும் கொழுங்கொடி
தோட்டு மலரும் மாமலரும் சுருதி மலருந் திருவாயில் [யின்
காட்டு முறுவல் நிலவலரக் கனக வரையிற் பன்னகநாண்
பூட்டும் ஒருவர் திருமுடிமேல் புனைய லாகும் மலர்தெரிந்து. 8

கொண்டு வந்து தனியிடத்தில்[2] இருந்து கோக்கும் கோவைகளும், இண்டைச் சுருக்கும் தாமமுடன் இணைக்கும்[3] வாச மாலைகளும், தண்டிற் கட்டும் கண்ணிகளும் தாளிற் பிணைக்கும் பிணையல்களும், நுண்டா திறைக்கும் தொடையல்களும்[4] சமைதது நடங்கு நூன்மார்பர். 9

ஆங்கப் பணிக ளானவற்றுக் கமைத்த காலங் களின்[5] அமைத்துத், தாங்கிக் கொடுசென் றன்பினொடுஞ் சாத்தி வாய்ந்த அர்ச்சனைகள், பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார்; பரமர் பதிகப் பற்றுன, ஓங்கிச் சிறந்த அஞ்செழுத்தும் ஓவா நாவின் உணர்வினர். 10

தள்ளும் முறைமை ஒழிந்திடஇத தகுதி ஒழுகும் மறையவர்தாம்
தெள்ளு மறைகள் முதலான ஞானஞ் செம்பொன் வள்ளத்தில்
அள்ளி அகிலம் ஈன்றளித்த அம்மை முலைப்பா லுடனுண்ட
பிள்ளை யார்க்கு நண்பருமாம் பெருமை யுடையா ராயினர். 11

அன்ன வடிவும் ஏனமுமாய் அறிவார்[6] இருவர் அறியாமல்[7]
மன்னும் புகலூர் உறைவாரை வர்த்த மான வீச்சுரத்து

பா - ம்—[1] காளாய. [2] யிடத்தின். [3] இசைககும். [4] தொங்கல்களும். [5] களில். [6] அறிவான். [7] அறியாமே.

நன்னர் மகிழ்ச்சி மனங்கொள்ள நாளும் பூசை வழுவாமே
பன்னும் பெருமை அஞ்செழுத்தும் பயின்றே பணிந்துபரவினர்.

அங்கண் அமருந் திருமுருகர் அழகார் புகலிப் பிள்ளையார், பொங்கு மணத்தின் முன்செய்த பூசை அதனல் புக்கருளிச், செங்கண் அடலே றுடையவர்தாஞ் சிறந்த அருளின் பொருள் அளிக்கத், தங்கள் பெருமான் அடிநீழல் தலையாம் நிலைமை சார்வுற்றர். 13

அரவம் அணிந்த அரையாரை அருச்சித் தவர்தங் கழல் நிழற்கீழ், விரவு புகலூர் முருகனர் மெய்ம்மைத் தொண்டின் திறம்போற்றிக், காவி லவர்பால் வருவாரைக் கருத்தில உருத்திரங்கொண்டு, பரவும் அன்பர் பசுபதியார் பணிந்த பெருமை பகர்வுற்றேன்.[1] 14

---

# 17. உருத்திர பசுபதி நாயனர் புராணம்

---

நிலத்தின் ஓங்கிய நிவந்தெழும் பெரும்புனல் நீத்தம்
மலர்த்த டம்பணை [2] வயல்புகு பொன்னிநன் னட்டுக்
குலத்தின் ஓங்கிய குறைவிலா நிறைகுடி குழுமித்
தலத்தின் மேம்படு நலத்தது [3] பெருந்திருத் தலையூர். 1

வான ளிப்பன மறையவர் வேள்வியின் வளர்தீ ;
தேன ளிப்பன நறுமலர் செறிசெழுஞ் சோலை ,
ஆன ளிப்பன அஞ்சுகந் தாடுவார்க்(கு) அவ்வூர்
தான ளிப்பன தருமமும் நீதியுஞ் சால்பும். 2

அங்கண மாநக ரதனிடை அருமறை வாய்மைத்
துங்க வேதியர் குலத்தினில் தோன்றிய தூயோர்
செங்கண் மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி
பங்க னரடி மைத்திறம் புரிபசு பதியார். 3

---

பா - ம்—[1] பரவுற்றேன். [2] தடம்புனை. [3] மேம்படுதகையது.

ஆய அந்தணர் அருமறை உருத்திரங்கொண்டு
மாய னாரறி யாமலர்ச் சேவடி வழுத்துந்
தூய அன்பொடு தொடர்பினில் இடையறாச் சுருதி
நேய நெஞ்சின ராகிஅத் தொழில்[1] தலை நின்றார். 4

கரையில் கம்பலை புள்ளொலி கறங்கிட மருங்கு
பிரச மென்சுரும் பறைந்திடக் கருவரால்[2] பிறழும்
நிரைநெ டுங்கயல் நீரிடை[3] நெருப்பெழுந் தனைய
விரைநெ கிழ்ந்தசெங் கமலமென் பொய்கையுள்[4] மேவி. 5

தெள்ளு தண்புனல் கழுத்தள வாயிடைச் செறிய
உள்ளு றப்புக்கு நின்றுகை உச்சிமேற் குவித்துத்
தள்ளு வெண்டிரைக் கங்கைநீர் ததும்பிய சடையார்
கொள்ளும் அன்பினில் உருத்திரங் குறிப்பொடு பயின்றார். 6

அரும றைப்பய னாகிய உருத்திரம் அதனை
வருமு றைப்பெரும் பகலும்எல் லியும்வழு வாமே
திரும லாப்பொருட் டிருந்தவன் அனையவர் சிலநாள்
ஒருமை உய்த்திட உமைஇடம் மகிழ்ந்தவர் உவந்தார். 7

காதல் அன்பர்தம் அருந்தவப் பெருமையும் கலந்த
வேத மந்திர நியதியின் மிகுதியும் விரும்பி
ஆதி நாயகர் அமர்ந்தருள்[5] செய்யமற் றவர்தாம்
தீதி லாநிலைச் சிவபுரி எல்லையிற் சேர்ந்தார்.[6] 8

நீடும் அன்பினில் உருத்திரம் ஓதிய நிலையால்
ஆடு சேவடி அருகுற அணைந்தனர்; அவர்க்குப்
பாடு பெற்றசீர் உருத்திர பசுபதி யாராம்
கூடு நாமமும் நிகழ்ந்தது குவலயம் போற்ற. 9

அயில்கொள் முக்குடு மிப்படை யார்மருங் கருளால்
பயில்உ ருத்திர பசுபதி யார்திறம் பரசி
எயிலு டைத்தில்லை எல்லையில் நாளைப்போ வாராம்
செயலு டைப்புறத் திருத்தொண்டர் திறத்தினை மொழிவாம். 10

---

பா - ம் —[1] நெஞ்சினராகியதொழில். [2] பெருவரால். [3] நெடுங்கய நீரிடை. [4] பொய்கையின். [5] மகிழ்ந்தருள்; அறிந்தருள். [6] சென்றார்.

# 18. திருநாளைப்போவார் நாயனார் புராணம்

பகர்ந்துலகு சீர்போற்றும் பழையவளம் பதியாகும்,
திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன் செழுமணிகள் திரைக்கரத்
தால், முகந்துதர இருமருங்கும் முளரிமலர்க் கையேற்கும்,
அகன்பணைநீர் நன்னாட்டு மேற்கானாட்(டு) ஆதனூர். 1

நீற்றலர்பே ரொளிநெருங்கும் அப்பதியின் நிறைகரும்பின்
சாற்றலைவன் குலைவயலில் தகட்டுவரால் எழப்பகட்டேர்
ஆற்றலவன் கொழுக்கிழித்த சால்வழிபோய் அசைந்தேறிச்
சேற்றலவன் கருவுயிர்க்க முருகுயிர்க்குஞ் செழுங்கமலம். 2

நனைமருவுஞ் சினைபொதுளி நறுவிரைசூழ் செறிதளிரில்
தினகரமண் டலம்வருடுஞ் செழுந்தருவின் குலம்பெருகிக்
கனமருவி அசைந்தலையக்[1] களிவண்டு புடைசூழப்
புனல்மழையோ? மதுமழையோ? பொழிவொழியா பூஞ்சோலை. 3

பாளைவிரி மணங்கமழும் பைங்காய்வன் குலைத்தெங்கின்
தாளதிர மிசைமுட்டித் தடங்கிடங்கின் எழப்பாய்ந்த
வாளைபுதை யச்சொரிந்த பழமிதப்ப வண்பலவின்
நீளமுதிர் கனிகிழிதேன் நீத்தத்தில் எழுந்துகளும். 4

வயல்வளமும் செயல்படுபைந் துடவையிடை வருவளமும்
வியலிடமெங் கணும்நிறைய மிக்கபெருந் திருவினவாம்
புயலடையும் மாடங்கள் பொலிவெய்த மலிவுடைத்தாய்
அயலிடைவே றடிநெருங்கக் குடிநெருங்கி உளதவ்வூர். 5

மற்றவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு பெருங்குலையில்
சுற்றம்விரும் பியகிழமைத் தொழில்உழவர் கிளைதுவன்றிப்
பற்றியபைங் கொடிச்சுரைமேற் படர்ந்தபழங் கூரையுடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர்[2] புலைப்பாடி. 6

கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயின்முன் றிலில்நின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்

பா - ம்—[1] இருந்தசையக. [2] நிலைத்துளதோர்.

காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
ஆர்சிறுமென் குரைப்படக்கும் அரைக்கசைத்த இருப்புமணி. 7

வன்சிறுதோல் மிசையுழத்தி மகவுறக்கும் நிழல்மருதும்,
தன்சினைமென் பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழல்,
மென்சினைய வஞ்சிகளும் விசிப்பறைதூங் கின[1]மாவும், புன்றலை
நாய்ப் புனிற்றுமுழைப் புடைத்தெங்கும உடைத்தெங்கும். 8

செறிவலித்திண் கடைஞர்வினைச் செயல்புரிவை கறையாமக்
குறியளக்க உளைக்குஞ்[2] செங் குடுமிவா ரணச்சேக்கை
வெறிமலர்த்தண்[3] சினைக்காஞ்சி விரிநீழல் மருங்கெல்லாம்
நெறிகுழற்புன் புலைமகளிர் நெற்குறுபாட் டொலிபரக்கும். 9

புள்ளுந்தண் புனற்கலிக்கும் பொய்கையுடைப் புடையெங்கும்
தள்ளுந்தாள் நடையசையத் தளையவிழ்பூங் குவளைமது
விள்ளும் ,பைங் குழற்கதிர்நெல் மிலைச்சியபுன் புலைச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறை யுங்கலிக்கும். 10

இப்படித்தா கியகடைஞர் இருப்பின்வரைப் பினின்வாழ்வார்;
மெய்ப்பரிவு சிவன்கழற்கே விளைத்தஉணர் வொடும்வந்தார்;
அப்பதியில் ஊர்ப்புலைமை ஆன்றதொழில் தாயததார்;
ஒப்பிலவர், நந்தனார் எனஒருவர் உளரானார். 11

பிறந்துணர்வு தொடங்கியபின் பிறைக்கண்ணிப் பெருந்
தகைபால், சிறந்தபெருங் காதலினால் செம்மைபுரி சிந்தையராய்,
மறந்தும்அயல நினைவின்றி வருபிறப்பின் வழிவந்த, அறம்புரி
கொள் கையராயே[4] அடித்தொண்டின் நெறிநின்றார்.[5] 12

ஊரில்விடும் பறைத்துடவை உணவுரிமை யாக்கொண்டு
சார்பில்வருந் தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினால்;
கூரிலைய முக்குடுமிப் படையண்ணல் கோயில்தொறும்
பேரிகையே முதலாய முகக்கருவி பிறவினுக்கும். 13

போர்வைத்தோல் விசிவார்என் றினையனவும் புகலும்இசை
நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கும் நிலைவகையில்

---

பா - ம்—[1] தூங்கிய. [2] அழைக்கும. [3] திண். [4] கொள்கையினை
ராய். [5] வழிநின்றார்.

சேர்வுற்ற தந்திரியும் தேவர்பிரான் அர்ச்சனைகட்(கு)
ஆர்வத்தி னுடன்கோரோ சனையும்இவை அளித்துள்ளார். 14

இவ்வகையால் தந்தொழிலின் இயன்றவெலாம் எவ்விடத்தும்
செய்வனவும் கோயில்களில் திருவாயிற் புறநின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினால் ஆடுதலும்
அவ்வியல்பில் பாடுதலு மாய்நிகழ்வார் அந்நாளில். 15

திருப்புன்கூர்ச் சிவலோகன் சேவடிகள் மிகநினைந்து
விருப்பினொடுந் தம்பணிகள் வேண்டுவன செய்வதற்கே
அருத்தியினால் ஒருப்பட்டங் காதனார் தனில்நின்றும்
வருத்தமுறுங் காதலினால் வந்தவ்வூர் மருங்கணைந்தார். 16

சீரேறும் இசைபாடித் திருத்தொண்டர் திருவாயில்
நேரேகும் பிடவேண்டும் எனநினைந்தார்க் கதுநேர்வார்
காரேறும் எயிற்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு
பேரேற்றை விலங்கஅருள் புரிந்தருளிப் புலப்படுத்தார். 17

சிவலோகம் உடையவர்தந் திருவாயில் முன்னின்று
பவலோகங் கடப்பவர்[1] தம் பணிவிட்டுப் பணிந்தெழுந்து
சுவலோடு வாரலையப் போவார்பின் பொருசூழல்
அவலோடும் அடுத்ததுகண்(டு) ஆதரித்துக் குளந்தொட்டார். 18

வடங்கொண்ட பொன்னிதழி மணிமுடியார் திருவருளால்
தடங்கொண்ட குளத்தளவு சமைத்ததற்பின் தம்பெருமான்
இடங்கொண்ட கோயில்புறம் வலங்கொண்டு பணிந்தெழுந்து
நடங்கொண்டு விடைகொண்டு தம்பதியில்[2] நண்ணினார். 19

இத்தன்மை ஈசர்மகிழ் பதிபலவுஞ் சென்றிறைஞ்சி
மெய்த்ததிருத் தொண்டுசெய்து விரவுவார் மிக்கெழுந்த
சித்தமொடுந் திருத்தில்லைத் திருமன்று சென்றிறைஞ்ச
உய்த்தபெருங் காதலுணர்(வு) ஒழியாது வந்துதிப்ப. 20

அன்றிரவு கண்துயிலார்; புலர்ந்ததற்பின் "அங்கெய்த
ஒன்றியனை தருதன்மை உறுகுலத்தோ டிசைவில்லை"

---

பா - ம்—[1] கடந்தவர். [2] தம்பதியை.

என்"றிதுவும் எம்பெருமான் ஏவல்"எனப் போக்கொழிவார்;
நன்றுமெழுங் காதல்மிக[1] "நாளைப்போ வேன்" என்பார். 21

"நாளைப்போ வேன்"என்று நாள்கள்செலத் தரியாது
பூளைப்பூ வாம்பிறவிப் பிணிப்பொழியப் போவாராய்ப்
பாளைப்பூங் கமுகுடுத்த பழம்பதியின் நின்றும்போய்
வாளைப்போத் தெழும்பழனஞ் சூழ்தில்லை மருங்கணைவார்.[2] 22

செல்கின்ற போழ்தந்தத் திருவெல்லை பணிந்தெழுந்து
பல்குஞ்செந் தீவளர்த்த பயில்வேள்வி எழும்புகையும்
மல்குபெருங் கிடையோது மடங்கள்நெருங் கினவுங்கண்(டு)
அல்குந்தம் குலநினைந்தே அஞ்சிஅணை நதிலர்நின்றார். 23

நின்றவர்அங் கெய்தரிய பெருமையினை நினைப்பார்"முன்
சென்றிவையுங் கடந்தார்சூழ் எயிற்றிருவா யிலைப்புக்கார்;[3]
குன்றனைய மாளிகைகள் தொறுங்குலவும் வேதிகைகள்
ஒன்றியமூ வாயிரம்அங் குளஎன்பார் ஆகுதிகள்." 24

"இப்பரிசா யிருக்கவெனக் கெய்தல் அரி"தென்றஞ்சி
அப்பதியின் மதிற்புறத்தின் ஆராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க உள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார். 25

இவ்வண்ணம் இரவுபகல் வலஞ்செய்தங் கெய்தரிய
அவ்வண்ணம் நினைந்தழிந்த அடித்தொண்டர் அயர்வெய்தி
"மைவண்ணத் திருமிடற்றார் மன்றில்நடங் கும்பிடுவ
தெவ்வண்ணம்" எனநினைந்தே ஏசறவி னொடுந்துயில்வார். 26

"இன்னல்தரும் இழிபிறவி இதுதடை"என் றேதுயில்வார்;
அந்நிலைமை அம்பலத்துள் ஆடுவார் அறிந்தருளி
மன்னுதிருத் தொண்டரவர் வருத்தமெலாந் தீர்ப்பதற்கு
முன்னணைந்து கனவின்கண் முறுவலொடும் அருள்செய்வார். 27

"இப்பிறவி போய்நீங்க எரியினிடை நீமூழ்கி
முப்புரிநூல் மார்பருடன் முன்னணைவாய்" என்னமொழிந்(து)[4]

---

பா - ம்—[1] காதலினால். [2] மருங்கணைந்தார். [3] வாயிலைப் புக்கால். [4] என மொழிந்த.

அப்பரிசே தில்லைவாழ் அந்தணர்க்கும் எரியமைக்க
மெய்ப்பொருளா ஞர்அருளி அம்பலத்தே மேவினர். 28

தம்பெருமான் பணிகேட்ட தவமறையோர் எல்லாரும்
அம்பலவர் திருவாயின் முன்(பு)அச்ச முடன்ஈண்டி
"எம்பெருமான் அருள்செய்த பணிசெய்வோம்" என்றேத்தித்[1]
தம்பரிவு பெருகவருந் திருத்தொண்டர் பாற்சார்ந்தார். 29

"ஐயரே! அம்பலவர் அருளால்இப் பொழுதணைந்தோம்;
வெய்யஅழல் அமைத்துமக்குத் தரவேண்டி" எனவிளம்ப, நையு
மனத் திருத்தொண்டர் "நான்உய்ந்தேன்" எனத்தொழுதார்;,
தெய்வமறை முனிவர்களும் தீயமைத்த படிமொழிந்தார். 30

மறையவர்கள் மொழிந்ததற்பின் தென்றிசையின் மதிற்
புறத்துப், பிறையுரிஞ்சுந் திருவாயின் முன்னாகப் பிஞ்ஞகர்தம்,
நிறையருளால் மறையவர்கள் நெருப்பமைத்த குழிஎய்தி,
இறையவர்தாள் மனங்கொண்டே எரிசூழ வலங்கொண்டார். 31

கைதொழுது, நடமாடுங் கழலுன்னி அழல்புக்கார், எய்திய
அப் பொழுதின்கண் எரியின்கண் இம்மாயப், பொய்தகையும்
உருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய், மெய்திகழ்
வெண் ணூல்விளங்க[2] வேணிமுடி கொண்டெழுந்தார். 32

செந்தீமேல் எழும்பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த
அந்தணன்போல தோன்றினர்; அந்தரதுந் துபிநாதம்
வந்தெழுந்த(து) இருவிசும்பில்,[3] வானவர்கள் மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர்மந் தாரத்தின் பனிமலர்மா ரிகள்பொழிந்தார். 33

திருவுடைய தில்லைவாழ் அந்தணர்கள் கைதொழுதார்;
பரவரிய தொண்டர்களும் பணிந்துமனம் களிபயின்றார்,
அருமறைசூழ் திருமன்றில் ஆடுகின்ற கழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாராம் மறைமுனிவர். 34

தில்லைவாழ் அந்தணரும் உடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான் மறிக்கரத்தார் கோபுரத்தைத் தொழுதிறைஞ்சி

---

பா - ம்—[1] எனறேத்தித். [2] முந் நூலவிளங்க. [3] உயர்விசும்பில்.

ஒல்லைபோய் உட்புகுந்தார்;[1] உலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால். 35

அந்தணர்கள் அதிசயித்தார், அருமுனிவர் துதிசெய்தார்;
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையுந் துணையடிகள் தொழுதிருக்க
அந்தமிலா ஆனந்தப் பெருங்கூத்தர் அருள்புரிந்தார். 36

பாசுடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்(து)
ஆசில்மறை முனியாகி அம்பலவர் தாளடைந்தார்
தேசுடைய கழல்வாழ்த்தித் திருக்குறிப்புத் தொண்டர்வினைப்
பாசமற முயன்றவர்தம்[2] திருத்தொண்டின் பரிசுரைப்பாம். 37

---

# 19. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம்

---

ஏயு மாறுபல் உயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாய னாள்தனி யாயின தலைவரைத் தழுவ
ஆயு நான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூய மாதவம் செய்தது தொண்டைநன் னாடு. 1

நன்மை நீடிய நடுநிலை ஒழுக்கத்து நயந்த
தன்மை மேவிய தலைமைசால்[3] பெருங்குடி தழைப்ப
வன்மை ஓங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்
தொன்மை மேன்மையில் நிகழ்பெருந் தொண்டைநன் னாடு.[4] 2

நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்(து)
உற்ற போதுதம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையுந் தூக்கிஅச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு. 3

ஆணை யாமென நீறுகண்(டு) "அடிச்சேரன்" என்னும்
சேனு லாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு

---

பா - ம்—[1] உட்புகக்கா. [2] முயன்றவர்செய். [3] தகைமைசால். [4] நிகழ்வது பெருந் தொண்டைநாடு.

வாணி லாவுபூண் வயவர்கள் மைத்துனக் கேண்மை
பேண நீடிய முறையது பெருந்தொண்டை நாடு. 4

கறைவி ளங்கிய கண்டர்பாற் காதல்செய் முறைமை[1]
நிறைபு ரிந்திட நேரிழை அறம்புரிந் ததனால்
பிறையு ரிஞ்(சு)எயிற் பதிபயில் "பெருந்தொண்டை நாட்டு[2]
முறைமை யா"மென உலகினில் மிகுமொழி உடைத்தால். 5

தாவில் செம்மணி அருவியா றிழிவன சாரல்;
பூவில் வண்டினம் புதுநற(வு) அருந்துவ புறவம்,
வாவி நீள்கயல் வரம்பிற உகைப்பன மருதம்;
நீவி நித்திலம் பரத்தியர் உணக்குவ நெய்தல். 6

குறவர் பன்மணி அரித்(து)இதை விதைப்பன குறிஞ்சி,
கறவை ஆன்நிரை மானுடன் பயில்வன கானம்;
பறவை தாமரை யிருந்திற வருந்துவ பழனம்;
சுறவ முள்மருப் பணங்கயர் வனகழிச் சூழல 7

கொண்டல் வானத்தின் மணிசொரி வனகுல வரைப்பால்;
தண்டு ணர்க்கொன்றை பொன்சொரி வனதள வயற்பால்;
வண்டல் முத்தநீர் மண்டுகால் சொரிவன வயற்பால்;
கண்டல் முன்துறைக் கரிசொரி வனகலங் கடற்பால். 8

தேனி றைந்தசெந் தினையிடி தருமலைச் சீறூர்,
பாணி றைந்தபுற் பதத்தன முல்லைநீள் பாடி,
தூநெ லன்னம்நெய் கன்னலின் கனியதண் டுறையூர்;
மீனி றைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள். 9

சூழல்செய் வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி;
முழவு கார்கொள முல்லைகள் முகைப்பன முல்லை;
மழலை மென்கிளி மருதமர் சேக்கைய மருதம்,
நிழல்செய் கைதைசூழ் நெய்தலங் கழியன நெய்தல். 10

மல்கும் அப்பெரு நிலங்களில் வரைபுணர் குறிஞ்சி
எல்லை எங்கணும் இறவுளர் ஏனல்முன் விளைக்கும்
பல்பெ ரும்புனம் பயில்வன படர்[3]சிறைத் தோகை
சொல்லும் அப்புனங் காப்பவுஞ் சுரிகுழல் தோகை. 11

பா - ம்—[1] செய்ம்முறைமை. [2] நாடு. [3] படர்வன பயில்.

அங்கண் வான்மிசை அரம்பையர் கருங்குழற் சுரும்பு
பொங்கு பூண்முலைக் கொடிச்சியர் குழல்மூழ்கிப் போகாச்
செங்கண் மால்விடை யார்திருக் காளத்தி என்னும்
மங்குல் சூழ்வரை நிலவிய வாழ்வினால் மல்கும். 12

பேறு வேறுசூழ் இமையவர் அரம்பையர் பிறந்து
மாறில் வேடரும் மாதரு மாகவே வணங்கும்
ஆறு சூழ்சடை அண்ணலார் திருவிடைச் சுரமுங்
கூறு மேன்மையின் மிக்கதந் நாட்டுவண் குறிஞ்சி. 13

அம்பொன் வார்குழற் கொடிச்சிய ருடன்அர மகளிர்
வம்பு லாமலர்ச் சுனைபடிந் தாடுநீள் வரைப்பின்
உம்பர் நாயகர் திருக்கழுக் குன்றமும் உடைத்தால்
கொம்பர் வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவங்குறை உளதோ? 14

கோல முல்லையும் குறிஞ்சியும் அடுத்தசில் லிடங்கள்
நீல வாட்படை நீலிகோட் டங்களும் நிரந்து
கால வேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலை யுஞ்சொல லாவன [1] உளபரல் முரம்பு. 15

சொல்லும் எல்லையின் புறத்தன துணர்ச்சுரும் பலைக்கும்
பல்பெ ரும்புனற் கானியா றிடையிடை பரந்து
கொல்லை மெல்லிணர்க் குருந்தின்மேற் படர்ந்தபூம் பந்தர்
முல்லை மென்புதல் முயலுகைத் தடங்குநீள் முல்லை. 16

பிளவு கொண்டதண் மதிநுதற் பேதையர் எயிற்றைக்
களவு கொண்டது தளவெனக் களவலர் தூற்றும்;
அளவு கண்டவர் குழல்நிறங் கனியும்அக் களவைத்
தளவு கண்டெதிர் சிரிப்பன தமக்குமுண் டென்று. 17

மங்கை யர்க்குவாள் விழியிணை தோற்றமான் குலங்கள்
எங்கும், மற்றவ ரிடைக்கிடை மலர்க்கொடி எங்கும்;
அங்கண் "முல்லையின் தெய்வ"மென் றருந்தமிழ் உரைக்கும்
செங்கண் மால்தொழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில். 18

---

பா - ம் — [1] சொல்லலாவன.

ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தாள[1]
வேண்டும்''எனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனரால். 46

''தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும்
அவமொன்று நெறிவீழ்வான் வீழாமே அருளும்''எனச்
சிவமொன்று நெறிநின்ற திலகவதி யார்பரவப்
பவமொன்றும் வினைதீர்ப்பார் திருவுள்ளம் பற்றுவார்[2] 47

மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழவிடையார்
''உன்னுடைய மனக்கவலை ஒழிநீ;உன் உடன்பிறந்தான்
முன்னமே முனியாகி எனை[3]அடையத் தவம்முயன்றான்
அன்னவனை இனிச்சூலை மடுத்தாள்வன்''[4] என அருளி. 48

பண்டுபுரி நற்றவத்துப்[5] பழுதினள விறைவழுவும்
தொண்டரைஆ ளத்தொடங்குஞ் சூலைவே தனைதன்னைக்
கண்டருநெற் றியர்அருளக் கடுங்கனல்போல் அடுங்கொடிய
மண்டுபெருஞ் சூலைஅவர் வயிற்றினிடைப் புக்கதால். 49

அடைவிலமண் புரிதரும சேனர்வயிற் றடையும்[6]அது
வடஅனலும் கொடுவிடமும் வச்சிரவும் பிறவுமாம்
கொடியஎலாம் ஒன்றாகும் எனக்குடரின் அகங்குடையப்
படருழந்து[7] நடுங்கிஅமண் பாழியறை யிடைவிழுந்தார். 50

அச்சமயத் திடைத்தாமுன் அதிகரித்து வாய்த்துவரும்[8]
விச்சைகளால் தடுத்திடவும் மேன்மேலும் மிகமுடுகி[9]
உச்சமுற வேதனைநோய் ஓங்கிஎழ ஆங்கவர்தாம்
நச்சரவின் விடந்தலைக்கொண் டெனமயங்கி நவையுற்றார். 51

அவர்நிலைமை கண்டதற்பின் அமண்கையர் பலர்ஈண்டிக்
''கவர்கின்ற விடம்போல்முன் கண்டறியாக் கொடுஞ்சூலை
இவர்தமக்கு வந்த(து);இனி யாதுசெயல்?'' என்றழிந்தார்
தவமென்று வினைபெருக்கிச் சார்பல்லா[10] நெறிசார்வார்.[11] 52

---

பா - ம்— [1] எடுத்தருள. [2] பற்றினார். [3] எமை. [4] தாள்வம். [5] பண்டுதவம் புரிதவத்து. [6] வயிற்றிடையும். [7] இடருழந்து. [8] வாய்த்தவரும். [9] அனல்முடுகி. [10] சார்வலா. [11] சார்வல்லார் நெறிச்சார்வார

புண்டலைவன் முருட்டமணர் புலர்ந்துசெயல் அறியாது
குண்டிகைநீர் மந்திரித்துக்[1] குடிப்பித்துந் தணியாமை
கண்டுமிகப் பீலிகொடு கால்அளவுந் தடவிடவும்
பண்டையினும் நோவுமிகப் பரிபவத்தால் இடர்உழந்தார் 53

தூவாத புகழ்த்தரும சேனருக்கு வந்தபிணி
ஓவாது நின்றிடலும் ஒழியாமை உணர்ந்தாராய்
"ஆ! ஆ! நாம் என்செய்கோம்" என்றழிந்த மனத்தினராய்ப்
போவார்கள் "இதுநம்மாற் போக்கரிதாம்" எனப்புகன்று. 54

குண்டர்களுங் கைவிட்டார்; கொடுஞ்சூலை மிசைக்[2]கொண்டு
மண்டிமிக மேன்மேலும் பெருகுத[3]லால் மதிமயங்கிப்
பண்டையுற வுணர்ந்தார்க்குத் திலகவதி யார்உளராக்
கொண்டவர்பால் ஊட்டுவான் தனைவிட்டார் குறிப்புணர்த்த.55

ஆங்கவன்போய்த் திருவதிகை தனைஅடைய அருந்தவத்தார்
பூங்கமழ்நந் தனவனத்தின் புறம்பணையக்[4] கண்டிறைஞ்சி
"ஈங்கியான் உமக்கிளையார் ஏவலினால் வந்த"தெனத்
"தீங்குளவோ" எனவினவ மற்றவனுஞ் செப்புவான். 56

"கொல்லாது[5] சூலைநோய் குடர்முடக்கித் திராமை[6]
எல்லாருங் கைவிட்டார் இதுசெயல்என் முன்பிறந்த
நல்லாள்பால் சென்றியம்பி நான்உய்யும் படிகேட்டிங்(கு)
அல்லாகும் பொழுதணைவாய் என்றார்"என் றறிவித்தான். 57

என்றவன்முன் கூறுதலும் "யான்அங்(கு)உன் னுடன்போந்து
நன்றறியா[7] அமண்பாழி[8] நண்ணுகிலேன் எனும்மாற்றம்
சென்றவனுக் குரை"என்று திலகவதி யார்மொழிய
அன்றவனும் மீண்டுபோய்ப் புகுந்தபடி அவர்க்குரைத்தான். 58

அவ்வார்த்தை கேட்டலுமே அயர்வெய்தி "இதற்கினியான்
எவ்வாறு செய்வன்?" என ஈசர்அருள் கூடுதலால்
"ஒவ்வாஇப் புன்சமயத் தொழியாஇத் துயரொழியச்
செவ்வாறு சேர்திலக வதியார்தாள் சேர்வன்"என. 59

---

பா - ம்—[1] மந்திரித்தும். [2] கைச். [3] முடுகு. [4] புறத்தணையக். [5] கோல்லாத. [6] தீராமே; தீராமல். [7] நன்கறியார். [8] பள்ளி.

ஈடுத்தமனக் கருத்துய்ய எழுதலால் எழுமுயற்சி
அடுத்தலுமே அயர்வொதுங்கத் திருவதிகை அணைவதனுக்(கு)
உடுத்துழலும் பாயொழிய உறியுறுகுண் டிகையொழியத்
தொடுத்தபீ லியும்ஒழியப் போவதற்குத் துணிந்தெழுந்தார். 60

பொய்தருமால் உள்ளத்துப் புன்சமணர் இடங்கழிந்து[1]
மெய்தருவான் நெறியடைவார் வெண்புடைவை மெய்சூழ்ந்து
கைதருவார் தமையூன்றிக் காணுமே இரவின்கண்
செய்தவமா தவர்வாழுந் திருவதிகை சென்றடைவார். 61

சுலவிவயிற் றகங்[2]கனலுஞ் சூலைநோ யுடன்தொடரக்
குலவியெழும் பெருவிருப்புக்[3] கொண்டணையக் குலவரைபோன்
றிலகுமணி மதிற்சோதி எதிர்கொள்திரு வதிகையினில்
திலகவதி யார்இருந்த திருமடத்தைச சென்றணைந்தார். 62

வந்தணைந்து திலகவதி யார்அடிமே லுறவணங்கி
"நந்தமது குலஞ்செய்த நற்றவத்தின் பயன்அனையீர்!
இந்தவுடற்கொடுஞ்சூலைக்கிடைந்தடைந்தேன்[4] இனிமயங்கா(து)
உய்ந்துகரை ஏறுநெறி உரைத்தருளும்" எனஉரைத்து. 63

தாளிணைமேல் விழுந்தயருந் தம்பியார் தமைநோக்கி
ஆளுடைய தம்பெருமான் அருள்நினைந்து கைதொழுது
"கோளிலபர சமயநெறிக் குழியில்விழுந் தறியாது
மூளும்அருந் துயர்உழந்தீர்! எழுந்திரீர்!" எனமொழிந்தார் 64

மற்றவுரை கேட்டலுமே மருணீக்கி யார்தாமும்
உற்றபிணி உடல்நடுங்கி எழுந்துதொழ உயர்தவத்தோர்
"கற்றைவே ணியர்அருளே காணும்இது, கழலடைந்தோர்
பற்றறுப்பார் தமைப்பணிந்து பணிசெய்வீர்" எனப்பணித்தார்.

என்றபொழு தவரருளை எதிரேற்றுக் கொண்டிறைஞ்ச
நின்றதபோ தனியாரும் நின்மலன்பேர் அருள்நினைந்து
சென்றுதிரு வீரட்டம் புகுவதற்குத் திருக்கயிலைக்
குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்தோ திக்கொடுத்தார்.66

பா-ம்—[1]இடங்கழித்து. [2]வயிற்றிடமே; வயிற்றடும். [3]பெருவியப்புக்.
[4]கிடைந்தடைந்தேன்.

திருவாளன் திருநீறு திலகவதி யார்அளிப்பப்
"பெருவாழ்வு வந்த"தெனப் பெருந்தகையார் பணிந்தேற்றங்
குருவார அணிந்துதமக் குற்றவிடத் துய்யுநெறி
தருவாராய்த் தம்முன்பு வந்தார்பின் தாம்வந்தார். 67

நீறணிந்தார் அகத்திருளும் நிறைகங்குல் புறத்திருளும்
மாறவருந் திருப்பள்ளி எழுச்சியினில் மாதவஞ்செய்
சீறடியார் திருவலகுந் திருமெழுக்குந் தோண்டியுங்கொண்(டு)
ஆறணிந்தார் கோயிலினுள் அடைந்தவரைக் கொடுபுக்கார். 68

திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக வரைச்சிலையார் பெருங்கோயில் தொழுதுவலங் கொண்டிறைஞ்சித், தரைத்தலத்தின் மிசைவிழுந்து தம்பிரான் திருவருளால், உரைத்தமிழ்மா லைகள்சாத்தும் உணர்வுபெற உணர்ந்துரைப்பார். 69

நீற்றால்நிறை வாகிய மேனியுடன் நிறைஅன்புறு சிந்தையில் நேசமிக, மாற்றார்புரம் மாற்றிய வேதியரை மருளும்பிணி மாயை அறுத்திடுவான், "கூற்றாயின வாறு விலக்ககிலீர்" என நீடிய கோதில் திருப்பதிகம், போற்றாலுல கேழின் வருந்துயரும் போமாறெதிர் நின்று புகன்றனரால். 70

மன்னும்பதி கம்மது பாடியபின் வயிறுற்றடு சூலை மறப்பிணிதான், அந்நின்ற நிலைக்கண் அகன்றிடலும் "அடியேன்உயிரோடருள தந்த"தெனுச், செந்நின்ற பரம்பொரு ளானவர்தம் திருவாரருள் பெற்ற சிறப்புடையோர், முன்னின்ற தெருட்சி மருட்சியினால் முதல்வன்கரு ணைக்கடல் மூழ்கினரே. 71

அங்கங்கள் அடங்கஉ ரோமமெலாம் அடையப்புள கங்கண் முகிழ்த்தலரப், பொங்கும்புனல் கண்கள் பொழிந்திழியப் புவிமீது விழுந்து புரண்டயர்வார், "இங்கென்செய லுற்ற பிழைப்பதனால் ஏருத பெருந்திட ரேறிட[1]நின், தங்குங்கரு ணைப்பெரு வெள்ளமிடத் தகுமோ?" என இன்னன தாம்மொழிவார். 72

"பொய்வாய்மை பெருக்கிய புன்சமயப் பொறியில்சமண் நீசர் புறத்துறையாம், அவ்வாழ்குழி யின்கண் விழுந்தெழுமா

பா - ம்—[1] ரேற்றிட.

றறியாது மயங்கி அவம்புரிவேன், மைவாச நறுங்குழல் மாமலை யாள் மணவாளன் மலர்க்கழல் வந்தடையும், இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக் கெதிர்செய்குறை என்கொல்?'' எனத் தொழுவார்.[1] 73

மேவுற்றஇவ் வேலையில் நீடியசீர் வீரட்டம் அமர்ந்த பிரான் அருளால், "பாவுற்றலர்[2] செந்தமி ழின்சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால், நாவுக்கர சென்றுல கேழி னும்நின் நன்னாமம்[3] நயப்புற மன்னுக'' என், றியாவர்க்கும் வியப்புற மஞ்சுறைவா னிடையே ஒரு வாய்மை எழுந்ததுவே.

இத்தன்மை நிகழ்ந்துழி நாவின்மொழிக் கிறையாகிய அன்பரும் "இங்கெடுநாள், சித்தந்திகழ் தீவினை யேன்அடையுந் திருவோஇது?'' என்று தெருண்டறியா, அத்தன்மைய னாய இராவணனுக் கருளுங்கரு ணைத்திற மானஅதன், மெய்த் தன்மை அறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு வணங்கினர் மெய்யுறவே. 75

"பரசுங்கரு ணைப்பெரி யோன்அருளப் பறிபுன்றலை யோர் நெறி பாழ்படவ(து), அரசிங்கருள் பெற்றுல குய்ந்த(து)''என அடியார்புடை சூழதி கைப்பதிதான், முரசம்பட கந்துடி தண்ணுமையாழ் முழவங்கிளை துந்துபி கண்டையுடன், நிரைசங் கொலி எங்கும் முழங்குதலால் நெடுமாகடல் என்ன நிறைந் துளதே. 76

மையற்றுறை ஏறி மகிழ்ந்தலர்சீர் வாகீசர் மனத்தொடு வாய்மையுடன், மெய்யுற்ற திருப்பணி செய்பவராய் விரவுஞ் சிவ சின்னம் விளங்கிடவே, எய்துற்ற தியானம் அருவுணர்வும் ஈறின்றி எழுந்திரு வாசகமும், கையில்திக ழும்உழ வாரமுடன் கைக்கொண்டு[4] கலந்து கசிந்தனரே.[5] 77

மெய்ம்மைப்பணி செய்த விருப்பதனால் விண்ணோர்தனி நாயக னார்கழலில், தம்மிச்சை நிரம்ப வரம்பெறும்அத் தன்மைப்

பா - ம்—[1] தொழுதார். [2] அருளப், பாவுற்றவர். [3] நாமங்கள். [4] கைத்தொண்டே; கைகொண்டே. [5] கசிந்து கலந்தனரே.

பதி மேவிய தாபதியார், "பொய்ம்மைச்சம யப்பிணி விட்டவர் முன் போதும்பிணி விட்டரு ளிப்பொருளா, எம்மைப்பணி கொள்கருணைத் திறமிங் கியார்பெற்றனர்?" என்ன இறைஞ் சினரே. 78

இன்ன தன்மையில் இவர்சிவ நெறியினை எய்தி
மன்னு பேரருள் பெற்றிடர் நீங்கிய[1] வண்ணம்
பன்னு தொன்மையிற் பாடலி புத்திர நகரில்
புன்மை யேபுரி அமணர்தாம் கேட்டது பொறுராய். 79

"தரும சேனர்க்கு வந்தஅத் தடுப்பருஞ் சூலை
ஒருவ ராலும்இங் கொழிந்திடா மையின்அவ ருயப்போய்ப்
பெருகு சைவராய்ப் பெயர்ந்துதம் பிணியொழித் துய்ந்தார்;
மருவு நம்பெருஞ் சமயம்வீழ்ந் தது"என மருள்வார். 80

"மலையும் பல்சம யங்களும் வென்றுமற் றவரால்
நிலையும் பெற்றஇந் நெறிஇனி அழிந்த"தென் றழுங்கிக் [வோர்
'கொலையும் பொய்ம்மையும் இல'மென்று[2] கொடுமையே[3] புரி
தலையும் பீலியும் தாழவந் தொருசிறை சார்ந்தார். 81

இவ்வ கைப்பல அமணர்கள் துயருடன் ஈண்டி
"மெய்வ கைத்திறம் அறிந்திடில் வேந்தனும் வெகுண்டு
சைவ னாகிநம் விருத்தியுந் தவிர்க்கும்மற் றினிநாம்
செய்வ தென்?' என வஞ்சனை தெரிந்துசித் திரிப்பார்." 82

"தவ்வை சைவத்து நிற்றலின் தருமசே னருந்தாம்
பொய்வ குத்ததோர் சூலைதீர்ந் திலதெனப் போயிங்
கெவ்வ மாகஅங் கெய்தி[4]நஞ் சமயலங் கனமும்
தெய்வ நிந்தையும் செய்தனர்" எனச்சொலத் தெளிந்தார். 83

சொன்ன வண்ணமே செய்வது துணிந்ததுன் மதியோர்
"முன்னம் நாம்சென்று முறைப்படு வோம்"என முயன்றே
இன்ன தன்மையில் இருட்குழாஞ் செல்வது போல
மன்ன னாகிய பல்லவன் நகரில்வந் தணைந்தார். 84

---

பா - ம்—[1] நீங்கின. [2] இலவென்று. [3] கொடுந்தொழில். [4] வந் தெய்தி.

உடை ஒழிந்தொரு பேச்சிடை யின்றிநின் றுண்போர்
கடை அணைந்தவன் வாயில்கா வலருக்கு "நாங்கள்
அடைய வந்தமை அரசனுக் கறிவியும்" என்ன
இடை அறிந்துபுக் கவருந்தம் இறைவனுக் கிசைப்பார். 85

"அடிகண்மார் எல்லாரும் ஆகுலமாய் மிகஅழிந்து, கொடி நுடங்கு திருவாயிற் புறத்தணைந்தார்" எனக்கூற, வடிநெடு வேல் மன்னவனும் மற்றவர்சார் பாதலினால், கடிதணைவான் "அவர்க்குற்ற தென்கொல்" எனக் கவன்று[1]ரைத்தான். 86

கடைகாவ லுடையார்கள் புகுதவிடக் காவலன்பால்
நடையாடுந் தொழிலுடையார் நண்ணித்தாம் எண்ணியவா(று)
"உடையாரா கியதரும சேனர்பிணி உற்றாராய்ச்
சடையானுக் காளாய்நின் சமயம்ஒழித் தார்" [2]என்றார். 87

விரையலங்கற் பல்லவனும் அதுகேட்டு வெகுண்டெழுந்து, "புரையுடைய மனத்தினராய்ப் போவதற்குப் பொய்ப்பிணி கொண்(டு), உரைசிறந்த சமயத்தை அழித்தொழியப் பெறுவதே? கரையில்தவத் தீர்! இதனுக் கென்செய்வ(து)?" எனக் கனன்றான். 88

"தலைநெறியா கியசமயந் தன்னையழித்(து) உன்னுடைய
நிலைநின்ற தொல்வரம்பின் நெறியழித்த பொறியிலியை
அலைபுரிவாய்" [3] எனப்பரவி [4] வாயால்அஞ் சாதுரைத்தார்
கொலைபுரியா நிலைகொண்டு பொய்யொழுகும் அமண்குண்டர்.

அருள்கொண்ட உணர்வின்றி நெறிகோடி அறிவென்று, மருள்கொண்ட மன்னவனும் மந்திரிகள் தமைநோக்கித், "தெருள்கொண்டோர் இவர்சொன்ன தீயோனைச் செறுவதற்குப், பொருள்கொண்டு விடாதென்பால் கொடுவாரும்" எனப் புகன்றான். 90

அரசனது பணிதலைநின் றமைச்சர்களும் அந்நிலையே
முரசதிருந் தானையொடு முன்சென்று முகில்சூழ்ந்து

பா - ம்—[1] கனன்று. [2] அழித்தார். [3] அலைபுரிவோம். [4] பாவி.

விரைசெறியுஞ் சோலைசூழ் திருவதிகை தனைமேவிப்
பரசமயப் பற்றறுத்த பான்மையினுர் பாற்சென்ருர். 91

சென்றணைந்த அமைச்சருடன் சேனைவீ ரருஞ்சூழ்ந்து, மின்
தயங்கு புரிவேணி வேதியனுர் அடியவரை, "இன்று நுமை
அரசன்அழைக் கெமை[1]விடுத்தான்; போதும்" என, நின்றவரை
நேர்நோக்கி நிறைதவத்தோர் உரைசெய்வார். 92

"நாமார்க்குங் குடியல்லோம்" என்றெடுத்து நான்மறையின்
கோமானை நதியினுடன் குளிர்மதிவாழ் சடையானைத்
தேமாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண் டகம்பாடி
"ஆமாறு நீரழைக்கும் அடைவிலம்"என் றருள்செய்தார். 93

ஆண்டஅர சருள்செய்யக் கேட்டவரும் அடிவணங்கி,
வேண்டியவர்க் கொண்டேக விடையுகைத்தார் திருத்தொண்டர்,
"ஈண்டுவரும் வினைகளுக்கெம் பிரான்உளன்"என் றிசைந்திருந்
தார்;, மூண்டசினப் போர்மன்னன் முன்னணைந்தங் கறிவித்தார்.

பல்லவனும் அதுகேட்டுப் பாங்கிருந்த பாயுடுக்கை
வல்லமணர் தமைநோக்கி "மற்றவனைச் செய்வதினிச்
சொல்லும்"என அறந்துறந்து தமக்குறுதி அறியாத
புல்லறிவோர் அஞ்சாது நீற்றறையில் இடப்புகன்ருர். 95

அருகணைந்தார் தமைநோக்கி "அவ்வண்ணஞ் செய்க"
எனப், பெருகுசினக் கொடுங்கோலான் மொழிந்திடலும் பெருந்
தகையை, உருகுபெருந் தழல்வெம்மை நீற்றறையின் உள்ளி
ருத்தித், திருகுகருந் தாட்கொளுவிச் சேமங்கள் செய்
தமைத்தார். 96

ஆண்டஅர(சு) அதனகத்துள் அணைந்தபொழு தம்பலத்துத்
தாண்டவமுன் புரிந்தருளுந் தாள்நிழலைத் தலைக்கொண்டே
"ஈண்டுவருந் துயருளவோ[2] ஈசன்அடி யார்க்"கென்று
மூண்டமனம் நேர்நோக்கி முதல்வனையே தொழுதிருந்தார். 97

வெய்யநீற் றறையதுதான் வீங்கிளவே னிற்பருவம்
தைவருதண தென்றல்அணை[3] தண்கழுநீர்த் தடம்போன்று

பா - ம்—[1] அழைத்தெமை. [2] துயருளதோ. [3] தென்றலலைத்.

மொய்யொளி[1]வெண் ணிலவலர்ந்து முரன்றயாழ் ஒலியினதாய்
ஐயர்திரு வடிநிழல் அருளாகிக் குளிர்ந்ததே. 98

மாசில்மதி நீடுபுனல் மன்னிவளர் சென்னியனைப்
பேசஇனி யானைஉல காளுடைய பிஞ்ஞகனை
ஈசனைஎம் பெருமானை எவ்வுயிருந் தருவானை[2]
ஆசையில்ஆ ராவமுதை அடிவணங்கி இனிதிருந்தார். 99

ஓரெழு நாள் கழிந்ததற்பின் உணர்வில்அம ணரைஅழைத்துப்
"பாரும் இனி நீற்றறையை" என உரைத்தான் பல்லவனும்,
காரிருண்ட குழாம்போலும் உருவுடைய காரமணர்
தேருநிலை இல்லாதார் நீற்றறையைத் திறந்தார்கள். 100

ஆனந்த வெள்ளத்தின் இடைமூழ்கி அம்பலவர்
தேனுந்து மலர்ப்பாதத் தமுதுண்டு தெளிவெய்தி
ஊனந்தான் இலராகி உவந்திருந்தார் தமைக்கண்டே[3]
"ஈனந்தங் கியதிலதாம்[4] என்னஅதி சயம்!"என்றார். 101

"அதிசயம்அன் றிது;முன்னை அமண்சமயச் சாதகத்தால்
இதுசெய்து பிழைத்திருந்தான்" எனவேந்தற் குரைசெய்து
"மதிசெய்வ தினிக்கொடிய[5] வல்விடமூட் டுவ"தென்று
முதிரவரும் பாதகத்தோர் முடைவாயால் மொழிந்தார்கள். 102

ஆங்கதுகேட் டலுங்கொடிய அமண்சார்பால் கெடுமன்னன்
ஓங்குபெரு மையலினால் "நஞ்சூட்டும்" எனஉரைப்பத்
தேங்காதார் திருநாவுக் கரயரை[6] அத் தீயவிடப்
பாங்குடைய பாலடிசில் அமுதுசெயப் பண்ணினார். 103

"நஞ்சும்அமு தாம்[7] எங்கள் நாதன்[8]அடி யார்க்"கென்று
வஞ்சமிகு நெஞ்சுடையார் வஞ்சனையாம் படியறிந்தே
செஞ்சடையார் சீர்விளக்குந்[9] திறலுடையார் தீவிடத்தால்
வெஞ்சமணர் இடுவித்த பாலடிசில் மிசைந்திருந்தார். 104

---

பா - ம்—[1] மொய்யளி. [2] எவ்வுலகுந் தருவானை. [3] தம்மைக்கண்டு. [4] ஈனந்தாங்கியதிலதால். [5] கடிய [6] திருநாவுக்கரசரை ; திருநாவுக்கரசினை. [7] நஞ்சமுதமாம். [8] நாதர். [9] சீர்விளங்குந்.

பொடியார்க்குந் திருமேனிப் புனிதர்க்குப் புவனங்கண்
முடிவார்க்குந் துயர்நீங்க முன்னைவிடம் அமுதானால்
படியார்க்கும் அறிவரிய[1] பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சமுதம் ஆவதுதான் அற்புதமோ? 105

அவ்விடத்தை ஆண்டஅர சமுதுசெய்து முன்னிருப்ப
"வெவ்விடமும் அமுதாயிற்" றெனஅமணர் வெருக்கொண்டே
இவ்விடத்தில் இவன்பிழைக்கில் எமக்கெல்லாம் இறுதி" எனத்
தெவ்விடத்துச் செயல்புரியுந் தாவலற்குச் செப்புவார். 106

"நஞ்சுகலந் தூட்டிடவும் நஞ்சமயத் தினில்விடந்தீர்
தஞ்சமுடை மந்திரத்தால் சாதியா வகைதடுத்தான்;
எஞ்சும்வகை அவற்கிலதேல் எம்முயிரும் நின்முறையும்[2]
துஞ்சுவது[3] திடம்" என்றார் சூழ்வினையின் துறைநின்றார். 107

மற்றவர்தம் மொழிகேட்டு மதிகெட்ட மன்னவனும்
"செற்றவனை இனிக்கடியுந் திறம்எவ்வா(று)?" எனச்செப்ப
உற்றவரும் "மந்திரசா தகநாங்கள் ஒழித்திடநின்
கொற்றவயக் களிற்றெதிரே விடுவ" தெனக்[4] கூறினார். 108

மாபாவிக் கடையமணர் வாகீசத் திருவடியாம்
காபாலி அடியவர்பால் "கடக்களிற்றை விடு" கென்னப்
பூபாலர் செயல்மேற்கொள் புலைத்தொழிலோன் அவர்தம்மேல்
கோபாதி சயமான கொலைக்களிற்றை[5] விடச்சொன்னான். 109

கூடத்தைக் குத்திஒரு குன்றமெனப் புறப்பட்டு
மாடத்தை மறித்திட்டு[6] மண்டபங்கள்[7] எடுத்தெற்றித்
தாடத்திற் பரிக்காரர் தலைஇடறிக் கடக்களிற்றின்
வேடத்தால் வருங்கூற்றின் மிக்கதொரு[8] விறல்வேழம். 110

பாசத்தொடை நிகளத்தொடர் பறியத்தறி[9] முறியா
மீசுற்றிய பறவைக்குலம் வெருவத்துணி விலகா[10]

---

பா - ம்—[1] அறிவரிதாம். [2] நிரைமுறையும்; நம்முறையும். [3]துஞ்சுமது [4] ஒழிந்திடநின்—இடுவதெனக்; இடுகவெனக். [5] குலக்களிற்றை. [6] மதித்திட்டு; மறுத்திட்டு; பறித்திட்டு. [7] மண்டபத்தை. [8] மிகைத்ததொரு. [9] உதறிப்பறி; உலறிப்பறி. [10] துனிவிலகா; துளிவிலகா.

ஊசற்கரம் எதிர்சுற்றிட உரறிப்பரி உழறு
வாசக்கட மழைமுற்பட மதவெற்பெதிர் வருமால். 111

இடியுற்றெழும் ஒலியில்திசை இபமுட்கிட அடியில்
படிபுக்குற[1] நெளியப்படர் பவனக்கதி விசையில்
கடிதுற்றடு[2] செயலிற்கிளர்[3] கடலிற்படு கடையின்
முடிவிற்கன லெனமுற்சினம் முடுகிக்கடு கியதே. 112

மாடுற்றணை இவுளிக்குலம் மறியச்செறி வயிரக்
கோடுற்றிரு பிளவிட்டறு குறைகைக்கொடு முறியச்
சாடுற்றிடு மதில்தெற்றிகள் சரியப்புடை அணிசெற்(று)[4]
ஆடுற்றகல் வெளியுற்ற(து),அவ் வடர்கைக்குல வரையே. 113

பாவக்கொடு வினைமுற்றிய படிறுற்றடு[5] கொடியோர்
நாவுக்கர செதிர்முற்கொடு நணுகிக்கரு வரைபோல்[6]
ஏவிச்செறு[7] பொருகைக்கரி யினைஉய்த்திட வெருளார்
சேவிற்றிகழ் பவர்பொற்கழல் தெளிவுற்றனர் பெரியோர். 114

அண்ணல் அருந்தவ வேந்தர் ஆனைதம் மேல்வரக் கண்டு
விண்ணவர் தம்பெரு மானை விடையுகந் தேறும் பிரானைச்
"சுண்ணவெண் சந்தனச் சாந்து" தொடுத்த திருப்பதி கத்தை
மண்ணுல குய்ய எடுத்து மகிழ்வுட னேபாடு கின்றார். 115

வஞ்சகர் விட்ட சினப்போர் மதவெங் களிற்றினை நோக்கிச்
"செஞ்சடை நீள்முடிக் கூத்தர் தேவர்க்குந் தேவர் பிரானார்
வெஞ்சுடர்[8] மூவிலைச் சூல வீரட்டர் தம்அடி யோம்நாம்!
அஞ்சுவ தில்லை"என் றென்றே அருந்தமிழ் பாடி அறைந்தார்.

தூண்டமிழ் மாலைகள் பாடித் தம்பெரு மான்சர ணாகக்
கொண்ட கருத்தில் இருந்து குலாவிய அன்புறு கொள்கைத்
தொண்டரை முன்வல மாகச் சூழ்ந்தெதிர் தாழ்ந்து நிலத்தில்
எண்டிசை யோர்களுங் காண இறைஞ்சி எழுந்தது வேழம்.[9] 117

---

பா - ம்—[1] படிபுக்கற. [2] கடிதுற்றிடு. [3] செலவிற்கிளர். [4] அணி சென்று; அளிசெற்று. [5] படிறுய்த்திடு; படிதுற்றடு; படிறுற்றிடு. [6] கரைவரைமேல் [7] ஏவச்செறு. [8] வெஞ்சிலை. [9] அவ்வேழம்.

ஆண்ட அரசை வணங்கி அஞ்சிஅவ்[1] வேழம் பெயரத்
தூண்டிய மேன்மறப் பாகர் தொடக்கி அடர்த்துத் திரித்து
மீண்டும் அதனை அவர்மேல் மிறைசெய்து காட்டிட வீசி
ஈண்டவர் தங்களை யேகொன் றமணர்மேல் ஓடிற் றெதிர்ந்தே.[2]

ஓடி அருகர்கள் தம்மை உழறி மிதித்துப் பிளந்து
நாடிப் பலரையுங் கொன்று நகரங் கலங்கி மறுக
**நீடிய வேலை கலக்கும் நெடுமந் தரகிரி போல**[3]
ஆடிஅவ் யானையும்[4] மன்னற் காகுலம் ஆக்கிய தன்றே. 119

**யானை**யின் கையிற் பிழைத்த வினைஅமண்[5] கையர்கள் எல்லாம், மானம் அழிந்து மயங்கி வருந்திய சிந்தைய ராகித், தானை நிலமன்னன் தாளில் தனித்தனி வீழ்ந்து புலம்ப, மேன்மை நெறிவிட்ட வேந்தன் வெகுண்“டினிச் செய்வதென்” என்றான்.

“நங்கள் சமயத்தின் நின்றே நாடிய முட்டி நிலையால்
எங்கள் எதிரே றழிய யானையால் இவ்வண்ணம் நின்சீர்
பங்கப் படுத்தவன் போகப் பரிபவந் தீரும் உனக்குப்
**பொங்கழல் போக அதன்பின் புகையகன் று**வென”என்றார்.

அல்லிருள் அன்னவர் கூற அரும்பெரும் பாவத் தவன்தான்,[6] “தொல்லைச் சமயம் அழித்துத் துயரம் விளைத்தவன் தன்னைச், சொல்லும் இனிச்செய்வ” தென்னச் சூழ்ச்சி முடிக்குந் தொழிலோர், “கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுவ(து)”[7] என்றார். 122

ஆங்கது கேட்ட அரசன்[8] அவ்வினை மாக்களை நோக்கித்
“தீங்கு புரிந்தவன் தன்னைச் சேமம் உறக்கொடு[9] போகிப்
பாங்கொரு கல்லில் அணைத்துப் பாசம் பிணித்தோர் படகில்
வீங்கொலி வேலையில் எற்றி[10] வீழ்த்துமின்” என்று விடுத்தான்.

அவ்வினை செய்திடப் போகும் அவருடன் போயரு கந்த
வெவ்வினை யாளருஞ் சென்று மேவிட நாவுக் கரசர்

---

பா - ம்—[1] அஞசிய. [2] றெதிர்த்தே. [3] என்ன. [4] ஆடியல் யானையும்; ஆடிய யானையும். [5] அவ்வமண்; இவ்வைய அமண். [6] தவன்பின். [7] பாய்ச்சுக. [8] கேட்டவ்வரசன். [9] செம்மைபெறக் கொண்டு. [10] ஏற்றி.

செவ்விய தந்[1]திரு வுள்ளஞ் சிறப்ப அவருடன் சென்றார்;
பவ்வத்தில் மன்னவன் சொன்ன படிமுடித் தார்அப் பதகர். 124

அப்பரி சவ்வினை முற்றி அவரகன் றேகிய பின்னர், ஒப்பரும் ஆழ்கடல்[2] புக்க உறைப்புடை மெய்த்தொண்டர் தாமும், "எப்பரி சாயினும் ஆக ஏத்துவன் எந்தையை" என்று, செப்பிய வண்டமிழ் தன்னால் சிவன்அஞ் செழுத்துந் துதிப்பார். 125

"சொற்றுணை வேதியன்" என்னுந் தூய்மொழி[3]
நற்றமிழ் மாலையா "நமச்சி வாய" என்(று)
அற்றமுன் காக்கும்அஞ் செழுத்தை அன்பொடு
பற்றிய உணர்வினால் பதிகம் பாடினார். 126

பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமல ரோன்[4]முதல் அமரர் வாழ்த்துதற்
கரியஅஞ் செழுத்தையும் அரசு போற்றிடக்
கருநெடுங் கடலினுட் கல்மி தந்ததே. 127

அப்பெருங் கல்லும்அங்(கு)[5] அரசு மேல்கொளத்
தெப்பமாய் மிதத்தலில் செறிந்த[6] பாசமும்
தப்பிய(து) அதன்மிசை இருந்த[7] தாவில்சீர்
மெய்ப்பெருந் தொண்டனார் விளங்கித் தோன்றினார். 128

இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ? 129

அருள்நயந் தஞ்செழுத் தேத்தப் பெற்றஅக்
கருணைநா வரசினைத் திரைக்க ரங்களால்
தெருள்நெறி நீர்மையின்[8] சிரத்தில் தாங்கிட[9]
வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம். 130

---

பா - ம்—[1] செவ்விய தாங். [2] மா கடல்; மாககடல். [3] தூமொழி. [4] வருமலரோன். [5] ஆங்கு. [6] செறித்த. [7] தப்பின அதன்மிசை இருந்து. [8] நேர்மையின். [9] தாங்கிடல்.

வாய்ந்தசீர் வருணனே வாக்கின் மன்னரைச்
சேர்ந்தடை கருங்கலே சிவிகை ஆயிட
ஏந்தியே கொண்டெழுந் தருளு வித்தனன்
பூந்திருப் பாதிரிப் புலியூர்ப் பாங்கரில்.[1] 131

அத்திருப் பதியினில் அணைந்த அன்பரை
மெய்த்தவக் குழாமெலாம் மேவி ஆர்த்தெழ
எத்திசை யினும்அர என்னும் ஓசைபோல்
தத்துநீர்ப் பெருங்கடல் தானும் ஆர்த்ததே. 132

தொழுந்தகை நாவினுக் கரசுந் தொண்டர்முன்
செழுந்திருப் பாதிரிப் புலியூர்த் திங்கள்வெண்
கொழுந்தணி சடையரைக்[2] கும்பிட் டன்புற
விழுந்தெழுந் தருள்நெறி விளங்கப் பாடுவார். 133

"ஈன்றாளு மாய்எனக் கெந்தையு மாகி" எனஎடுத்துத், "தோன்றாத் துணையாய் இருந்தனன் தன்அடி யோங்கட்(கு)" என்று, வான்தாழ் புனற்கங்கை வாழ்[3]சடை யானைமற் றெவ்வுயிர்க்கும், சான்றாம் ஒருவனைத் தண்டமிழ் மாலைகள் சாத்தினரே. 134

மற்றும் இனையன வண்டமிழ் மாலைகள் பாடிவைகி
வெற்றி மழவிடை வீரட்டர் பாதம் மிகநினைவால்[4]
உற்றதொர் காதலின் அங்குநின் றேகி[5]ஒன் னார்புரங்கள்
செற்றவர் வாழுந் திருவதி கைப்பதி சென்றடைவார்.[6] 135

தேவர் பிரான்திரு மாணி குழியுந் தினைநகரும்[7]
மேவினர் சென்று விரும்பிய சொன்மலர் கொண்டிறைஞ்சிப்
பூவலர் சோலை மணமடி[8] புல்லப் பொருள்மொழியின்
காவலர் செல்வத் திருக்கெடி லத்தைக் கடந்தணைந்தார். 136

வெஞ்சமண் குண்டர்கள் செய்வித்த[9] தீய மிறைகளெல்லாம்
எஞ்சவென் றேறிய இன்தமிழ் ஈசர் எழுந்தருள

பா - ம்—[1] பாங்கினில். [2] சடையனைக். [3] வார். [4] நினைவில். [5] நின்றெய்தி. [6] சென்றணைவார். [7] திருநகரும். [8] மலரடி. [9] செய்தவித்.

மஞ்சிவர் மாடத் திருவதி கைப்பதி வாணர்எல்லாம்
தஞ்செயல் பொங்கத் தழங்கொலி மங்கலஞ் சாற்றலுற்றார். 137

மணிநெடுந் தோரணம் வண்குலைப் பூகம் மடற்கதலி
இணையுற நாட்டி எழுநிலைக் கோபுரந் தெற்றிஎங்கும்
தணிவில் பெருகொளி தாமங்கள் நாற்றிச்செஞ் சாந்துநீவி [1]
அணிநகர் முன்னை அணிமேல் அணிசெய்(து) அலங்கரித்தார்

மன்னிய அன்பின் [2] வளநகர் மாந்தர் வயங்கிழையார், இன்னிய நாதமும் ஏழிசை ஓசையும் எங்கும்விம்மப், பொன்னியல் சுண்ணமும் பூவும் பொரிகளும் தூவிஎங்கும், தொன்னகரின் புறஞ் சூழநெதிர் கொண்டனர் தொண்டரையே. 139

தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியுந் தாழ்வடமும், நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப், பாய்வது போல்அன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல், மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே. 140

கண்டார்கள் கைதலை மேல்குவித்(து) "இந்தக் கருணை கண்டால, மிண்டாய செய்கை அமண்கையர் தீங்கு விளைக்கச் செற்றம், உண்டா யினவண்ணம் எவ்வண்ணம்?" என்றுரைப் பார்கள் பின்னும், தொண்டாண்டு கொண்ட பிரானைத் தொழுது துதித்தனரே. 141

இவ்வண்ணம் போல எணைப்பல மாக்கள் இயம்பிஏத்த, மெய்வண்ண நீற்றொளி மேவும் குழாங்கள் விரவிச்செல்ல, அவ்வண்ணம் நண்ணிய அன்பரும் வந்தெய்தி அம்பவளச், செவ் வண்ணர் கோயில் திருவீரட் டானத்தைச் சேர்ந்தனரே. 142

உம்பர்தங் கோனை உடையபிரானைஉள் புக்கிறைஞ்சி, நம்புறும் அன்பின் நயப்புறு காதலி னால்திளைத்தே, "எம்பெருமான்தனை ஏழையேன் நான்பண் டிகழ்ந்த"தென்று, தம்பிரி வால்திருத் தாண்டகச் செந்தமிழ் சாற்றிவாழ்ந்தார்.[3] 143

அரிஅயனுக் கரியானை அடியவருக் கெளியானை
விரிபுனல்சூழ் திருவதிகை வீரட்டா னத்(து)அமுதைத்

பா - ம்—[1] சாந்தநீவி. [2] அன்பர். [3] சாற்றினரே.

தெரிவரிய பெருந்தன்மைத் திருநாவுக் கரசுமனம்
பரிவுறுசெந் தமிழ்ப்பாட்டுப் பலபாடிப் பணிசெயுநாள். 144

புல்லறிவிற் சமணர்க்காப் பொல்லாங்கு புரிந்தொழுகும்
பல்லவனும் தன்னுடைய பழவினைப்பா சம்பறிய
அல்லல்ஒழிந் தங்கெய்தி ஆண்டஅர சினைப்பணிந்து
வல்லமணர் தமைநீத்து மழவிடையோன் தாளடைந்தான். 145

விடறியாச் சமணர்மொழி பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனும் திருவதிகை நகரின்கட் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்தில்அமண் பள்ளியொடு பாழிகளும்
கூடஇடித் துக்கொணர்ந்து குணபரவீச் சரம்எடுத்தான். 146

இந்நாளில் திருப்பணிகள் செய்கின்ற இன்றமிழ்க்கு, மன்னுன வாகீசத் திருமுனியும மதிச்சடைமேல், பனுகம் அணிந்தவர்தம் பதிபலவுஞ் சென்றிறைஞ்சிச், சொன்மைத் தமிழ் புனைந்து தொண்டுசெய்வான் தொடர்ந்தெழுவார். 146

திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும், அருளுதிரு ஆமாத்தூர் திருக்கோவ லூர்முதலா, மருவுதிருப் பதி பிறவும் வணங்கிவளத் தமிழ்பாடிப், பெருகுவிருப் புடன்விடையார் மகிழ்பெண்ணா கடம்அணைந்தார். 148

கார்வளரும் மாடங்கள் கலந்தமறை ஒலிவளர்க்குஞ்
சீருடைஅந் தணர்வாழுஞ் செழும்பதியின் அகத்தெய்தி
வார்சடையார் மன்னுதிருத் தூங்கானை மாடத்தைப்
பார்பரவுந் திருமுனிவர் பணிந்தேத்திப் பரவினார். 149

"புன்னெறியாம் அமண்சமயத் தொடக்குண்டு போந்தவுடல்
தன்னுடனே உயிர்வாழத் தரியேன்நான், தரிப்பதனுக்(கு)
என்னுடைய நாயக! நின் இலச்சினையிட் டருள்" என்று
பன்னுசெழுந் தமிழ்மாலை முன்னின்று பாடுவார். 150

"பொன்னார்ந்த திருவடிக்கென் விண்ணப்பம்" என்றெடுத்து[1]
முன்னாகி எப்பொருட்கும் முடிவாகி நின்றானைத்
தன்னாகத் துமைபாகங் கொண்டானைச் சங்கரனை
நன்மைத் திருவிருத்தம் நலஞ்சிறக்கப் பாடுதலும். 151

பா - ம்—[1] என எடுத்து.

நீடுதிருத் தூங்கானை மாடத்து நிலவுகின்ற
ஆடகமே ருச்சிலையான் அருளாலோர் சிவபூதம்
மாடொருவர் அறியாமே வாகீசர் திருத்தோளில்
சேடுயர்மூ விலைச்சூலம் சினவிடையி னுடன்சாத்த. 152

ஆங்கவர்தந் திருத்தோளில் ஆர்ந்ததிரு இலச்சினையைத்
தாங்கண்டு மனங்களித்துத் தம்பெருமான் அருள்நினைந்து[1]
தூங்கருவி கண்பொழியத் தொழுதுவிழுந் தார்வத்தால்
ஓங்கியசிந் தையராகி "உய்ந்தொழிந்தேன்" எனஎழுந்தார். 153

தூங்கானை மாடத்துச் சுடர்க்கொழுந்தின்[2] அடிபரவிப்
பாங்காகத் திருத்தொண்டு செய்துபயின் றமருநாள்
பூங்கானம்[3] மணங்கமழும் பொருவில்திரு அரத்துறையும்
தேங்காவின் முகில்உறங்குந் திருமுதுகுன் றமும்பணிந்து 154

வண்டமிழ்மென் மலர்மாலை புனைந்தருளி மருங்குள்ள
தண்டுறைநீர்ப் பதிகளிலுந் தனிவிடையார் மேவியிடங்
கொண்டருளுந் தானங்கள் கும்பிட்டுக் குணதிசைமேல்
புண்டரிகத் தடஞ்சூழ்ந்த நிவாக்கரையே போதுவார். 155

ஆறுதை சீர்த்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
வாறுறு புடைபரக்கும் மலர்ச்சடையார் அடிவணங்கி
ஊனாலும் உயிராலும் உள்ளபயன் கொளநினைந்து
தேனாரும் மலர்ச்சோலைத் திருப்புலியூர் மருங்கணைந்தார். 156

நாவுக்கரசரும் இருவர்க் கரியவர் நடமா டியதிரு எல்லைப் பால், மேவித் தலமுற மெய்யில் தொழுதபின் மேன்மேல் எழுதரும் விரைவோடும்,[4] காவிற் களிமயில்[5] மகிழ்வுற் றெதிரெதி ராடக் கடிகமழ் கமலஞ்சூழ், வாவித் தடமலர் வதனம் பொலிவுறு மருதத் தண்பணை வழிவந்தார். 157

முருகிற் செறிஇதழ் முளரிப் படுகரில் முதுமே திகள்புது மலர் மேயும், அருகிற் செறிவன மெனமிக் குயர்கழை அளவிற் பெருகிட வளர்இக்குப், பெருகிப் புடைமுதிர் தரளஞ் சொரி

பா - ம்—[1] தாள்நிவைந்து. [2] சுடர்க்கொழுந்தை. [3] பூங்காவின்; பூங்கானின். [4] விழைவோடும். [5] களியளி.

வன பெரியோ ரவர் திரு வடிவைக்கண்(டு), உருகிப் பரிவுறு புனல்கண் பொழிவன எனமுன் புளவள வயலெங்கும். 158

அறிவிற் பெரியவர் அயல்நெற் பணைவயல் அவையிற் படும்[1] வகை அணைகின்றார், "பிறவிப பகைநெறி[2] விடுவீர்! இருவினை பெருகித் தொடர்பிணி உறுபாசம், பறிவுற் றிடஅணை யுமின்" என் றிருபுடை பயில்சூழ் சினைமிசை குயில்கூவும், செறிவிற் பலதரு நிலையிற் பொலிவுறு திருநந் தனவனம் எதிர்கண்டார்.[3]

அவர்முன் பணிவொடு தொழுதங் கணைவுற அணிகொண் பரின்மிசைஅருகெங்கும், "தவமுன் புரிதலில் வருதொண் டெனு நிலை தலைநின் றுயர்தமிழ் இறையோராம், இவர்தந் திருவடி வதுகண் டதிசயம்" எனவந் தெதிர்"அர கர"என்றே, சிவமுன் பயில்மொழி பகர்கின் றனவளர் சிறைமென்[4] கிளியொடு சிறு பூவை[5] 160

அஞ்சொல் திருமறை அவர்முன் பகர்தலும் அவருந் தொழுதுமுன் அளிகூரும்,[6] நெஞ்சிற் பெருகிய மகிழ்வும்[7] காதலும் நிறையன் பொடும்உரை தடுமாறச், செஞ்சொல் திருமறை மொழியந் தணர்பயில் தில்லைத் திருநகர் எல்லைப்பால் மஞ்சிற் பொலிநெடு[8] மதில்சூழ் குடதிசை மணிவா யிற்புறம் வந்துற்றார்.

அல்லற் பவம்அற அருளுந் தவமுதல் அடியார் எதிர்கொள அவரோடும், மல்லற் புனலகமழ் மாடே வாயிலின் வழிபுக் கெதிர்தொழு தணைவுற்றார், கல்வித் துறைபல வருமா மறை முதல் கரைகண் டுடையவர் கழல்பேணுஞ், செல்வக் குடிநிறை நல்வைப் பிடைவளர் சிவமே நிலவிய திருவீதி. 162

நவமின் சுடர்மணி நெடுமா லையுநறு மலர்மா லையுநிறை திருவீதிப், புவனங் களின்முதல் இமையோர் தடமுடி பொருது தியமணி போகட்டிப்,[9] பவனன் பணிசெய வருணன் புனல்

பா - ம— [1] அவையிற்படும். [2] பவநெறி. [3] எதிர்கொண்டார். [4] சிறுமென். [5] சிலபூவை. [6] அருள்கூரும்; அணிகூறும். [7] மகிழவும். [8] பொலிதரு. [9] போகட்டுப்.

கொடு பணிமா றவும்அவை பழுதாமென்(று), எவருந் தொழு தெழும் அடியார் திருவலகிடுவார் குளிர்புனல் விடுவார்கள். 163

மேலம் பரதலம் நிறையுங் கொடிகளில் விரிவெங் கதிர் நுழை வரிதாகும், கோலம் பெருகிய திருவீ தியைமுறை குலவும் பெருமையர் பணிவுற்றே, ஞாலந் திகழ்திரு மறையின் பெரு கொலி நலமார் முனிவர்கள் துதியோடும், ஓலம் பெருகிய நிலை யேழ் கோபுர முறமெய் கொடுதொழு[1] துள்புக்கார். 164

வளர்பொற் கனமணி திருமா ளிகையினை வலம்வந் தல மரு[2] வரைநில்லா, அளவிற் பெருகிய ஆர்வத் திடைஎழும் அன்பின் கடல்நிறை உடலெங்கும், புளகச்செறிநிரை விரவத்[3] திருமலி பொற்கோ புரமது புகுவார்முன், களனிற் பொலிவிடம் உடையார் நடநவில் கனகப் பொதுஎதிர் கண்ணுற்றார். 165

நீடுந் திருவுடன்[4] நிகழும் பெருகொளி நிறைஅம் பலம்நினை வுறநேரே, கூடும் படிவரும் அன்பால் இன்புறு குணமுன்[5] பெற வரு நிலைகூடத், தேடும் பிரமனும் மாலுந் தேவரும் முதலாம் யோனிகள் தெளிவொன்ற, ஆடுங் கழல்புரி அமுதத் திருநடம் ஆரா வகைதொழு தார்கின்றார். 166

கையுந தலைமிசை புனைஅஞ் சலியன; கண்ணும் பொழி மழை ஒழியாதே,[6] பெய்யுந் தகையன; கரணங் களும்உடன் உருகும் பரிவின; பேறெய்தும், மெய்யுந் தரைமிசை[7] விழு முன் பெழுதரும்; மின்தாழ் சடையொடு நின்றாடும், ஐயன் திருநடம் எதிர்கும் பிடும்அவர் ஆர்வம் பெருகுதல் அளவின்றால். 167

இத்தன் மையர்பல முறையுந் தொழுதெழ "என்றெய் தினை" எனமன்றாடும், அத்தன் திருவருள் பொழியுங் கருணையின் அருள்பெற்றிடவரும் ஆனந்தம், மெய்த்தன் மையினில் விருத்தத் திருமொழி பாடிப் பின்னையும் மேன்மேலும், சித்தம் பெருகிய பரிவால் இன்புறு திருநே ரிசைமொழி பகர்கின்றார். 168

---

பா - ம்—[1] முறையே கொடுதொழ; முறையேதொழ. [2] தலமரும். [3] விரவ்த். [4] திருவடி. [5] குணமும். [6] ஒழியாமே. [7] தலமிசை.

"பத்தனைப் பாட மாட்டேன்" என்றுமுன் னெடுத்துப் பண்ணால், "அத்தா! உன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வா"றென்(று), இத்திறம் போற்றி நின்றே இன்றமிழ் மாலை பாடிக், கைத்திருத் தொண்டு செய்யுங் காதலிற் பணிந்து போந் தார். 169

நீடிய மணியின் சோதி நிறைதிரு[1] முன்றின் மாடும்
ஆடுயர்[2] கொடிசூழ் பொற்றேர் அணிதிரு[3] வீதி யுள்ளும்
கூடிய பணிகள் செய்து கும்பிடுந் தொழில ராகிப்[4]
பாடிய புனித வாககின் பணிகளும் பயிலச் செய்வார். 170

அருட்பெரு மகிழ்ச்சி பொங்க "அன்னம்பா லிக்கும்" என்னும்
திருக்குறுந் தொகைகள் பாடித் திருவுழ வாரங் கொண்டு
பெருத்தெழு காத லோடும் பெருந்திருத் தொண்டு செய்து
விருப்புறு மேனி கண்ணீர் வெண்ணீற்று வண்ட லாட. 171

மேவிய பணிகள் செய்து விளங்குநாள் வேட்க ளத்துச்
சேவுயர் கொடியார் தம்மைச் சென்றுமுன் வணங்கிப் பாடிக்
காவியங் கண்டர் மன்னுந் திருக்கழிப் பாலை தன்னில்
நாவினுக் கரசர் சென்று நண்ணினார் மண்ணோர் வாழ. 172

சினவிடையே றுகைத்தேறும் மணவாள நம்பிகழல் சென்று தாழ்ந்து, "வனபவள வாய்திறந்து வானவர்க்குந் தானவனே! என்கின் றாள்"என், றனையதிருப் பதிகமுடன் அன்புறுவண் டமிழ்பாடி அங்கு வைகி, நினைவரியார் தமைப்போற்றி நீடுதிருப் புலியூரை நினைந்து மீள்வார். 173

மனைப்படப்பிற் கடற்கொழுந்து வளைசொரியுங் கழிப்பாலை மருங்கு நீங்கி, நனைச்சினைமென் குளிர்ஞாழற் பொழிலூடு வழிக்கொண்டு நண்ணும் போதில், "நினைப்பவர்தம் மனங் கோயில்[5] கொண்டருளும் அம்பலத்து நிருத்த னாரைத், தினைத் தனையாம் பொழுதுமறந் துய்வனோ?" எனப்பாடித் தில்லை சார்ந்தார். 174

---

பா - ம்—[1] நிறைதரு. [2] மாடுயர். [3] மாமணி. [4] தொழிலாராகிப். [5] மனக்கோயில்.

"அரியானை" என்றெடுத்தே அடியவருக்[1] கெளியானை அவர்தஞ் சிந்தை, பிரியாத பெரியதிருத் தாண்டகச்செந் தமிழ் பாடிப் பிறங்கு சோதி, விரியாநின் றெவ்வுலகும் விளங்கிய[2] பொன் னம்பலத்து மேவி ஆடல், புரியாநின் றவர்தம்மைப் பணிந்துதமி ழாற்பின்னும் போற்றல்[3] செய்வார். 175

"செஞ்சடைக் கற்றைமுற்றத் திளநிலா எறிக்கும்" எனுஞ் சிறந்த வாய்மை, அஞ்சொல்வளத் தமிழ்மாலை அதிசயமாம் படி பாடி அன்பு சூழ்ந்த, நெஞ்சுருகப் பொழிபுனல்வார் கண்ணிணை யும் பரவியசொல் நிறைந்த வாயும், தஞ்செயலின் ஒழியாத திருப்பணியும் மாறாது சாரும் நாளில. 176

கடையுகத்தில் ஆழியின்மேல் மிதந்ததிருக் கழுமலத்தின் இருந்த செங்கண், விடையுகைத்தார்[4] திருவருளால் வெற்பரை யன் பாவைதிரு முலைப்பா லோடும், அடையநிறை சிவம்பெருக[5] வளர்ஞானங் குழைத்தூட்ட அமுது செய்த, உடையமறைப் பிள்ளையார் திருவார்த்தை அடியார்கள் உரைப்பக் கேட்டார். 177

ஆழிவிடம உண்டவரை அம்மைதிருப் பாலமுதம்[6] உண்ட போதே, ஏழிசைவண் டமிழ்மாலை "இவன்எம்மான்" எனக் காட்டி இயம்ப வல்ல, காழிவரும் பெருந்தகைசீர் கேட்டலுமே அதிசயமாங் காதல் கூர, வாழியவர் மலர்க்கழல்கள் வணங்கு தற்கு மனத்தெழுந்த விருப்பு வாய்ப்ப. 178

அப்பொழுதே அம்பலத்துள் ஆடுகின்ற கழல்வணங்கி அருள்முன் பெற்றுப், பொய்ப்பிறவிப் பிணியோட்டுந் திருவீதி புரண்டுவலங் கொண்டு போந்தே, எப்புவனங் களும்நிறைந்த திருப்பதியின் எல்லையினை இறைஞ்சி ஏத்திச், செப்பரிய பெரு மையினோர் திருநாரை யூர்பணிந்து பாடிச் செல்வார். 179

தொண்டர்குழாம் புடைசூழத் தொழுதகரத் தொடுநீறு துதைந்த கோலங், கண்டவர்தம் மனங்கசிந்து கரைந்துருகுங் கருணைபுறம் பொழிந்து காட்டத், தெண்டிரைவாய்க் கல்மிதப்

பா - ம்—[1] அடியவர்கட். [2] றேழுலகும் விளக்கிய. [3] பாடல். [4] விடையுயர்த்தார். [5] சிவம்பெருக்கி. [6] திருமுலைஅமுதம்.

பில் உகைத்தேறுந் திருநாவுக் கரசர் தாமும், வண்டமிழால் எழுதுமறை [1] மொழிந்தபிரான் திருப்புகலி மருங்கு சார்ந்தார்.

நீண்டவரை வில்லியார் வெஞ்சூலை மடுத்தருளி நேரே முன்னாள், ஆண்ட அரசெழுந்தருளக் கேட்டருளி ஆளுடைய பிள்ளை யாருங், காண்டகைய பெருவிருப்புக் கைம்மிக்க திரு வுள்ளக் கருத்தினோடு, மூண்டஅருள் மனத்தன்பர் புடைசூழ எழுந்தருளி முன்னே வந்தார். 181

தொழுதணைவுற் றாண்டஅர(சு) அன்புருகத் தொண்டர் குழாத்திடையே சென்று, பழுதில்பெருங் காதலுடன் அடிபணி யப் பணிந்தவர்தங் கரங்கள் பற்றி, எழுதரிய மலர்க்கையால் எடுத்திறைஞ்சி விடையின்மேல் வருவார் தம்மை, அழுதழைத் துக் கொண்டவர்தாம் "அப்பரே!" [2] எனஅவரும் "அடியேன்" என்றார். 182

அம்பிகைசெம் பொற்கிண்ணத் தமுதஞா னங்கொடுப்ப அழுகை தீர்ந்த, செம்பவள வாய்ப்பிள்ளை திருநாவுக் கரச ரெனச் சிறந்த சீர்த்தி, எம்பெருமக் களும்இயைந்த கூட்டத்தில் அரனடியார் இன்பம் எய்தி, உம்பர்களும் போற்றிசைப்பச் சிவம்பெருகும் ஒலிநிறைத்தார் உலகம் எல்லாம். 183

"பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேன்" என் றரசுவப்பப் பெருகு ஞான, வள்ளலார் வாகீசர் தமைவணங்கப் [3] பெற்ற தற்கு மகிழ்ச்சி பொங்க, உள்ளநிறை காதலினால் ஒருவரொரு வரிற்கலந்த உண்மை யோடும், வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந்தார் கழல்வணங்கும் விருப்பின் மிக்கார். 184

அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம் அன்பு செறி [4] கடலுமாம் எனவும் ஓங்கும், பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவனம் உய்ய, இருட்கடுவுண் டவர்அருளும் உலகம் [5] எல்லாம் ஈன் றாள்தன் திருவருளும் எனவுங் கூடித், தெருட்கலைஞா னக்கன்

---

பா - ம்—[1] தெய்வமறை. [2] அபபரோ. [3] தமைக்காணப். [4] நிறை. [5] அகிலம்.

றும் அரசுஞ் சென்று செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே. 185

பண்பயில்வண் டறைசோலை சூழுங் காழிப் பரமர்திருக் கோபுரத்தைப் பணிந்துள் புக்கு, விண்பணிய ஓங்குபெரு விமா னந் தன்னை வலங்கொண்டு தொழுதுவிழுந் தெழுந்த எல்லைச், சண்பைவரு பிள்ளையார் "அப்பர் உங்கள் தம்பிரா னுரைநீர் பாடீர்"என்னக், கண்பயிலும் புனல்பொழிய[1] அரசும் வாய்மைக் கலைபயிலும் மொழிபொழியக் கசிந்து பாடி. 186

பெரியபெரு மாட்டியுடன் தோணி மீது பேணிவீற் றிருந் தருளும் பிரான்முன் நின்று, பரிவுறுசெந் தமிழ்மாலை பத்தி யோடும் "பார்கொண்டு மூடி"எனும் பதிகம் போற்றி, அரிய வகை புறம்போந்து பிள்ளை யார்தந் திருமடத்தில் எழுந்தருளி அமுது செய்து, மருவியநண் புறுகேண்மை அற்றை நாள் போல் வளர்நதோங்க உடன் பலநாள் வைகும் நாளில். 187

அத்தன்மை யினில்[2]அரசும் பிள்ளை யாரும் அளவளா விய மகிழ்ச்சி அளவி லாத, சித்தநெகிழ்ச் சியினோடு செல்லும் நாளில் திருநாவுக் கரசுதிரு வுள்ளந் தன்னில், மைத்தழையும் மணி மிடற்றார் பொன்னி நாட்டு மன்னியதா னங்களெல்லாம் வணங் கிப் போற்ற, மெய்த்தெழுந்த பெருங்காதல் பிள்ளை யார்க்கு விளம்புதலும் அவருமது மேவி நேர்வார். 188

ஆண்டஅர செழுந்தருளக் கோலக் காவை அவரோடுஞ் சென்றிறைஞ்சி அன்பு கொண்டு, மீண்டருளினார்; அவரும் விடை கொண் டிப்பால் வேதநா யகர்விரும்பும் பதிக ளான, நீண்ட கருப்[3] பறியலூர் புன்கூர் நீடூர் நீடுதிருக் குறுக்கைதிரு[4] நின்றி யூருங், காண்டகைய நனிபள்ளி முதலா[5] நண்ணிக் கண்ணுதலார் கழல்தொழுது கலந்து[6] செல்வார். 189

மேவுபுனற் பொன்னியிரு கரையுஞ் சார்ந்து விடையுயர்த் தார் திருச்செம்பொன் பள்ளி பாடிக், காவுயரு மயிலாடு துறை

பா-ம்—[1] பொழிந்த. [2] அத்தன்மையில்; அத்தன்மைதனின். [3] புகழ்ப். [4] நீடூர் திருக்குறுக்கை நீடுதிரு. [5] முதலாய். [6] வணங்கிச்

நீள் பொன்னிக் கரைத்துருத்தி வேள்விகுடி[1] எதிர்கொள் பாடி, பாவுறுசெந் தமிழ்மாலை பாடிப் போற்றிப் பரமர்திருப் பதிபல வும்[2] பணிந்து போந்தே, ஆவுறும்அஞ் சாடுவார் கோடி காவில் அணைந்துபணிந் தாவடுதண் டுறையைச் சார்ந்தார் 190

"ஆவடுதண் டுறையாரை அடைந்துய்ந் தேன்"என் றளவில் திருத் தாண்டகமுன் அருளிச் செய்து, மேவுதிருக் குறுந் தொகைநே ரிசையுஞ் சந்த விருத்தங்க ளானவையும் வேறு வேறு, பாவலர்செந் தமிழ்த்தொடையாற் பள்ளித் தாமம் பல சாத்தி மிக்கெழுந்த பரிவி னோடும், பூவயலத் தவர்பரவப் பல நாள் தங்கிப் புரிவுறுகைத்[3] திருத்தொண்டு போற்றிச் செய்வார்.

எறிபுனல்பொன் மணிசிதறுந் திரை[4]நீர்ப் பொன்னி இடை மருதைச் சென்றெய்தி அன்பி னோடு, மறிவிரவு கரத்தாரை வணங்கி வைகி வண்டமிழ்ப்பா மாலைபல மகிழச் சாத்திப், பொறியரவம் புனைந்தாரைத் திருநாகேச் சுரத்துப்[5] போற்றி அருந் தமிழ்மாலை புனைந்து போந்து, செறிவிரைநன் மலர்ச் சோலைப் பழையா றெய்தித் திருச்சத்தி முற்றத்திற்[6] சென்று சேர்ந்தார். 192

சென்று சேர்ந்து திருச்சத்தி முற்றத் திருந்த சிவக்கொழுந் தைக், குன்ற மகள்தன் மனக்காதல் குலவும் பூசை கொண்டரு ளும், என்றும் இனிய[7] பெருமானை இறைஞ்சி இயல்பில் திருப் பணிகள், முன்றில் அணைந்து செய்துதமிழ் மொழிமா லைகளுஞ் சாத்துவார். 193

"கோவாய் முடுகி" என்றெடுத்துக் "கூற்றம் வந்து குமைப்பதன்முன், **பூவா ரடிகள்**[8] **என்றலைமேல் பொறித்து வைப்பாய்**" எனப்புகன்று, நாவார் பதிகம் பாடுதலும் நாதன் தானும் "**நல்லூரில், வாவா**" என்றே அருள்செய்ய வணங்கி மகிழ்ந்து வாகீசர். 194

---

பா-ம்—[1] **வேள்விக்குடி**. [2] பதிபிறவும். [3] பரிவுறுநல். [4] சிதறு கரை. [5] திருநாகீச்சுரத்துப்; திருநாகேச்சரத்துப். [6] முற்றத்தை. [7] இளைய. [8] பூவார்கழல்கள்.

நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரின்
மன்னுதிருத் தொண்டனார் வணங்கிமகிழ்ந் தெழும்பொழுதில்
"உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்!" எனஅவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான். 195

"நனைந்தனைய திருவடிஎன் தலைமேல்வைத் தார்" என்று,
புனைந்ததிருத் தாண்டகத்தால் போற்றிசைத்துப் புனிதரருள்,
நினைந்துருகி விழுந்தெழுந்து நிறைந்துமலர்ந்(து) ஒழியாத,[1]
தனம்பெரிதும் பெற்றுவந்த வறியோன்போல மனந்
தழைத்தார். 196

நாவுக்கு மன்னர்திரு நல்லூரில் நம்பர்பால்
மேவுற்ற திருப்பணிகள் மேவுறநா ளுஞ்செய்து
பாவுற்ற தமிழ்மாலை[2] பலபாடிப் பணிந்தேத்தித்
தேவுற்ற திருத்தொண்டு செய்தொழுகிச் செல்லுநாள். 197

கருகாவூர் முதலாகக் கண்ணுதலோன் அமர்ந்தருளுந்
திருவாவூர் திருப்பாலைத் துறைபிறவுஞ்[3] சென்றிறைஞ்சிப்
பெருகார்வத் திருத்தொண்டு செய்துபெருந் திருநல்லூர்
ஒருகாலும் பிரியாதே உள்ளுருகிப் பணிகின்றார். 198

ஆளுடைய நாயகன்றன் அருள்பெற்றங் ககன்றுபோய்
வாளைபாய் புனற்பழனத் திருப்பழன மருங்கணைந்து
காளவிடம் உண்டிருண்ட கண்டர்பணிக் கலன்பூண்டு
நீளிரவில் ஆடுவார் கழல்வணங்க நேர்பெற்றார். 199

அப்பதியைச் சூழ்ந்ததிருப் பதியில்அர னார்மகிழும்
ஒப்பரிய தானங்கள் உள்ளுருகிப் பணிந்தணைவார்
மெய்ப்பொருள்தேர்[4] நாவினுக்கு வேந்தர்தாம் மேவினார்
செப்பருஞ்சீர் அப்பூதி அடிகளார்[5] திங்களூர். 200

அந்தணரின் மேம்பட்ட அப்பூதி அடிகளார்
தந்தனய ருடன்சாலை கூவல்குளந் தருதண்ணீர்ப்

---

பா - ம் —[1] அழியாத. [2] மொழிமாலை. [3] துறைபலவும். [4] மெய்ப்பொருள்சேர். [5] அடிகளார்.

பந்தர்பல ஆண்டஅர செனும்பெயரால் பண்ணினமை
வந்தணைந்த வாகிசர் கேட்டவர்தம் மனைநண்ண. 201

மற்றவரும் மனமகிழ்ந்து மனைவியார் மைந்தர்பெருஞ்,
சுற்றமுடன் களிகூரத் தொழுதெழுந்து சூழ்ந்துமொழிக், கொற்
றவரை அமுதுசெயக் குறைகொள்வார் இறைகொள்ளப், பெற்ற
பெருந் தவத்தொண்டர் திருவுள்ளம் பெறப்பெற்ருர். 202

காண்டகைமை இன்றியும்முன் கலந்தபெருங் கேண்மையினர்
பூண்டபெருங் காதலுடன் போனகமுங் கறியமுதும்
வேண்டுவன வெவ்வேறு விதங்கள்பெற விருப்பினுல்
ஆண்டஅர சமுதுசெயத் திருவமுதாம் படிஅமைத்து. 203

திருநாவுக் கரசமுது செய்தருள மறறவர்தம்
பெருநாமஞ் சாத்தியஅப் பிள்ளைதனை அழைத்தன்பு[1]
தருஞானத் திருமறையோர் தண்டலையின் வண்கதலிக்
குருநாளக் குருத்தரிந்து கொண்டுவரத் தனிவிட்டார். 204

ஆங்கவனும விரைந்தெய்தி அம்பருங்கு தாழாதே
பூங்கதலிக குருத்தரியப் புகும்அளவில் ஒருநாகம்
தீங்கிழைக்க அதுபேணுன் திருஅமுது செய்தருள
ஓங்குகத லிக்குருத்துக் கொண்டொல்லை வந்தணைந்தான். 205

தீயவிடந் தலைக்கொள்ளத் தெருமந்து செழுங்குருத்தைத்
தாயர்கரத் தினில்நீட்டித் தளர்ந்துதனைத் தழல்நாகம்[2]
மேயபடி உரைசெய்யான் விழக்கண்டு "கெட்டொழிந்தேம்;
தூயவர்இங் கமுதுசெயத் தொடங்கார்"என் றதுஒளித்தார். 206

தம்புதல்வன் சவமறைத்துத் தடுமாற்றம் இலராகி
"எம்பெருமான்! அமுதுசெய வேண்டும்"என வந்திறைஞ்ச
உம்பர்பிரான் திருத்தொண்டர் உள்ளத்தில் தடுமாற்றம்
நம்பாதிரு வருளாலே அறிந்தருளி நவைதீர்ப்பார். 207

அன்றவர்கள் மறைத்ததனுக் களவிறந்த கருணையராய்க்
கொன்றைநறுஞ் சடையார்தங் கோயிலின்முன் கொணர்வித்தே

பா - ம்—[1] அழைத்தந்தத். [2] தழல் அரவம்.

"ஒன்றுகொலாம்" எனப்பதிகம் எடுத்துடையான் சீர்பாடப்
பின்றைவிடம் போய்நீங்கிப் பிள்ளையுணர்ந் தெழுந்திருந்தான்.

அருந்தனயன்[1] உயிர்பெற்ற அதுகண்டும் அமுதுசெயா(து)
இருந்ததற்குத் தளர்வெய்தி இடருழந்தார் துயர்நீங்க
வருந்துமவர் மனைப்புகுந்து வாகீசத் திருமுனிவர்
விருந்தமுது செய்தருளி விருப்பினுடன் மேவுநாள். 209

திங்களூர் தனில்நின்றுந் திருமறையோர் பின்செல்லப்
பைங்கண்விடைத் தனிப்பாகர் திருப்பழனப் பதிபுகுந்து
தங்குபெருங் காதலொடுங்[2] தம்பெருமான் கழல்சார்ந்து
பொங்கியஅன் புற[3]வணங்கி முன்னின்று போற்றிசைப்பார். 210

புடைமாலை மதிக்கண்ணிப் புரிசடையார் பொற்கழற்கீழ்
அடைமாலைச் சீலமுடை அப்பூதி அடிகள்தமை
நடைமாணச் சிறப்பித்து நன்மைபுரி திந்தமிழின்
தொடைமாலைத் திருப்பதிகச் "சொன்மாலை" பாடினார். 211

எழும்பணியும் இளம்பிறையும் அணிந்தவரை எம்மருங்குந்,
தொழும்பணிமேற் கொண்டருளித்[4] திருச்சோற்றுத் துறைமுதலாத், தழும்புறுகேண் மையில்நண்ணித் தானங்கள் பலபாடிச்,
செழும்பழனத் திறைகோயில் திருத்தொண்டு செய்திருந்தார். 212

சாலநாள் அங்கமர்ந்து தந்தலைமேல் தாள்வைத்த
ஆலமார் மணிமிடற்றூர் அணி[5]மலர்ச்சே வடிநினைந்து
சேலுலாம் புனற்பொன்னித் தென்கரையே றிச்சென்று
கோலநீள் மணிமாடத் திநநல்லூர் குறுகினார். 213

அங்கணைந்து தம்பெருமான் அடிவணங்கி ஆராது, பொங்கியஅன் பொடுதிளைத்துப் போற்றிசைத்துப் பணிசெயுநாள், தங்குபெருங் காதலினால் தாமரைமேல் விரிஞ்சனொடு, செங்கண் மால் அறிவரியார் திருவாரூர் தொழநினைந்தார். 214

நல்லூரில் நம்பர்அருள் பெற்றுப்போய்ப் பழையாறை
பல்லூர்வெண் டலைக்கரத்தார் பயிலும்இடம் பலபணிந்து

---

பா - ம்—[1] அருந்தவனயன். [2] காதலொடு. [3] அன்பொடு. [4] மேற்கொண்டருளும். [5] அடி.

சொல்லூர்வண் டமிழ்பாடி வலஞ்சுழியைத் தொழுதேத்தி
அல்லூர்வெண் பிறையணிந்தார் திருக்குடமூக கணைந்திறைஞ்சி.

நாலூர்தென் திருச்சேறை குடவாயில் நறையூர்சேர்
பாலூரும் இன்மொழியாள் பாகனூர் கழல்பரவி
மேலூர்தி விடைக்கொடியார் மேவும்இடம் பலபாடிச்
சேலூர்தண் பணைசூழ்ந்த தென்திருவாஞ் சியம்அணைந்தார். 216

பெருவாச மலர்ச்சோலைப் பெருவேளூர் பணிந்தேத்தி
முருகாரும் மலர்க்கொன்றை முதல்வனூர் பதிபிறவும்
திருவாரும் விளமருடன் சென்றிறைஞ்சி வாகீசர்
மருவாரூர் எரித்தவர்தந் திருவாரூர் வந்தடைந்தார். 217

ஆண்டஅர செழுந்தருள ஆரூரில் அன்பர்கள்தாம்
நீண்டசடை முடியார்பால் நிறைந்தஅருள் பெற்றுடையார்
காண்டகுமா ளிகைமாடங் கவின்சிறந்தோங் கிடஎங்கும்
சேண்டிகழ்வீ திகள்பொலியத் திருமலிமங் கலஞ்செய்தார். 218

வல்லமண் குண்டர்தம் மாயை கடந்து மறிகடலில்
கல்லே மிதப்பாகப் போந்தவர் வந்தா ரெனுங்களிப்பால்
எல்லையில் தொண்டர் எயிற்புறஞ் சென்றெதிர் கொண்டபோது
சொல்லின் அரசர் வணங்கித் தொழுதுரை செய்தணைவார். 219

"பற்றொன் றிலாவரும் பாதக ராகும் அமணர்தம்பால், உற்ற பிணியொழிந் துய்யப்போந் தேன்பெற லாவ(து)ஒன் றே?[1], புற்றிடங் கொண்டான்தன் தொண்டர்க்குத் தொண்ட ராம் புண்ணிய" மென்(று), அற்ற உணர்வொடும்[2] ஆரூர்த் திரு வீதி உள்ளணைந்தார். 220

சூழுந் திருத்தொண்டர் தம்முடன் தோரண வாயில்நண்ணி
வாழி திருநெடுந் தேவா சிரியன்முன் வந்திறைஞ்சி
ஆழி வரைத்திரு மாளிகை வாயில் அவைபுகுந்து
நீள்சுடர் மாமணிப் புற்றுகந் தாரைநேர் கண்டுகொண்டார். 221

கண்டு தொழுது விழுந்து கரசர ணாதிஅங்கம்[3]
கொண்ட புளகங்க ளாக எழுந்தன்பு கூரக்கண்கள்

---

பா - ம்—[1]உண்டே. [2] உற்ற...வெலாம். [3] தொழுதுகர-அங்கமெலாம்.

தண்டுளி மாரி பொழியத் திருமூலட் டானர்தம்மைப்
புண்டரி கக்கழல் போற்றித் திருத்தாண் டகம்புனைந்து. 222

"காண்ட லேக நத் தாய்நினைந்(து)" என்னுங் கலைப்பதிகம்
தூண்டா விளக்கன்ன சோதிமுன் நின்று துதித்துருகி
ஈண்டு மணிக்கோயில் சூழ வலஞ்செய் திறைஞ்சிஅன்பு
பூண்ட மனத்தொடு நீள்திரு வாயிற் புறத்தணைந்தார். 223

செய்யமா மணிஒளிசூழ் திருமுன்றின் முன்தேவா சிரியன் சார்ந்து, "கொய்யுமா[1] மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூ ராரைக், கையினால் தொழாதொழிந்து கனியிருக்கக் காய் கவர்ந்த கள்வனேன்"என்(று), எய்தரிய கையறவால்[2] திருப் பதிகம் அருள்செய்தங் கிருந்தார் அன்றே. 224

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும் மதுர வாக்கில், சோவாகுந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளுஞ் செம்பொற் றாளே, சார்வான திருமனமும் உழவாரத் தனிப் படையும் தாமும் ஆகிப், பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார். 225

நீடுபுகழ்த் திருவாரூர் நிலவுமணிப் புற்றிடங்கொள் நிருத் தர்[3] தம்மைக், கூடியஅன் பொடுகாலங் களில்அணைந்து கும் பிட்டுக் கோதில் வாய்மைப், "பாடிளம்பூ தத்தினான்" எனும் பதிகம் முதலான பலவும் பாடி, நாடியஆர் வம்பெருக[4] நைந்து மனங் கரைந்துருகி நயந்து செல்வார். 226

நான்மறைநூற் பெருவாய்மை நமிநந்தி அடிகள்திருத் தொண்டின் நன்மைப், பான்மைநிலை யால்அவரைப் பரமர்திரு விருத்தத்துள் வைத்துப் பாடித், தேன்மருவுங் கொன்றையார் திருவாரூர் அரனெறியில் திகழுந் தன்மை, ஆனதிறமும்போற்றி அணிவீதிப் பணிசெய்தங் கமரும் நாளில். 227

நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு வலிவலமும் நினைந்து சென்று, வாராரு முலைமங்கை உமைபங்கர் கழல்பணிந்து

பா - ம்—[1] கோய்யுலா. [2] கையறவாம். [3] நித்தர். [4] பொங்க.

மகிழ்ந்து பாடிக், காராரும் கறைக்கண்டர் கீழ்வேளூர் கன்றாப்பூர் கலந்து பாடி, ஆராத காதலினால் திருவாரூர் தனில்மீண்டும் அணைந்தார் அன்றே. 228

மேவுதிரு வாதிரைநாள் வீதிவிடங் கப்பெருமாள் பவனி தன்னில், தேவருடன் முனிவர்கள்முன் சேவிக்கும் அடியார்களுடன்சே வித்து, மூவுலகுங் களிகூர வரும்பெருமை முறைமையெலாங் கண்டு போற்றி, நாவினுக்குத் தனியரசர் நயக்குநாள் நம்பர்திரு அருளி னாலே. 229

திருப்புகலூர் அமர்ந்தருளுஞ் சிவபெருமான் சேவடிகள் கும்பிட் டேத்தும், விருப்புடைய உள்ளத்து மேவிஎழுங் காதல்புரி வேட்கை கூர, ஒருப்படுவார் திருவாரூர் ஒருவாறு தொழுதகன் றங் குள்ளம் வைத்துப், பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகர் பதிபிறவும் பணிந்து போந்தார். 230

அந்நாளில் ஆளுடைய பிள்ளையார் திருப்புகலி அதன்கண் நின்றும், பன்னகப் பூணணிவார் பயின்றதிருப் பதிபலவும் பணிந்து செல்வார், புன்னை மணங்கமழும் பூம்புகலூர் வந்திறைஞ்சிப் பொருவில் சீர்த்தி, மின்னாரும் புரிமுந்நூல் முருகனார் திருமடத்தில் மேவுங் காலை. 231

ஆண்டஅர செழுந்தருளி அணியாரூர் மணிப்புற்றில் அமர்ந்து வாழும், நீண்டசுடர் மாமணியைக் கும்பிட்டு நீடுதிருப் புகலூர் நோக்கி, மீண்டருளி னாரென்று கேட்டருளி எதிர்கொள்ளும் விருப்பி னோடும், ஈண்டுபெருந் தொண்டர்குழாம் புடைசூழ எழுந்தருளி எதிரே சென்றார். 232

கரண்டமலி தடம்பொய்கைக் காழியர்கோன் எதிரணையுங் காதல் கேட்டு, வரன்றுமணிப் புனற்புகலூர் நோக்கிவரும்[1] வாகீசர் மகிழ்ந்து வந்தார்;, திரண்டுவருந்[2] திருநீற்றுத் தொண்டர்குழாம் இருதிறமுஞ் சேர்ந்த போதில், இரண்டுநில வின்கடல்கள் ஒன்றாகி அணைந்தனபோல் இசைந்த அன்றே. 233

பா - ம்—[1] நேர் நோக்கி. [2] திரண்டபெருந்.

திருநாவுக் கரசர்எதிர் சென் றிறைஞ்சச்[1] சிரபுரத்துத் தெய்வ வாய்மைப், பெருஞான சம்பந்தப் பிள்ளையார் எதிர்வணங்கி "அப்பரே! நீர், வருநாளில் திருவாரூர் நிகழ்பெருமை வகுத் துரைப்பீர்" என்று கூற, அருநாமத் தஞ்செழுத்தும் பயில் வாய்மை அவரும்எதிர் அருளிச் செய்தார்.[2] 234

"சித்தம் நிலாவுந் தென்திரு ஆரூர் நகராளும்
மைத்தழை கண்டர் ஆதிரை நாளின் மகிழ்செல்வம்
இத்தகை மைத்தென் றென்மொழி கேன்?"என் றருள்செய்தார்[3]
"முத்து விதான மணிப்பொற் கவரி" மொழிமாலை. 235

அம்மொழி மாலைச் செந்தமிழ் கேளா அணிசண்பை
மைம்மலர்[4] கண்டத் தண்டர் பிரானுர் மகனாரும்
"கொய்ம்மலர் வாவித் தென்திரு வாரூர் கும்பிட்டே
உம்முடன் வந்திங் குடன்அமர் வேன்"என் றுரைசெய்தார் [5]236

மாமதில் ஆரூர் மன்னரை அங்கு வணங்கச்செந்
தாமரை யோடைச் சண்பையர் நாதன் தான்ஏக
நாமரு சொல்லின்[6] நாதரும் ஆர்வத் தொடுபுக்கார்
பூமலர் வாசத்[7] தண்பணை சூழும் புகலூரில். 237

அத்திரு மூதூர் மேவிய நாவுக் கரசுந்தம்
சித்தம் நிறைந்தே அன்பு தெவிட்டுந் தெளிவெள்ளம்
மொய்த்திழி தாரைக் கண்பொழி நீர்மெய்ம் முழுதாரப்
பைத்தலை நாகப் பூண்அணி வாரைப் பணிவுற்றார். 238

தேவர் பிரானைத் தென்புக லூர்மன் னியதேனைப்
பாவியல் மாலைச் செந்தமிழ் பாடிப் பரிவோடு[8]
மேவிய காலந் தோறும் விருப்பிற் கும்பிட்டே
ஓவுதல் ஓவு[9] திருப்பணி செய்தங் குறைகின்றார். 239

சீர்தரு செங்காட் டங்குடி நீடுந் திருநள்ளா(று)
ஆர்தரு சோலை சூழ்தரு சாந்தை அயவந்தி

பா - ம்—[1] றிறைஞ்சிச். [2] செய்வார். [3] றுரை செய்தார். [4] மைம்மலி. [5] றருள் செய்தார். [6] செஞ்சொல். [7] பூமலிவாவித். [8] பரிவோடும். [9] ஓவுந்.

வார்திகழ் மென்முலை யாளொரு பாகன் திருமருகல்
ஏர்தரும் அன்பால் சென்று வணங்கி இன்புற்றார். 240

அப்படிச் சின்னாள்[1] சென்றபின் ஆரூர் நகராளும்
துப்புறழ் வேணிக் கண்ணுத லாரைத் தொழுதிப்பால்
மெய்ப்பொருள் ஞானம் பெற்றவர் வேணு புரத்தெங்கள்
பொற்புரி முந்நூல் மார்பரும் வந்தார் புகலூரில். 241

பிள்ளையார் எழுந்தருளப் பெருவிருப்பால் வாகீசர்
உள்ளமகிழ்ந் தெதிர்கொண்டங் குடன்உறையு நாளின்கண்
வள்ளலார் சிறுத்தொண்டர் மற்றவர்பால் எழுந்தருள
எள்ளருஞ்சீர் நீலநக்கர் தாமும்எழுந் தருளினார். 242

ஆங்கணையும் அவர்களுடன் அப்பதியில் அந்தணராம்
ஓங்குபுகழ் முருகனார் திருமடத்தி லுடனாகப்
பாங்கில்வருஞ்[2] சீரடியார் பலருமுடன் பயில்கேண்மை
நீங்கரிய திருத்தொண்டின் நிலையுணர்ந்து நிகழ்கின்றார். 243

திருப்பதிகச் செழுந்தமிழின் திறம்போற்றி மகிழ்வுற்றுப்
பொருப்பரையன் மடப்பாவை இடப்பாகர் பொற்றாளில்
விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தங்
கொருப்படுசிந் தையினார்கள் உடனுறைவின் பயன்பெற்றார். 244

அந்நாளில் தமக்கேற்ற திருத்தொண்டின் நெறியாற்ற
மின்னார்செஞ் சடைஅண்ணல் மேவுபதி எனைப்பலவும்
முன்னாகச் சென்றேத்தி முதல்வன்தாள் தொழுவதற்குப்
பொன்னாரும் மணிமாடப் பூம்புகலூர் தொழுதகன்றார். 245

திருநீல நக்கடிகள் சிறுத்தொண்டர் முருகனார்
பெருநீர்மை அடியார்கள் பிறரும்விடை கொண்டேக
ஒருநீர்மை மனத்துடைய பிள்ளையா ருடன்அரசும்
வருநீர்செஞ் சடைக்கரந்தார் திருஅம்பர் வணங்கினார். 246

செங்குமுத மலர்வாவித் திருக்கடவூர் அணைந்தருளிப்
பொங்கியவெங் கூற்றடர்த்த பொன்னடிகள் தொழுதேத்திக்

---

பா - ம்—[1] அப்படி சின்னாள். [2] பாங்கமரும்.

குங்குலியக் கலயனார் திருமடத்தில் குறைவறுப்ப
அங்கவர்பால் சிவனடியா ருடன்அமுது செய்தார்கள். 247

சீர்மன்னுந் திருக்கடவூர்த் திருமயா னமும்வணங்கி
ஏர்மன்னும் இன்னிசைப்பாப் பலபாடி இனிதமர்ந்து
கார்மன்னுங் கறைக்கண்டர் கழலிணைகள் தொழுதகன்று
தேர்மன்னும் மணிவீதித் திருவாக்கூர் சென்றணைந்தார். 248

சார்ந்தார்தம் புகலிடத்தைத் தான்தோன்றி மாடத்துக்
கூர்ந்தார்வம் உறப்பணிந்து கோதில்தமிழ்த் தொடைபுனைந்து
வார்ந்தாடுஞ் சடையார்தம் பதிபலவும் வணங்கியுடன்
சேர்ந்தார்கள் தம்பெருமான் திருவீழி மிழலையினை. 249

வீழி மிழலை வந்தணைய[1] மேவு நாவுக் கரசினையும்
காழி ஞானப் பிள்ளையையும் கலந்த உள்ளக காதலினால்
ஆழி வலவன் அறியாத அடியார் அடியார் அவர்களுடன்
வாழி மறையோர் எதிர்கொண்டு வணங்க வணங்கி உள்புக்கார்.

மாட வீதி அலங்கரித்து மறையோர் வாயின் மணிவிளக்கு
நீடுகதலி தழைப்பூகம் நிரைத்து நிறைபொற் குடமெடுத்துப்
பீடு பெருகும்[2] வாகீசர் பிள்ளை யாரும் தொண்டர்களும்
கூட மகிழ்ந்து விண்ணிழிந்த கோயில் வாயில் சென்றணைந்தார்.

சென்றுள் புகுந்து திருவீழி மிழலை அமர்ந்த செங்கனகக்
குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் வலமா வந்துதிரு
முன்றில் வணங்கி முன்னெய்தி முக்கட் செக்கர்ச் சடைமவுலி
வென்றி விடையார் சேவடிக்கீழ் விழுந்தார் எழுந்தார் விம்மினார்.

கைகள் குவித்துக் கழல்போற்றிக் கலந்த அன்பு கரைந்துருக,[3] மெய்யில் வழியுங் கண்ணருவி விரவப்[4] பரவுஞ் சொன்மாலை, "**செய்ய சடையார் தமைச்சேரார் தீங்கு நெறிசேர் கின்றார்**"என்(று), உய்யு நெறித்தாண் டகமொழிந்தங் கொழியாக் காதல் சிறந்தோங்க. 253

முன்னாள் அயனுந் திருமாலும் முடிவும் முதலும் காணாத,
பொன்னார் மேனி மணிவெற்பைப் பூநீர் மிழலை யினில்போற்றிப்,

---

பா - ம்—[1] வந்தவணையு. [2] பெருக. [3] கரைந்துருக்க. [4] விரவிப்.

பன்னாள் பிரியா நிலைமையினால் பயிலக் கும்பிட் டிருப்பாராய், அந்நாள் மறையோர் திருப்பதியில் இருந்தார் மெய்ம்மை அருந்தவர்கள். 254

சீரின் விளங்குந் திருத்தொண்டர் இருந்து சிலநாட் சென்ற தற்பின், மாரி சுருங்கி வளம்[1]பொன்னி நதியும் பருவம் மாறு தலும், நீரின் இயன்ற[2] உணவருகி[3] நிலவும் பலமன் னுயிர்க ளெலாம்,[4] பாரின் மலிந்த இலம்பாட்டில் படர்கூர் வறுமை பரந்ததால்.[5] 255

வையம் எங்கும் வற்கடமாய்ச் செல்ல உலகோர் வருத்தமுற
நையும் நாளில் பிள்ளையார் தமக்கும் நாவுக் கரசருக்கும்
கையில் மானும் மழுவுமுடன் காணக் கனவில் எழுந்தருளிச்
செய்ய சடையார் திருவீழி மிழலை யுடையார் அருள்செய்வார்

"கால நிலைமை யால்உங்கள் கருத்தில் வாட்ட முறீர்எனினும்
ஏல உம்மை வழிபடுவார்க் களிக்க அளிக்கின் றோம்"என்று
கோலங் காண எழுந்தருளிக் குலவும் பெருமை இருவர்க்கும்
ஞாலம் அறியப் படிக்காசு வைத்தார் மிழலை நாயகனார். 257

விண்ணின் றிழிந்த விமானத்தின் கிழக்கும் மேற்கும் பீடத்தில், அண்ணல் புகலி ஆண்டகையார் தமக்கும் ஆண்ட அரசினுக்கும், நண்ணும் நாள்க டொறுங்காசு படி வைத் தருள நானிலத்தில், எண்ணில் அடியா ருடன்அமுது செய்தங் கிருந் தார் இருவர்களும். 258

"அல்லார் கண்டத் தண்டர்பிரான் அருளால் பெற்ற படிக்காசு, பல்லா றியன்ற வளம்பெருகப் பரமன் அடியா ரானார்கள், எல்லாம் எய்தி உண்க"[6]வென இரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச், சொல்லால் சாற்றிச் சோறிட்டார்; துயர்கூர் வறுமை தொலைத்திட்டார். 259

ஈசர் மிழலை இறையவர்பால் இமையப் பாவை திருமுலைப் பால், தேசம் உய்ய உண்டவர்தாம்[7] திருமா மகனார் ஆதலின்

பா - —ம்[1] வளர். [2] இயன்றி. [3] உணர்வுருகி. [4] னுயிர்க்கெல் லாம். [5] படர்ந்ததால். [6] எய்தஉண்க. [7] உண்டவர்தம்.

ளுல், காசு வாசி யுடன்பெற்ருர்; கைத்தொண் டாகும் படிமை யினல்,[1] வாசி இல்லாக் காசுபடி பெற்று வந்தார் வாகீசர். 260

ஆறு சடைமேல் அணிந்தருளும் அண்ணல் வைத்த படிக் காசால், ஈறி லாத பொருளுடைய இருவ ருடைய திருமடங்கள், சோறு நாளுந் தொண்டர்மகிழ்ந் துண்ண உண்ணத் தொலை யாதே, ஏறு பெருமை புவிபோற்ற இன்புற் றிருக்கும் அந்நாளில். 261

காலந் தவறு தீர்ந்தெங்கும் கலிவான் பொழிந்த[2] புனல்கலந்து
ஞாலம் எல்லாம் குளிர்தூங்கி[3] உணவு பெருகி நலஞ்சிறப்ப
மூல அன்பர் இருவர்களும் மொழிமா லைகளும் பலசாத்தி
நீல கண்டர் உறைபதிகள் பிறவும் வணங்க நினைவுற்ருர். 262

வாய்ந்த மிழலை மாமணியை வணங்கிப் பிரியா விடை கொண்டு, பூந்தண் புனல்[4]சூழ் வாஞ்சியத்தைப் போற்றிப்[5] புனி தர் வாழ்பதிகள், ஏய்ந்த அன்பி னல்இறைஞ்சி இசைவண் டமிழ்கள் புனைந்துபோய்ச், சேர்ந்தார் செல்வத் திருமறைக்கா டெல்லை இல்லாச் சீர்த்தியினுர். 263

மன்றல் விரவு மலர்ப்புன்னை மணஞ்சூழ் சோலை உப்பளத் தின், முன்றில தோறுஞ் சிறுமடவார் முத்தங் கொழிக்கும் மறைக்காட்டுக், குன்ற வில்லி யார்மகிழ்ந்த கோயில் புகுந்து வலங்கொண்டு, சென்று சேர்ந்தார் தென்புகலிக் கோவும் அரசுந் திருமுன்பு. 264

பரவை ஓதக் கழிக்கானற் பாங்கு நெருங்கும் அப்பதியில், அரவச் சடைஅந் தணனுரை அகில மறைகள் அர்ச்சனைசெய்(து), உரவக கதவந் திருக்காப்புச் செய்த அந்நாள் முதல்இந்நாள், வரையும் அடைத்தே நிற்கின்ற மணிநீள் வாயில் வணங்குவார். 265

தொல்லை வேதந் திருக்காப்புச் செய்த வாயில் தொடர்வகற்ற, வல்ல அன்பர் அணையாமை மருங்கோர் வாயில் வழிஎய்தி,

---

பா - ம்—[1] அடிமையினுல். [2] பொழிந்து. [3] களிதூங்கி. [4] பொழில். [5] வாஞசியத்தில்தங்கிப்.

அல்லல் தீர்ப்பார் தமையருச்சிப் பார்கள் தொழுவார் ஆம்படி கண்(டு), எல்லை இல்லாப் பெரும்புகழார் இதனை அங்குக் கேட்டறிந்தார். 266

ஆங்கப் பரிசை அறிந்தருளி ஆழித் தோணி புரத்தரசர், ஓங்கு வேதம் அருச்சனைசெய் உம்பர் பிரானை உள்புக்குத், "தேங்கா திருவோம் நேர்இறைஞ்சத் திருமுன் கதவந் திருக் காப்பு, நீங்கப் பாடும் அப்பர்!" என நீடுந் திருநா வுக்கரசர் 267

உண்ணீர் மையினால் பிள்ளையார் உரைசெய் தருள அத னாலே, 'பண்ணி னேரு மொழியாள்"என் றெடுத்துப் பாடப் பயன்துய்ப்பான், தெண்ணீர் அணிந்தார் திருக்காப்பு நீக்கத் தாழ்க்கத் திருக்கடைக்காப்(பு), "எண்ணீர்! இரக்கம் ஒன்றில் லீர்!"[1] என்று பாடி இறைஞ்சுதலும். 268

வேத வனத்தின் மெய்ப்பொருளின் அருளால் விளங்கு மணிக்கதவம், காதல் அன்பர் முன்புதிருக் காப்பு நீங்கக் கலை மொழிககு, நாதர் ஞான முனிவருடன் தொழுது விழுந்தார்; ஞாலத்துள், ஓத ஒலியின் மிக்கெழுந்த தும்பர் ஆர்ப்பும் மறை யொலியும். 269

அன்பர் ஈட்டங் களிசிறப்ப ஆண்ட அரசுஞ் சிவக்கன்றும், இன்ப வெள்ளத் திடைமூழ்கி எழுந்துள் புகுந்து தம்பெருமான், முன்பு பணிந்து போற்றிசைத்துப் பரவி மொழிமா லைகள்பாடி, என்பு கரைய உள்ளுருகி இறைஞ்சி அரிதிற் புறத்தணைந்தார்.

புறம்பு நின்று[2] வாகீசர் புனிதர் அருளால் இக்கதவம், திறந்தும் அடைத்தும் செல்லுநெறி திருந்த மலையாள் திருமுலை யில், கறந்த ஞானங் குழைத்தமுது செய்த புகலிக் கவுணியரை, "நிறைந்த கதவம் அடைக்கும்வகை நீரும் பாடி அருளும்"என.

சண்பை ஆளுந் தமிழ்விரகர் தாமும் திருநா வுக்கரசர், பண் பின் மொழிந்த உரை[3]கொண்டு பதிகம் பாடும் அவ்வளவில், கண்பொற் பமைந்த நுதற்கால கண்டர் அருளால் கடிதுடனே,

---

பா-ம்—[1] இரக்கம் இல்லீரே. [2] நின்ற. [3] மொழிந்தவருள்.

திண்பொற் கதவந் திருக்காப்புச் செய்த(து)[1] எடுத்த திருப் பாட்டில். 272

அதுகண் டுடைய பிள்ளையார் தாமும் ஆண்ட அரசும் மகிழ்ந்(து), "இதுநம் பெருமான் அருள்செய்யப் பெற்றோம்" என்றங் கிறைஞ்சியபின், பதிகம் நிரம்பப் பிள்ளையார் பாடித் தொழுது பணிவுற்றார், எதிர்பொற் றிருவா யிலின்வழக்கம் என்றும் நிகழ்ச்சி எய்தியதால். 273

அங்கு நிகழ்ந்த அச்செயல்கண் டடியார் எல்லாம் அதிசயித் துப், பொங்கு புளகம் எய்திடமெய் பொழியுங் கண்ணீர்பரந் திழிய,[2] எங்கும் நிகரொன் றில்லாத இருவர் பாதம் இறைஞ்சினர், நங்கள் புகலிப் பெருந்தகையும் அரசும் மடத்தில் நண்ணியபின். 274

அரிதில் திறக்கத் தாம்[3]பாட அடைக்க அவர்பா டிய எளிமை, கருதி"நம்பர் திருவுள்ளம் அறியா தயர்ந்தேன்" எனக் கவன்று, பெரிதும் அஞ்சித் திருமடத்தில் ஒருபால் அணைந்து பேழ்கணித்து, மருவும் உணர்வில் துயில்கொண்டார் வாய்மை திறம்பா வாகீசர். 275

மன்னுஞ் செல்வ மறைக்காட்டு மணியின் பாதம் மனத்தின் கண், உன்னித் துயிலும் பொழுதின்கண் உமையோர் பாகம் உடையவர்தாம், பொன்னின் மேனி வெண்ணீறு புனைந்த கோலப் பொலிவினொடுந், துன்னி அவர்க்கு "வாய்மூரில் இருப் போந் தொடர வா"என்றார். 276

போதம் நிகழ "வாஎன்று போனார் என்கொல்" எனப்பாடி, "ஈதெம் பெருமான் அருளாகில் யானும் போவேன்"என் றெழுந்து, வேத வனத்தைப் புறகிட்டு[4] விரைந்து போக அவர் முன்னே, ஆதி மூர்த்தி முன் காட்டும் அவ்வே டத்தால் எழுந்தருள. 277

---

பா - ம்—[1] திருக்காப்புக் கொண்டது. [2] பாய்ந்திழிய. [3] திறக்கயாம். [4] புறப்பட்டு.

சீரார் பதியி னின்றெழுந்து செல்லுந் திருநா வுக்கரசர், ஆரா அன்பில் ஆரமுதம் உண்ண எய்தா வாறேபோல், நீரார் சடையார் எழுந்தருள நெடிது பின்பு செல்லுமவர், பேரா ளரை முன் தொடர்ந்தணையப் பெறுவார் எய்தப் பெற்றிலரால். 278

அன்ன வண்ணம் எழுந்தருளி அணித்தே காட்சி கொடுப் பார்போல், பொன்னின் கோயில் ஒன்றெதிரே காட்டி அதனுட் புக்கருளத், துன்னுந் தொண்டர் அம்மருங்கு விரைந்து தொடரப் போந்தபடி, மன்னும் புகலி வள்ளலார் தாமுங் கேட்டு வந்தணைந்தார். 279

"அழைத்துக் கொடுபோந் தணியார்போல் காட்டி மறைந் தார்" எனஅயர்ந்து, "பிழைத்துச் செவ்வி அறியாதே திறப்பித் தேனுக் கேயல்லால், உழைத்தா மொளித்தால் கதவந்தொண் டுறைக்கப் பாடி அடைட்பித்த, தழைத்த மொழியார் உப்பா லார்,[1] தாமிங் கெப்பால் மறைவ(து)? [2]என". 280

மாட நீடு திருப்புகலி மன்ன ரவர்க்கு மாலயனும்
நேடி இன்னங் காணுதார் நேரே காட்சி கொடுத்தருள
ஆடல் கண்டு பணிந்தேத்தி அரசுங் காணக் காட்டுதலும்
"பாட அடியார" என்றெடுத்துப் பரமர் தம்மைப் பாடினார். 281

பாடுந் தமிழ்மா லைகள்கொண்டு பரமர் தாமும் எழுந்தருள, நீடுந் திருவாய் மூரடைந்து நிலவுங் கோயில் வலஞ்செய்து, சூடும் பிறையார் பெருந்தொண்டர் தொழுது போற்றித் துதி செய்து, நாடுங் காதல் வளர்ந்தோங்க நயந்தந் நகரில் உடனு றைந்தார். 282

ஆண்ட அரசும் பிள்ளையா ருடனே அங்கண் இனிதமர்ந்து
பூண்ட காதல் பொங்கிஎழ வாய்மூர் அடிகள் அடிபோற்றி
மூண்ட அன்பின் மொழிமாலை சாத்தி ஞான முனிவரொடு
மீண்டு வந்து திருமறைக்காட் டெய்தி விமலர் தாள்பணிந்தார்.

ஆதி முதல்வர் தமைப்பணிந்தங் கான பணிசெய் தமருநாள்
சீத மதிவெண் குடைவளவர் மகளார் தென்னன் தேவியாம்[3]

பா - ம்—[1] மொழியாரும்பாலார். [2] மறைப்பது. [3] தேவியார்.

கோதில் குணத்துப் பாண்டிமா தேவி யார்முன் குலச்சிறையார்
போத விட்டார் சிலர்வந்தார் புகலி வேந்தர் தமைக்காண. 284

வந்து சிவனூர் திருமறைக்கா டெய்தி மன்னு வேணுபுரி,
அந்த ணாளர் தமக்கறிவித் தவர்பால் எய்தி அடிவணங்கச்,
சிந்தை மகிழ்ந்து தீதின்மை வினவத் "தீங்கும் உளவாமோ, இந்த
உலகம் உயவந்தீர்[1] இருதாள் நினைவார்க்(கு)"[2] என்றுரைப்பார்

"சைவ நெறிவை திகம்நிற்கச் சழக்கு நெறியைத் தவம்
என்னும், பொய்வல் அமணர் செயல்தன்னைப் பொறுக்க கில்
லோம்" எனக்கேட்டே, அவ்வன் தொழிலோர் செயல்மாற்றி
ஆதிசைவ நெறிவிளங்கத்', தெய்வ நீறு நினைந்தெழுந்தார் சீர்
கொள்சண்பைத் திருமறையோர். 286

ஆய பொழுது திருநாவுக் கரசு[4] புகலி ஆண்டகைக்குக்,
"காய மாசு பெருகவியுழல் கலதி அமணர் கடுவினைசெய், மாயை
சாலம்[5] மிகவல்லார், அவர்மற் றென்னை முன்செய்த, தீய தொழி
லும்[6] பல,கெட்டேன், சொல்ல இசையேன் யான்" என்றார் 287

என்று கூற "எல்லையிலா நீறு போற்றும் இருவரையும்
சென்று காணுங் கருத்து[7]டையேன், அங்குத் தீங்கு[8] புரிஅமணர்
நின்ற நிலைமை அழிவித்துச் சைவ நெறிபா ரித்தன்றி
ஒன்றுஞ் செய்யேன் ஆணைஉம(து)"என்றார்உடையபிள்ளையார்.

"போமா துணிந்து நீர்அங்குப் போகப்[9] போதா, அவ்வமணர்
தீமா யையினை யானேபோய்ச் சிதைத்து வருகின் றேன்"என்ன
ஆமா றெல்லாம் உரைத்தவரை மறுக்க மாட்டா தரசிருப்பத்
தாமா தரவால் தமிழ்நாட்டில் போனார் ஞானத் தலைவனார். 289

வேணு புரக்கோன் எழுந்தருள விடைகொண் டிருந்த
வாகிசர், பூணும் அன்பால் மறைக்காட்டில் புனிதர் தம்மைப்
போற்றிசைத்துப், பேணி இருந்தங் குறையுநாள் பெயர்வார்
வீழி மிழலைஅமர், தாணு வின்தன் செய்யகழல் மீண்டுஞ் சார
நினைக்கின்றார். 290

பா - ம்—[1] உயவருவீர். [2] அணைவார்க்கு. [3] விளக்கத். [4] கரசும்.
[5] மாயசாலம். [6] வினையும். [7] காணக்கருத்து. [8] தீமை. [9] போதப்.

சோலை மறைக்காட் டமர்ந்தருளுஞ் சோதி அருள்பெற் றகன்றுபோய், "வேலை விடமுண் டவர்வீழி மிழலை மீண்டுஞ் செல்வன்"என, ஞாலம் நிகழ்ந்த நாகைக்கா ரோணம் பிறவுந் தாம்பணிந்து, சாலு மொழிவண் டமிழ்பாடித் தலைவர் மிழலை வந்தடைந்தார். 291

வீழி மிழலை தனைப்பணிந்து வேத முதல்வர் தாமிருப்பு, ஆழி வலமேந் தியஅரியால் ஆகா சத்தின் நின்றிழிந்த, வாழி மலர்ந்த கோயில்தனில் மன்னும் பொருளைப் போற்றிசைத்துத, தாழும் நாளிற் பிறபதியும் பணியுங் காதல் தலைநிற்பார். 292

பூவிற் பொலியும் புனற்பொன்னிக் கரைபோய்ப் பணிவார் பொற்பமைந்த ஆவுக் கருளும் ஆவடுதண் டுறையார் பாதம் அணைந்திறைஞ்சி, நாவுக் கரசர் ஞானபோ னகர்க்குச் செம் பொன் ஆயிர மும, பாவுக்களித்த திறம்போற்றிப் போந்து பிற வும் பணிகின்றார். 293

செய்ய சடையார் பழையாறை எய்த அதனிற் செல்பொழு தில், மையல் அமணர் மறைத்த[1]வட தளியின் மன்னுஞ் சிவ னாரைக், கைகள் கூப்பித் தொழுதருளக் கண்ட வாறறால் அம ணர்கள்தம், பொய்கொள் விமான மெனகேட்டுப் பொறாத வுள்ளம் மிகப்புழுங்கி. 294

அந்த விமானந் தனக்கருகா ஆங்கோர் இடத்தின் பாங் கெய்திக், கந்த மலருங் கடிகொன்றை முடியார் செய்ய கழல் உன்னி, "மந்த அமணர் வஞ்சனையால் மறைத்த வஞ்சம் ஒழித் தருளிப், பந்தங் கொண்ட குண்டர்[2]திறம் பாற்றும்" என்று பணிந்திருந்தார்.[3] 295

"வண்ணங் கண்டு நான்உம்மை வணங்கி யன்றிப் போகேன்"என்(று), எண்ண முடிக்கும் வாகீசர் இருந்தார் அமுதுசெய்யாதே;, அண்ண லாரும் அதுவுணர்ந்தங் கரசு தம்மைப் பணிவதற்குத், திண்ண மாக மன்னனுக்குக் கனவில் அருளிச் செய்கின்றார். 296

---

பா - ம்—[1] மறைக்க. [2] அமணர். [3] பணிந்திருப்பார்.

"அறிவில் அமணர் நமைமறைப்ப இருந்தோம்" என்றங் கடையாளக், குறிகள் அறியச் செய்தருளி "நம்மை அரசு கும் பிடுவான், நெறியில் அமணர் தமையழித்து நீக்கிப் போக்"கென் றருள்புரியச், செறிவில் அறிவுற் றெழுந்தவனுஞ் செங்கை தலை மேற் குவித்திறைஞ்சி. 297

கண்ட வியப்பு மந்திரிகட் கியம்பிக் கூடக் கடிதெய்தி, அண்டர் பெருமான் அருள்செய்த அடையா ளத்தின் வழிகண்டு, குண்டர் செய்த வஞ்சனையைக் குறித்து வேந்தன் குலவுபெருந், தொண்டர் தம்மை அடிவணங்கித் தொக்க அமணர் தூர் அறுத்தான். 298

ஆனை இனத்தில் துகைப்புண்ட அமணு யிரமும் மாய்ந் ததற்பின், மேன்மை அரசன் ஈசர்க்கு விமான மாக்கி விளக்கிய பின், ஆன வழிபாட் டர்ச்சனைக்கு நிபந்தம்[1] எல்லாம் அமைத் திறைஞ்ச, ஞான அரசும் புக்கிறைஞ்சி நாதர் முன்பு போற்று வார். 299

"தலையின் மயிரைப் பறித்துண்ணுஞ் சாதி அமணர் மறைத் தாலும்.[2] நிலையி லாதார் நிலைமையினால மறைக்க ஒண்ணு மோ?" என்னும், விலையில் வாய்மைக் குறுந்தொகைகள் விளம்பிப் புறம் போந் தங்கமர்ந்தே, இலைகொள் சூலப் படையார்சேர் இடங்கள் பிறவுந் தொழவணைவார்.[3] 300

பொங்கு புனலார் பொன்னியினில இரண்டு கரையும் பொருவிடையார், தங்கும் இடங்கள் புக்கிறைஞ்சித் தமிழ்மா லைகளுஞ் சாத்திப்போய், எங்கும் நிறைந்த புகழாளர் ஈறில் தொண்டர் எதிர்கொள்ளச், செங்கண் விடையார் திருவானைக் காவின் மருங்கு சென்றணைந்தார். 301

சிலந்திக் கருளுங் கழல்வணங்கிச் செஞ்சொன் மாலை பல பாடி, இலங்கு சடையார் எறும்பியூர் மலையும் இறைஞ்சிப் பாடியபின், மலர்ந்த சோதித் திருச்சிராப் பள்ளி மலையுங் கற்

பா - ம்—[1] நிரம்ப. [2] மறைத்தாலுள். [3] தொழுதவணைவார்.

குடியும், நலங்கொள் செல்வத் திருப்பராய்த் துறையுந் தொழு
வான் நண்ணினார். 302

மற்றப் பதிகள் முதலான மருங்குள் ளனவுங் கைதொழுது,
பொற்புற் றமைந்த திருப்பணிகள் செய்து பதிகங் கொடு
போற்றி, உற்ற அருளால் காவிரியை ஏறி ஒன்னார் புரமெரியச்,
செற்ற சிலையார் திருப்பைஞ்ஞீ லியினைச் சென்று சேர்கின்றார்.

வழிபோம் பொழுது மிகஇளைத்து[1] வருத்தம் உறநீர் வேட்
கையொடும், அழிவாம் பசிவந் தணைந்திடவும் அதற்குச் சித்தம்
அலையாதே, மொழிவேந் தரும்முன் எழுந்தருள முருகார்
சோலைப் பைஞ்ஞீலி, விழியேந் தியநெற் றியினார்தந் தொண்டர்
வருத்தம் மீட்பாராய். 304

காவும் குளமும் முன்சமைத்துக் காட்டி[2] வழிபோங் கருத்
தினால், மேவுந் திருநீற் றந்தணராய் விரும்பும் பொதிசோ றுங்
கொண்டு, நாவின் தனிமன் னவர்க்கெதிரே நண்ணி யிருந்தார்
விண்ணின்மேல், தாவும் புள்ளும் மண்கிழிக்குந் தனியே னமுங்
காண் பரியவர்தாம். 305

அங்கண் இருந்த மறையவர்பால் ஆண்ட அரசும் எழுந்
தருள, வெங்கண் விடைவே தியர்நோக்கி "மிகவும் வழிவந்
திளைத்திருந்தீர்!, இங்கென் பாலே பொதிசோறுண்(டு), இதனை
உண்டு தண்ணீர்இப், பொங்கு குளத்தில் குடித்திளைப்புப் போக்
கிப் போவீர்" எனப்புகன்றார். 306

நண்ணுந் திருநா வுக்கரசர் நம்பர் அருள்என் றறிந்தார்
போல், "உண்ணும்" என்று திருமறையோர் உரைத்துப்
பொதிசோ றளித்தலுமே, எண்ண[3] நினையா தெதிர்வாங்கி
இனிதா அமுது செய்தினிய, தண்ணீர் அமுது செய்தருளித்
தூய்மை செய்து தளர்வொழிந்தார். 307

எய்ப்பு நீங்கி நின்றவரை நோக்கி இருந்த மறையவனார்,
"அப்பால் எங்கு நீர்போவ(து)?" என்றார்; அரசும் அவர்க்
கெதிரே, செப்பு வார்"யான்[4] திருப்பைஞ்ஞீ லிக்குப் போவ"

---

பா - ம்—[1] இளைத்த. [2] காட்ட. [3] எண்ணி. [4] செப்புவரியான்.

தென்றுரைப்ப[1], ஒப்பி லாரும் "யான்அங்குப் போகின் றேன்" என்றுடன் போந்தார். 308

கூட வந்து மறையவனார் திருப்பைஞ் ஞீலி குறுகியிட, வேடம் அவர்முன் மறைத்தலுமே மெய்ம்மைத் தவத்து மேலவர் தாம், "ஆடல் புரிந்தார்[2] அடியேனைப் பொருளா அளித்த கருணை"எனப், பாடல் புரிந்து விழுந்தெழுந்து கண்ணீர் மாரி பயில்வித்தார். 309

பைஞ்ஞீ லியினில் அமர்ந்தருளும் பரமர் கோயில் சென் றெய்தி, மைஞ்ஞீ லத்து மணிகண்டர் தம்மை வணங்கி மகிழ் சிறந்து, மெய்ஞ்ஞீர் மையினில் அன்புருக விரும்புந் தமிழ்மா லைகள்பாடிக், கைஞ்ஞீ டியதந் திருத்தொண்டு செய்து காத லுடனிருந்தார். 310

நாதர் மருவுந் திருமலைகள் நாடும் பதிகள் பலமிகவும்
காதல் கூரச் சென்றிறைஞ்சிக் கலந்த இசைவண் டமிழ்பாடி
மாதொர் பாகர் அருளாலே வடபால் நோக்கி வாகீசர்
ஆதி தேவர் அமர்ந்ததிரு வண்ணா மலையை நண்ணினார். 311

செங்கண் விடையார் திருவண்ணா மலையைத் தொழுது வலங் கொண்டு, துங்க வரையின்[4] மிசையேறித் தொண்டர் தொழும் புக் கெதிர்நிற்கும், அங்கண் அரசைத் தொழுதெழுந்து[5] திளைத் துத் திருநா வுக்கரசர், தங்கு பிறப்பே வீட்டினுக்கு மேலாம் பெருமை சாதித்தார்[6]. 312

அண்ணா மலைமேல் அணி[7]மலையை ஆரா அன்பின் அடிய வர்தங், கண்ணார் அமுதை விண்ணோரைக் காக்கக் கடலில் வந் தெழுந்த, உண்ணா நஞ்சம் உண்டானைக் கும்பிட் டுருகுஞ் சிந்தை யுடன், பண்ணார் பதிகத் தமிழ்பாடிப் பணிந்து பரவிப் பணி செய்தார். 313

---

பா - ம்—[1] தென்றுரைத்தார். [2] உகந்தார். [3] திருவண்ணா மலையை நாடிப் பதிபலவும். [4] விடையின். [5] அ ர சை ப் பணிந்தெழுந்து. [6] மேலாம் பரிசு சாற்றினார். [7] மணி.

பணியார் வேணிச் சிவபெருமான் பாதம் போற்றிப் பணி செயுநாள், மணியார் கண்டத் தெம்பெருமான் மண்மேல் மகிழும் இடமெங்கும், தணியாக் காத லுடன்சென்று வணங்கித் தக்க பணிசெய்வார், அணியார் தொண்டைத் திருநாட்டில் அருளால் அணைவா ராயினார். 314

காதல் செய்யுங் கருத்தினுடன் காடும் மலையும் கான்யாறும்
சூத மலிதண் பணைப்பதிகள் பலவும் கடந்து சொல்லினுக்கு
நாதர் போந்து பெருந்தொண்டை நன்னா டெய்தி[1] முன்னாகச்
சீத மலர்மென் சோலைசூழ் திருவோத் தூரிற் சென்றடைந்தார்.

செக்கர்ச் சடையார் திருவோத்தூர்த் தேவர் பிரானார் தங் கோயில், புககு வலங்கொண் டெதிர்இறைஞ்சிப் போற்றிக் கண்கள் புனல்பொழிய, முக்கட் பிரானை விரும்புமொழித் திருத் தாண் டகங்கள் முதலாகத், தக்க மொழிமா லைகள்சாத்திச் சார்ந்து பணிசெய் தொழுகுவார். 316

செய்ய ஐயர் திருவோத்தூர் ஏத்திப் போந்து செழும்புவனம், உய்ய நஞ்சுண் டருளுமவர் உறையும் பதிகள் பலவணங்கித், தையல் தழுவக் குழைந்தபிரான் தங்கு நதெய்வப் பதிஎன்று, வையம் முழுதுந் தொழுதேத்தும் மதில்சூழ் காஞ்சி மாநக் கணைந்தார். 317

"ஞாலம் உய்யத் திருவதிகை நம்பர் தம்பேர் அருளினால்
சூலை மடுத்து முன்னாண்ட தொண்டர் வரப்பெற் றோம்"என்று
காலை மலருங்[2] கமலம்போல் காஞ்சி வாணர் முகமெல்லாம்
சால மலர்ந்து[3] களிசிறப்பத் தழைத்த மனங்கள் தாங்குவார். 318

மாட வீதி மருங்கெல்லாம்[4] மணிவா யில்களில் தோரணங்கள்
நீடு கதலி யுடன்கமுகு நிறைத்து[5] நிறைபொற் குடந்தீபம்
தோடு குலவு மலர்மாலை சூழ்ந்த வாசப் பந்தர்களும்
ஆடு கொடியு முடனெடுத்தங் கணிநீள் காஞ்சி அலங்கரித்தார்.

---

பா - ம்— [1] நனாட்டெய்தி [2] மருவும். [3] மகிழ்ந்து. [4] மறுகெல்லாம். [5] நிரைத்து; நெருங்கு.

தொண்டர் சண்டி எதிர்கொள்ள எழுந்து சொல்லுக் கரசர் பால், கொண்ட வேட்ப்[1] பொலிவினொடுங் குலவும் வீதி பணி[2] செய்யும், அண்டர் அறிதற கரியதிரு வலகு முதலாம் அவை யேந்தி, இண்டை புனைந்த சடைமுடியார்க் கன்பர் தம்மை எதிர் கொண்டார். 320

எதிர்கொண் டிறைஞ்சுஞ் சீரடியார் தம்மை இறைஞ்சி எழுந்தருளி மதில்கொண் டணிந்த காஞ்சிநகர் மறுகுட் போந்து வானநதி, குதிகொண் டிழிந்த சடைக்கம்பர் செம்பொற் கோயில் குறுகினார், அதிர்கொண் டலைநேர் மணிமிடற்றார் ஆண்ட திருநா வுக்கரசர் 321

திருவா யிலினைப் பணிந்தெழுந்து செல்வத் திருமுன் றிலை அணைந்து, கருவார் கச்சி ஏகம்பர் கனக மணிமா ளிகைசூழ்ந்து, வருவார் செம்பொன் மலைவல்லி தழுவக் குழைந்த மணி மேனிய, பெருவாழ் வினைமுன் கண்டிறைஞ்சிப் பேரா அன்பு பெருக்கினார்[3] 322

வார்ந்து சொரியுங் கண்ணருவி மயிர்க்கால் தோறும் வரும் புளகம், ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப அன்பு கரைந்தென் புள் ளலைப்பச், சேர்ந்த நயனப்[4] பயன்பெற்றுத திளைப்பத் திருவே கம்பர்தமை, நேர்ந்த மனத்தில் உறவைத்து நீடும் பதிகம் பாடு வார். 323

"கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை" என்றெடுத்துப்
பரவாய சொன்மாலைத் திருப்பதிகம் பாடியபின்
விரவார்தம் புரமெரித்த விடையவனார் வெள்ளெயிற்றின்[5]
அரவாரம் புனைந்தவர்தந் திருமுன்றிற் புறத்தணைந்தார். 324

கையார்ந்த[6] திருத்தொண்டு கழியமிகும்[7] காதலொடுஞ்
செய்யாநின் றேயெல்லாச் செந்தமிழ்மா லையும்பாடி
மையார்ந்த மிடற்றார்திரு மயானத்தை வலங்கொண்டு
மெய்யார்வ முறத்தொழுது விருப்பினொடு மேவுநாள்.[8] 325

பா - ம்—[1] வேட்கைப். [2] வீதிப்பணி. [3] பெருகினார். [4] சொரிந்த நயனம். [5] வெள்ளளயெயிற்று. [6] கையாரத். [7] மிகு. [8] மேவுவார்.

சீர்வளரு மதிற்கச்சி நகர்த்திருமேற் றளிமுதலாம்
நீர்வளருஞ் சடையவர்தாம்[1] நிலவியுறை ஆலயங்கள்
ஆர்வமுறப் பணிந்தேத்தி ஆய்ந்ததமிழ்ச் சொன்மலரால்
சார்வுறுமா லைகள்சாத்தித் தகுந்தொண்டு[2] செய்திருந்தார். 326

அந்நகரில் அவ்வண்ணம் அமர்ந்துறையும் நாளின்கண்
மன்னுதிரு மாற்பேறு வந்தணைந்து தமிழ்பாடிச்
சென்னிமிசை மதிபுனைவார் பதிபலவுஞ் சென்றிறைஞ்சித்
துன்னினார் காஞ்சியினைத் தொடர்ந்தபெருங் காதலினால். 327

"ஏகம்பன் காண்அவன்என் எண்ணத்தான்" எனப்போற்றிப்
பாகம்பெண் ணுருவானைப் பைங்கண்விடை உயர்த்தானை
நாகம்பூண் உகந்தானை நலம்பெருகுந் திருநீற்றின்
ஆகந்தோய் அணியானை அணைந்துபணிந் தின்புற்றார். 328

திருக்கச்சி ஏகம்பம் பணிந்தேத்தித் திங்களார், நெருக்கச்
செஞ் சடைக்கணிந்தார் நீடுபதி தொழுதினைவார், வருக்கைச்
செஞ் சுளைபொழிதேன் வயல்விளைக்கும் நாட்டிடைப்போய்ப்,
பருக்கைத்திண் களிற்றுரியார் கழுக்குன்றின் பாங்கணைந்தார்.

நீடுதிருக் கழுக்குன்றில் நிருத்தனார் கழல்வணங்கிப்
பாடுதமிழ்த் தொடைபுனைந்து பாங்குபல பதிகளிலுஞ்
சூடும்இளம் பிறைமுடியார் தமைத்தொழுது போற்றிப்போய்
மாடுபெருங் கடலுடுத்த வான்மியூர் மருங்கணைந்தார்.[3] 330

திருவான்மி யூர்மருந்தைச் சேர்ந்துபணிந் தன்பினொடும்
பெருவாய்மைத் தமிழ்பாடி அம்மருங்கு பிறப்பறுத்துத்[4]
தருவார்தங் கோயில்பல சார்ந்திறைஞ்சித் தமிழ்வேந்தர்
மருவாரும் மலர்ச்சோலை மயிலாப்பூர் வந்தடைந்தார். 331

வரைவளர்மா மயிலென்ன மாடமிசை மஞ்சாடும்[5]
தரைவளர்[6]சீர்த் திருமயிலைச் சங்கரனார் தாள்வணங்கி

பா - ம்—[1] நீர்மருவுஞ் சடைமுடியார். [2] தங்தொண்டு. [3] வந்தணைந்தார். [4] மருங்கெங்கும் பிறப்பறுத்தல். [5] வரைதவழ்மா மஞ்சென்ன மாடமிசை மயிலாடும். [6] தரை புகழ்.

உரைவளர்மா லைகள்அணிவித்(து) உழவாரப் படையாளி
திரைவளர்வே லைக்கரைபோய்த் திருவொற்றி யூர்சேர்ந்தார். 332

ஒற்றியூர் வளநகரத் தொளிமணிவீ திகள்விளக்கி
நற்கொடிமா லைகள்பூகம் நறுங்கதலி நிரைநாட்டிப்
பொற்குடங்கள் தூபங்கள் தீபங்கள் பொலிவித்து
மற்றவரை எதிர்கொண்டு கொடுபுக்கார் வழித்தொண்டர். 333

திருநாவுக் கரசரும்அத் திருவொற்றி யூர்அமர்ந்த
பெருநாகத் தின்[1]சிலையார் கோபுரத்தை இறைஞ்சிப்புக்(கு)
ஒருஞானத் தொண்டருடன் உருகிவலங் கொண்டடியார்
கருநாமந் தவிர்ப்பாரைக் கைதொழுது முன்விழுந்தார். 334

எழுதாத மறைஅளித்த எழுத்தறியும் பெருமானைத்
தொழுதார்வ முறநிலத்தில் தோய்ந்தெழுந்தே அங்கமெலாம்
முழுதாய பரவசத்தின் முகிழ்த்தமயிர்க் கால்சூழ்க
விழுதாரை கண்பொழிய விதிர்ப்புற்று விம்மினார். 335

"வண்டோங்குஞ் செங்[2]கமலம்' எனஎடுத்து மனமுருகப்
பண்தோய்ந்த சொற்றிருத்தாண் டகம்பாடிப் பரவுவார்
விண்தோய்ந்த புனற்கங்கை வேணியார் திருவுருவம்
கண்டோங்கு களிசிறப்பக் கைதொழுது புறத்தணைந்தார். 336

விளங்குபெருந் திருமுன்றில் மேவுதிருப் பணிசெய்தே
உளங்கொள்திரு விருத்தங்கள் ஓங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொள்திரு நேரிசைகள் பலபாடிக் கைதொழுது
வளங்கொள்திருப் பதியதனில் பலநாள்கள் வைகினார். 337

அங்குறையு நாளின்கண் அருகுளவாம் சிவாலயங்கள்[3]
எங்குஞ்சென் றினிதிறைஞ்சி ஏத்துமவர் இறைஅருளால்
பொங்குபுனல் திருவொற்றி யூர்தொழுது போந்துமையாள்
பங்குடையார் அமர்ந்ததிருப் பாசூராம் பதிஅணைந்தார். 338

திருப்பாசூர் நகர்எய்திச் சிந்தையினில் வந்தூறும்
விருப்பார்வம் மேற்கொள்ள வேயிடங்கொண் டுலகுய்ய

---

பா - ம்—[1] தின். [2] வண்டோங்குசெங். [3] ஆலயங்கள்.

இருப்பாரைப் புரமூன்றும் எரித்தருள எடுத்ததனிப்
பொருப்பார்வெஞ் சிலையாரைத் தொழுதெழுந்து போற்றுவார்.

"முந்திமூ வெயில்எய்த முதல்வனார்" எனஎடுத்துச்
சிந்தைகரைந் துருகுதிருக் குறுந்தொகையும் தாண்டகமும்
சந்தநிறை நேரிசையும் முதலான தமிழ்பாடி
எந்தையார் திருவருள்பெற் றேகுவார் வாசீசர். 340

அம்மலர்ச்சீர்ப் பதியைஅகன் றயல்உளவாம் பதிஅனைத்தின்
மைம்மலருங் [1] களத்தாரை வணங்கிமகிழ் வொடும்போற்றி
மெய்ம்மைநிலை வழுவாத வேளாள [2] விழுக்குடிமைச்
செம்மையினாற் பழையனூர்த் திருஆல வனம்பணிந்தார். 341

"திருவாலங் காடுறையுஞ் செல்வர்தாம்" எனச்சிறப்பின்
ஒருவாத பெருந்திருத்தாண் டகம்முதலாம் ஓங்குதமிழ்ப்
பெருவாய்மைத் தொடைமாலை பலபாடிப் பிறபதியும்
மருலார்வம் பெறவணங்கி வடதிசைமேல் வழிக்கொள்வார். 342

பல்பதியும் நெடுங்கிரியும் படர்வனமுஞ் சென்றடைவார்
செல்கதிமுன் அளிப்பார் [3] தந் திருக்காரி கரை [4] பணிந்து
தொல்கலையின் பெருவேந்தர் தொண்டர்களபின் உம்பர்குழாம்
மல்குதிருக் காளத்தி மாமலைவந் தெய்தினார். 343

பொன்முகலித் திருநதியின் புனிதநெடுந் தீர்த்தத்தில்
முன்முழுகிக் காளத்தி மொய்வரையின் தாழ்வரையில்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத் தனிப்பாகர்
மன்னுமலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார். 344

காதணிவெண் குழையானைக் காளத்தி மலைக்கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி எழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனை"என் கண்ணுளான்" எனுந்திருத்தாண் டகம்நவின்றார்.

மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்குஞ்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதம் சேர்ந்திறைஞ்சி

பா - ம்—[1] மைம்மருவும். [2] மேன்மைநெறி. [3] அளிப்பவர். [4] காரிககரை.

அலைத்துவிழுங் கண்ணருவி ஆகத்துப் பாய்ந்திழியத்[1]
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம் போந்தணைந்தார். 346

சேணிலவு திருமலையில் திருப்பணியா யினசெய்து
தாணுவினை அம்மலைமேல் தாள்பணிந்த குறிப்பினால்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார். 347

அங்கண் மாமலை மேல்ம ருந்தைவ ணங்கி யாரரு ளால்மிகப், பொங்கு காதலின் உத்த ரத்திசை மேல்வி ருப்பொடு போது வார், துங்க மால்வரை கானி யாறு[2]தொ டர்ந்த நாடு கடந்தபின், செங்கண் மால்விடை அண்ணல் மேவு திருப்ப ருப்பதம் எய் தினார். 348

மான விஞ்சையர் வான நாடர்கள் வான் இயக்கர்கள் சித்தர் கள், கான கின்னரர் பன்ன காதிபர் காம சாரிக ளேமுதல், ஞான மோனிகள் நாளும் நம்பரை வந்தி றைஞ்சி நலம்பெறுந், தான மானதி ருச்சி லம்பை வ ணங்கி வண்டமிழ் சாற்றினார். 349

அம்ம ருங்குக டந்து போமவர் ஆர்கொள் சூல அயிற் படைச், செம்மல் வெண்கயி லைப்பொ ருப்பைநி னைந்தெ ழுந்த தோர் சிந்தையால், எம்ம ருங்குமொர் காத லின்றி இரண்டு பாலும் வியந்துளோர்[3] கைம்ம ருங்கணை யுந்தெ லுங்கு கடந்து கன்னடம் எய்தினார். 350

கருந டங்கழி வாக ஏகிய[4] பின்க லந்தவ னங்களும், திருந தித்துறை யாவை யும்பயில் சேண் நெடுங்கிரி வட்டையும், பெருந லங்கிளர் நாடும் எண்ணில பிற்ப டச்செறி பொற்பினால், வருநெ டுங்கதிர் கோலு சோலைய[5] மாள வத்தினை நண்ணினார்.

அங்கு முற்றி அகன்று போகி அருஞ்சு ரங்கள் கடந்து[6]சென் (று)
எங்கு மிக்க அறங்கள் நீடும் இலாட பூமி இகந்துபோய்
மங்குல் சுற்றிய வெற்பி னோடு வனங்கள் ஆறு கடந்தயற்
பங்க யப்பழ னத்து மத்திய[7] பைதி ரத்தினை எய்தினார். 352

---

பா - ம்—[1] பரந்திழியத். [2] கான்யாறு; காடியாறு. [3] விரைந்து ளோர். [4] எய்திய. [5] சோலைவேலியம். [6] இகந்து. [7] மத்திம.

அன்ன நாடுக டந்து கங்கை அணைந்து சென்று வலங் கொளும், மின்னு வேணியர் வார ணாசி விருப்பி னோடு பணிந் துடன், பின்ன ணைந்தவர் தம்மை அங்கண் ஒழிந்து கங்கை கடந்து[1]போய், மன்னு காதல்செய்[2] நாவின் மன்னவர் வந்து கற்சுரம் முந்தினார். 353

மாக மீதுவ ளர்ந்த கானக மாகி எங்கும் மனித்தரால்
போக லாநெறி அன்றி யும்புரி கின்ற காதல்பொ லிந்தெழச்
சாக மூலப லங்கள் துய்ப்பன[3] வுந்த விர்ந்துத னித்துநோ
ஏகி னாரிர வும்பெ ருங்கயி லைக்கு லக்கிரி எய்துவார். 354

ஆய வாரிரு ளின்கண் ஏகுமவ் வன்பர் தம்மை[4] அ ணைந்துமுன்
தீய வாயவி லங்கு வன்தொழில் செய்ய அஞ்சின; நஞ்சுகால்
வாய நாகம ணிப்ப ணங்கொள்வி ளக்கெ டுத்தன, வந்துகால்
தோய வானவ ராயி னுந்தனி துன்ன ருஞ்சுரம் முன்னினார்.[5] 355

வெங்க திர்ப்பக லக்க டத்திடை வெய்ய வன்கதிர் கைபரந்(து), எங்கு மிக்கபி ளப்பி னுகர்தம் எல்லை புக்கெரி கின்றன, பொங்க ழற்றெறு பாலை வெங்கிழல் புக்க சூழல்[6] புகும்பகல், செங்க திர்க்கனல் போலும் அத்திசை திண்மை மெய்த்தவர் நண்ணினார். 356

இங்ங னம்இர வும்ப கற்பொழு தும்ம ருஞ்சுரம் எய்துவார், பங்க யம்புரை தாள்ப ரட்டள வும்ப சைத்தசை தேயவும், மங்கை பங்கர்தம் வெள்ளி மால்வரை வைத்த சிந்தை மறப் பரோ?, தங்க ரங்கள் இரண்டு மேகொடு தாவி ஏகுதல் மேவினார்.

கைக ளும்மணி பந்த சைந்துற வேக ரைந்துசி தைந்தபின், மெய்க லந்தெழு சிந்தை அன்பின் விருப்பு மீமிசை பொங்கிட, மொய்க டுங்கனல் வெம்ப ரற்புகை மூளு மத்த முயங்கியே, மைகொள் கண்டர்தம் அன்பர் செல்ல வருந்தி உந்தினர் மார் பினால். 358

மார்ப முந்தசை[7] நைந்து சிந்தி வரிந்த[8] என்பு முரிந்திட, நேர்வ ருங்குறி[9] நின்ற சிந்தையின் நேசம் ஈசனை நேடுநீ(டு),[10]

பா - ம்—[1] பெயர்ந்து. [2] காதலின். [3] துய்ப்பது. [4] பாதம். [5] மன்னி னார். [6] புக்கழல் குழலான. [7] முர்திசை. [8] வருந்த. [9] குறை. [10] நேருநீடே.

ஆர்வம் அங்குயிர் கொண்டு கைக்கும் உடம்ப டங்கவும் ஊன்
கெடச்[1], சேர்வ ரும்பழு வம்பு ரண்டுபு ரண்டு சென்றனர் செம்
மையோர். 359

அப்பு றம்புரள் கின்ற நீளிடை அங்கம் எங்கும் அரைந்திடச்
செப்ப ருங்கயி லைச்சி லம்படி சிந்தை சென்றுறும் ஆதலால்
மெய்ப்பு றத்தில் உறுப்ப ழிந்தபின் மெல்ல உந்து முயற்சியும்
தப்பு றச்செய வின்றி அந்நெறி தங்கி னூர்தமி ழாளியார். 360

அன்ன தன்மையர் கயிலையை அணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற் பின்னையும் வழுத்த
என்னெ டும்புனல் தடமும்ஒன் றுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர் முனிவராம் படியால். 361

வந்து மற்றவர் மருங்குற அணைந்துநேர் நின்று
நொந்து நோக்கிமற் றவர்எதிர் நோக்கிட நுவல்வார்
"சிந்தி இவ்வுறுப் பழிந்திட வருந்திய திறத்தால்
இந்த வெங்கடத் தெய்திய தென்?" என இசைத்தார். 362

மாசில் வற்கலை ஆடையும் மார்பின்முந் நூலும்
தேசு டைச்சடை மவுலியும் நீறும்மெய் திகழ
ஆசின் மெய்த்தவ ராகிநின் றவர்தமை நோக்கிப்
பேச உற்றதோர் உணர்வுற விளம்புவார் பெரியோர். 363

"வண்டு லாங்குழல் மலைமக ளுடன்வட கயிலை
அண்டர் நாயகர் இருக்கும்அப் பரிசவர் அடியேன்
கண்டு கும்பிட விருப்பொடுங் காதலின் அடைந்தேன்;
கொண்ட என்குறிப் பிதுமுனி யே!" எனக் கூற. 364

"கயிலை மால்வரை யாவது காசினி மருங்கு
பயிலும் மானுடப் பான்மையோர் அடைவதற் கெளிதோ?
அயில்கொள் வேற்படை அமரரும் அணுகுதற் கரிதால்;
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர்! வந்" தென விளம்பி.[2]

"மீளும் அத்தனை உமக்கினிக் கடன்" என விளங்கும்
தோளும் ஆகமும் துவளுமுந் நூல்முனி சொல்ல

பா - ம்—[1] முன்கோடச். [2] விளம்பீர்.

"ஆளும் நாயகன் கயிலையில் இருக்கைகண் டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டுமீ ளேன்"என மறுத்தார். 366

ஆங்கு மற்றவர் துணிவறிந் தவர்தமை அறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக் கரந்துநீள் மொழியால்
"ஓங்கு நாவினுக் கரசனே! எழுந்திர்"என் றுரைப்பத்
தீங்கு நீங்கிய யாக்கைகொண் டெழுந்தொளி திகழ்வார். 367

"அண்ண லே!எனை ஆண்டுகொண் டருளிய அமுதே!
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே!
கண்ணி னால்திருக் கயிலையில இருந்தநின் கோலம்
நண்ணி நான்தொழ நயந்தருள் புரி"எனப் பணிந்தார். 368

தொழுதெ ழுந்தநற் றொண்டரை நோக்கிவிண் டலத்தில்
எழுபெ ருந்திரு வாக்கினால் இறைவர்"இப் பொய்கை
முழுகி நம்மைநீ கயிலையில் இருந்தஅம் முறைமை
பழுதில் சீர்த்திரு வையாற்றிற் காண்"எனப் பணித்தார். 369

ஏற்றி னார்அருள் தலைமிசைக் கொண்டெழுந் திறைஞ்சி
"வேற்று மாகிவிண் ணாகிநின் றார்"மொழி விரும்பி
ஆற்றல் பெற்றஅவ்[1] வண்ணலார் அஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையில் மூழ்கினார் பணியால். 370

ஆதி தேவர்தந் திருவருட் பெருமையார் அறிந்தார்?[2]
போத மாதவர் பனிமலர்ப்[3] பொய்கையில் மூழ்கி
மாதொர் பாகனார் மகிழும்ஐ யாற்றிலோர் வாவி
மீது தோன்றிவந் தெழுந்தனர் உலகெலாம் வியப்ப. 371

வம்பு லாமலர் வாவியின் கரையில்வந் தேறி
உம்பர் நாயகர் திருவருட் பெருமையை உணர்வார்[4]
எம்பி ரான்தருங் கருணைகொல்[5] இது?"என இருகண்
பம்பு தாரைநீர் வாவியிற் படிநதெழும் படியார். 372

மிடையும் நீள்கொடி வீதிகள் விளங்கிய ஐயா(று)
உடைய நாயகர் சேவடி பணியவந் துறுவார்

---

பா - ம்—[1] பெற்றவர். [2] அறிவார். [3] பனிவரைப்; மணிவரைப்.
[4] உணர்ந்தார். [5] திருக்கருவணயோ; தருங்கருவணபோல்.

அடைய அப்பதி நிற்பவுஞ் சரிப்பவு மான
புடைஅ மர்ந்ததந் துணையொடும் பொலிவன கண்டார். 373

பொன்ம லைக்கொடி யுடன்அமர் வெள்ளியம் பொருப்பில்
தன்மை யாம்படி சத்தியுஞ் சிவமுமாஞ் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயிலவன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயில்முன் வந்தார். 374

காணும் அப்பெருங் கோயிலுங் கயிலைமால் வரையாய்ப்
பேணு மால்அயன் இந்திரன் முதற்பெருந் தேவர்
பூணும் அன்பொடு போற்றிசைத் தெழும்ஒலி பொங்கத்
தாணு மாமறை யாவையுந் தனித்தனி முழங்க. 375

தேவர் தானவர் சித்தர்விச் சாதரர் இயக்கர்
மேவு மாதவர் முனிவர்கள் புடையெலாம் மிடையக்
காவி வாள்விழி அரம்பையர் கானமும் முழவும்
தாவில் ஏழ்கடல் முழக்கினும் பெருகொலி தழைப்ப. 376

கங்கை யேமுதல் தீர்த்தமாங் கடவுளமா நதிகள்
மங்க லம்பொலி புனறபெருந் தடங்கொடு வணங்க
எங்கும் நீடிய பெருங்கண நாதர்கள் இறைஞ்சப்
பொங்கி யங்களால் பூதவே தாளங்கள் போற்ற. 377

அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாம்என அணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடைஎதிர் நிற்ப
முந்தை மாதவப் பயன்பெறு முதன்மையால்[1] மகிழ்ந்தே
நந்தி எம்பிரான் நடுவிடை யாடிமுன் நணுக. 378

வெள்ளி வெற்பின்மேல் மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற் பெனஇடப் பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூட[2]வீற றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர் வாக்கின்மன் னவனார். 379

கண்ட ஆனந்தக் கடலினைக் கண்களால் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந் தெழுந்துமெய் குலைய

பா - ம்—[1] முறைமையால். [2] கூடி.

அண்டர் முன்புநின் றாடி னார், பாடினார்; அழுதார்;
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன யார்சொல வல்லார்? 380

முன்பு கண்டுகொண்(டு) அருளின்ஆர் அமுதுண்ண மூவா
அன்பு பெற்றவர் அளவிலா ஆர்வம்முன் பொங்கப்
பொன்பி றங்கிய சடையரைப் போற்றுதாண் டகங்கள்
இன்பம் ஓங்கிட ஏத்தினார் எல்லையில் தவத்தோர். 381

ஆய வாறுமற் றவர்மனங் களிப்புறக்[1] கயிலை
மேய நாதர்[2]தந் துணையொடும் வீற்றிருந் தருளித்
தூய தொண்டருந்[3] தொழுதெதிர் நிற்கஅக் கோலம்
சேய தாக்கினார் திருவையாறு அமர்ந்தமை திகழ. 382

ஐயர் கோலம்[4]அங் களித்தகன் றிடஅடித் தொண்டர்
மையல் கொண்டுளம் மகிழ்ந்திட வருந்திமற் "றிங்குச்[5]
செய்ய வேணியர் அருளிது வோ?"எனத் தெளிந்து
வையம் உய்ந்திடக் கண்டமை பாடுவார் மகிழ்ந்து. 383

"மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும்"
என்னும், கோதறு தண்டமிழ்ச் சொல்லால் குலவு திருப்பதி
கங்கள், "வேத முதல்வர்ஐ யாற்றில் விரவுஞ் சராசரம் எல்லாம்
காதல் துணையொடுங் கூடக் கண்டேன்" எனப்பாடி நின்றார்.

கண்டு தொழுது வணங்கிக் கண்ணுத லார்தமைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள் குறுந்தொகை நேரிசை அன்பின்
மண்டு விருத்தங்கள் பாடி வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான்திரு வையா றமர்ந்தனர் நாவுக் கரசர். 385

நீடிய அப்பதி நின்று நெய்த்தான மேமுத லாக
மாடுயர் தானம் பணிந்து மழபாடி யாரை வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக் கரியார் திருப்பூந் துருத்தியைச் சேர்ந்தார். 386

சேர்ந்து விருப்பொடும் புக்குத் திருநட மாளிகை முன்னர்ச்
சார்ந்து வலங்கொண் டிறைஞ்சித் தம்பெரு மான்திரு முன்பு

---

பா - ம்—[1]ஆய காவலயி லவர்மனங் களியுறக். [2]நாயகர். [3]தொண்டனார். [4]வேடம். [5]றங்குச்.

சேர்ந்த பரிவொடுந் தாழ்ந்து நிறைந்தெழு தியாஅன்பு பொங்க
ஆர்ந்தகண் ணீர்மழை தூங்க அயர்வுறுந் தன்மைய ராளுர். 387

"திருப்பூந் துருத்தி அமர்ந்த செஞ்சடை யானை ஆன் ஏற்றுப், பொருப்பூர்ந் தருளும் பிரானைப் பொய்யிலி யைக்கண்டேன்" என்று, விருப்புறு தாண்டகத் தோடு மேவிய காதல் விளைப்ப, "இருப்போந் திருவடிக்கீழ் நாம்" என்னுங் குறுந்தொகை பாடி. 388

அங்குறை யுந்தன்மை வேண்டி "நாமடி போற்றுவ" தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னுர்அருள் பெற்றுத்
திங்களும் ஞாயிறும்தோயும் திருமடம்ஆங்கொன்று[1] செய்தார்.

பல்வகைத் தாண்டகத் தோடும் பரவுந் தனித்தாண் டகமும்
அல்லல் அறுப்பவர் தானத் தடைவு திருத்தாண் டகமும்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருஅங்க மாலையும் உள்ளிட்(டு)
எல்லையில் பன்மைத் தொகையும் இயம்பினர் ஏத்தி இருந்தார்.

பொன்னிவலங் கொண்டதிருப் பூந்துருத்தி அவர்[2] இருப்பக்
கன்மனத்து வல்லமணர் தமைவாதிற் கட்டழித்துத்
தென்னவன்கூன் நிமிர்த்தருளித் திருநீற்றின் ஒளிகண்டு
மன்னியசீர்ச் சண்பைநகர் மறையவனுர் வருகின்ருர். 391

தீந்தமிழ்நாட் டிடைநின்றும் எழுந்தருளிச் செழும்பொன்னி[3]
வாய்ந்தவளந் தருநாட்டு வந்தணைந்தார் வாக்கினுக்கு
வேந்தர்இருந் தமைகேட்டு "விரைந்தவர்பால் செல்வன்"எனப்
பூந்துருத்தி வளம்பதியின் புறம்பணையில் வந்தணைந்தார். 392

சண்பைவருந் தமிழ்விரகர் எழுந்தருளத் தாங்கேட்டு
மண்பரவும் பெருங்கீர்த்தி வாகீசர் மனமகிழ்ந்து
கண்பெருகுங் களிகொள்ளக் கண்டிறைஞ்சுங் காதலினுல்
எண்பெருகும் விருப்பெய்த[4] எழுந்தருளி எதிர்சென்ருர். 393

காழியர்கோன் வரும்எல்லை கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற் காணுமே தொழுதருளி

பா - ம்—[1] அங்கொன்று. [2] இவர். [3] செம்பொன்னி. [4] விருப்பெய்தி.

"வாழியவர் தமைத்தாங்கும் மணிமுத்தின் சிவிகையினைத்
தாழும்உடல் இதுகொண்டு தாங்குவன்யான்" எனத்தரித்தார்.

வந்தொருவர் அறியாமே மறைந்தவடி வொடும்புகலி
அந்தணனர் ஏறியெழுந் தருளிவரும் மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவா ருடன்தாங்கிச்
சிந்தைகளிப் புறவருவார் தமையாருந் தெளிந்திலரால். 395

திருஞான மாமுனிவர்[1] அரசிருந்த பூந்துருத்திக்(கு)[2]
அருகாக எழுந்தருளி "எங்குற்றார்? அப்பர்"என
உருகாநின்(று) "உம்அடியேன் உம்அடிகள் தாங்கிவரும்
பெருவாழ்வு வநதெய்தப் பெற்றிங்குற றேன்"[3]என்றார். 396

பிள்ளையார் அதுகேளாப்[4] பெருகுவிரை வுடன்இழிந்தே
உள்ளமிகு பதைப்பெய்தி உடையஅர சினைவணங்க
வள்ளலார் வாகீசர் அவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார்தொண்டரெலாந் தொழுதார்த்தார்4

கழுமலக்கோன் திருநாவுக் கரசருடன் கலந்தருளிச்
செழுமதியந் தவழ்சோலைப் பூந்துருத்தித் திருப்பதியின்
மழுவினொடு மான்ஏந்து[5] திருக்கரத்தார் மலர்த்தாள்கள்
தொழுதுருகி இன்புற்றுத் துதிசெய்தங் குடனிருந்தார். 398

வல்அமணர் தமைவாதில் வென்றதுவும் வழுதிபால்[6]
புல்லியகூன் நிமிர்த்ததுவும் தண்பொருந்தப்[7] புனல்நாட்டில்
எல்லையிலாத் திருநீறு வளர்த்ததுவும் இருந்தவத்தோர்
சொல்லஅது[8] கேட்டுவந்தார் தூயபுகழ் வாகீசர். 399

பண்புடைய பாண்டிமா தேவியார் தம்பரிவும்
நண்புடைய குலச்சிறையார் பெருமையும்ஞா னத்தலைவர்
எண்பெருக வுரைத்தருள எல்லையில்சீர் வாகீசர்
மண்குலவு தமிழ்நாடு காண்பதற்கு மனங்கொண்டார். 400

---

பா - ம்—[1] திருஞானசம்பந்தர். [2] திருஞான முனிவர் அரசிருக்கு திருப் பூந்துருத்திக்கு. [3] வநதெனப் பெற்றுயர்ந்தேன். [4] அதுகோளாப் [5] ஏந்தும். [6] வழுதியுடல். [7] பொருந்தம். [8] சொல்லுவது.

பிரமபுரத் திருமுனிவர் பெருந்தொண்டை நன்னாட்டில்
அரனுறையுந்[1] தானங்கள் அணைந்திறைஞ்சிப் பாடுதற்கங்(கு)[2]
உரனுடைய திருநாவுக் கரசர்உரை செய்தருளப்
புரமெரித்தார் திருமகனார் பூந்துருத்தி தொழுதகன்றார். 401

ஆண்டஅர சங்கணர்சீர் அருள்பெற்றப் பதிநின்றும், பாண்
டிநாட் டெழுந்தருளும் பான்மையராய்த் தென்றிசைபோய்க்,
காண்டகைய திருப்புத்தூர் பணிந்தேத்திக் கதிர்மதியம், தீண்டு
கொடி மதில்மதுரைத் திருஆல வாய்சேர்ந்தார். 402

சென்றணைந்து மதுரையினில் திருந்தியநூற் சங்கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந் தருளியஅங் கணர்கோயில்
முன்றிலினை வலங்கொண்டு முன்இறைஞ்சி உள்புக்கு
வன்றனிமால் விடையாரை வணங்கிமகிழ் வொடுந்திளைத்தார்.

எய்தியபே ரானந்த இன்பத்தி னிடைஅழுந்தி
மொய்திகழுஞ் சடையானை "முளைத்தானை" என்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந் தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித் திருவுள்ளங் களிசிறந்தார். 404

சீர்திகழும் பாண்டிமா தேவியார் திருநீற்றின்[3]
சார்வடைய[4] கூன்நிமிர்ந்த தென்னவனார் தம்முடனே[5]
பார்பரவுங் குலச்சிறையார் வாகீசர் தமைப்பணிவுற்(று)
ஆரகிலாக் காதல்மிக அடிபோற்ற அங்கிருந்தார். 405

திருவால வாய்அமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருள்நூல்
தருவானை நேரிசையும் தாண்டகமும் முதலான
பெருவாய்மைத தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம்[6] புரம்எரித்தார் பூவணத்தை வந்தடைந்தார். 406

கொடிமாடம் நிலவுதிருப் பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார் நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
"வடிவேறு திரிசூல"த் தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப் புனிதர்பதி பிறபணிவார். 407

---

பா - ம்—[1] அரன்மகிழுந்; அரனமரும். [2] பாடுவதற்கு. [3] திருமேனி. [4] சார்வுடைய. [5] சேரவருளுடையதனாற் கூனிமிர்த்த தென்னவனார். [6] மருவார்முப்.

தென்னிலங்கை இராவணன்தன் சிரமீரைந் துந்துணித்த
மன்னவனும் இராமனுக்கு வரும்பெரும்பா தகந்தீர்த்த[1]
பின்னுகரைத் தொழுவதற்கு நினைந்துபோய்ப் பெருமகிழ்ச்சி
துன்னிமனங் கரைந்துருகத் தொழுதெழுந்தார் சொல்லரசர். 408

தேவர்தொழுந் தனிமுதலைத் திருவிரா மேச்சுரத்து[2]
மேவியசங் கரனைஎதிர் நின்றுவிருப் புறுமொழியால்
பாவுதிரு நேரிசைகள் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம்பெருகச் செய்தமர்ந்தார். 409

அங்குறைந்து கண்ணுதலார் அடி[3]சூடி அகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டுப் புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னுந் திருக்கானப் பேர்முதலா
எங்குநிகழ் தானங்கள் எல்லாம்புக் கிறைஞ்சுவார். 410

தொழுதுபல வகையாலுஞ் சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவில்திருப் பணிசெய்து மனங்கசிவுற் றெப்பொழுதும்
ஒழுகியகண் பொழிபுனலும் ஓவாது சிவன்தாள்கள
தழுவியசிந் தையில்உணர்வுந தங்கியநீர் மையிற்சரித்தார். 411

தேம்பொழியும்[4] செந்தமிழ்நாட் டினில்எங்குஞ் சென்றி றைஞ்சிப்[5] பாம்பணிவார் தமைப்பணிவார் பொன்னிநா டதுஅ ணைந்து, வாம்புனல்சூழ் வளநகர்கள் பின்னும்போய் வணங் கியே, பூம்புகலூர் வந்தடைந்தார் பொய்ப்பாசம் போக்கு வார்.[6] 412

பொய்கைசூழ் பூம்புகலூர்ப் புனிதர்மலர்த் தாள்வணங்கி
நையுமனப் பரிவினொடும்[7] நாடோறுந் திருமுன்றில்
கைகலந்த திருத்தொண்டு செய்துபெருங் காதலுடன்
வைகுநாள் எண்ணிறந்த வண்டமிழ்மா லைகள்மொழிவார். 413

நின்றதிருத் தாண்டகமும் நீடுதனித் தாண்டகமும்
மன்றுறைவார் வாழ்பதிகள் வழுத்துதிருத் தாண்டகமும்
கொன்றைமலர்ச் சடையார்பால் குறைந்ததிரு[8] நேரிசையும்
துன்றுதனி நேரிசையும் முதலான தொடுத்தமைத்தார். 414

---

பா - ம்—[1] தீர்க்கும். [2] மீச்சுரத்து. [3] அருள். [4] தேம்பொழில்சூழ். [5] சேர்ந்திறைஞ்சி. [6] போக்குதற்கு. [7] பரிவோடு. [8] குறைந்தடைந்த

ஆருயிரின் திருவிருத்தம் தசபுரா ணத்தடைவும்
பார்பரவும் பாவநா சப்பதிகம் பன்முறையும்
நேர்படநின் றறைகூவுந் திருப்பதிகம் முதற்பிறவும்
பேரருளின் கடல்அளிக்கும் பெருமானைப் பாடினார். 415

அந்நிலைமை யினில்[1] ஆண்ட அரசுபணி செய்யஅவர்
நன்னிலைமை காட்டுவார் நம்பர்திரு மணிமுன்றில்
தன்னில்வரும் உழவாரம் நுழைந்தவிடந் தானெங்கும்
பொன்னினொடு நவமணிகள் பொலிந்திலங்க அருள்செய்தார். 416

செம்பொன்னும் நவமணியும் சேண்விளங்க ஆங்கெவையும்[2]
உம்பர்பிரான் திருமுன்றில் உருள்பருக்கை யுடன்ஒக்க
எம்பெருமான் வாகீசர் உழவாரத் தினில்ஏந்தி
வம்பலர்மென் பூங்கமல வாவியினிற் புகஎறிந்தார். 417

புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும
சொல்லோடும் வேறுபா டிலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் திருப்புகலூர் நாயகனார் திருவருளால
வில்லோடு நுதல்மடவார் விசும்பூடு வந்திழிந்தார். 418

வானகமின் னுக்கொடிகள வந்திழிந்தால் எனவந்து
தானநிறை சுருதிகளில் தகும்அலங்கா ரத்தன்மை
கானஅமு தம்[3]பரக்குங் கனிவாயில் ஒளிபரப்பப்
பானல்நெடுங் கண்கள்வெளி பரப்பி இசை பாடுவார் 419

கற்பகப்பூந் தளிரடிபோங் காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட் டணையோடுங் கைபெயரப்[4]
பொற்புறும்அக் கையின்வழிப்[5] பொருகயற்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிநுடங்கி ஆடுவபோல் ஆடுவார்.[6] 420

ஆடுவார்; பாடுவார்; அலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார், குழல்அவிழ இடைநுடங்க
ஓடுவார்; மாரவே ளுடன்மீள்வர், ஒளிபெருக
நீடுவார் துகில்அசைய நிற்பாரும் ஆயினார்.[7] 421

---

பா - ம்—[1] தனில். [2] அங்கவையும். [3] அமுதிசை. [4] கை பெயர்ப். பார். [5] வழி. [6] ஆடினார். [7] ஆயினபின்.

இத்தன்மை அரம்பையர்கள் எவ்விதமுஞ் செயல்புரிய
அத்தனர் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும்
மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்
சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார். 422

இம்மாயப் பவத்தொடக்காம் இருவினைகள் தமைநோக்கி
"உம்மால்இங் கென்னகுறை உடையேன்யான்? திருவாரூர்
அம்மானுக் காளானேன், அலையேன்மின் நீர்"என்று [றார்.
"பொய்ம்மாயப் பெருங்கடலுள்" எனுந்திருத்தாண் டகம்புகன்

மாதரவர் மருங்கணைய வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகுங் கைதவங்கள செய்திடவும்
பேதமிலா ஒருணர்விற் பெரியவரைப் பெயர்விக்க
யாதும்ஒரு செயலில்லா மையில்இறைஞ்சி எதிர்அகன்றார்.[1] 424

இந்நிலைமை உலகேழும் எய்தஅறிந் தியல்பேத்த
மன்னியஅன் புறுபத்தி வடிவான வாகீசர்
மின்னிலவுஞ் சடையார்தம் மெய்யருள்[2]தான் எய்தவரும்
அந்நிலைமை அணித்தாகச் சிலநாள்அங் கமர்ந்திருந்தார். 425

மன்னியஅந் தக்கரணம் மருவுதலைப் பாட்டினால்
"தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன்
என்னையினிச் சேவடிக்கீழ் இருத்திடும்"என் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினால் திருவிருத்தம் பலமொழிந்தார்.

மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
"புண்ணியா! உன்னடிக்கே போதுகின்றேன்" எனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅர(சு) அமர்ந்திருந்தார்.[3] 427

வானவர்கள் மலர்மாரி மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த ஐந்துபே ரியவொலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினஎல்லாம் உள்நிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையிற் சதயமாந் திருநாளில். 428

---

பா - ம்—[1] எதிர்நின்றார். [2] மெய்ப்பொருள். [3] எய்தினார்.

அடியனேன் ஆதரவால் ஆண்ட அர சின்சரிதப்
படியையான் அறிந்தபடி பகர்ந்தேன், அப் பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள் கைதொழுது குலச்சிறையார்
முடிவில்புகழ்த் திருத்தொண்டின் முயற்சியினை மொழிகின்றேன்.

---

# 22 குலச்சிறை நாயனர் புராணம்

பன்னு தொல்புகழ்ப் பாண்டிநன் னாட்டிடைச்
செந்நெ லார்வயல் தீங்கரும் பின்னயல்
துன்னு பூகப் புறம்பணை சூழ்ந்தது
மன்னு வண்மையி னார்மண மேற்குடி. 1

அப்ப திக்கு முதல்வர்வன் றொண்டர்தாம்
ஒப்ப ரும்"பெரு நம்பி"என் றோதிய
செப்ப ருஞ்சீர்க் குலச்சிறை யார்;திண்மை
வைப்பி னால்திருத் தொண்டில் வழாதவர். 2

கார ணங்கண் ணுதற்கன்பர் என்னவே
வார மாகி மகிழ்ந்தவர் தாளமிசை
யாரும் அன்பொடு வீழ்ந்தஞ் சலிமுகிழ்த(து)
ஈர நன்மொழி எய்த இசைத்துளார். 3

குறியில் நான்கு குலத்தின ராயினும்
நெறியின அக்குலம் நீங்கின ராயினும்
அறிவு சங்கரற் கன்பர் எனப்பெறில்
செறிவு றப்பணிந் தேத்திய செய்கையார். 4

உலகர் கொள்ளும் நலத்தின[1] ராயினும்
அலகில் தீமைய ராயினும் அம்புலி
இலகு செஞ்சடை யார்க்கடி[2] யாரெனில்
தலமு றப்பணிந் தேத்துந் தகைமையார். 5

பண்பு[3] மிக்கார் பலராய் அணையினும்
உண்ப வேண்டி ஒருவர் அணையினும்

---

பா - ம்—[1] நலத்துள. [2] யாரடி. [3] பண்பின்.

என்பெ ருக்கிய அன்பால் எதிர்கொண்டு
நண்பு கூர்ந்தமு தூட்டும் நலத்தினர் 6

பூதி கோவணஞ் சாதனத் தாற்பொலிந்
தாதி தேவர்தம் அஞ்செழுத் தாமவை
ஓது நாவணக் கத்தால் உரைப்பவர்
பாதம் நாளும் பரவிய பண்பினர். 7

இன்ன நல்லொழுக் கத்தினர், ஈறில்சீர்[1]
தென்ன வன்நெடு மாறற்குச் சீர்திகழ்
மன்னு மந்திரி கட்குமே லாகியார்;
ஒன்ன லர்ச்செற(று) உறுதிக்கண் நின்றுளார். 8

ஆய செய்கைய ராயவர் ஆறணி
நாய ஞர்திருப் பாதம் நவின்றுளார்,
பாய சீர்புனை பாண்டிமா தேவியார்
மேய தொண்டுக்கு மெய்ததொண்ட ராயினர். 9

புன்ன யத்தரு கந்தர்பொய் நீக்கவும்[2]
தென்னர் நாடு திருநீறு போற்றவும்
மன்னு காழியர் வள்ளலார் பொன்னடி
சென்னி சேர்த்தி மகிழ்ந்த சிறப்பினர். 10

வாதில் தோற்ற அமணரை வன்கழுத்
தீது நீங்கிட ஏற்றுவித் தார்திறம்
யாது போற்றினேன்? மேலினி ஏத்துகேன்
வேத நீதி மிழலைக் குறும்பர்தாள். 11

## 23. பெருமிழலைக் குறும்ப நாயனர் புராணம்

சூத நெருங்கு குலைத்தெங்கு பலவு பூகஞ் சூழ்புடைத்தாய்
வீதி தோறும் நீற்றினெளி விரிய மேவி விளங்குபதி
நீதி வழுவா நெறியினராய் நிலவுங் குடியால் நெடுநிலத்து
மீது விளங்குந் தொன்மையது மிழலை நாட்டுப் பெருமிழலை. 1

பா - ம்—[1] ஈறிலாத். [2] நீடபவும்.

அன்ன தொன்மைத் திருப்பதிக்கண் அதிபர் மிழலைக் குறும்பனார், சென்னி மதியம் வைத்தவர்தம் அடியார்க் கான செய்பணிகள், இன்ன வண்ணம் என்றவர்தாம்[1] உரையா முன்னம், எதிரேற்று, முன்னம் உணர்ந்து[2] செய்வாராய் முதிரும் அறிவின் பயன்கொள்வார். 2

தொண்டர் பலரும் வந்திண்டி உண்ணத் தொலையா அமுதூட்டிக், கொண்டு செல்ல இருநிதியம்[3] முகந்து கொடுத்துக் குறைந்தடைவார், வண்டு மருவுங் குழலுமையாள் கேள்வன் செய்ய தாளென்னும், புண்டரீகம் அகமலரில வைத்துப் போற்றும் பொற்பினார். 3

இத்தன் மையராய் நிகழுநாளை எல்லை இல்லாத் திருத்தொண்டின், மெய்த்தன் மையினை உலகறிய விதியால் வணங்கி மெய்யடியார், சித்தம் நிலவுந் திருத்தொண்டத் தொகைபாடியநம் பியைப்பணிந்து, நித்தன் அருள்பெற் றவர்பாதம் நினைக்கும் நியமத் தலைநின்றார். 4

மையார் தடங்கட் பரவையார் மணவா ளன்தன் மலர்க் கழல்கள், கையால் தொழுது வாய்வாழ்த்தி மனத்தால் நினைக்கும் கடப்பாட்டில், "செய்யாள் கோனும் நான்முகனும் அறியாச் செம்பொற் றாளிணைக்கீழ், உய்வான் சேர உற்றநெறி இதுவே" என்(று)அன் பினில்உய்த்தார். 5

நாளும் நம்பி ஆரூரர் நாமம் நவின்ற நலத்தாலே
ஆளும் படியால் அணிமாதி சித்தி யான அணைந்ததற்பின்
மூளுங் காத லுடன்பெருக முதல்வர் நாமத் தஞ்செழுத்தும்
கேளும் பொருளும் உணர்வுமாம் பரிசு வாய்ப்பக் கெழுமினார். 6

இன்ன வாறே இவரொழுக ஏறு கொடிமேல் உயர்த்தவர் தம், பொன்னங்[4] கழல்கள் மண்ணின்மேல் பொருந்த வந்து வழக்குரைத்து, மன்னும் ஓலை அவைமுன்பு காட்டி ஆண்ட வன்றொண்டர், சென்னி மதிதோய் மாடமலி கொடுங்கோ ளூரைச் சேர்வுற்றார். 7

---

பா - ம்—[1] எதிர்ஏற்று. [2] உவந்து. [3] வருநிதியம். [4] பொன்னின்.

அஞ்சைக் களத்து நஞ்சுண்ட அமுதைப் பரவி அணைவுறு வார், செஞ்சொல் தமிழ்மாலைகள்மொழியத் தேவர் பெருமான் அருளாலே, மஞ்சில் திகழும் வடகயிலைப் பொருப்பில் எய்த வரும்வாழ்வு, நெஞ்சில தெளிய இங்குணர்ந்தார் நீடு மிழலைக் குறும்பனார். 8

"மண்ணில் திகழுந் திருநாவ லூரில் வந்த வன்றொண்டர், நண்ணற் கரிய திருக்கயிலை நாளை எய்த நான்பிரிந்து, கண்ணிற் கரிய மணிகழிய வாழ்வார் போல வாழேன்" என்(று), எண் ணிச் "சிவன்தாள் இன்றேசென் றடைவன் யோகத் தால்" என்பார். 9

நாலு கரணங் களும்ஒன்றாய் நல்ல அறிவு மேற்கொண்டு
காலும் பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபாலநடு
ஏல வேமுன் பயின்றநெறி எடுத்த மறைமூ லந்திறப்ப
மூல முதல்வர் திருப்பாதம் அணைவார்[1] கயிலை முன்னடைந்தார்.

பயிலைச்[2] செறிந்த யோகத்தால்[3] பரவை கேள்வன் பாத முறக், கயிலைப் பொருப்பர் அடியடைந்த மிழலைக் குறும்பர் கழல்வணங்கி, மயிலைப் புறங்கொள் மென்சாயல் மகளிர் கிளவி யாழ்வென்றும், குயிலைப் பொருவும் காரைக்கால் அம்மை பெருமை கூறுவாம். 11

---

## 24. காரைக்காலம்மையார் புராணம்

---

'மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடிதுவன்றி ஓங்குபதி
கூனல்வளை திரைசுமந்து கொண்டேறி[4] மண்டுகழிக்
கானல்மிசை உலவுவளம் பெருகுதிருக் காரைக்கால். 1

வங்கமலி கடற்காரைக் காவின்கண் வாழ்வணிகர்
தங்கள்குலத் தலைவனார் தனதத்த னார்தவத்தால்

---

பா - ம்—[1] அடைவார். [2] பயிலச். [3] யோகத்தார். [4] டேக.

அங்கவர்பால் திருமடந்தை அவதரித்தாள் எனவந்து
பொங்கியபே ரழகுமிகப் புனிதவதி யார்பிறந்தார். 2

வணிகர்பெருங் குலம்விளங்க வந்துபிறந் தருளியபின்
அணிகிளர்மெல் அடிதளர்வுற் றசையுநடைப் பருவத்தே
பணிஅணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்
தணிவில்பெரு மனக்காதல் ததும்பவரும் மொழிபயின்றார். 3

பல்பெருநற் கிளை உவப்பப் பயில்பருவச் சிறப்பெல்லாம்
செல்வமிகு தந்தையார்[1] திருப்பெருகுஞ் செயல்புரிய
மல்குபெரும் பாராட்டின் வளர்கின்றார் விடையவர்பால்
அல்கியஅன் புடன்அழகின் கொழுந்தெழுவ தெனவளர்வார்.

வண்டல்பயில் வனஎல்லாம் வளர்மதியம் புனைந்தசடை
அண்டர்பிரான் திருவார்த்தை அணையவரு வனபயின்று
தொண்டர்வரில் தொழுதுதா தியர்போற்றத் துணைமுலைகள்
கொண்டநுசுப் பொதுங்குபதக் கொள்கையினிற் குறுகினார். 5

நல்லவென உறுப்புநூ லவர்உரைக்கும் நலம்நிரம்பி
மல்குபெரு வனப்புமீக் கூரவரு மாட்சியினால்
இல்லிகவாப் பருவத்தில் இவர்கள்மர பினுக்கேற்கும்
தொல்குலத்து வணிகர்மகட் பேசுதற்குத் தொடங்குவார். 6

நீடியசீர்க் கடல்நாகை நிதிபதிஎன் றுலகின்கண்
பாடுபெறு புகழ்வணிகன் பயந்தகுல மைந்தனுக்குத்
தேடவருந் திருமரபில் சேயிழையை மகட்பேச[2]
மாடமலி காரைக்கால் வளநகரில் வரவிட்டார். 7

வந்தமூ தறிவோர்கள் மணங்குறித்த[3] மனைபுகுந்து
தந்தையாந் தனதத்தன் தனைநேர்ந்து[4] "நீபயந்த
பைந்தொடியை நிதிபதிமைந் தன்பரம தத்தனுக்கு
முந்தைமர பினுக்கேற்கும் முறைமைமணம் புரி"கென்றார். 8

மற்றவனும் முறைமையினால் மணம்இசைந்து செலவிடச் சென்(று), உற்றவர்கள் உரைகேட்ட நிதிபதியும் உயர் சிறப்புப், பெற்றனன்போல் உவந்துதனிப் பெருமகட்குத்

பா - ம்—[1] மிகுந்தாதையார். [2] பேசி. [3] குறித்தம். [4] நோக்கி.

திருமலியும், சுற்றமுடன் களிகூர்ந்து வதுவைவினைத் தொழிற் பூண்டான். 8

மணமிசைந்த நாளோலை செலவிட்டு மங்கலநாள்
அணையவது வைத்தொழில்க ளானவெலாம் அமைவித்தே
இணரலங்கல் மைந்தனையும் மணவணியின் எழில்விளக்கிப்
பணைமுரசம் எழுந்தார்ப்பக் காரைக்கால பதிபுகுந்தார். 10

அளிமிடைதார்த் தனதத்தன் அணிமாடத் துள்புகுந்து
தெளிதருநூல் விதிவழியே[1] செயல்முறைமை செய்தமைத்துத்
தளிரடிமென் நகைமயிலைத் தாதவிழ்தார்க் காளைக்குக்
களிமகிழ்சுற் றம்போற்றக் கலியாணஞ் செய்தார்கள். 11

மங்கலமா மணவினைகள் முடித்தியல்பின் வைகுநாள்
தங்கள்குடிக் கரும்புதல்வி[2] ஆதலினால் தனதத்தன்
பொங்கொலிநீர் நாகையினிற் போகாமே கணவனுடன்
அங்கண்அமர்ந் தினிதிருக்க அணிமாடம் மருங்கமைத்தான் 12

மகட்கொடையின் மகிழ்சிறக்கும் வரம்பில்தனங் கொடுத்த
நிகர்ப்பரிய பெருஞ்சிறப்பில் நிதிபதிதன் குலமகனும் [தற்பின்
தகைப்பில்பெருங் காதலினால் தங்குமனை வளம்பெருக்கி
மிகப்புரியும் கொள்கையினில் மேம்படுதல் மேவினான். 13

ஆங்கவன்தன் இல்வாழ்க்கை அருந்துணையாய் அமர்கின்ற
பூங்குழலார்[3] அவர்தாமும் பொருவிடையார் திருவடிக்கீழ்
ஓங்கியஅன் புறுகாதல் ஒழிவின்றி மிகப்பெருகப்
பாங்கில்வரும் மனைஅறத்தின் பண்புவழா மையில்பயில்வார்,[4]

நம்பர்அடி யார்அணைந்தால் நல்லதிரு அமுதளித்தும்
செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் முதலான
தம்பரிவி னால்அவர்க்குத் தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக ஒழுகுநாள். 15

பாங்குடைய நெறியின்கட் பயில்பரம தத்தனுக்கு
மாங்கனிகள் ஓரிரண்டு வந்தணைந்தார் சிலர்கொடுப்ப

பா - ம்—[1] நூல் வழி முறையே. [2] குடிக்கொருபுதல்வி. [3] பூங்கொடியார். [4] வழாமைப் பயில்வார்.

ஆங்கவைதான் முன்வாங்கி அவர்வேண்டுங் குறையளித்தே
"ஈங்கிவறறை இல்லத்துக் கொடுக்க" என இயம்பினன். 16

கணவன்தான் வரவிடுத்த கனி இரண்டுங் கைக்கொண்டு
மணமலியும் மலர்க்கூந்தல் மாதரார் வைத்ததற்பின்
பணஅரவம் புனைந்தருளும் பரமனுர் திருத்தொண்டர்
உணவின்மிகு வேட்கையினுல் ஒருவர்மனை யுட்புகுந்தார். 17

வேதங்கள் மொழிந்தபிரான் மெய்த்தொண்டர் நிலைகண்டு
"நாதன்தன் அடியாரைப் பசிதீரபபேன்" எனநண்ணிப்
பாதங்கள் விளக்கநீர் முன்னளித்துப் பரிகலம்வைத்(து)
ஏதந்தீர் நல்விருந்தா இன்அடிசில் ஊட்டுவார். 18

கறியமுதங் குதவாதே திருஅமுது கைகூட
வெறிமலர்மேல் திருவனையார "விடையவன்தன் அடியாரே
பெறலரிய விருந்தானல பேறிதன்மேல இலலை"யெனும்
அறிவினராய் அவர்அமுது செய்வதனுக் காதரிப்பார். 19

இல்லாளன் "வைக்க"எனத தம்பககல் முன்னிருந்த
நல்லநறு மாங்கனிகள் இரணடினிலஒன் றைக்கொண்டு
வல்விரைந்து வநதணைந்து படைத்துமன மகிழ்ச்சியினுல்
அல்லல்தீர்ப் பவர்அடியார் தமைஅமுது செய்வித்தார். 20

மூப்புறும்அத் தளர்வாலும் முதிர்ந்துமுடு கியவேட்கைத்
தீப்பசியின் நிலையாலும் அயர்ந்தணைந்த[1] திருத்தொண்டர்
வாய்ப்புறுமென் சுவைஅடிசில் மாங்கனியோ டினிதருந்திப்
பூப்பயில்மென் குழல்மடவார் செயல்உவந்து போயினர். 21

மற்றவர்தாம் போயினபின் மனைப்பதியா கியவணிகன்
உற்றபெரும் பகலின்கண் ஓங்கியபே ரில்லெய்திப்
பொற்புறமுன் நீராடிப் புகுந்தடிசில் புரிந்தயிலக்
கற்புடைய மடவாரும்[2] கடப்பாட்டில் ஊட்டுவார். 22

இன்னடிசில் கறிகளுடன் எய்துமுறை இட்டதற்பின்
மன்னியசீர்க் கணவன்தான் மனையிடைமுன் வைப்பித்த

---

பா - ம்—[1] அமர்ந்தவணைந்த. [2] மனையாரும்.

நன்மதுர மாங்கனியில் இருந்ததனை நறுங்கூந்தல்
அன்னமனை யார்தாமுங் கொடுவந்து கலத்தளித்தார். 23

மனைவியார் தாம்படைத்த மதுரமிக வாய்த்தகனி [1]
தனை நுகர்ந்த இனியசுவை ஆராமைத் தார்வணிகன்
"இனையதொரு பழம்இன்னும் உளததனை இடுக!" என
அனையதுதாங் கொண்டுவர அணைவார்போல அங்ககன்றூர். 24

அம்மருங்கு நின்றயர்வார், அருங்கனிக்கங் கென்செய்வார்?
மெய்ம்மறநது நினைநதுற்ற விடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங்கொண் டுணர்தலுமே அவர்அருளால தாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருநத(து) அதிமதுரக கனியொன்று. 25

மற்றதனைக் கொடுவந்து மகிழ்ந்திடலும் அயின்றதனில் [2]
உற்றசுவை அமுதினுமேற் படவுளதா யிட "இதுதான்
முறறருமாங் கனியன்று; மூவுலகில பெறற்கரிதால்
பெற்றதுவே றெங்"கென்று பெய்வளையார் தமைக்கேட்டான்.

அவ்வுரைகேட் டலும்மடவார் "அருளுடையார் அளித்தருளுஞ்
செவ்வியபேர் அருளவிளம்புந திறமன்"றென் றுரைசெய்யார்;
"கைவருகற் புடைநெறியால் கணவன்உரை காவாமை
மெய்வழியன்" றெனவிளம்பல் விடமாட்டார், விதிர்ப்புறுவார்.

"செய்தபடி சொல்லுவதே கடன்" என்னுஞ் சீலத்தார் [3]
மைதழையுங் கண்டர்சே வடிகள்மனத் துறவணங்கி
"எய்தவருங் கனியளித்தார் யார்?" என்னுங் கணவனுக்கு
மொய்தருபூங் குழல்மடவார் புகுந்தபடி தனைமொழிந்தார். 28

"ஈசனருள்" எனக்கேட்ட இல்இறைவன் அதுதெளியான்
வாசமலர்த் திருஅனையார் தமைநோககி 'மற்றிது தான் [4]
தேசுடைய சடைப்பெருமான் திருவருளேல் இன்னமும்ஓர்
ஆசில்கனி அவனருளால் அழைத்தளிப்பாய்" எனமொழிந்தான்.

பாங்ககன்று மனைவியார் பணியணிவார் தமைப்பரவி
"ஈங்கிதளித் தருளீரேல் என்னுரைபொய் யாம்"என்ன

---

பா - ம்—[1] வாய்ந்தகனி. [2] அயின்றகனி. [3] சீலத்தான். [4] மற்றதுதான்.

மாங்கனியொன் றருளால்வந் தெய்துதலும் மற்றதனை
ஆங்கவன்கைக் கொடுத்தலுமே அதிசயித்து வாங்கினான். 30

வணிகனுந் தன்கைப் புக்க மாங்கனி பின்னைக் காணான், தணிவரும் பயமேற் கொள்ள உள்ளமுந் தடுமா றெய்தி, அணி குழ லவரை வேறோர் அணங்கெனக் கருதி நீங்கும், துணிவு கொண் டெவர்க்குஞ் சொல்லான் தொடர்வின்றி ஒழுகு நாளில்.

விடுவதே எண்ண மாக மேவிய முயற்சி செய்வான்
"படுதிரைப் பரவை மீது படர்கலங் கொண்டு போகி
நெடுநிதி கொணர்வேன்" என்ன நிரந்தபல் கிளைஞ ராகும்
வடுவில்சீர் வணிக மாக்கள் மரக்கலஞ் சமைப்பித் தார்கள். 32

கலஞ்சமைத் ததற்கு வேண்டுங் கம்மிய ருடனே செல்லும்
புலங்களில் விரும்பு பண்டம் பொருந்துவ நிரம்ப ஏற்றிச்
சலந்தரு கடவுட் போற்றித் தலைமையாம் நாய்கன் றானும்
நலந்தரு நாளில் ஏறி நளிர்திரைக் கடல்மேற் போனான். 33

கடல்மிசை வங்கம் ஓட்டிக் கருதிய தேயந் தன்னில்
அடைவுறச் சென்று சேர்ந்தங் களவில்பல் வளங்கள் முற்றி
இடைசில நாட்கள் நீங்க மீண்டும்அக் கலத்தில் ஏறிப்
படர்புனற் கன்னி நாட்டோர் பட்டினம் மருங்கு சேர்ந்தான்.[1]

அப்பதி தன்னில் ஏறி[2] அலகில்பல் பொருள்கள் ஆக்கும்
ஒப்பில்மா நிதியம் எல்லாம் ஒருவழிப் பெருக[3] உய்த்து
மெய்ப்புகழ் விளங்கும் அவ்வூர் விரும்பவோர்[4] வணிகன் பெற்ற
செப்பருங் கன்னி தன்னைத் திருமலி வதுவை செய்தான். 35

பெறலருந் திருவி னாளைப் பெருமணம் புணர்ந்து முன்னை
அறலியல் நறுமென் கூந்தல் அணங்கனார் திறத்தில் அற்றம்
புறமொரு வெளியு றாமற் பொதிந்தசிந் தனையி னோடு
முறைமையின் வழாமை வைகி முகமலர்ந் தொழுகு நாளில். 36

முருகலர் சோலை மூதூ ரதன்முதல் வணிக ரோடும், இரு நிதிக் கிழவன் என்ன எய்திய திருவின் மிக்குப், பொருகடற்

பா - ம்—[1] சார்ந்தான். [2] தன்னிலெய்தி. [3] ஒருவழிபெருக. [4] விரும்புமோர்.

கலங்கள் போக்கும் புகழினுன் மனைவி தன்பால், பெருகொளி
விளக்குப் போலோர் பெண்கொடி அரிதிற் பெற்றான். 37

மடமகள் தன்னைப் பெற்று மங்கலம் பேணித் தான்முன்(பு)
உடனுறை(வு) அஞ்சி நீத்த ஒருபெரு மனைவி யாரைத்
தொடர்வற நினைந்து தெய்வத் தொழுகுலம் என்றே கொண்டு
கடனமைத் தவர்தம் நாமங் காதல்செய் மகவை இட்டான். 38

இன்னிலை இவன்இங் கெய்தி[1] இருந்தனன்; இப்பால் நீடுங்
கன்னிமா மதில்சூழ் மாடக் காரைக்கால் வணிக னான
தன்னிகர் கடந்த செல்வத் தனதத்தன் மகளார் தாமும்
மன்னிய கற்பி னோடு மனையறம் புரிந்து வைக. 39

"விளைவளம் பெருக்க வங்க மீதுபோம் பரம தத்தன்
வளர்புகழ்ப் பாண்டி நாட்டோர் மாநகர் தன்னில் மன்னி
அளவில்மா நிதியம் ஆக்கி அமர்ந்தினி திருந்தான்" என்று
கிளரொளி மணிக்கொம் பன்னார் கிளைஞர்தாங் கேட்டா ரன்றே.

அம்மொழி கேட்ட போதே அணங்கனார் சுற்றத் தாரும்
தம்முறு கிளைஞர்ப் போக்கி அவன்நிலை தாமும் கேட்டு
மம்மர்கொள் மனத்த ராகி "மற்றவன் இருந்த பாங்கர்க்
கொம்மைவெம் முலையி னாளைக் கொண்டுபோய் விடுவ"தென்றார்.

மாமணிச் சிவிகை தன்னில் மடநடை மயில்அன் னாரைத்
தாமரைத் தவிசில் வைகு தனித்திரு என்ன ஏற்றிக்
காமரு கழனி[2] வீழ்த்துக் காதல்செய் சுற்றத் தாருந்
தேமொழி யாவருஞ் சூழச் சேணிடைக் கழிந்து சென்றார். 42

சிலபகல் கடந்து சென்று செந்தமிழ்த் திருநா டெய்தி
மலர்புகழ்ப் பரம தத்தன் மாநகர் மருங்கு வந்து
குலமுதல் மனைவி யாரைக் கொண்டுவந் தணைந்த தன்மை
தொலைவில்சீர்க் கணவ னார்க்குச் சொல்லிமுன் செல்ல விட்டார்.

வந்தவர் அணைந்த மாற்றங் கேட்டலும் வணிகன் தானும்
சிந்தையில் அச்சம் எய்திச் "செழுமணம் பின்பு செய்த

---

பா - ம்—[1] கெய்த. [2] கவிகை.

பைந்தொடி தனையுங் கொண்டு பயந்தபெண் மகவி னோடு
முந்துறச் செல்வேன்" என்று மொய்குழ லவர்பால் வந்தான்.

தானும்அம் மனைவி யோடுந் தளர்நடை மகவி னோடும்
மானிளம் பிணைபோல் நின்ற மனைவியார் அடியில் தாழ்ந்தே
"யான்உம தருளால் வாழ்வேன்; இவ்விளங் குழவி தானும்
பான்மையால் உமது நாமம்" என்றுமுன் பணிந்து வீழ்ந்தான்.

கணவன்தான் வணங்கக் கண்ட காமர்பூங் கொடிய னாரும்
அணைவுறுஞ் சுற்றத் தார்பால் அச்சமோ[1] டொதுங்கி நிற்ப
உணர்வுறு கிளைஞர் வெள்கி "உன்திரு மனைவி தன்னை
மணமலி[2] தாரி னாய்!நீ வணங்குவ தென்கொல்!" என்றார். 46

மற்றவர் தம்மை நோக்கி "மானுடம் இவர்தாம் அல்லர்;
நற்பெருந் தெய்வ மாதல நானறிந் தகன்ற[3] பின்பு
பெற்றஇம் மகவு தன்னைப் பேரிட்டேன்; ஆத லாலே [றான்.
பொற்பதம் பணிந்தேன், நீரும் போற்றுதல் செய்மின்" என்

என்றலுஞ்[4] சுற்றத் தாரும் "இதுஎன்கொல்!" என்று நின்றார்
மன்றலங் குழலி னாரும் வணிகன்வாய் மாற்றங் கேளாக்
கொன்றைவார் சடையி னார்தங் குரைகழல் போற்றிச் சிந்தை
ஒன்றிய நோக்கில் மிக்க உணர்வுகொண் டுரைசெய் கின்றார். 48

"ஈங்கிவன் குறித்த கொள்கை இது,இனி இவனுக் காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங் குன்பால்
ஆங்குநின் தாள்கள் போற்றும் பேய்வடி(வு) அடியே னுக்குப்
பாங்குற வேண்டும்" என்று பரமர்தாள்[5] பரவி நின்றார். 49

ஆனஅப் பொழுது மன்றுள் ஆடுவார் அருளி னாலே
மேனெறி உணர்வு கூர வேண்டிற்றே பெறுவார் மெய்யில்
ஊனடை[6] வனப்பை எல்லாம் உதறிஎற் புடம்பே யாக
வானமும் மண்ணும் எல்லாம் வணங்குபேய் வடிவம் ஆனார்.

மலர்மழை பொழிந்த தெங்கும்; வானதுந் துபியின் நாதம்
உலகெலாம் நிறைந்து விம்ம உம்பரும் முனிவர் தாமும்

பா - ம்—[1] அசசத்தோ. [2] மணமரு. [3] தசன்று [4] என்றபின்.
[5] பரமனை. [6] ஊனுடை.

குலவினர்;[1] கணங்கள் எல்லாங் குணலையிட் டனர்;முன் நின்ற
தொலைவில்பல்[2] சுற்றத் தாருந் தொழுதஞ்சி அகன்று போனார்.

உற்பவித் தெழுந்த ஞானத் தொருமையின் உமைகோன் தன்னை
அற்புதத் திருவந் தாதி அப்பொழு தருளிச் செய்வார்
"பொற்புடைச் செய்ய பாத புண்டரீ கங்கள் போற்றும்
நற்கணத் தினில்ஒன் றனேன் நான்"என்று நயந்து பாடி. 52

ஆய்ந்தசீர் இரட்டை மாலை அந்தாதி எடுத்துப் பாடி
ஏய்ந்தபே ருணர்வு பொங்க எயிலொரு மூன்றும் முன்னாள்
காய்ந்தவர் இருந்த வெள்ளிக் கைலைமால் வரையை நண்ண
வாய்ந்தபே ரருள்முன் கூர வழிபடும் வழியால் வந்தார். 53

கண்டவர் வியப்புற் றஞ்சிக் கையகன் றோடு வார்கள்
கொண்டதோர் வேடத் தன்மை உள்ளவா கூறக் கேட்டே
"அண்ட[3]நா யகனார் என்னை அறிவரேல் அறியா வாய்மை
எண்டிசை மாக்க ளுக்கியான் எவ்வுரு வாயென்?" என்பார். 54

வடதிசைத் தேசம் எல்லாம் மனத்தினுங் கடிது[4] சென்று
தொடையவிழ் இதழி மாலைச் சூலபா ணியனார் மேவும்
படரொளிக் கைலை வெற்பின் பாங்கணைந் தாங்குக் காலின்
நடையினைத் தவிர்ந்து பார்மேல் தலையினால் நடந்து சென்றார்.

தலையினால் நடந்து சென்று சங்கரன் இருந்த வெள்ளி
மலையின்மேல் ஏறும் போது மகிழ்ச்சியால் அன்பு பொங்கக்
கலையிளந் திங்கட் கண்ணிக் கண்ணுதல் ஒருபா கத்துச்
சிலைநுதல் இமய வல்லி திருக்கண்நோக் குற்ற தன்றே. 56

அம்பிகை திருவுள் ளத்தின் அதிசயித் தருளித் தாழ்ந்து
தம்பெரு மானை நோக்கித் "தலையினால் நடந்திங் கேறும்
எம்பெரு மானோர் எற்பின் யாக்கைஅன் பென்னே!" என்ன
நம்பெரு மாட்டிக் கங்கு நாயகன் அருளிச் செய்வான். 57

"வரும்இவள் நம்மைப் பேணும் அம்மைகாண்; உமையே!
மற்றிப், பெருமைசேர் வடிவம் வேண்டிப் பெற்றனள்" என்று

---

பா - ம்—[1] குலவிய. [2] தொலைபல. [3] அண்டர். [4] கடிதில்.

பின்றை, அருகுவந் தணைய நோக்கி "அம்மையே!" என்னுஞ் செம்மை, ஒருமொழி உலகம் எல்லாம் உய்யவே அருளிச் செய் தார். 58

அங்கணன் "அம்மையே!"என் றருள்செய "அப்பா!" என்று, பங்கயச் செம்பொற் பாதம் பணிந்துவீழ்ந் தெழுந்தார் தம்மைச், சங்கவெண் குழையி னருந் தாமெதிர் நோக்கி "நம் பால், இங்குவேண் டுவதென்?" என்ன இறைஞ்சிநின் றியம்பு கின்றார்.[1] 59

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார், "பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும், மறவாமை வேணடும்; இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி, அறவா!நீ ஆடும் போதுன் அடியினகீழ் இருக்க" என்றார். 60

கூடுமா றருள்கொ டுத்துக் "குலவுதென் றிசையில் என்றும்
நீடுவாழ் பழன மூதூர் நிலவிய ஆலங் காட்டில்
ஆடுமா நடமும் நீகண் டானந்தஞ் சேர்ந்தெப் போதும்[2]
பாடுவாய் நம்மை" என்றான் பரவுவார் பற்றாய் நின்றான். 61

அப்பரி சருளப் பெற்ற அம்மையுஞ் செம்மை வேத
மெய்ப்பொரு ளானார் தம்மை விடைகொண்டு வணங்கிப் போந்து
செப்பரும் பெருமை அன்பால் திகழ்திரு வாலங் காடாம்
நற்பதி தலையி னாலே நடந்துபுக் கடைந்தார் அன்றே. 62

ஆலங்கா டதனில் அண்ட முறநிமிர்ந் தாடு கின்ற, கோலங்காண் பொழுது "கொஙகை திரங்கி"என் றெடுத்துத் தங்கு,[3] மூலங்காண் பரியார்[4] தம்மை மூத்தநற் பதிகம் பாடி, ஞாலங்கா தலித்துப் போற்றும் நடம்போற்றி நண்ணு நாளில்.

மட்டவிழ்கொன் றையினார்தந் திருக்கூத்து முன்வணங்கும்
இட்டமிகு பெருங்காதல் எழுந்தோங்க வியப்பெய்தி[5]

---

பா - ம்—[1] கினறிதுபுகன்றார். [2] டார்த்தி செய்த எப்போதும். [3] என்றெடுத்தே. [4] மூலங்காணுதார். [5] வியப்பெய்த.

"எட்டி இலை வம்மீகை" எனஎடுத்துத் திருப்பதிகங்
"கொட்ட முழ வங்குழகன் ஆடும்"எனப் பாடினார். 64

மடுத்தபுனல் வேணியினார் "அம்மை"என மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்தில்அவர்
எடுத்தருளுஞ் சேவடிக்கீழ் என்றும்இருக் கின்றாரை
அடுத்தபெருஞ் சீர்பரவல் ஆரளவா யினதம்மா? 65

ஆதியோ டந்த மில்லான் அருள்நடம் ஆடும் போது
கீதமுன் பாடும்[1] அம்மை கிளரொளி மலர்த்தாள் போற்றிச்
சீதநீர் வயல்சூழ் திங்க ளூரில்அப் பூதி யாராம்
போதமா முனிவர் செய்த திருத்தொண்டு புகல லுற்றேன். 66

## 25. அப்பூதியடிகள் நாயனார் புராணம்

தாண்டவம் புரிய வல்ல தம்பிரா னாருக் கன்பர்
ஈண்டிய புகழின் பாலார் எல்லையில் தவத்தின்[2] மிக்கார்,
ஆண்டசீர் அரசின் பாதம் அடைந்தவர் அறியா முன்னே
காண்டகு காதல் கூரக் கலந்தஅன் பினராய் உள்ளார். 1

களவுபொய் காமம் கோபம் முதலிய குற்றங் காய்ந்தார்;
வளமிகு மனையின் வாழ்க்கை நிலையினார்; மனைப்பால் உள்ள
அளவைகள் நிறைகோல் மக்கள் ஆவொடு மேதி மற்றும்
உளவெலாம் அரசின் நாமஞ் சாற்றும்அவ் வொழுக்க லாற்றார்.[3]

வடிவுதாங் காணா ராயும் மன்னுசீர் வாக்கின் வேந்தர்
அடிமையுந் தம்பி ரானார் அருளுங்கேட் டவர்நா மத்தால்
படிநிகழ் மடங்கள் தண்ணீர்ப் பந்தர்கள் முதலா யுள்ள
முடிவிலா அறங்கள் செய்து முறைமையால் வாழும் நாளில். 3

பொருப்பரையன் மடப்பிடியி னுடன்புணருஞ் சிவக்களிற்றின்
திருப்பழனம் பணிந்துபணி செய்திருநா வுக்கரசர்

---

பா - ம்—[1] முன்பரவும். [2] குணத்தின். [3] சாத்துமிவ் வொழுக லாற்றார்.

ஒருப்படுகா தலிற்பிறவும் உடையவர்தம் பதிவணங்கும்
விருப்பினொடுந் திங்களூர் மருங்குவழி மேவுவார். 4

அளவில்சனஞ் செலவொழியா வழிக்கரையில் அருளுடையார
உளமனைய தண்ணளித்தாய் உறுவேனிற் பரிவகற்றிக்
குளநிறைந்த நீர்த்தடம்போல் குளிர்தூங்கும் பரப்பினதாய்
வளமருவும் நிழல்தருதண் ணீர்ப்பந்தர் வந்தணைந்தார். 5

வந்தணைந்த வாகீசர் மந்தமா ருதசீதப்
பந்தருடன் அமுதமாந் தண்ணீரும் பார்த்தருளிச்
சிந்தைவியப் புறவருவார் திருநாவுக் கரசெனும்பேர்
சந்தமுற வரைந்ததனை எம்மருங்குந் தாங்கண்டார். 6

"இப்பந்தர் இப்பெயரிட் டிங்கமைத்தார் யார்" என்றார்க்(கு)
அப்பந்தர் அறிந்தார்கள்[1] "ஆண்டஅர செனும்[2]பெயரால்
செப்பருஞ்சீர் அப்பூதி அடிகளார் செய்தமைத்தார்;
தப்பின்றி எங்குமுள சாலைகுளங் கா" என்றார்.  7

என்றுரைக்க அரசுகேட் "டிதற்கென்னோ கருத்"தென்று
நின்றவரை நோக்கி "அவர் எவ்விடத்தார்" எனவினவ[3]
"துன்றியநூல் மார்பரும்இத் தொல்பதியார்; மனையின்கண்
சென்றனர்இப் பொழுததுவுஞ் சேய்த்தன்று; நணித்"தென்றார்.

அங்ககன்று முனிவரும்போய் அப்பூதி அடிகளார்
தங்குமனைக் கடைத்தலைமுன் சார்வாக, உள்ளிருந்த
திங்களூர் மறைத்தலைவர் "செழுங்கடையில் வந்தடைந்தார்
நங்கள்பிரான் தமர்ஒருவர்" எனக்கேட்டு நண்ணினார். 9

கடிதணைந்து வாகீசர் கழல்பணிய மற்றவர்தம்
அடிபணியா முன்பணியும் அரசின்எதிர் அந்தணனார்
"முடிவில்தவஞ் செய்தேன்கொல்! முன்பொழியுங் கருணைபுரி
வடிவுடையீர்! என்மனையில் வந்தருளிற் றென்?" என்றார். 10

ஒருகுன்ற வில்லாரைத் திருப்பழனத் துள்ளிறைஞ்சி
வருகின்றோம், வழிக்கரையில் நீர்வைத்த வாய்ந்தவளந்

பா - ம்—[1] அறிவார்கள். [2] அரசின். [3] என நிறைந்து; என நினைந்து.

தருகின்ற நிழல்தண்ணீர்ப் பந்தருங்கண் டத்தகைமை
புரிகின்ற அறம்பிறவுங் கேட்டணைந்தோம்'' எனப்புகல்வார் 11

"ஆறணியுங் சடைமுடியார் அடியார்க்கு நீர்வைத்த
ஈறில்பெருந் தண்ணீர்ப்பந் தரில்நும்பேர் எழுதாதே
வேறொருபேர் முன்னெழுத வேண்டியகா ரணமென்கொல்?
கூறும்''என எதிர்மொழிந்தார் கோதில்மொழிக் கொற்றவனார்.

நின்றமறை யோர்'கேளா நிலையழிந்த சிந்தையராய்
"நன்றருளிச் செய்திலீர்! நாணல்அமண் பதகருடன்
ஒன்றியமன் னவன்சூட்சி திருததொண்டின் உறைப்பாலே
வென்றவர்தந் திருப்பேரோ வேறொருபேர்?'' எனவெகுள்வார்.

"நம்மையுடை யவர்கழற்கீழ் நயந்ததிருத் தொண்டாலே
இம்மையிலும் பிழைப்பதென என்போல்வா ருந்தெளியச்
செம்மைபுரி திருநாவுக் கரசர்திருப் பெயர்எழுத
வெம்மைமொழி யான்கேட்க விளம்பினீர்'' எனவிளம்பி. 14

"பொங்குகடற் கல்மிதப்பில் போந்தேறும் அவ்பெருமை
அங்கணர்தம் புவனத்தில் அறியாதார் யாருளரே!
மங்கலமாந் திருவேடத் துடனின்றிவ் வகைமொழிந்தீர்;
எங்குறைவீர்? நீர்தாம்யார்? இயம்பும்''என இயம்பினார். 15

திருமறையோர் அதுமொழியத் திருநாவுக் கரசர்அவர்
பெருமையறிந் துரைசெய்வார் "பிறதுறையி னின்றேற[2]
அருளுபெருஞ்[3] சூலையினால் ஆட்கொள்ள அடைந்துய்ந்த
தெருளும்உணர் வில்லாத சிறுமையேன் யான்''என்றார். 16

அரசறிய உரைசெய்ய அப்பூதி அடிகள்தாங்
கரகமல மிசைகுவியக் கண்ணருவி பொழிந்திழிய
உரைகுழறி உடம்பெல்லாம் உரோமபுள கம்பொலியத்
தரையின்மிசை வீழ்ந்தவர்தஞ் சரணகம லம்பூண்டார். 17

மற்றவரை எதிர்வணங்கி வாகீசர் எடுத்தருள
அற்றவர்கள் அருநிதியம் பெற்றார்போல் அருமறையோர்

---

பா - ம்—[1] யவர். [2] னின்றேற்ற. [3] அருள்பெருகு.

முற்றவுளங் களிகூர முன்னின்று கூத்தாடி
உற்றவிருப் புடன்சூழ ஓடினார் பாடினார். 18

ஈண்டபெரு மகிழ்ச்சியினால் முன்செய்வ தறியாதே
ஈண்டமனை அகத்தெய்தி இல்லவர்க்கும் மக்களுக்கும்
ஆண்டஅரசெழுந்தருளும் ஓகையுரைத் தார்வமுறப்
பூண்டபெருஞ் சுற்றமெலாங் கொடுமீளப் புறப்பட்டார். 19

மனைவியா ருடன்மக்கள் மற்றுமுள்ள சுற்றத்தோர்
அனைவரையுங் கொண்டிறைஞ்சி ஆராத காதலுடன்
முனைவரைஉள் ளெழுந்தருளு வித்தவர்தாள் முன்விளக்கும்
புனைமலர்[1] நீர் தங்கள்மேல தெளித்துள்ளும் பூரித்தார். 20

ஆசனத்தில் பூசனைகள் அமர்வித்து விருப்பினுடன்
வாசநிறை திருநீற்றுக் காப்பேந்தி மனந்தழைப்பத்
தேசம்உய்ய வந்தவரைத் திருவமுது செய்விக்கும்
நேசம்உற விண்ணப்பஞ் செயஅவரும் அதுநேர்ந்தார். 21

செய்தவர் இசைந்த போது திருமனை யாரை நோக்கி
"எய்திய பேறு நம்பால் இருந்தவா றென்னே!" என்று
"மைதிகழ் மிடற்றி னான்றன் அருளினால் வந்த தென்றே
உய்தும்"என் றுவந்து கொண்டு திருவமு தாக்கல் உற்றார். 22

தூயநற் கறிக ளான அறுவகைச் சுவையால் ஆக்கி
ஆயஇன் னமுதும் ஆக்கி அமுதுசெய் தருளத் தங்கள்
சேயவர் தம்மில் மூத்த திருநாவுக் கரசை "வாழை
மேயபொற் குருத்துக் கொண்டு வா"என விரைந்து விட்டார். 23

"நல்லதாய் தந்தை ஏவ நான்இது செயப்பெற் றேன்"என்(று)
ஒல்லையில் விரைந்து[2] தோட்டத் துள்புக்குப் பெரிய வாழை
மல்லலங் குருத்தை ஈரும் பொழுதினில் வாள ராஒன்(று)
அல்லல்உற் றழுங்கிச் சோர[3] அங்கையில் தீண்டிற் றன்றே. 24

கையினிற் கவர்ந்து சுற்றிக் கண்ணெரி காந்து கின்ற
பையரா வுதறி வீழ்த்துப் பதைப்புடன் "பாந்தள் பற்றும்

பா - ம்—[1] புனைமலி. [2] ஒல்லையில் அணைந்து. [3] றழுங்கி வீழ

வெய்யவே கத்தால் வீழா முன்னம்வே கத்தால் எய்திக் [தான்.
கொய்தஇக் குருத்தைச் சென்று கொடுப்பன்''என் றோடி வந்

பொருந்திய விடவே கத்திற்[1] போதுவான் வேகம் முந்த
வருந்தியே அணையும் போழ்து "மாசுணங் கவர்ந்த தியார்க்கும்
அருந்தவர் அமுது செய்யத் தாழ்க்கயான் அறையேன்''என்று
திருந்திய கருத்தி னோடுஞ் செழுமனை சென்று புக்கான். 26

எரிவிடம் முறையே ஏறித் தலைக்கொண்ட ஏழாம் வேகம்,
தெரிவுற எயிறும் கண்ணும் மேனியும் கருகித் தீந்து, விரியுரை
குழறி ஆவி விடக்கொண்டு மயங்கி வீழ்வான், பரிகலக் குருத்
தைத் தாயார் பால்வைத்துப் படிமேல் வீழ்ந்தான். 27

தளர்ந்துவீழ் மகனைக் கண்டு தாயருந் தந்தை யாரும், உளம்
பதைத் துற்று நோக்கி உதிரஞ்சோர் வடிவும் மேனி, விளங்கிய
குறியும் கண்டு "விடத்தினால் வீந்தான்'' என்று, துளங்குதல்
இன்றித் தொண்டர் அமுதுசெய் வதற்குச் சூழ்வார். 28

பெறலரும் புதல்வன் தன்னைப் பாயினுட் பெய்து மூடிப்,
புறமனை முன்றிற் பாங்கோர் புடையினில் மறைத்து வைத்தே,
"அறஇது தெரியா வண்ணம் அமுதுசெய் விப்போம்'' என்று,
விறலுடைத் தொண்ட னார்பால் விருப்பொடு விரைந்து வந்தார்

கடிதுவந் "தமுது செய்யக் காலந்தாழ்க் கின்ற" தென்றே,
அடிசிலும் கறியும் எல்லாம் அழகுற அணைய வைத்துப், படியில்
சீர்த் தொண்ட னார்முன் பணிந்தெழுந்(து) "அமுது செய்தெங்,
குடிமுழு துய்யக் கொள்வீர்'' என்றவர் கூறக் கேட்டு 30

அருந்தவர் எழுந்து செய்ய[2] அடியிணை விளக்கி வேறோர்
திருந்தும்ஆ சனததில் ஏறிப்[3] பரிகலந் திருத்து முன்னர்
இருந்துவெண் ணீறு சாத்தி இயல்புடை[4] இருவ ருக்கும்
பொருந்திய நீறு நல்கிப் புதல்வர்க்கும் அளிக்கும் போழ்தில் 31

ஆதிநான் மறைநூல் வாய்மை அப்பூதி யாரை நோக்கிக்,
"காதலர்[5] இவர்க்கு மூத்த சேயையுங் காட்டும் முன்னே,[6] மேதகு.

---

பா - ம்—[1] வேகத்தாற். [2] செல்ல. [3] ஏற்றிப். [4] இல்லுடை.
[5] காதலால். [6] காட்டு கென்ன.

பூதி சாத்த" என்றலும் விளைந்த தன்மை. யாதுமொன் றுரை
யார் "இப்போ திங்கவன் உதவான்" என்றார். 32

அவ்வுரை கேட்ட போதே அங்கணர் அருளால் அன்பர்,
செவ்விய திருவுள் ளத்தோர் தடுமாற்றஞ் சேர நோக்கி, "இவ்
வுரை பொருதென் உள்ளம், என்செய்தான் இதற்கொன் றுண்
டால், மெய்விரித் துரையும்" என்ன விளம்புவார் விதிர்ப்புற்
றஞ்சி. 33

"பெரியவர் அமுது செய்யும் பேறிது பிழைக்க என்றோ
வருவ(து)?" என் றுரையா ரேனும் மாதவர் வினவ வாய்மை
தெரிவுற உரைக்க வேண்டுஞ் சீலத்தால் சிந்தை நொந்து
பரிவொடு வணங்கி மைந்தர்க் குறறது பகர்ந்தார் அன்றே. 34

நாவினுக் கரசர் கேளா "நன் றுநீர் புரிந்த[1] வண்ணம்!
யாவர்இத் தன்மை செய்தார்?"[2] என்றுமுன் எழுந்து சென்றே
ஆவிதீர் சவத்தை நோக்கி அண்ணலார் அருளும் வண்ணம்
பாவிசைப் பதிகம் பாடிப் பணிவிடம் பாற்று வித்தார். 35

தீவிடம் நீங்க உய்ந்த திருமறை யவர்தஞ் சேயும்
மேவிய உறக்கம் நீங்கி விரைந்தெழு வானைப் போன்று
சேவுகைத தவர்ஆட் கொண்ட திருநாவுக் கரசர் செய்ய
பூவடி வணங்கக் கண்டு புனிதநீ றளித்தார் அன்றே. 36

பிரிவுறும் ஆவி பெற்ற பிள்ளையைக் காண்பார் தொண்டின்,
நெறியினைப் போற்றி வாழ்ந்தார் நின்றஅப் பயந்தார் தாங்கள்,
"அறிவரும் பெருமை அன்பர் அமுதுசெய் தருளு தற்குச், சிறி
திடை யூறு செய்தான் இவன்" என்று சிந்தை நொந்தார். 37

ஆங்கவர் வாட்டந் தன்னை அறிந்துசொல் அரசர் கூட
ஓங்கிய மனையில் எய்தி அமுதுசெய் தருள வுற்ற
பாங்கினில் இருப்ப முந்நூல் பயில்மணி மார்பர் தாமும்
தாங்கிய மகிழ்ச்சி யோடுந் தகுவன சமைத்துச்[3] சார்வார். 38

புகழ்ந்தகோ மயத்து நீரால் பூமியைப் பொலிய நீவித்
திகழ்ந்தவான் சுதையும் போக்கிச் சிறப்புடைத் தீபம் ஏற்றி

பா - ம்—[1] மொழிந்த. [2] செய்வார். [3] அமைத்துச்.

நிகழ்ந்தஅக் கதலி நீண்ட குருத்தினை விரித்து நீரால்
மகிழ்ந்துடன் விளக்கி ஈர்வாய் வலம்பெற[1] மரபின் வைத்தார்.[2]

திருந்திய வாச நன்னீர் அளித்திடத் திருக்கை நீவும்
பெருந்தவர், மறையோர் தம்மைப் பிள்ளைக ளுடனே நோக்கி
"அரும்புதல் வர்களும் நீரும் அமுதுசெய் வீர்இங்" கென்ன
விரும்பிய உள்ளத் தோடு மேலவர் ஏவல் செய்வார். 40

மைந்தரும் மறையோர் தாமும் மருங்கிருந் தமுது செய்யச்
சிந்தைமிக் கில்ல மாதர் திருவமு தெடுத்து நல்கக்
கொந்தவிழ் கொன்றை வேணிக் கூத்தனார் அடியா ரோடும்
அந்தமி ழாளி யார்அங் கமுதுசெய் தருளி னாரே. 41

யாதவ மறையோர் செல்வ மனையிடை அமுது செய்து
காதல்நண் பளித்துப் பன்னாள் கலந்துடன் இருந்த பின்றை
மேதகு நாவின் மன்னர் விளங்கிய பழன மூதூர்
நாதர்தம் பாதஞ் சேர்ந்து நற்றமிழ்ப் பதிகஞ் செய்வார். 42

அப்பூதி அடிக ளார்தம் அடிமையைச் சிறப்பித் தான்ற
மெய்ப்பூதி அணிந்தார் தம்மை விரும்பு"சொன் மாலை" வேய்ந்த
இப்பூதி பெற்ற நல்லோர் எல்லையில் அன்பால் என்றுஞ்,
செப(பு)ஊதி யஙகைக் கொண்டார் திருநாவுக் கரசர் பாதம். 43

இவ்வகை அரசின் நாமம்[3] ஏத்திஎப் பொருளும் நாளும்
அவ்வருந் தவர்பொற் றாளே எனவுணர்ந் தடைவார் செல்லுஞ்
செவ்விய நெறிய தாகத திருததில்லை மன்றுள் ஆடும்
நவ்வியங் கண்ணாள் பங்கர் நற்கழல் நண்ணி னாரே. 44

மான்மறிக் கையர் பொற்றாள் வாகீசர் அடைவால் பெற்ற
மேன்மைஅப் பூதி யாராம் வேதியர் பாதம் போற்றிக்
கான்மலர்க் கமல வாவிக் கழனிசூழ் சாத்த மங்கை
நான்மறை நீல நக்கர் திருத்தொழில் நவில லுற்றேன். 45

---

பா - ம்—[1] வலம்பட. [2] மன்னுவித்தார். [3] பாதம்.

# 26. திருநீலநக்க நாயனார் புராணம்

பூத்த பங்கயப் பொகுட்டின்மேற் பொருகயல் உகளுங்[1]
காய்த்த செந்நெலின் காடுசூழ் காவிரி நாட்டுச்
சாத்த மங்கையென் றுலகெலாம் புகழ்வுறுந்[2] தகைத்தால்
வாய்த்த மங்கல மறையவர் முதற்பதி[3] வனப்பு 1

நன்மை சாலும்அப் பதியிடை நறுநுதல் மடவார்
மென்ம லர்த்தடம் படியமற் றவருடன் விரவி
அன்னம் முன்[4]துறை ஆடுவ ;பாடுவ சாமம்
பன்ம றைக்கிடை யுடன்பயிற் றுவபல பூவை. 2

"ஆய்ந்த மெய்ப்பொருள் நீ"றென வளர்க்கும்அக் காப்பில்
ஏய்ந்த மூன்றுதீ வளர்த்துளார் இருபிறப் பாளர் ;
நீந்து நல்லறம் நீர்மையின் வளர்க்கும்அத் தீயை
வாய்ந்த கற்புடன் நான்கென வளர்ப்பர்கண் மடவார். 3

சீலம் உய்த்தஅத் திருமறை யோர்செழு மூதூர்
ஞாலம் மிக்கநான் மறைப்பொருள் விளக்கிய நலத்தார்
ஆலம் வைத்தகண் டத்தவர் தொண்டராம் அன்பர்
"நீல நக்கனார்" என்பவர் நிகழ்ந்துளார் ஆனார். 4

"வேத உள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாதர் தம்மையும் அவரடி யாரையும் நயந்து
பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதும்" என்றே
காத லால்அவை இரண்டுமே செய்கருத் துடையார் 5

மெய்த்த ஆகம விதிவழி வேதகா ரணரை
நித்தல் பூசனை புரிந்தெழு நியமமுஞ் செய்தே
அத்தர் அன்பருக் கமுதுசெய் விப்பது முதலா
எத்தி றத்தன பணிகளும் ஏற்றெதிர் செய்வார். 6

ஆய செய்கையில் அமருநாள் ஆதிரை நாளில்
மேய பூசனை நியதியை விதியினால் முடித்துத்

பா - ம்—[1] உறங்கும். [2] நிகழ்வுறும். [3] வாழ்பதி. [4] ஒண்.

தூய தொண்டனார் தொல்லைநீ டயவந்தி அமர்ந்த
நாய னாரையும் அருச்சனை புரிந்திட நயந்தார். 7

உறையு ளாகிய மனைநின் றும் ஒருமைஅன் புற்ற
முறைமை யால்வரு பூசைக்கும் முற்றவேண் டுவன
குறைவ றக்கொண்டு மனைவியார் தம்மொடுங் கூட
இறைவர் கோயில்வந் தெய்தினர் எல்லையில் தவத்தோர். 8

அணைய வந்துபுக் கயவந்தி மேவிய அமுதின்
துணைம லர்க்கழல் தொழுதுபூ சனைசெயத் தொடங்கி
இணைய நின்றங்கு வேண்டுவ மனைவியார் ஏந்த
உணர்வின் மிக்கவர் உயர்ந்தஅர்ச் சனைமுறை உய்த்தார். 9

நீடு பூசனை நிரம்பியும் அன்பினால் நிரம்பார்
மாடு சூழ்புடை வலங்கொண்டு வணங்கிமுன் வழுத்தித்
தேடு மாமறைப் பொருளினைத் தெளிவுற நோக்கி
நாடும் அஞ்செழுத் துணர்வுற இருந்துமுன் நவின்றார். 10

தொலைவில் செய்தவத் தொண்டனார் சுருதியே முதலாங்
கலையின் உண்மையாம் எழுத்தஞ்சுங் கணிக்கின்ற காலை
நிலையின் நின்றுமுன் வழுவிட நீண்டபொன் மேருச்
சிலையி னார்திரு மேனிமேல் விழுந்ததோர் சிலம்பி. 11

விழுந்த போதில்அங் கயல்நின்ற மனைவியார் விரைவுற்(று)
எழுந்த அச்சமோ டிளங்குழ வியில்விழுஞ் சிலம்பி
ஒழிந்து நீங்கிட ஊதிமுன் துமிப்பவர் போலப்
பொழிந்த அன்பினால் ஊதிமேல் துமிந்தனர் போக. 12

பதைத்த செய்கையால் மனைவியார் முறசெயப் பந்தஞ்
சிதைக்கு மாதவத் திருமறை யவர்கண்டு தங்கண்
புதைத்து "மற்றிது செய்ததென்? பொறியிலாய்!" என்னச்
"சுதைச்சி லம்பிமேல் விழவூதித் துமிந்தனன்" என்றார். 13

மனைவி யார்செய்த அன்பினை மனத்தினிற் கொள்ளார்
புனை யும் நூல்மணி மார்பர்தம் பூசனைத் திறத்தில்
"இனைய செய்கைஇங் கநுசித மாம்"என எண்ணும்
நினைவி னால்அவர் தம்மைவிட் டகன்றிட நீப்பார். 14

''மின்னெ டுஞ்சடை விமலர்மேல் விழுந்தநூற் சிலம்பி
தன்னை வேறொரு பரிசினால் தவிர்ப்பது தவிர
முன்அ ணைந்துவந் தூதிவாய் நீர்ப்பட[1] முயன்றாய் ;
உன்னை யான்இனித் துறந்தனன் ஈங்''கென உரைத்தார். 15

மற்ற வேலையிற் கதிரவன் மலைமிசை மறைந்தான் ,
உற்ற ஏவலின் மனைவியார் ஒருவழி நீங்க
முற்ற வேண்டுவ பழுதுதீர் பூசனை முடித்துக்
கற்றை வேணியார் தொண்டருங் கடிமனை புகுந்தார். 16

அஞ்சும் உள்ளமோ டவர்மருங் கணைவுற மாட்டார்
நஞ்சம் உண்டவர் கோயிலில் நங்கையார் இருந்தார் ,
செஞ்சொல் நான்மறைத் திருநீல நக்கர்தாம் இரவு
பஞ்சின் மெல்லணைப் பள்ளியிற் பள்ளிகொள் கின்றார். 17

பள்ளி கொள்பொழு தயவந்திப் பரமர்தாங் கனவில்
வெள்ள நீர்ச்சடை யொடுநின் று[2] மேனியைக் காட்டி
''உள்ளம் வைத்தெமை ஊதிமுன் துமிந்தபால் ஒழியக்
கொள்ளும் இப்புறஞ் சிலம்பியின் கொப்புள்''என் றருள. 18

கண்ட அப்பெருங் கனவினை நனவெனக் கருதிக்
கொண்ட அச்சமோ டஞ்சலி குவித்துடன் விழித்துத்
தொண்ட னார்தொழு தாடினார் , பாடினார் , துதித்தார் ;
அண்ட[3] நாயகர் கருணையைப்[4] போற்றிநின் றழுதார். 19

போது போயிருள் புலர்ந்திடக் கோயிலுட் புகுந்தே
ஆதி நாயகர் அயவந்தி அமர்ந்தஅங் கணர்தம்
பாத மூலங்கள் பணிந்துவீழ்ந் தெழுந்துமுன் பரவி
மாத ராரையுங் கொண்டுதம் மனையில்மீண் டணைந்தார். 20

பின்பு முன்னையிற் பெருகிய மகிழ்ச்சிவந் தெய்த
இன்பு றுந்திறத் தெல்லையில் பூசனை இயற்றி
அன்பு மேம்படும் அடியவர் மிகஅணை வார்க்கு
முன்பு போலவர் வேண்டுவ விருப்புடன் முடிப்பார். 21

---

பா - ம்—[1] நீர்பட. [2] யோடுதம். [3] அண்டர். [4] கருணையே.

அன்ன தன்மையில் அமர்ந்தினி தொழுதும்அந் நாளில்
மன்னு பூந்தராய் வருமறைப் பிள்ளையார் பெருமை
பன்னி வையகம் போற்றிட மற்றவர் பாதஞ்
சென்னி வைத்துடன் சேர்வுறும் விருப்பினிற் சிறந்தார். 22

பண்பு மேம்படு நிலைமையார் பயிலும்அப் பருவ
மண்பெ ருந்தவப் பயன்பெற மருவுநற் பதிகள்
விண்பி றங்குநீர் வேணியார் தமைத்தொழ அணைவார்
சணபை மன்னருஞ் சாத்தமங் கையில்வந்து சார்ந்தார். 23

நீடு சீர்த்திரு நீலகண் டப்பெரும் பாணா
தோடு லாங்குழல் விறலியார் உடன்வரத் தொண்டர்
கூடும் அப்பெருங் குழாத்தொடும் புகலியர் பெருமான்
மாடு வந்தமை கேட்டுளம் மகிழ்நீல நக்கர். 24

கேட்ட அப்பொழு தேபெரு மகிழ்ச்சியிற் கிளர்ந்து
தோட்ட லங்கலுங் கொடிகளும் புனைந்துதோ ரணங்கள்
நாட்டி நீள்நடைக் காவண மிட்டுநற் சுற்றத்(து)
ஈட்ட முங்கொடு தாமுமுன்[1] எதிர்கொள எழுந்தார். 25

சென்று பிள்ளையார் எழுந்தரு ளுந்திருக் கூட்டம்
ஒன்றி அங்கெதிர் கொண்டுதங் களிப்பினால் ஒருவா(று)
அன்றி ஆடியும் பாடியுந் தொழுதெழுந் தணைவார்[2]
பொன்ற யங்குநீள் மனையிடை யுடன்கொடு புகுந்தார்.[3] 26

பிள்ளை யாரெழுந் தருளிய பெருமைக்குத் தக்க
வெள்ள மாகிய அடியவர் கூட்டமும் விரும்ப
உள்ளம் ஆதர வோங்கிட ஓங்குசீ காழி
வள்ள லாரைத்தம் மனையிடை அமுதுசெய் வித்தார் 27

அமுது செய்தபின் பகலவன் மேல்கடல்[4] அணையக்
குமுத வாவியிற் குளிர்மதிக் கதிரணை போதில்
இமய மங்கைதன் திருமுலை அமுதுண்டார் இரவும்
தமது சீர்மனைத் தங்கிட வேண்டுவ சமைத்தார். 28

---

பா - ம்—[1] முன்பு. [2] தொழுதெழுந்தயர்வார்; தொழுதெழுபவராய்.
[3] கொண்டு புக்கார். [4] கருங்கடல்.

சீல மெய்த்திருத் தொண்டரோ டமுதுசெய் தருளி
ஞாலம் மிக்கிட[1] நாயகி யுடன்நம்பர் நண்ணும்
காலம் முற்பெற அமுதவர் அழைத்திடக் கடிது
நீல நக்கனார் வந்தடி பணிந்துமுன் நின்றார். 29

நின்ற அன்பரை "நீலகண் டப்பெரும் பாணர்க்(கு)[2]
இன்று தங்கலூர் இடங்கொடுத் தருளுவீர்" என்ன
நன்றும் இன்புற்று நடுமனை வேதியின் பாங்கர்ச்
சென்று மற்றவர்க் கிடங்கொடுத் தனர்திரு மறையோர் 30

ஆங்கு வேதியில் அருதசெந் தீவலஞ் சுழிவுற்(று)
ஓங்கி முன்னையில் ஒருபடித் தன்றியே ஒளிரத்
தாங்கு நூலவர் மகிழ்வுறச் சகோடயாழ்த் தலைவர்
பாங்கு பாணியா ருடன்அரு ளாற்பள்ளி கொண்டார். 31

கங்கு விற்பள்ளி கொண்டபின் கவுணியர்க் கிறைவர்[3]
அங்கு நின்றெழுந் தருளுவார் அயவந்தி அமர்ந்த
திங்கள் சூடியை நீலநக் கரைச்சிறப் பித்தே
பொங்கு செந்தமிழ்த் திருப்பதி கத்தொடை புனைந்தார் 32

பதிக நாண்மலர் கொண்டுதம் பிரான்கழல் பரவி
அதிக நண்பினை நீலநக் கருக்களித் தருளி
எதிர்கொ ளும்பதி[4] களில்எழுந் தருளினார் என்றும்
புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்தபூ சுரனார். 33

பிள்ளை யார்எழுந் தருளஅத் தொண்டர்தாம் பின்பு
தள்ளும் அன்புடன் கேண்மையும் தவிர்பபில[5] எனினும்
வள்ள லார்திரு வருளினை வலியமாட் டாமை
உளளம் அங்குடன் போக்கிமீண் டொருவகை இருந்தார். 34

மேவு நாளில்அவ் வேதியர் முன்புபோல் விரும்பும்
தாவில் பூசனை முதற்செய்கை தலைத்தலை சிறப்பச்
சேவின் மேலவர் மைந்தராந் திருமறைச் சிறுவர்
பூவ டித்தலம் பொருந்திய உணர்வொடும்[6] பயின்றார்.[7] 35

---

பா - ம்—[1] உய்ந்திட. [2] யாழ்ப்பாணர். [3] கவுணியர் தலைவர். [4] எதிர்தொழும்பதி [5] தப்பில. [6] அறிவொடும். [7] புணர்ந்தார்.

சண்பை யாளியார் தாமெழுந் தருளும்எப் பதியும்
நண்பு மேம்பட நாளிடைச் செலவிட்டு நண்ணி
வண்பெ ரும்புக ழவருடன் பயின்றுவந் துறைந்தார்
திண்பெ ருந்தொண்ட ராகிய திருநீல நக்கர். 36

பெருகு காதலிற் பின்நெடு நாள்முறை பிறங்க
வருபெ ருந்தவ மறையவர் வாழிசீ காழி
ஒருவர் தந்திருக் கல்லியா ணத்தினி லுடனே
திரும ணத்திறஞ் சேவித்து நம்பர்தாள் சேர்ந்தார். 37

தருதொ ழில்திரு மறையவர் சாத்தமங் கையினில்
வருமு தற்பெருந் திருநீல நக்கர்தாள் வணங்கி
இருபி றப்புடை அந்தணர் ஏறுயர்த் தவர்பால்
ஒருமை உய்த்துணர் நமிநந்தி யார்தொழில் உரைப்பாம். 38

# 27. நமிநந்தியடிகள் நாயனார் புராணம்

வையம் புரக்குந் தனிச்செங்கோல் வளவர் பொன்னித் திருநாடடுச், செய்ய கமலத் தடம்பணையும் செழுநீர்த் தடமும் புடையுடைத்தாய்ப், பொய்தீர் வாய்மை அருமறைநூல் புரிந்த சீலப் புகழதனால், எய்தும் பெருமை எண்டிசையும் ஏறூர் ஏமப் பேறூரால். 1

மாலை பயிலும் தோரணங்கள் மருங்கு பயிலும் மணிமறுகு;
வேலை பயிலும் புனல்பருகு மேகம் பயிலும் மாடங்கள்;
சோலை பயிலும் குளிர்ந்தஇருள் சுரும்பு பயிலும் அரும்பூகம்;
காலை பயிலும் வேதஒலி, கழுநீர் பயிலும் செழுநீர்ச்செய். 2

பணையில் விளைந்த வெண்ணெல்லின் பரப்பின் மீது படச் செய்ய, துணர்மென் கமலம் இடைஇடையே சுடர்விட் டெழுந்து தோன்றுவன, புணர்வெண் புரிநூ லவர்வேள்விக் களத்தில் புனைந்த வேதிகைமேல், மணல்வெண் பரப்பின் இடைஇடையே வளர்த்த செந்தீ மானுமால். 3

பெருமை விளங்கும் அப்பதியிற் பேணும் நீற்றுச் சைவநெறி
ஒருமை நெறிவாழ் அந்தணர்தம் ஓங்கு குலத்தி னுள்வந்தார்
இருமை உலகும் ஈசர்கழல் இறைஞ்சி ஏத்தப் பெற்றதவத்
தருமை புரிவார் **நமிநந்தி அடிகள்** என்பா ராயினார். 4

**வாய்மை மறைநூல் சீலத்தால்** வளர்க்குஞ் செந்தீ எனத் தகுவார், தூய்மைத் திருநீற் றடைவேமெய்ப் பொருளென் றறியுந் துணிவினார்; சாம கண்டர் செய்யகழல் வழிபட்[1] டொழுகுந் தலைமை[2]நிலை, யாம இரவும் பகலும்உணர் வொழியா இன்பம் எய்தினார். 5

அவ்வூர் நின்றுந் திருவாரூ ரதனை அடைவார் "அடியார்மேல், வெவ்வூ றகற்றும் பெருமான்றன் விரைசூழ் மலர்த்தாள் பணிவுறுதல்,[3] எவ்வூ தியமும் எனக்கொள்ளும் எண்ணம் உடையார் பலநாளும், தெவ்வூர் எரித்த வரைச்சிலையார் திருப்பா தங்கள் வணங்கினார். 6

செம்பொற் புற்றின் மாணிக்கச் செழுஞ்சோ தியைநேர் தொழுஞ்சீலம், தம்பற் றாக நினைந்தணைந்து தாழ்ந்து பணிந்து வாழ்ந்துபோந், தம்பொற் புரிசைத் திருமுன்றில் அணைவார் பாங்கோர் அரனெறியின், நம்பர்க் கிடமாங் கோயிலினுட் புக்கு வணங்க நண்ணினார். 7

நண்ணி இறைஞ்சி அன்பினால் நயப்புற் றெழுந்த காதலுடன், அண்ண லாரைப் பணிந்தெழுவார் அடுத்த நிலைமைக் குறிப்பினால், பண்ணுந் தொண்டின் பாங்குபல பயின்று பரவி விரவுவார், எண்ணில் தீபம் ஏற்றுவதற் கெடுத்த கருத்தின் இசைந்தெழுவார்.[4] 8

எழுந்த பொழுது பகற்பொழுதங் கிறங்கு மாலை எய்துதலும், செழுந்தண் பதியி னிடையப்பாற் செல்லிற் செல்லும் பொழுதென்ன, ஒழிந்தங் கணைந்தோர் மனையில்விளக் குறுநெய் வேண்டி உள்புகலும், அழிந்த நிலைமை அமணர்மனை ஆயிற் றங்கண் அவருரைப்பார். 9

---

பா - ம்—[1] தலைப்பட். [2] தன்மை. [3] பணிவுறுவது. [4] தெழுந்தார்.

"கையில் விளங்கு கனலுடையார் தமக்கு விளக்கு மிகை காணும்; நெய்யிங் கில்லை, விளக்கெரிப்பீ ராகில் நீரை முகந் தெரித்தல், செய்யும்" என்று திருத்தொண்டர்க் குரைத்தார் தெளியா(து) "ஒருபொருளே,[1] பொய்யும் மெய்யும் ஆம்" என்னும் பொருள்மேற் கொள்ளும் புரைநெறியார். 10

அருகர் மதியா துரைத்தவுரை ஆற்று ராகி அப்பொழுதே, பெருக மனத்தில் வருத்தமுடன் பெயர்ந்து போந்து பிறை யணிந்த, முருகு விரியும் மலர்க்கொன்றை முடியார் கோயில் முன்எய்தி, உருகும் அன்பர் பணிந்துவிழ ஒருவாக் கெழுந்த(து) உயர்விசும்பில். 11

"வந்த கவலை மாற்றும்இனி மாறா விளக்குப் பணிமாற
இந்த மருங்கில் குளத்துநீர் முகந்து கொடுவந் தேற்றும்"என
அந்தி மதியம் அணிந்தபிரான் அருளால் எழுந்த மொழிகேளாச்
சிந்தை மகிழ்ந்து நமிநந்தி அடிகள் செய்வ தறிந்திலரால். 12

சென்னி மிசைநீர் தரித்தபிரான் அருளே சிந்தை செய்தெழுவார்
நன்னீர்ப் பொய்கை நடுப்புக்கு நாதர் நாமம் நவின்றேத்தி
அந்நீர் முகந்து கொண்டேறிஅப் பர்கோயில்அடைந்(து)அகலுள்
முந்நீர் உலகம் அதிசயிப்ப முறுக்குந் திரிமேல் நீர்வார்த்தார். 13

சோதி விளக்கொன் றேற்றுதலுஞ் சுடர்விட் டெழுந்த(து) அது நோக்கி, ஆதி முதல்வர் அரனெறியார் கோயில் அடையவிளக் கேற்றி, ஏதம் நினைந்த அருகந்தர் எதிரே முதிருங் களிப்பி னுடன், நாதர் அருளால் திருவிளக்கு நீரால் எரித்தார் நாடறிய.

நிறையும் பரிசு திருவிளக்கு விடியு மளவும் நின்றெரியக், குறையுந் தகளி களுக்கெல்லாங் கொள்ள வேண்டும் நீர்வார்த்து, மறையின் பொருளை அருச்சிக்கும்[2] மனையின் நியதி வழுவாமல் உறையும் பதியின் அவ்விரவே அணைவார் பணிவுற் றெருப் பட்டார். 15

இரவு சென்று தம்பதியில் எய்தி மனைப்புக் கென்றும்போல்
விரவி நியமத் தொழில்முறையே விமலர் தம்மை அருச்சித்துப்

பா - ம்—[1] ஒருபொருளைப். [2] அருச்சித்து.

பரவி அமுது செய்தருளிப் பள்ளி கொண்டு புலர்காலை
அரவம் அணிவார் பூசைஅமைத் தாரூர் நகரின் மீண்டணைந்தார்.

வந்து வணங்கி அரனெறியார் மகிழுங் கோயில் வலங்கொண்டு
சிந்தை மகிழப் பணிந்தெழுந்து புறம்பும் உள்ளுந் திருப்பணிகள்
முந்த முயன்று பகலெல்லாம் முறையே செய்து மறையவனார்
அந்தி அமையத்(து)[1] அரியவிளக் கெங்கும் ஏற்றி அடிபணிவார்.[2]

பண்டு போலப் பலநாளும் பயிலும் பணிசெய் தவரொழுகத்
தண்டி அடிக ளாலஅமணர் கலக்கம் விளைந்து[3] சார்வில்அமண்
குண்டர் அழிய ஏழுலகும் குலவும் பெருமை நிலவியதால்
அண்டர் பெருமான தொண்டர்கழல் அமரர் பணியுமணியாரூர்.

நாத மறைதேர் நமிநந்தி அடிக ளார்நற் றொண்டாகப்
பூத நாதர் புற்றிடங்கொள் புனிதர்க் கமுது படிமுதலாம்
நீதி வளவன் தான்வேண்டும் நிபந்தம் பலவும் அரியணையின்
மீது திகழ இருந்தமைத்தான் வேதா கமநூல் விதிவிளங்க. 19

வென்றி விடையார் மதிச்சடையார் வீதி விடங்கப் பெரு
மாள்தாம், என்றுந் திருவா ரூர்ஆளும் இயல்பின் முறைமைத்
திருவிளையாட், டொன்றுஞ் செயலும் பங்குனியுத் திரமாந் திரு
நாள் உயர்சிறப்பும் நின்று விண்ணப் பஞ்செய்த படிசெய்
தருளும் நிலைபெற்றார்.[4] 20

இன்ன பரிசு திருப்பணிகள் பலவுஞ் செய்தே ஏழுலகும்
மன்னும் பெருமைத் திருவாரூர் மன்னர் அடியார் வழிநிற்பார்
அன்ன வண்ணந் திருவிளையாட் டாடி அருள எந்நாளும்
நன்மை பெருக நமிநந்தி அடிகள் தொழுதார் நாம்உய்ய. 21

தேவர் பெருமான் எழுச்சிதிரு மணலிக் கொருநாள் எழுந்தருள
யாவ ரெனறு துடன்சேவித் தெல்லாக் குலத்தி லுள்ளோரும்
மேவ அன்பர் தாமுமுடன் சேவித் தணைந்து விண்ணவர்தங்
காவ லாளர் ஓலக்கம் அங்கே கண்டு களிப்புற்றார். 22

பொழுது வைகச் சேவித்துப் புனிதர் மீண்டுங் கோயில்புகத்
தொழுது தம்மூர் மருங்கணைந்து தூய மனையுட் புகுதாதே

பா - ம்—[1] யமைத்த. [2] பணிந்தார். [3] விளக்க. [4] நேர்பெற்றார்.

இழுதும் இருள்சேர் இரவுபுறங் கடையில் துயில இல்லத்து
முழுதுந் தருமம் புரிமனையார் வந்துட் புகுத மொழிகின்றார். 23

"திங்கள் முடியார் பூசனைகள் முடித்துச் செய்யுங் கடன் முறையால், அங்கி தனைவேட் டமுதுசெய்து பள்ளி கொள்வீர்" எனஅவர்க்குத், "தங்கள் பெருமான் திருமணலிக் கெழுச்சி சேவித் துடன்நண்ண, எங்கும் எல்லா ரும்போத இழிவு தொடக்கிற் றெனை"என்று. 24

"ஆத லாலே குளித்தடுத்த தூய்மை செய்தே அகம்புகுந்து
வேத நாதர் பூசனையைத்[1] தொடங்க வேண்டும்; அதற்குநீ
சீத நன்னீர் முதலான கொணடிங் கணைவாய்" எனச்செப்பக்
காதல் மனையார் தாமும்அவை கொணருமதற்குக்கடிதணைந்தார்.

ஆய பொழுது தம்பெருமான் அருளா லேயோ? மேனி யினில், ஏயும் அசைவின் அயர்வாலோ? அறியோம்; இறையும் தாழாதே, மேய உறக்கம் வந்தணைய விண்ணோர் பெருமான் கழல்நினைந்து, தூய அன்பர் துயில்கொண்டார், துயிலும் பொழுது கனவின்கண. 26

பேனமை விளங்குந் திருவாரூர் வீதி விடங்கப் பெருமாள்தாம்
மான அன்பர் பூசனைக்கு வருவார் போல வந்தருளி
"ஞான மறையோய்![2] ஆரூரில பிறந்தார் எல்லாம் நங்கணங்கள்
ஆன பரிசு காணபாய்"என் றருளிச் செய்தங் கெதிரகன்றார். 27

ஆதி தேவர் எழுந்தருள உணர்ந்தார் "இரவர்ச் சனைசெய்யா(து)
ஏதம் நினைந்தேன்" எனஅஞ்சி எழுந்த படியே வழிபட்டு
மாத ரார்க்கும் புகுந்தபடி மொழிந்து விடியல் விரைவோடு
நாத னூர்தந் திருவாரூர் புகுத எதிர்அந் நகர்காண்பார். 28

தெய்வப் பெருமாள் திருவாரூர்ப் பிறந்து வாழ்வார் எல்லாரும்
மைவைத் தனைய மணிகண்டர்[3] வடிவே யாகிப் பெருகொளியால்
மொய்வைத் தமர்ந்த மேனியராம் பரிசு கண்டு முடிகுவித்த
கைவைத் தஞ்சி அவனிமிசை விழுந்து பணிந்து களிசிறந்தார். 29

---

பா-ம் —[1] பூசவனைகள். [2] மறையோர். [3] கண்டரவர்.

படிவம் மாற்றிப் பழம்படியே நிகழ்வுங் கண்டு பரமர்பால் "அடியேன் பிழையைப் பொறுத்தருள வேண்டும்' என்று பணிந்தருளால், குடியும் திருவா ரூரகத்துப் புகுந்து வாழ்வார் குவலயத்து, நெடிது பெருகுந் திருத்தொண்டு நிகழச் செய்து நிலவுவார். 30

நீறு புனைவார்[1] அடியார்க்கு நெடுநாள் நியதி யாகவே, வேறு வேறு வேண்டுவன எல்லாஞ் செய்து மேவுதலால், ஏறு சிறப்பின்[2] மணிப்புற்றில் இருந்தார் "தொண்டர்க் காணி"யெனும், பேறு திருநா வுக்கரசர் விளம்பப் பெற்ற பெருமையினார். 31

இன்ன வகையால் திருப்பணிகள் எல்லா உலகுந் தொழச் செய்து. நன்மை பெருகும் நமிநந்தி அடிகள் நயமார் திருவீதிச், சென்னி மதியும் திருநதியும் அலைய வருவார் திரு வாரூர், மன்னர் பாத நீழல்மிகும் வளர்பொற் சோதி மன்னினார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

நாட்டார் அறிய முன்னாளில் நன்னாள் உலந்த[3] ஐம்படையின், பூட்டார் மார்பிற் சிறியமறைப் புதல்வன் தன்னைப் புக கொளியூர்த், தாட்டா மரையின்[4] மடுவின்கண் தனிமா முதலை வாய்நின்றும, மீட்டார் கழல்கள் நினைவாரை மீளா வழியின் மீட்பனவே. 33

சருக்கம் ஐந்துக்குத் திருவிருத்தம் 1903

முதற்காண்டம் முற்றிறறு.

திருச்சிற்றம்பலம்

---

பா - ம்—[1] புனைந்த. [2] ஏறு சிறப்பு. [3] இறந்த [4] மரைநீர்.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# இரண்டாங் காண்டம்

## 6. வம்பறு வரிவண்டுச் சருக்கம்

°°○○ ★ ○○°°

# 28. திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம். 1

சென்னிவளர் மதியணிந்த சிலம்பணிசே வடியார்தம்
மன்னியசை வத்துறையின் வழிவந்த குடிவளவர்
பொன்னிவளந் தருநாடு பொலிவெய்த நிலவியதால்
கன்னிமதில் மருங்குமுகில் நெருங்குகழு மலமூதூர். 2

அப்பதிதான் அந்தணர்தங் கிடைகள்அரு மறைமுறையே
செப்பும்ஒலி வளர்பூகச் செழுஞ்சோலை புறஞ்சூழ
ஒப்பில்நகர் ஓங்குதலால் உகக்கடைநாள் அன்றியே
எப்பொழுதுங் கடல்மேலே மிதப்பதென இசைந்துளதால். 3

அரிஅயனே முதல்அமரர் அடங்களழும் வெள்ளங்கள்
விரிசுடர்மா மணிப்பதணம் மீதெறிந்த திரைவரைகள்
புரிசைமுதல் புறஞ்சூழ்வ பொங்கோதங் கடைநாளில்
வரிஅரவ மந்தரஞ்சூழ் வடம்போல வயங்குமால். 4

வளம்பயிலும் புறம்பணைப்பால் வாசப்பா சடைமிடைந்த
தளம்பொலியும் புனற்செந்தா மரைச்செவ்வித் தடமலரால்[1]

---

பா - ம்—[1] தடமலரக்.

களம்பயில்நீர்க் கடல்மலர்வ தொருபரிதி எனக்கருதி
இளம்பரிதி பலமலர்ந்தாற் போல்பஉள இலஞ்சிபல. 5

உளங்கொள்மறை வேதியர்தம் ஓமதூ மத்திரவும்
கிளர்ந்ததிரு நீற்றொளியிற் கெழுமியநண் பகலுமலர்ந்(து)
அளந்தறியாப் பல்லூழி ஆற்றுதலால் அகலிடத்து
விளங்கியஅம் மூதூர்க்கு வேறிரவும் பகலுமிகை. 6

பரந்தவினை வயற்செய்ய பங்கயமாம் பொங்கெரியில்
வரம்பில்வளர் தேமாவின் கனிகிழிந்த மதுநறுநெய்
நிரந்தரம்நீள் இலைக்கடையால் ஒழுகுதலால் நெடிதவ்வூர்
மரங்களும்ஆ குதிவேட்குந் தகையவென[1] மணந்துளதால்.[2] 7

வேலையழற் கதிர்படிந்த வியன்கங்குல் வெண்மதியம்
சோலைதொறும் நுழைந்துபுறப் படும்பொழுது துதைந்தமலர்ப்
பாலணைந்து மதுத்தோய்ந்து தாதளைந்து பயின்றந்தி
மாலைஎழுஞ் செவ்வொளிய[3] மதியம்போல் வதியுமால். 8

காமர்திருப் பதியதன்கண் வேதியர்போற் கடிகமழுந்
தாமரையும் புல்லிதழுந் தயங்கியநூ லுந்தாங்கித்
தூமருநுண் துகள்அணிந்து[4] துளிவருகண் ணீர்ததும்பித்
தேமருமென் சுரும்பிசையாற் செழுஞ்சாமம் பாடுமால். 9

புனைவார்பொற் குழைஅசையப் பூந்தானை பின்போக்கி
வினைவாய்ந்த தழல்வேதி மெழுக்குறவெண் சுதைஒழுக்கும்
கனைவான முகில்கூந்தற் கதிர்செய்வட மீன்கற்பின்
மனைவாழ்க்கைக் குலமகளிர் வளம்பொலிவ மாடங்கள். 10

வேள்விபுரி சடங்கதனை விளையாட்டுப் பண்ணைதொறும்
பூழியுற வகுத்தமைத்துப் பொன்புனைகிண் கிணிஒலிப்ப
ஆழிமணிச் சிறுதேரூர்ந் தவ்விரதப் பொடியாடும்
வாழிவளர் மறைச்சிறுவர் நெருங்கியுள மணிமறுகு. 11

விடுசுடர்நீள் மணிமறுகின் வெண்சுதைமா ளிகைமேகம்
தொடுகுடுமி நாசிதொறுந் தொடுத்தகொடி சூழ்கங்குல்

பா - ம்—[1] தகைமையென. [2] வயங்கியதால்; மலர்ந்துளதால்.
[3] சேயொளிய. [4] அணைந்து.

உடுளனுநாண் மலர்அலர உறுபகலிற் பலநிறத்தால்
நெடுவிசும்பு தளிர்ப்பதெனை நெருங்கியுள மருங்கெல்லாம். 12

மடைஎங்கும் மணிக்குப்பை; வயலெங்கும் கயல்வெள்ளம்,
புடைஎங்கும் மலர்ப்பிறங்கல், புறமெங்கும் மகப்பொலிவு;
கிடைஎங்கும் கலைச்சூழல்;[1] கிளர்வெங்கும் முரல்அளிகள்;
இடைஎங்கும் முனிவர்குழாம், எயிலெங்கும் பயில்எழிலி. 13

**பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு[2] வெங்குருநீர்ப்**
**பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்**
**வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்**
**பாவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்.** 14

அப்பதியின் அந்தணர்தங் குடிமுதல்வர்; ஆசில்மறை
கைப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்கச்
செப்புநெறி வழிவந்தார்; சிவபாத விருதயர்என்(று)
இப்புவிவா ழத்தவஞ்செய் இயல்பினர்; உளரானார். 15

மற்றவர்தந் திருமனையார் வாய்ந்தமறை மரபின்வரு
பெற்றியினர், எவ்வுலகும் பெறற்கரிய பெருமையினர்;
பொற்புடைய பகவதியார் எனப்போற்றும் பெயருடையார்;
கற்புமேம் படுசிறப்பால்[3] கணவனார் கருத்தமைந்தார். 16

மரபிரண்டுஞ் சைவநெறி வழிவந்த கேண்மையினர்[4]
அரவணிந்த சடைமுடியார் அடியலால் அறியாது
பரவுதிரு நீற்றன்பு பாலிக்குந் தன்மையராய்
விரவுமறை மனைவாழ்க்கை வியப்பெய்த மேவுநாள். 17

மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம் பொய்ம்மிகுத்தே
ஆதிஅரு மறைவழக்கம் அருகிஅரன் அடியார்பால்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெறு தொழியக்கண்(டு)
ஏதமில்சீர்ச் சிவபாத விருதயர்தாம் இடருழந்தார். 18

மனையறத்தில் இன்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமலம்

---

பா - ம—[1] கலை ஒலிகள். [2] பெரும்புகலி. [3] சிறப்பில்.
[4] கேண்மையராய்.

நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறாக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றுந்[1] தவம்புரிந்தார்.

பெருத்தெழும்அன் பாற்பெரிய நாச்சியா ருடன்புகலித்
திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக்
கருத்துமுடிந் திடப்பரவும் காதலியார் மணிவயிற்றில்[2]
உருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய உளதாக. 20

ஆளுடையா ருடன்தோணி அமர்ந்தபிரான் அருள்போற்றி
மூளுமகிழ்ச் சியில்தங்கள் முதல்மறைநூல் முறைச்சடங்கு
நாளுடைய ஈரைந்து திங்களினும் நலஞ்சிறப்பக்
கேளிருடன் செயல்புரிந்து பேரின்பங்[3] கிளர்வுறுநாள். 21

அருக்கன்முதற் கோள்அனைத்தும் அழகியஉச் சங்களிலே
பெருக்கவலி யுடன்நிற்கப் பேணியநல் லோரையெழத்
திருக்கிளரும் ஆதிரைநாள் திசைவிளங்கப் பரசமயத்
தருக்கொழியச் சைவமுதல் வைதிகமும் தழைத்தோங்க. 22

தொண்டர்மனம் களிசிறப்பத் தூயதிரு நீற்றுநெறி[4]
எண்டிசையும் தனிநடப்ப ஏழுலகும் குளிர்தூங்க
அண்டர்குலம் அதிசயிப்ப அந்தணர்ஆ குதிபெருக
வண்டமிழ்செய் தவம்நிரம்ப மாதவத்தோர் செயல்வாய்ப்ப. 23

திசையனைத்தின் பெருமையெலாந் தென்றிசையே வென்
றேற, மிசையுலகும் பிறவுலகும் மேதினியே தனிவெல்ல, அசை
வில்செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின்[5] துறைவெல்ல,
இசைமுழுதும் மெய்யறிவும் இடங்கொள்ளும் நிலைபெருக. 24

தாளுடைய படைப்பென்னுந் தொழிற்றன்மை தலைமைபெற
நாளுடைய நிகழ்காலம் எதிர்கால நவைநீங்க
வாளுடைய மணிவீதி வளர்காழிப் பதிவாழ
ஆளுடைய திருத்தோணி அமர்ந்தபிரான் அருள்பெருக. 25

அவம்பெருக்கும் புல்லறிவின் அமண்முதலாம் பரசமயப்
பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறும்

---

பா - ம்—[1] பெற்றெடுக்கும். [2] திருவயிற்றில். [3] பேரின்பம்.
[4] நீற்றின்நெறி. [5] வழங்கும்.

தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவிலசரா சரங்களெலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதா ரஞ்செய்தார். 26

அப்பொழுது பொற்புறு திருக்கழு மலத்தோர்
எப்பெயரி னோரும்அயல் எய்தும்இடை யின்றி
மெய்ப்படு மயிர்ப்புளகம் மேவிஅறி யாமே
ஒப்பில்களி கூர்வதொர் உவப்புற உரைப்பார். 27

"சிவனருள எனப்பெருகு சித்தமகிழ் தன்மை
இவணிது நமக்குவர எய்தியதென் ?" என்பார்
"கவுணியர் குலத்தில்ஒரு காதலன் உதித்தான்
அவன்வரு நிமித்தம்இது" என்றதி சயித்தார். 28

பூமுகை அவிழ்ந்துமணம் மேவுபொழில் எங்கும்
தேமருவு தாதொடு துதைந்ததிசை யெல்லாம்
தூமருவு சோதிவிரி யத்துகள் அடக்கி ;
மாமலய மாருதமும் வந்தசையும் அன்றே. 29

மேலைஇமை யோர்களும விருப்பொடு கரப்பில்
சோலைமலர் போலமலர் மாமழை சொரிந்தே
ஞாலமிசை வந்துவளர் காழிநகர் மேவும்
சீலமறை யோர்களுடன் ஓமவினை செய்தார். 30

பூதகண நாதர்புவி வாழஅருள் செய்த
நாதன்அரு ளின்பெருமை கண்டு[1]நலம் உய்ப்பார் ,
ஓதுமறை யோர்பிறி துரைத்திடினும் ஓவா
வேதமொழி யால்ஒலி விளங்கிஎழும் எங்கும். 31

பயன்தருவ பல்தருவும் வல்லிகளும் மல்கித்
தயங்குபுன லுந்தெளிவ[2] தண்மையுடன் நண்ணும்
வயங்கொளி விசும்புமலி னங்கழியும் மாறு
நயம்புரிவ புள்ளொலிகள் நல்லதிசை எல்லாம். 32

அங்கண்விழ விற்பெருகு சண்பைஅகல் மூதூர்ச்
சங்கபட கங்கருவி தாரைமுத லான

---

பா - ம்— [1] கொண்டு. [2] தெளிவு.

எங்கணும் இயற்றுபவ ரின்றியும் இயம்பும்
மங்கல முழக்கொலி [1] மலிந்தமறு கெல்லாம். 33

இரும்புவனம் இத்தகைமை எய்தஅவர் தம்மைத்
தருங்குல மறைத்தலைவர் தம்பவன முன்றில்
பெருங்களி வியப்பொடு பிரான்அருளி னாலே
அருந்திரு மகப்பெற அணைந்தஅணி செய்வார். 34

காதல்புரி சிந்தைமகி ழக்களி சிறப்பார்,
மீதணியு நெய்யணி விழாவொடு திளைப்பார்;
சூதநிகழ் மங்கல வினைத்துழனி பொங்கச்
சாதக முறைப்பல சடங்குவினை செய்வார். 35

மாமறை விழுக்குல மடந்தையர்கள் தம்மில்
தாமுறு மகிழ்ச்சியொடு சாயல்மயில் என்னத்
தூமணி விளக்கொடு சுடர்க்குழைகள் மின்னக்
காமர்திரு மாளிகை கவின்பொலிவு செய்வார். 36

சுண்ணமொடு தண்மலர் துதைந்ததுகள் வீசி
உண்ணிறை விருப்பினுடன் ஓகையுரை செய்வார்,
வெண்முளைய பாலிகைகள் வேதிதொறும் வைப்பார்;
புண்ணிய நறும்புனல்கொள் பொற்குடம் நிரைப்பார். 37

செம்பொன்முத லான [2] பல தானவினை செய்வார்;
நம்பர்அடி யார்அமுது செய்யநலம் உய்ப்பார்;
வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்,
நிம்பமுத லானகடி நீடுவினை செய்வார். 38

ஐயவி யுடன்பல அமைத்தபுகை யாலும்
நெய்யகில் நறுங்குறை நிறைத்தபுகை யாலும்
வெய்யதழல் ஆகுதி விழுப்புகையி னாலும்
தெய்வமணம் நாறவரு செய்தொழில் விளைப்பார் 39

ஆயபல செய்தொழில்கள் அன்றுமுதல் விண்ணோர்
நாயகன் அருட்பெருமை கூறுநலம் எய்தத

---

பா - ம்—[1] முழங்கொலி. [2] முதலாய

தூயதிரு மாமறை தொடர்ந்தநடை நூலின்
மேயவிதி ஐயிரு தினத்தினும் விளைத்தார். 40

நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமவுத யப்பரிதி யில்திகழ் பிரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி என்னத்
தாமணி நிரைத்தணிசெய் தொட்டில்அமர் வித்தார். 41

பெருமலை பயந்தகொடி பேணுமுலை யின்பால்
அருமறை குழைத்தமுது செய்தருளு வாரைத்
தருமறைவி யார் [1]பரமர் தாள்பரவும் அன்பே
திருமுலை சுரந்தமுது செய்தருளு வித்தார். 42

ஆறுலவு செய்யசடை ஐயர்அரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியில் நிறுத்திநிறை வித்தார். 43

தாயர்திரு மடித்தலத்துந் தயங்குமணித் தவிசினிலும்
தூயசுடர்த் தொட்டிலினுந் தூங்குமலர்ச் சயனத்துஞ்
சேயபொருள் திருமறையுந் தீந்தமிழுஞ் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பலபா ராட்டினர். 44

வருமுறைமைப் பருவத்தில் வளர்புகலிப் பிள்ளையார்
அருமறைகள் தலைஎடுப்ப ஆண்டதிரு முடிஎடுத்துப்
பெருமழுவர் தொண்டல்லால் பிறிதிசையோம் என்பார்போல
திருமுகமண் டலமசையச் செங்கீரை ஆடினர். 45

"நாமறியோம் பரசமயம் உலகிர்! [2] எதிர் நாடாது
போமகல" என்றங்கை [3] தட்டுவதும் [4] புனிதன்பால்
காமருதா ளம்பெறுதற் கொத்துவதுங் [5] காட்டுவபோல்
தாமரைச்செங் கைகளினாற் சப்பாணி கொட்டினர் 46

விதிதவறு படும்வேற்றுச் சமயங்க ளிடைவிழுந்து
கதிதவழ, இருவிசும்பு நிறைந்தகடி வார்கங்கை

---

பா - ம்—[1] தருமிறைவியார். [2] உலகில். [3] என் அங்கை. [4] கொட்டுவதும். [5] கொற்றுவதும்.

நதிதழுவுஞ் சடைமுடியார் ஞானம்அளித் திடவுரியார்
மதிதவழ்மா ளிகைமுன்றின் மருங்குதவழ்ந் தருளினார். 47

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்
"காழியர்தஞ் சீராட்டே! கவுணியர்கற் பகமே"! என்(று)
ஏழிசையும் பலகலையும் எவ்வுலகுந் [1] தனித்தனியே
வாழவரும் அவர்தம்மை "வருக!வரு" கெனஅழைப்ப. 48

திருநகையால் அழைத்தவர்தஞ் செழுமுகங்கள் மலர்வித்தும்
வருமகிழ்வு தலைசிறப்ப மற்றவர்மேற் செலவுகைத்தும்
உருகிமனங் கரைந்தலைய உடனணைந்து தழுவியும்முன்
பெருகியஇன் புறஅளித்தார் பெரும்புகலிப் பிள்ளையார். 49

வளர்பருவ முறையாண்டு வருவதன்முன் மலர்வரிவண்(டு)
உளர்கருமென் சுருட்[2]குஞ்சி யுடன்அலையச் செங்கின்று
கிளர்ஒலிகிண் கிணி[3]எடுப்பக் கீழ்மைநெறிச் சமயங்கள்
தளர்நடையிட் டறத்தாமுந் தளர்நடையிட் டருளினார். 50

தாதியர்தங் கைப்பற்றித் தளர்நடையின் அசைவொழிந்து
சோதியணி மணிச்சதங்கை தொடுத்தவடம் புடைசூழ்ந்த
பாதமலர் நிலம்பொருந்தப் பருவமுறை ஆண்டொன்றின்
மீதணைய நடந்தருளி விளையாடத் தொடங்கினார். 51

சிறுமணித்தேர் தொடர்ந்துருட்டிச் செழுமணற்[4] சிற்றில்கள்இழை, நறுநுதற்பே தையர்மழுங்கு நடந்தோடி அடர்ந்தழித்தும், குறுவியர்ப்புத் துளியரும்பக் கொழும்பொடியா டியகோல, மறுகிடைப்பே ரொளிபரப்ப வந்துவளர்ந் தருளினார். 52

மங்கையோ டுடனாகி வளர்தோணி வீற்றிருந்த
திங்கள்[2]சேர் சடையார்தந் திருவருட்குச் செய்தவத்தின்
அங்குரம்போல் வளர்ந்தருளி அருமறையோ டுலகுய்ய
எங்கள்பிரான் ஈராண்டின் மேலோராண் டெய்துதலும். 53

தாவாண்ட பலகலையும் நாமகளும் நலஞ்சிறப்பப்
பூவாண்ட திருமகளும் புண்ணியமும் பொலிவெய்தச்

பா—ம்—[1] ஏழுலகுந். [2] சுடர்க். [3] ஒலிக்கிங்கிணி. [4] செழுமணிச்.

சேவாண்ட கொடியவர்தஞ் சிரபுரத்துச் சிறுவருக்கு
மூவாண்டில் உலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன். 54

பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர் தமைப்பரமர்,
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டின் அளித்தருளத்,
தொண்டின்நிலை தரவருவார் தொடர்ந்தபிரி வுணர்வொருகால் [2],
கொண்டெழலும் வெருக்கொண்டாற் போல்அழுவார் குறிப்பயலாய். 55

மேதகைய இந்நாளில் வேறொருநாள் வேதவிதி
நீதிமுறைச் சடங்குநெறி முடிப்பதற்கு நீராடத்
தாதையார் போம்பொழுது தம்பெருமான் அருள்கூடச்
சோதிமணி மனைமுன்றில் தொடர்ந்தழுது பின்சென்றார். 56

பின்சென்ற பிள்ளையார் தமைநோக்கிப் பெருந்தவத்தோர்
முன்செல்கை தனையொழிந்து முனிவார்போல் விலக்குதலும்
மின்செய்பொலங் கிண்கிணிக்கால் கொட்டிஅவர் மீளாமை
"உன்செய்கை இதுவாகில் போ"தென்றங் குடன்சென்றார். 57

கடையுகத்தில் தனிவெள்ளம் பலவிரிக்குங் கருப்பம்போல்
இடையறுப் பெருந்தீர்த்தம் எவற்றினுக்கும் பிறப்பிடமாய்
விடையுயர்த்தார் திருத்தோணிப் பற்றுவிடா மேன்மையதாம்
தடமதனில் துறையணைந்தார் தருமத்தின் தலைநின்றார். 58

பிள்ளையார் தமைக்கரையில் வைத்துத்தாம் பிரிவஞ்சித்
தெள்ளுநீர்ப் புகமாட்டார் தேவியொடுந் திருத்தோணி
வள்ளலார் இருந்தாரை எதிர்வணங்கி மணிவாவி
உள்ளிழிந்து புனல்புக்கார் உலகுய்ய மகப்பெற்றார். 59

நீராடித் தருப்பித்து நியமங்கள் பலசெய்வார்
சீராடுந் [3] திருமகனார் காண்பதன்முன் செய்ததற்பின்
ஆராத விருப்பினால் அகமருடம் படியநீர் [4]
போபோது மூழ்கினார் பெருங்காவல் [5] பெற்றாராய். 60

மறைமுனிவர் மூழ்குதலும் மற்றவர்தம் மைக்காணு(து)
இறைதரியா ரெனுநிலைமை தலைக்கிடா ஈசர்கழல்

பா - ம்—[1] வொருபால். [2]சீராருந். [3]படியவடி. [4] பெருங்காதல்.

முறைபுரிந்த முன்னுணர்வு மூள அழத் தொடங்கினார்
நிறைபுனல்வா விக்கரையில் நின்றருளும் பிள்ளையார். 61

கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்க ளாற்பிசைந்து
வண்ணமலர்ச் செங்கனிவாய் மணிஅதரம் புடைதுடிப்ப
எண்ணில்மறை ஒலிபெருக எவ்வுயிருங்[1] குதுகலிப்பப்
புண்ணியக்கன் றனையவர்தாம் பொருமிஅழு தருளினார். 62

மெய்ம்மேற்கண் துளிபனிப்ப வேறெங்கும் பார்த்தழுவார்
தம்மேலைச் சார்புணர்ந்தோ ? சாரும்பிள் ளைமைதானோ ?
செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணிச் சிகரம்பார்த்(து)
"அம்மே! அப்பா!" என்றென் றழைத்தருளி அழுதருள. 63

அந்நிலையில் திருத்தோணி வீற்றிருந்தார் அருள்நோக்கால்
முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்
பொன்மலைவல் லியுந்தாமும் பொருவிடைமேல் எழுந்தருளிச்
சென்னிஇளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார்.

திருமறைநூல் வேதியர்க்கும் தேவியர்க்கும் தாங்கொடுத்த
பெருகுவரம் நினைந்தோதான் தம்பெருமைக் கழல்பேணும்
ஒருநெறியில் [2] வருஞானங் கொடுப்பதனுக் குடனிருந்த
அருமறையா ளுடையவனை அளித்தருள[3] அருள்செய்வார். 65

அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி அருட்கருணை
எழுகின்ற திருவுள்ளத் திறையவர்தாம் எவ்வுலகும்
தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் "துணைமுலைகள்
பொழிகின்ற பால்அடிசில் பொன்வள்ளத் தூட்"டென்ன. 66

ஆரணமும் உலகேழும் ஈன்றருளி அனைத்தினுக்கும்
காரணமாய்[4] வளம்பெருகு கருணைதிரு வடிவான
சீரணங்கு சிவபெருமான் அருளுதலும் சென்றணைந்து
வாரிணங்கு திருமுலைப்பால்[5] வள்ளத்துக் கறந்தருளி. 67

எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
"உண்ணடிசில்" என ஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்

---

பா - ம்—[1] எவ்வுலகும். [2] ஒருமைநெறி. [3] அழைத்தருளி.
[4] காரணமாம். [5] திருமுலைபோல்.

கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணம்அளித்(து)
அண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணனுர் அருள்புரிந்தார். 68

யாவருக்குந் தந்தைதாய் எனும் இவர்[1]இப் படிஅளித்தார்
ஆவதனுல் ஆளுடைய பிள்ளையா ராய்அகில
தேவருக்கும் முனிவருக்குந் தெரிவரிய பொருளாகும்
தாவில்தனிச் சிவஞான சம்பந்த ராயினுர். 69

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில். 70

"எப்பொருளும் ஆக்குவான் ஈசனே" எனும்உணர்வும்
"அப்பொருள்தான்[2] ஆளுடையார்[3] அடியார்கள்" எனுமறிவும்
இப்படியால் இதுவன்றித் தம்இசைவு கொண்டியலும்
துப்புரவில் லார்துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார். 71

சீர்மறையோர் சிவபாத விருதயருஞ் சிறுபொழுதில்
நீர்மருவித் தாஞ்செய்யும் நியமங்கள் முடித்தேறிப்
பேருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் தமைநோக்கி
"யாரளித்த பாலடிசில் உண்டதுநீ?" எனவெகுளா. 72

"எச்சில்மயங் கிடஉனக்கி திட்டாரைக் காட்"டென்று
கைச்சிறிய தொருமாறு கொண்டோச்சக் காலெடுத்தே
அச்சிறிய பெருந்தகையார் ஆனந்தக் கண்துளிபெய்(து)
உச்சியினில்[4] எடுத்தருளும் ஒருதிருக்கை விரற்சுட்டி. 73

விண்ணிறைந்த பெருகொளியால் விளங்குமழ விடைமேலே
பண்ணிறைந்த அருமறைகள் பணிந்தேத்தப் பாவையுடன்
எண்ணிறைந்த கருணையினுல் நின்றுரை எதிர்காட்டி [யால்.
உண்ணிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானத் திருமொழி

எல்லையிலா மறைமுதல்மெய் யுடன்எடுத்த எழுதுமறை
மல்லல்நெடுந் தமிழால்இம் மாநிலத்தோர்க் குரைசிறப்பப்

பா - ம்—[1] அவர். [2] அப்பொருளும். [3] ஆளுடையான். [4] உச்சியின்மேல்.

பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
செல்லுமுறை[1] பெறுவதற்குத் திருசெவியைச் சிறப்பித்து. 75

செம்மைபெற எடுத்ததிருத் "தோடுடைய செவியன்"எனும்
மெய்ம்மைமொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினார்
தம்மைஅடை யாளங்க ளுடன்சாற்றித் தாதையார்க்(கு)
"எம்மையிது செய்தபிரான் இவனன்றே" என இசைத்தார். 76

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்கன் எடுத்துமுறிந் திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப்பா டருள்செய்தார். 77

தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத்தொழார்
வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்த படிவிரித்தார். 78

வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதன்நெறி அறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதம்இலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே யெனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர் 79

திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக்காப் புச்சாத்தி
இருக்குமொழிப் பிள்ளையார் எதிர்தொழுது நின்றருள
அருட்கருணைத் திருவாள னார்அருள்கண் டமரரெலாம்
பெருக்கவிசும் பினில்ஆர்த்துப் பிரசமலர் மழைபொழிந்தார். 80

வந்தெழுமங் கலமான வானக[2]துந் துபிமுழக்கும்
கந்தருவர் கின்னரர்கள் கானஒலிக் கடல்முழக்கும்
இந்திரனே முதல்தேவர் எடுத்தேத்தும் இசைமுழக்கும்
அந்தமில்பல்[3] கணநாதர் "அர"எனும்ஓ சையின்அடங்க. 81

மறைகள் கிளர்ந்தொலி வளர முழங்கிட வானோர்தம்
நிறைமுடி உந்திய நிரைமணி[4] சிந்திட நீள்வானத்

பா - ம்—[1] செல்லுமுறை; செல்லுநெறி. [2] வான. [3] அந்தமில் சீர்.
[4] நிறைமணி.

துறையென வந்துல கடைய நிறைந்திட ஓவாமெய்ப்
பொறைபெரு குந்தவ முனிவ ரெனுங்கடல் புடைசூழ. 82

அணைவுற வந்தெழும் அறிவு தொடங்கின அடியார்பால்
இணையில் பவங்கிளர் கடல்கள் இகந்திட இருதாளின்
புணையருள் அங்கணர் பொருவிடை தங்கிய புணர்பாகத்
துணையொ டணைந்தனர் சுருதி தொடர்ந்த பெருந்தோணி. 83

அண்ணல் அணைந்தமை கண்டு தொடர்ந்தெழும் அன்பாலே
மண்மிசை நின்ற மறைச்சிறு போதகம் அன்றுருங்
கண்வழி சென்ற கருத்து விடாது கலந்தேகப்
புண்ணியர் நண்ணிய பூமலி கோயிலின் உட்புக்கார். 84

ஈறில்பெ ருந்தவம் முன்செய்து தாதை எனப்பெற்றார்
மாறுவி ழுந்த மலர்க்கை குவித்து மகிழ்ந்தாடி
வேறுவி ளைந்த வெருட்சி வியப்பு விருப்போடும்
கூறும்அ ருந்தமி ழின்பொரு ளான குறிப்போர்வார். 85

தாணுவி னைத்தனி கண்டு தொடர்ந்தவர் தம்மைப்போல்
காணுதல் பெற்றில ரேனும் நிகழ்ந்தன கண்டுள்ளார்
தோணிபு ரத்திறை தன்னரு ளாதல் துணிந்தார்வம்[1]
பேணும னத்தொடு முன்புகு காதலர் பின்சென்றார். 86

அப்பொழு தங்கண் அணைந்தது கண்டவர் அல்லாதார்
முப்புரி நான்மறை யோர்கள் உரோம முகிழ்ப்பெய்தி
" இப்படி ஒப்பதோர் அற்புதம் எங்குள(து)?" என்றென்றே
துப்புறழ் வேணியர் கோயிலின் வாயில்[2] புறஞ்சூழ. 87

பொங்கொளி மால்விடைமீது புகுந்தணி[3] பொற்றோணி
தங்கிஇ ருந்தபெ ருந்திரு வாழ்வு தலைப்பட்டே
" இங்கெனை யாளுடை யான்உமை யோடும் இருந்தான்" என்(று)
அங்கெதிர் நின்று புகன்றனர்[4] ஞானத் தமுதுண்டார். 88

இன்னிசை ஏழும் இசைந்த செழுந்தமிழ் ஈசற்கே[5]
சொன்முறை பாடு தொழும்பருள் பெற்ற தொடக்கோடும்

பா - ம்—[1] அறிந்தார்வம். [2] வாய்தல். [3] புகுந்தொளிர். [4] புகுந்தனர். [5] ஈசற்கு.

பன்மறை வேதியர் காண விருப்பொடு பால்நாறும்
பொன்மணி வாயினர் கோயிலின் நின்று புறப்பட்டார். 89

பேணிய அற்புத நீடருள் பெற்றபி ரான்முன்னே
நீணிலை யில்திகழ் கோபுர வாயிலின் நேரெய்தி
வாணில வில்திகழ் வேணியர் தொண்டர்கள் வாழ்வெய்தும்
தோணி புரத்தவர் தாம்எதிர் கொண்டு துதிக்கின்றார். 90

"காழியர் தவமே! கவுணியர் தனமே! கலைஞானத்(து)
ஆழிய கடலே! அதனிடை அமுதே! அடியார்முன்
வாழிய வந்திம் மண்மிசை வானோர் தனிநாதன்
ஏழிசை மொழியாள் தன்திரு[1] வருள்பெற் றனை" என்பார். 91

"மறைவளர் திருவே! வைதிக நிலையே! வளர்ஞானப்
பொறையணி முகிலே! புகலியர் புகலே! பொருபொன்னித்
துறைபெறு மணியே! சுருதியின் ஒளியே! வெளியேவந்
திறையவன் உமையா ளுடனருள் தாஎய் தினை" என்பார். 92

"புண்ணிய முதலே! புனைமணி அரைஞா ணொடுபோதும்
கண்ணிறை கதிரே! கலைவளர் மதியே! கவின்மேவும்
பண்ணியல் கதியே! பருவம தொருமூ வருடத்தே
எண்ணிய பொருளாய் நின்றவர் அருள்பெற் றனை" என்பார்.

என்றினைய பலகூறி இருக்குமொழி அந்தணரும் ஏனை யோரும், நின்றுதுதி செய்தவர்தாள் நீள்முடிக்கண் மேலேந்தி[2] நிரந்த போது, சென்றணைந்த தாதையார் சிவபாத விருதயர்தாந் தெய்வ ஞானக், கன்றினைமுன் புகஎடுத்துப் பியலின்மேற் கொண்டுகளி கூர்ந்து செல்ல. 94

மாமறையோர் குழாத்தினுடன் மல்குதிருத் தொண்டர் குழாம் மருங்கு சூழ்ந்து, தாமறுவை உத்தரியந் தனிவிசும்பில் எறிந்(து)ஆர்க்குந் தன்மை யாலே, பூமறுகு சிவானந்தப் பெருக் காறு போதஅதன் மீது பொங்கும், காமாநுரைக் குமிழிஎழுந் திழிவனபோல் விளங்குபெருங் காட்சித் தாக.[3] 95

---

பா - ம்—[1] தமதிரு. [2] மேலேந்த. [3] தாகும்.

நீடுதிருக் கழுமலத்து நிலத்தேவர் மாளிகைமேல் நெருங்கி அங்கண், மாடுநிறை மடவார்கள் மங்கலமா மொழிகளால் வாழ்த்தி வாசத், தோடுமலி நறுமலருஞ் சுண்ணமும்வெண் பொரியினொடுந் தூவி நிற்பார், கோடுபயில் குலவரைமேல் மின் குலங்கள் புடைபெயருங் கொள்கைத் தாக. 96

மங்கலதூ ரியந்துவைப்பார், மறைச்சாமம் பாடுவார்; மருங்கு வேதிப், பொங்குமணி விளக்கெடுத்துப் பூரணகும் பமும்நிரைப்பார்[1]; போற்றிசெய்வார்;, அங்கவர்கள் மனத் தெழுந்த அதிசயமும் பெருவிருப்பும் அன்பும் பொங்கத், தங்கு திரு மலிவீதிச் சண்பைநகர் வலஞ்செய்து சாருங் காலை 97

தந்திருமா ளிகையின்கண் எழுந்தருளிப் புகும்பொழுது சங்க நாதம், அந்தரதுந் துபிமுதலா[2] அளவில்பெரு கொலி தழைப்ப அணைந்து புக்கார், சுந்தரப்பொற் றோணிமிசை இருந்த பிரா னுடன்அமர்ந்த[3] துணைவி யாகும், பைந்தொடியாள் திரு முலையின் பாலறா மதுரமொழிப் பவள வாயார். 98

தூமணிமா ளிகையின்கண் அமர்ந்தருளி அன்றிரவு தொல்லை நாத, மாமறைகள் திரண்டபெருந் திருத்தோணி மன்னிவீற் றிருந்தார்செய்ய, காமருசே வடிக்கமலங் கருத்திலுற இடையறாக் காதல் கொண்டு, நாமநெடுங் கதிருதிப்ப நண்ணினார் திருத்தோணி நம்பர் கோயில் 99

காதலுடன் அணைந்துதிருக் கழுமலத்துக் கலந்துவீற் றிருந்த தங்கள், தாதையா ரையும்வெளியே தாங்கரிய மெய்ஞ் ஞானந் தம்பால் வந்து, போதமுலை சுரந்தளித்த புண்ணியத்தா யாரையும்முன் வணங்கிப் போற்றி, மேதகைய அருள்பெற்றுத் திருக்கோலக் காஇறைஞ்ச விருப்பிற் சென்றார். 100

பெருக்கோலிட் டலைபிறங்குங் காவிரிநீர் பிரசமலர் தரளஞ் சிந்த, வரிக்கோல வண்டாட மாதரார் குடைந்தாடு மணிநீர் வாவித், திருக்கோலக் காஎய்தித் தேவர்பிரான் கோயில்வலஞ்

பா - ம்—[1] நிறைப்பார். [2] துந்துபிநாதம். [3] அவணைந்த.

செய்து முன்னின்(று), இருக்கோலிட் டறிவரிய திருப்பாதம் ஏத்துவதற் கெடுத்துக் கொள்வார். 101

மெய்ந்நிறைந்த செம்பொருளாம் வேதத்தின் விழுப் பொருளை வேணி மீது, பைந்நிறைந்த அரவுடனே பசுங்குழவித் திங்கள்பரித் தருளு வானை, மைந்நிறைந்த மிடற்றானை "மடையில்வா ளைகள்பாய" என்னும் வாக்கால், கைந்நிறைந்த ஒத்த றுத்துக்[1] கலைப்பதிகங் கவுணியர்கோன் பாடுங் காலை. 102

கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலுங் கண்டருளிக் கருணை கூர்ந்த, செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும் எழுதியநற் செம்பொற்றாளம்[2], ஐயரவர் திருவருளால்[3] எடுத்தபா டலுக் கிசைந்த அளவால் ஒதத, வையமெலாம் உய்யவரு மறைச்சிறுவர் கைத்தலத்து வந்த தன்றே.[4] 103

காழிவரும் பெருந்தகையார் கையில்வருந் திருத்தாளக் கருவி கண்டு, வாழிய[5]தந் திருமுடிமேற் கொண்டருளி மனங் களிப்ப மதுர வாயில், ஏழிசையுந் தழைததோங்க இன்னிசை வண் டமிழ்ப்பதிகம் எய்தப் பாடித், தாழுமணிக் குழையார்முன் தக்கதிருக் கடைக்காப்புச் சாத்தி நின்றார். 104

உம்பருல கதிசயிப்ப ஓங்கியநா தத்தளவின் உண்மை நோக் கித், தும்புருநா ரதர்முதலாஞ் சுருதிஇசைத் துறையுள்ளோர துதித்து மண்மேல், வம்பலர்மா மழைபொழிந்தார்; மறைவாழ வந்தருளும் மதலை யாருந், தம்பெருமான் அருள்போற்றி மீண டருளிச் சண்பைநகர் சாரச் செலவார். 105

செங்கமல மலர்க்கரத்துத் திருத்தாளத் துடன்நடந்து செல்லும்போது, தங்கள்குலத தாதையார் தரியாது தோளின் மேல் தரித்துக்கொள்ள, அங்கவர்தந் தோளின்மிசை எழுந் தருளி அணைந்தார்சூழ்ந் தமரர் ஏத்தும், திங்கள்அணி மணி மாடத் திருத்தோணி புரத்தோணிச் சிகரக் கோயில். 106

---

பா - ம்—[1] ஒற்றறுத்துக் [2] எழுதிய செம்பொற்றாளங்கள். [3] ஐயர் திருவருளாலே. [4] வந்த வன்றே. [5] வாழியர்.

திருப்பெருகு பெருங்கோயில் சூழவலங் கொண்டருளித் திருமுன் நின்றே, அருட்பெருகு திருப்பதிகம் எட்டொருகட் டளையாக்கி அவற்றுள் ஒன்று, விருப்புறுபொற் றிருத்தோணி வீற்றிருந்தார் தமைப்பாட மேவு காதல், பொருத்தம்உற அருள் பெற்றுப் போற்றிஎடுத் தருளினர் "பூவார் கொன்றை." 107

எடுத்ததிருப் பதிகத்தின் இசைதிருத்தா ளத்தினால் இசைய ஒத்தி, அடுத்தநடை பெறப்பாடி ஆர்வமுற வணங்கிப்போந் தலைநீர்ப் பொன்னி, மடுத்தவயற் பூந்தரா யவர்வாழ மழவிளங் கோ லத்துக் காட்சி, கொடுத்தருளி வைகினர் குறைவிலா நிறை ஞானக் கொண்ட லார்தாம். 108

அந்நிலையில் ஆளுடைய பிள்ளையார் தமைமுன்னம் அளித்த தாயார், முன்னுதிக்க முயன்றதவத் திருநன்னி பள்ளிமுதல் மறையோர் எல்லாம், மன்னுபெரு மகிழ்ச்சியுடன் மங்கலதூ ரியந்துவைப்ப மறைகள் ஓதிக், கன்னிமதிற் சண்பை நகர் வந்தணைந்து கவுணியர்கோன் கழலில் தாழ்ந்தார். 109

மங்கலமா மெய்ஞ்ஞானம் மண்களிப்பப் பெற்றபெரு வார்த்தை யாலே, எங்கணும்நீள் பதிமருங்கில் இருபிறப்பா ளரும்அல்லா ஏனை யோரும், பொங்குதிருத் தொண்டர்களும் அதிசயித்துக் குழாங்கொண்டு புகலி யார்தஞ், சிங்கஇள வேற் றின்பால் வந்தணைந்து கழல்பணியுஞ் சிறப்பின் மிக்கார். 110

வந்ததிருத் தொண்டர்க்கும்[1] மல்குசெழு மறையவர்க்கும் மற்று ளோர்க்குஞ், சிந்தைமகிழ் வுறமலர்ந்து திருவமுது முத லான சிறப்பின் செய்கை, தந்தம்அள வினில்விரும்புந் தகை மையினால் கடனாற்றுஞ் சண்பை மூதூர், எந்தைபிரான் சிவலோ கம் எனவிளங்கி எவ்வுலகும் ஏத்து நாளில். 111

செழுந்தரளப் பொன்னிசூழ் திருநன்னி பள்ளியுள்ளோர் தொழுது "திங்கட், கொழுந்தணியுஞ் சடையாரை எங்கள்பதி யினிற் கும்பிட் டருள அங்கே, எழுந்தருள வேண்டும்"என இசைந்தருளித் தோணிவீற் றிருந்தார் பாதந், தொழுந்தகைமை

பா - ம்— [1] தொண்டர்கட்கும்.

யாலிறைஞ்சி அருள்பெற்றுப் பிறபதியும் தொழமுன் செல்வார்[1] 112

தாதவிழுசெந் தாமரையின அகவிதழ்போல் சிறடிகள் தரையின்மீது, போதுவதும் பிறரொருவர் பொறுப்பதுவும் பொருஅன்பு புரிந்த சிந்தை, மாதவஞ்செய் தாதையார் வந்தெடுத்துத் தோளின்மேல்[2] வைத்துக் கொள்ள. நாதர்கழல தம்முடிமேல் கொண்டகருத் துடன்போந்தார் ஞானம் உண்டார். 113

தேனலருங் கொன்றையினார் திருநன்னி பள்ளியிணைச் சாரச் செல்வார், "வானணையும் மலர்ச்சோலை தோன்றுவதெப் பதி?" என்ன மகிழ்ச்சி எய்திப், "பானல்வயல் திருநன்னி பள்ளி" எனத் தாதையார் பணிபக் கேட்டு, ஞானபோ னகர்தொழுது நற்றமிழ்ச்சொல் தொடை மாலை நவில லுற்றார். 114

"காரைகள் கூகை முல்லை" எனநிகழ் கலைசேர் வாய்மைச்
சீரியற் பதிகம் பாடித் திருக்கடைக் காப்புத் தன்னில்
"நாரியோர் பாகர் வைகும்[3] நனிபள்ளி உள்கு வார்தம்
பேரிடர் கெடுதற் காணை நம' தெனும் பெருமை வைத்தார் 115

ஆதியார் கோயில் வாயில் அணைந்துபுக் கன்பு கூர[4]
நீதியால் பணிந்து போற்றி நீடிய அருள்முன் பெற்றுப்
போதுவார் தம்மைச் சூழந்து பூசுரர் குழாங்கள் போற்றும்
காதல்கண் டங்க மர்ந்தார் கவுணியர் தலைவ னார்தாம். 116

அம்பிகை அளித்த ஞானம் அகிலமும் உய்ய உண்ட
நம்பெருந் தகையார் தம்மை எதிர்கொண்டு நண்ண வேண்டி
உம்பரும் வணங்கும் மெய்ம்மை உயர்தவத் தொண்ட ரோடு[5]
தம்பெரு விருப்பால் வந்தார் தலைசைஅந் தணர்க ளெல்லாம்.

காவணம் எங்கும் இட்டுக் கமுகொடு கதலி நாட்டிப்
பூவணை[6] தாமந் தூக்கிப் பூரண கும்பம் ஏந்தி

பா - ம்—[1] சென்றார். [2] தோளின்மிசை. [3] மன்னும். [4] கூரும். [5] தொண்டரோடும் [6] பூவணத்.

ஆவண வீதி எல்லாம் அலங்கரித் தண்ண லாரை
மாவணை [1] மலர்மென் சோலை வளம்பதி கொண்டு புக்கார். 118

திருமறை யோர்கள் சூழ்ந்து சிந்தையின் மகிழ்ச்சி பொங்கப்
பெருமறை ஓசை மல்கப் பெருந்திருக் கோயில் எய்தி
அருமறைப் பொருளா னாரைப் பணிந்தணி நற்சங் கத்தின்
தருமுறை நெறியக் கோயில் சார்ந்தமை அருளிச் செய்தார். 119

கறையணி கண்டர் கோயில் காதலால் பணிந்து பாடி
மறையவர் போற்ற வந்து திருவலம் புரத்து மன்னும் [போந்து
இறைவரைத் தொழுது பாடுங் "கொடியுடை" ஏத்திப் [2]
நிறைபுனல் திருச்சாய்க் காடு தொழுதற்கு நினைந்து செல்வார்.

பன்னகப் பூணி னாரைப் பல்லவ னீச்ச ரத்துச், சென்னி யால் வணங்கி ஏத்தித் திருந்திசைப் பதிகம் பாடிப், பொன்னி சூழ் புகாரில் நீடு புனிதர்தந் திருச்சாய்க் காட்டு, மன்னுசீர்த் தொண்டர் எல்லாம் மகிழ்ந்தெதிர் கொள்ளப் புக்கார். 121

வானளா வுயர்ந்த வாயி லுள்வலங் கொண்டு புக்குத், தேனலர் கொன்றை யார்தந் திருமுன்பு சென்று தாழ்ந்து, மானிடந் தரித்தார் தம்மைப் போற்றுவார் "மண்புகார்" என்(று), ஊனெலாம் உருக ஏத்தி உச்சிமேற் குவித்தார் செங்கை. 122

சீரினில் திகழ்ந்த பாட்டில் திருக்கடைக் காப்புப் போற்றிப், பாரினில் பொலிந்த தொண்டர் போற்றிடப் பயில்வார் பின் னும், ஏரிசைப் பதிகம் பாடி ஏத்திப்போந் திறைவர் வெண்கா, டாருமெய்க் காத லோடும் பணிவதற் கணைந்தா ரன்றே. 123

பொன்னிதழ்க் கொன்றை வன்னி புனல்இள மதியம் நீடு, சென்னியர் திருவெண் காட்டுத் திருத்தொண்டர் எதிரே சென் றங்,[3] கின்னதன் மையர்க ளானார் எனவொணா மகிழ்ச்சி பொங்க, மன்னுசீர்ச் சண்பை யாளும் மன்னரைக் கொண்டு புக்கார். 124

பூத்தமிழ் விரகர் தாமும் முதல்வர்கோ புரத்து முன்னர்ச்
சித்தநீ டுவகை யோடுஞ் சென்றுதாழ்ந் தெழுந்து புக்குப்

பா - ம்—[1] மாவண. [2] பாடி இனிதமர்ந் தேத்திப். [3] வந்திங்.

பத்தராம் அடியார் சூழப் பரமர்கோ யிலைச் சூழ் வந்து
நித்தனுர் தம்முன் பெய்தி நிலமுறத் தொழுது விழ்ந்தார். 125

மெய்ப்பொரு ளாயி னுரை வெண்காடு மேவி னுரைச்
செப்பரும் பதிக மாலை "கண்காட்டு நுதல" முன் சேர்த்தி
முப்புரஞ் செற்ருர் பாதஞ் சேரு முக குளமும் பாடி
ஒப்பரு ஞானம் உண்டார் உளமகிழ்ந் தேத்தி வாழ்ந்தார். 126

அருமையாற் புறம்பு போந்து வணங்கிஅங் கமரும் நாளில்
திருமுல்லை வாயில் எய்திச் செந்தமிழ் மாலை சாததி [1]
மருவிய பதிகள் மறறும் வணங்குவார் மறையோர் ஏத்தத்
தருமலி [2] புகலி வந்து ஞானசம் பந்தர் சார்ந்தார். 127

தோணிவீற் றிருந்தார் தம்மைத் தொழுதுமுன் னின்று தூய
ஆணி யாம் பதிகம் பாடி அருட்பெரு வாழ்வு கூரச்
சேணுயர் மாடம் ஓங்குந் திருப்பதி யதனிற் செய்ய
வேணியார் தம்மை நாளும் போற்றிய விருப்பின் மிக்கார். 128

வைகும்அந் நாளிற் கீழ்பால் மயேந்திரப் பள்ளி வாசம்
செய்பொழிற் குருகா வூருந் திருமுல்லை வாயில் உள்ளிட்(டு)
எய்திய பதிகள் எல்லாம் இன்புற இறைஞ்சி ஏத்தித்
தையலாள் பாகர் தம்மைப் பாடினுர் தமிழ்ச்சொல் மாலை. 129

அவ் வகை மருங்கு சூழ்ந்த பதிகளில் அரனுர் பொற்ருள்
மெய்வகை ஞானம் உண்ட வேதியர் விரவிப் போற்றி
உய்வகை மண்ணு ளோருக் குதவிய பதிகம் பாடி
எவ்வகை யோரும் ஏத்த இறைவரை ஏத்து நாளில். 130

திருநீல கண்டத்துப் பெரும்பாணர் தெள்ளமுதின்
வருநீர்மை இசைப்பாட்டு மதங்கசூ ளாமணியார்
ஒருநீர்மை யுடன்உடைய [3] பிள்ளையார் கழல்வணங்கத்
தருநீர்மை யாழ்கொண்டு சண்பையிலே வந்தணைந்தார். 131

பெரும்பாணர் வரவறிந்து பிள்ளையார் எதிர்கொள்ளச்
சுரும்பார்செங் கமலமலர்த் துணைப்பாதந் தொழுதெழுந்து

---

பா - ம்—[1] சேர்த்தி. [2] திருமலி. [3] உறைய.

விரும்பார்வத் தொடும்ஏத்தி மெய்ம்மொழிக ளால்துதித்து
வரும்பான்மை தருவாழ்வு வந்தெய்த மகிழ்சிறந்தார். 132

அளவிலா மகிழ்ச்சியினுர் தமைநோக்கி "ஐயா! நீர்
உளமகிழ இங்கணைந்த உறுதியுடை யோம்" என்றே
இளநிலா நகைமுகிழ்ப்ப இசைத்தவரை யுடன்கொண்டு
களநிலவு நஞ்சணிந்தார் பாலணையுங் கவுணியனுர். 133

கோயிலினிற் புறமுன்றிற் கொடுபுக்குக் கும்பிடுவித்(து)
"ஏயும்இசை யாழ்உங்கள் இறைவருக்கிங் கியற்றும்" என
ஆயபுகழ்ப் பிள்ளையார் அருள்பெற்ற அதற்கிறைஞ்சி
மேயதொடைத் தந்திரியாழ் வீக்கிஇசை விரிக்கின்றார். 134

தானநிலைக் கோல்வடித்துப் படிமுறைமைத் தகுதியினுல்
ஆனஇசை ஆராய்வுற் றங்கணர்தம் பாணியினை
மானமுறைப் பாடினியா ருடன்பாடி வாசிக்க
ஞானபோ னகர்மகிழ்ந்தார்; நான்மறையோர் அதிசயித்தார். 135

யாழில்எழும் ஓசையுடன் இருவர்மிடற் றிசைஒன்றி
வாழிதிருத் தோணியுளார் மருங்கணையும் மாட்சியினைத்
தாழும்இரு சிறைப்பறவை படிநதத்தனி விசும்பிடைநின்(று)
ஏழிசைநூற் கந்தருவர் விஞ்சையரும் எடுததிசைத்தார். 136

எண்ணருஞ்சீர்த் திருத்தோணி எம்பெருமான் கழல்பரவிப்
பண்ணமையாழ இசைகூடப் பெரும்பாணர் பாடியபின்
கண்ணுதலார் அருளினுற் காழியர்கோன் கொடுபோந்து
நண்ணியுறை யிடஞ்[1]சமைத்து நல்விருந்து சிறந்தளிப்ப. 137

பிள்ளையார் அருள்பெற்ற பெரும்பாணர் பிறையணிந்த
வெள்ளநீர்ச் சடையாரை அவர்மொழிந்த மெய்ப்பதிகம்
உள்ளபடி கேட்டலுமே உருகுபெரு மகிழ்ச்சியராய்த் [தார்.
தெள்ளமிர்தம் அருந்தினர்போல் சிந்தைகளிப் புறத்[3] தொழு

காழியார் தவப்பயனுங் கவுணியர்தந் தோன்றலார்
ஆழிவிடம் உண்டவர்தம் அடிபோற்றும் பதிகஇசை

---

பா - ம்—[1] யுறைவிடஞ். [2] திருப்பதிகம். [3] களியுறத்.

யாழின்முறை மையின்இட்டே எவ்வுயிரும் மகிழ்வித்தார்
ஏழிசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர். 139

சிறியமறைக் களிறளித்த[1] திருப்பதிக இசை[2] யாழின்
நெறியிலிடும் பெரும்பாணர் பின்னும்"நீர் அருள்செய்யும்
அறிவரிய திருப்பதிக இசையாழில் இட்டடியேன்
பிறிவின்றிச் சேவிக்கப் பெறவேண்டும்" எனத்தொழுதார். 140

மற்றதற்குப் பிள்ளையார் மனமகிழ்வுற் றிசைந்தருளப்
பெற்றவர்தாம் "தம்பிரான் அருளிதுவே" எனப்பேணிச்
சொற்றமிழ்மா லையின்இசைகள் சுருதியாழ முறைதொடுத்தே
அற்றைநாட் போல்என்றும் அகலாநண் புடன்அமர்ந்தார். 141

சிரபுரத்தில் அமர்ந்தருளுந் திருஞான சம்பந்தர்
பரவுதிருத் தில்லைநடம் பயில்வாரைப் பணிந்தேத்த
விரவிஎழும் பெருங்காதல் வெள்ளத்தை உள்ளத்தில்
தரஇசையும் குறிப்பறியத் தவமுனிவர்க் கருள்செய்தார். 142

பிள்ளையார் அருள்[3]செய்யப் பெருந்தவத்தால் பெற்றெடுத்த
வள்ளலார் தாமும்உடன் செல்வதற்கு மனங்களிப்ப
வெள்ளிமால் வரைஎன்னத் திருத்தோணி வீற்றிருந்த
புள்ளிமான் உரியாரைத் தொழுதருளாற் புறப்பட்டார். 143

தாவில்யாழ்ப் பாணரொடுந் தாதையார் தம்மோடும்
மேவியசீர் அடியார்கள் புடைவரவெங் குருவேந்தர்
பூவின்மேல் அயன்போற்றும் புகலியினைக் கடந்துபோய்த்
தேவர்கள்தம் பெருந்தேவர் திருத்தில்லை வழிச்செல்வார். 144

நள்ளி ருட்கண்ணின் றுடுவார் உறைபதி நடுவுகண் டன போற்றி, முள்ளி[4] டைப்புற வெள்ளிதழ்க் கேதகை முகிழ்[7] விரி மணஞ்சூழப், புள்ளு டைத்தடம் பழனமும் படுகரும் புடை[5] கழிந் திடப்போந்து, கொள்ளி டத்திரு[7] நதிக்கரை அணைந்தனர் கவுணியர் குலதீபர். 145

---

பா - ம்—[1] கன்றளித்த. [2] திருப்பதிகத்திசை. [3] உரை. [4] முள்ளு. [5] முகை. [6] மிடை. [7] கோள்ளிடப்பேரு.

வண்டி ரைத்தெழு செழுமலர்ப்[1] பிறங்கலும் மணியும்ஆ ரமும்உந்தித், தண்ட லைப்பல வளத்தொடும் வருபுனல் தாழ்ந்துசே வடிதாழத், தெண்டி ரைக்கடற் பவளமும் பணிலமும் செழுமணித் திரள்முத்தும், கொண்டி ரட்டியுந்[2]தோதமங் கெதிர்கொளக்[3] கொள்ளிடங் கடந்தேறி. 146

பல்கு தொண்டர்தங் குழாத்தொடும் உடன்வரும் பயின்மறை யவர்சூழச், செல்க திப்பயன் காண்பவர் போற்களி சிந்தைகூர் தரக்கண்டு, மல்கு தேவரே முதலனைத் துயிர்களும் வணங்க[4]வேண் டினவெல்லாம், நல்கு தில்லைசூழ் திருஎல்லை பணிந்தனர் ஞானஆ ரமுதுண்டார். 147

செங்கண் ஏற்றவர் தில்லையே நோக்கிஇத் திருந்துல கினிற்கெல்லாம், மங்க லந்தரு மழவிளம் போதகம் வரும்இரு மருங்கெங்கும், தங்கு புள்ளொலி வாழ்த்துரை எடுத்துமுன் தாமரை மதுவாசப், பொங்கு செம்முகை கரங்குவித் தலர்முகங் காட்டின புனற்பொய்கை. 148

கலவ மென்மயி லினங்களித் தழைத்திடக் கடிமணக் குளிர்கால்வந், துலவி முன்பணிந் தெதிர்கொளக் கிளர்ந்தெழுந் தூடன் வருஞ் சுரும்பார்ப்ப, இலகு செந்தளிர் ஒளிநிறந்[5] திகழ்தர[6] இருகுழை புடையாட, மலர்மு கம்பொலிந் தசையமென் கொம்பர்நின் றுடுவ மலர்ச்சோலை. 149

இழைத்த டங்கொங்கை இமயமா மலைக்கொடி இன்னமு தெனஞானம், குழைத்த ளித்திட அமுதுசெய் தருளிய குருளையார் வரக்கண்டு, மழைத்த மந்தமா ருதத்தினுல் நறுமலர் வண்ணநுண் துகள்தூவித், தழைத்த பொங்கெழில் முகஞ்செய்து வணங்கின தடம்பணை வயற்சாலி. 150

ஞாலம் உய்ந்திட ஞானமுண் டவர்எழுந் தருளும்அந் நலங்கண்டு, சேல லம்புதண் புனற்றடம் படிந்தணை சீதமா ருதம்வீசச், சால வும்பல கண்பெறும் பயன்பெறுந் தன்மையிற்

பா - ம்—[1] செம்மலர்ப். [2] ரட்டிவந். [3] கொண்டிரைத்து வந்தெதிர்கொளுந் தடஞ்சுழிக். [4] வணங்கி. [5] மெய்யொளி. [6] சிறந்திட.

கனிகூர்வ, போல சைந்திரு புடையிடைந் தாடின புறம்பணை நறும்பூகம்[1] 151

பவந்த விர்ப்பவர் தில்லைசூழ் எல்லையில் மறையவர் பயில்[2] வேள்விச், சிவந்த ரும்பய னுடையஆ குதிகளின் செழும்புகைப்[3] பரப்பாலே, தவந்த ழைப்பவந் தருளிய பிள்ளையார் தாமணை வுறமுன்னே, சிவந்த நீலநுண் துகில்விதா னித்தது போன்றது நெடுவானம். 152

கரும்பு செந்நெல்பைங் கமுகொடு கலந்துயர் கழனியம் பணைநீங்கி, அரும்பு மென்மலர் தளிர்பல மூலமென் றனைத்தின்ஆ கரமான, மருங்கில் நந்தன வனம்பணிந் தணைந்தனர் மாடமா ளிகையோங்கி, நெருங்கு தில்லைசூழ் நெடுமதில் தென்திரு வாயில்நே ரணித்தாக. 153

''பொங்கு கொங்கையிற் கறந்தமெய்ஞ் ஞானமாம் போனகம் பொற்குன்ற, மங்கை செங்கையால் ஊட்டஉண் டருளிய மதலையார் வந்தார்''என்(று), அங்கண் வாழ்பெருந் திருத்தில்லை[4] அந்தணர் அன்பர்க ளுடன்ஈண்டி, எங்கும் மங்கல அணிமிக அலங்கரித் தெதிர்கொள அணைவார்கள். 154

வேத நாதமும் மங்கல முழக்கமும் விசும்பிடை நிறைந்தோங்கச், சீத வாசநீர் நிறைகுடந் தீபங்கள் திசைஎலாம் நிறைந்தாரச், சோதி மாமணி வாயிலின் புறஞ்சென்று சோபன ஆக்கமுஞ் சொல்லிக், கோதி லாதவர் ஞானசம் பந்தரை எதிர்கொண்டு கொடுபுக்கார். 155

செல்வம் மல்கிய தில்லைமூ தூரினில் தென்றிசைத் திருவாயில், எல்லை நீங்கியுள் புகுந்திரு மருங்குநின் றெடுக்கும்ஏத் தொலிசூழ, மல்லல் ஆவண மறுகிடைக் கழிந்துபோய் மறையவர் நிறைவாழ்க்கைத், தொல்லை மாளிகை நிரைத்திரு வீதியைத் தொழுதணைந் தனர்தூயோர். 156

---

பா - ம்—[1] நெடும்பூகம். [2] எல்லையிற் பயில்மறையவர். [3] செய்புகைப், [4] பெருந் தில்லைவாழ்.

மலர்ந்த பேரொளி குளிர்தரச் சிவமணங் கமழ்ந்துவான் துகள்மாறிச், சிலம்ப லம்புசே வடியவர்[1] பயில்வுறுஞ் செம்மையால் திருத்தொண்டு, கலந்த அன்பர்தஞ் சிந்தையில் திகழ் திரு வீதிகண் களிசெய்யப், பலன்கொள்[2] மைந்தனுர் எழுநிலைக் கோபுரம் பணிந்தெழுந் தனர்போற்றி. 157

நீடு நீள்நிலைக் கோபுரத் துள்புக்கு நிலவிய திருமுன்றின், மாடு செம்பொனின் மாளிகை வலங்கொண்டு[3] வானுற வளர் திங்கள், சூடு கின்றபே ரம்பலந் தொழுதுபோந் தருமறை தொடர்ந்தேத்த, ஆடு கின்றவர் முன்புற அணைந்தனர் அணி கிளர் மணிவாயில். 158

நந்தி எம்பிரான் முதற்கண நாதர்கள் நலங்கொள்பன் முறைகூட, அந்த மில்லவர் அணுகிமுன் தொழுதிரு அணுக்கனுந் திருவாயில், சிந்தை ஆர்வமும் பெருகிடச் சென்னியிற் சிறியசெங்[4] கையேற, உய்ந்து வாழ்திரு நயனங்கள் களிகொள்ள உருகுமன் பொடுபுக்கார். 159

அண்ண லாதமக் களித்தமெய்ஞ் ஞானமே யானஅம் பல முந்தம், உண்ணி றைந்தஞா னத்தெழும் ஆனந்த ஒருபெருந் தனிக்கூத்தும்,[5] கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங் களிப்பொடுங் கடற்காழிப், புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார் புனிதரா டியபொற்பு. 160

"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உருவின்கண், அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை" எனப்போற்றி, இணையில் வண்பெருங் கருணையே ஏத்தி முன் எடுத்தசொற் பதிகத்தில், புணரும் இன்னிசை பாடினர்; ஆடினர்; பொழிந்தனர், விழிமாரி. 161

ஊழி முதல்வர்க் குரிமைத் தொழில்சிறப்பால்
வாழி திருத் தில்லைவாழ் அந்தணரை முன்வைத்தே

---

பா - ம்—[1] லம்புமென்சேவடி. [2] புலன்கொள். [3] வலங்கொண்டார். [4] சிறுச்செய்ய. [5] திருக்கூத்தும்.

ஏழிசையும் ஓங்க எடுத்தார் எமையாளும்
காழியர்தங் காவலனார் "கற்றாங் கெரியோம்பி". 162

பண்ணார் பதிகத் திருக்கடைக்காப் புப்பரவி
உண்ணாடும் என்பும் உயிருங் கரைந்துருக்கும்
விண்ணா யகன்கூத்து வெட்ட[1]வெளி யேதிளைத்துக்
கண்ணா ரமுதுண்டார் காலம் பெறஅழுதார். 163

முன்மால் அயன்அறியா மூர்த்தியார் முன்னின்று
சொன்மாலை யாற்காலம் எல்லாந் துதித்திறைஞ்சிப்
பன்மா மறைவெள்ளஞ் சூழ்ந்து பரவுகின்ற
பொன்மா ளிகையைவலங் கொண்டு புறம்போந்தார். 164

செல்வத் திருமுன்றில் தாழ்ந்தெழுந்து தேவர்குழாம்
மல்குந் திருவாயில் வந்திறைஞ்சி மாதவங்கள்
நல்குந் திருவீதி நான்குந் தொழுதங்கண்
அல்குந் திறம்அஞ்சு வார்சண்பை ஆண்டகையார். 165

செய்ய சடையார் திருவேட் களஞ்சென்று
கைதொழுது சொற்பதிகம் பாடிக் கழுமலக்கோன்
வைகி அருளுமிடம் அங்காக மன்றாடும்
ஐயன் திருக்கூத்துக் கும்பிட் டணைவுறுநாள். 166

கைம்மான் மறியார் கழிப்பாலை யுள்ளணைந்து
மெய்ம்மாலைச் சொற்பதிகம் பாடி விரைக்கொன்றைச்
செம்மாலை வேணித் திருவுச்சி மேவியுறை
அம்மானைக் கும்பிட் டருந்தமிழும் பாடினார். 167

பாடும் பதிகஇசை யாழ்ப்பாண ரும்பயிற்றி
நாடுஞ் சிறப்பெய்த நாளுநடம் போற்றுவார்
நீடுந் திருத்தில்லை அந்தணர்கள் நீள்மன்றுள்
ஆடுங் கழற்கணுக்க ராம்பே றதிசயிப்பார். 168

ஆங்கவர்தஞ் சீலத் தளவின் மையுநினைந்தே
ஓங்கி எழுங்காதல் ஒழியாத[2] உள்ளத்தார்

---

பா - ம்—[1] வெள்ள. [2] ஓவாத.

தேங்கமழுஞ் சோலைத் திருவேட் களங்கடந்து
பூங்கிடங்கு சூழ்புலியூர்ப் புக்கணையும் போழ்தின்கண். 169

அண்டத் திறைவர் அருளால் அணிதில்லை
முண்டத் திருநீற்று மூவா யிரவர்களும்
தொண்டத் தகைமைக் கணநாத ராய்த்தோன்றக்
கண்டப் பரிசுபெறும் பாணர்க்குங் காட்டினார். 170

செல்வம் பிறிவறியாத் தில்லைவாழ் அந்தணரும்
எல்லையில்சீர்ச் சனமை இளவே றெழுந்தருளி
ஒல்லை இறைஞ்சாமுன் தாமும் உடன்இறைஞ்சி
மல்லல் அணிவிதி மருங்கணைய வந்தார்கள். 171

பொங்கி எழுங்காதல் புலனுகைப் பூசுரர்தஞ்
சிங்கம் அனையார் திருமுடியின் மேற்குவித்த[1]
பங்கயத்தின் செவ்வி பழித்து வனப்போங்கும்
செங்கை யொடுஞ்சென்று திருவாயி லுட்புக்கார். 172

ஒன்றிய சிந்தை உருக உயர்மேருக்
குன்றனைய பேரம் பலமருங்கு கும்பிட்டு
மன்றுள் நிறைந்தாடும் மாணிக்கக் கூத்தர்எதிர்
சென்றணைந்து தாழ்ந்தார் திருக்களிற் றுப்படிக்கீழ். 173

"ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர்" என்றெடுத் தார்வத்தால், பாடி னார்பின்னும் அப்பதி கத்தினிற் பரவிய பாட்டொன்றில், நீடு வாழ்தில்லை நான்மறை யோர்தமைக் கண்டஅந் நிலைஎல்லாம், கூறு மாறுகோத்(து) "அவர்தொழு தேத்துசிற் றம்பலம்" எனக்கூறி. 174

இன்ன தன்மையில் இன்னிசைப் பதிகமுந் திருக்கடைக் காப்பேத்தி,[2] மன்னும் ஆனந்த வெள்ளத்தில் திளைத்தெதிர் வந்து முன் நின்றுடும், பின்னு[3]வார்சடைக் கூத்தர்பே ரருள்பெறப் பிரியாத விடைபெற்றுப், பொன்னின் அம்பலஞ் சூழ்ந்துதாழ்ந் தெழுந்துபோந் தணைந்தனர் புறமுன்றில். 175

---

பா - ம்—[1] மேற்குவித்துப். [2] காப்பேற்றி. [3] மின்னு.

அப்பு றத்திடை வணங்கிஅங் கருளுடன் அணிமணித் திரு வாயில், பொற்பு றத்தொழு தெழுந்துடன் போதரப் போற்றிய புகழ்ப்பாணர், நற்ப தந்தொழு(து) "அடியனேன் பதிமுதல் நதிநிவாக் கரைமேய, ஒப்பில் தானங்கள் பணிந்திடவேண்டும்" என்றுரைசெய அதுநேர்வார். 176

பொங்கு தெண்டிரைப் புனிதநீர் நிவாக்கரைக் குடதிசை மிசைப்போந்து, தங்கு தந்தையா ருடன்பரி சனங்களுந் தவ முனி வருஞ்செல்லச், செங்கை யாழ்த்திரு நீலகண் டப்பெரும் பாணனு ருடன்சேர, மங்கை யார்புகழ் மதங்கசூ ளாமணி யாருடன் வரவந்தார். 177

இருந்த டங்களும் பழனமும் கடந்துபோய் எருக்கத்தம் புலியூரின், மருங்கு சென்றுற நீலகண் டப்பெரும் பாணனார் வணங்கிக்"கார், நெருங்கு சோலைசூழ் இப்பதி அடியனேன் பதி" என நெடிதின்புற்(று), அருங்க லைச்சிறு மழஇளங் களிறனார் அங்கணேந் தருள்செய்வார். 178

ஐயர் நீர்அவ தரித்திட இப்பதி அளவில்மா தவம்முன்பு செய்த வா"றெனச் சிறப்புரைத் தருளிஅச் செழும்பதி இடங் கொண்ட, மைகொள் கண்டர்தங் கோயிலி னுட்புக்கு வலங் கொண்டு வணங்கிப்பார், உய்ய வந்தவர் செழுந்தமிழ்ப் பதிகம் அங் கிசையுடன் உரைசெய்தார். 179

அங்கு நின்றெழுந் தருளிமற் றவருடன் அம்பொன்மா மலை வல்லி, பங்கர் தாம்இனி துறையுநற் பதிபல பரிவொடும் பணிந் தேத்தித், துங்க வண்டமிழ்த் தொடைமலர் பாடிப்போய்த் தொல்லைவெங் குருவேந்தர், செங்க ணேற்றவர் திருமுது குன் றினைத் தொழுதுசென் றணைகின்றார்.[1] 180

"மொய்கொள் மாமணி கொழித்துமுத் தாறுசூழ் முது குன்றை அடைவோம்"என், றெய்து சொன்மலர் மாலைவண் பதிகத்தை இசையொடும் புனைந்தேத்திச், செய்த வத்திரு முனி

பா - ம்—[1] குன்றினைச் சென்றெதி ரணைகின்றார்.

வரும் தேவரும் திசையெலாம் நெருங்கப்புக்(கு), ஐயர் சேவடி பணியும்அப் பொருப்பினில் ஆதர வுடன்சென்றார். 181

வான நாயகர் திருமுது குன்றினை வழிபட வலங்கொள்வார், தூந றுந்தமிழ்ச் சொல்விருக் குக்குறட் டுணைமலர் மொழிந் தேத்தி, ஞான போனகர் நம்பர்தங் கோயிலை நண்ணிஅங் குள் புக்குத், தேன லம்புதண் கொன்றையார் சேவடி திளைத்தஅன் பொடு[1] தாழ்ந்தார். 182

தாழ்ந்தெ ழுந்துமுன் "முரசதிர்ந் தெழும்"எனுந் தண்ட மிழ்த் தொடைசாத்தி, வாழ்ந்து போந்தங்கண் வளம்பதி அத னிடை வைகுவார் மணிவெற்புச், சூழ்ந்த தண்புனல் சுலவுமுத் தாற்றொடு தொடுத்தசொல் தொடைமாலை, வீழ்ந்த காதலாற் பலமுறை விளம்பியே மேவினார் சிலநாள்கள். 183

ஆங்கு நாதரைப் பணிந்துபெண் ணாகடம் அணைந்தரு மறை யோசை, ஓங்கு தூங்கானை மாடத்துள் அமர்கின்ற ஒருதனிப் பரஞ்சோதிப், பாங்க ணைந்துமுன் வலங்கொண்டு பணிவுற்றுப் பரவுசொல் தமிழ்மாலை, "தீங்கு நீங்குவீர் தொழுமின்கள்" எனும்இசைப் பதிகமுந் தெரிவித்தார்.[2] 184

கருவ ரைப்பிற் புகாதவர் கைதொழும்
ஒருவ ரைத்தொழு துள்ளம் உவந்துபோய்ப்
பெருவ ரத்தினிற் பெற்றவர் தம்முடன்
திருவ ரத்துறை சேர்துமென் றேகுவார்.[3] 185

முந்தை நாள்கள் ஒரோவொரு கால்முது
தந்தை யார்பியல் மேலிருப் பார்தவிர்ந்(து)
அந்த ணாளர் அவரரு கே[4]செலச்
சிந்தை செய்விருப் போடுமுன் சென்றனர். 186

ஆதி யார்தம் அரத்துறை நோக்கியே
காத லால்அணை வார்கடி தேகிடத்

---

பா - ம்—[1] இன்பொடு. [2] இசைச் செய்யவாய் மலர்வித்தார். [3] சேருமென்றேகினார்; சேறுமென்றேகினார். [4] அவர்க்கருகே.

தாதை யாரும் பரிவுறச் சம்பந்தர்
பாத தாமரை நொந்தன[1] பைப்பய. 187

மறைய னைத்தும் ஒருவடி வாமென
நிறைம திப்பிள்ளை நீள்நிலஞ் சேர்ந்தெனத்
துறைஅ லைக்கங்கை சூடும் அரத்துறை
இறைவ ரைத்தொழு வான்விரைந் தேகினார். 188

பாச மற்றில ராயினும் பார்மிசை
ஆசை சங்கரற் காயின தன்மையால்
தேசு மிக்க திருவுரு வானவர்
ஈச னைத்தொழு தேதொழு தேகினார். 189

இந்த மாநிலத் தின்இருள் நீங்கிட
வந்த வைதிக மாமணி யானவர்
சிந்தை ஆரமு தாகிய செஞ்சடைத்
தந்தை யார்கழல் தாழ்ந்தெழுந்[2] தேகினார். 190

மாறன் பாடி எனும்பதி வந்துற
ஆறு செல்வருத் தத்தின் அசைவினால்
வேறு செல்பவர் வெய்துறப் பிள்ளையார்
ஏறும் அஞ்செழுத் தோதிஅங் கெய்திட. 191

உய்ய வந்தசம் பந்த ருடன்வந்தார்க்(கு)
எய்து வெம்மை இளைப்பஞ்சி னன்போலக்
கைகள் ஆயிரம் வாங்கிக் கரந்துபோய்
வெய்ய வன்சென்று மேல்கடல் வீழ்ந்தனன். 192

அற்றை நாள்இர வப்பதி யின்னிடைச்
சுற்று நீடிய தொண்டர்கள் போற்றிடப்
பெற்றம் ஊர்ந்த பிரான்கழல் பேணுவார்
வெற்றி மாதவத் தோருடன் மேவினார். 193

இந்நி லைக்கண் எழில்வளர் பூந்தராய்
மன்ன னார்தம் வழிவருத் தத்தினை

---

பா - ம்—[1] நொந்தது. [2] தாழ்ந்தொழு.

அன்ன மாடுந் துறைநீர் அரத்துறைச்
சென்னி யாற்றர் திருவுளஞ் செய்தனர். 194

ஏறு தற்குச் சிவிகை; இடக்குடை;
கூறி ஊதக் குலவுபொற் சின்னங்கள்;
மாறில் முத்தின் படியினால் மன்னிய
நீறு வந்த விமலர் அருளுவார். 195

நீடு வாழ்பதி யாகும்நெல் வாயிலின்
மாட மாமனை தோறும் மறையோர்க்குக்
கூடு கங்குல் கனவில் குலமறை
தேடு சேவடி தோன்றமுன் சென்றுபின். 196

"ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான்;
மான முத்தின் சிவிகை மணிக்குடை
யான சின்னம்நம் பாற்கொண் டருங்கலைக்
கோன வன்பால் அணைந்து கொடும்"என. 197

அந்த ணாளர் உரைத்த[1]அப் போழ்தினில்
வந்து கூடி மகிழ்ந்தற் புதமுறுஞ்
சிந்தை யோடுஞ் செழுநீர் அரத்துறை
இந்து சேகரர் கோயில்வந் தெய்தினர். 198

ஆங்கு மற்ற அருள்அடி யாருடன்
ஓங்கு கோயி லுள் ளார்க்குமுண் டாயிட
"ஈங்கி தென்ன அதிசயம்?" என்பவர்
தாங்கள் அம்மறை யோர்கள்முன்[2] சாற்றினார். 199

சால மிக்க வியப்புறு தன்மையின்
பால ராதலும்[3] பள்ளி எழுச்சியின்
காலம் எய்திடக் காதல் வழிப்படும்[4]
சீல மிக்கார் திருக்காப்பு நீக்கினார். 200

திங்கள் நீர்மைச் செழுந்திரள் முத்தினால்
துங்க வெண்குடை தூய சிவிகையும்

---

பா - ம்—[1] அந்தணாளர்க் குரைத்த. [2] அம்மறை யோர்க்குமுன். [3] பால ராயினும். [4] வெளிப்படும்.

பொங்க ஊதும் பொருவருஞ் சின்னமும்
அங்கண் நாதர் அருளினாற் கண்டனர். 201

கண்ட பின்அவர் கைதலை மேற்குவித்(து)
"எண்டிசைக்கும் விளக்கிவை யாம்" எனத்
தொண்ட ரோடும் மறையவர் சூழ்ந்தெழுந்(து)
அண்டர் நாடும் அறிவுற ஆர்த்தனர். 202

சங்கு துந்துபி தாரைபே ரிம்முதல்
பொங்கு பல்லிய நாதம் பொலிந்தெழ
அங்க ணன்அரு ளால்அவை கொண்டுடன்
பொங்கு காதல் எதிர்கொளப் போதுவார். 203

மாசில் வாய்மைநெல் வாயின் மறையவர்
ஆசில் சீர்ச்சண்பை ஆண்டகை யார்க்கெதிர்
தேசு டைச்சிவி கைமுத லாயின
ஈசர் இன்னரு ளால்தாங்கி ஏகினார். 204

இத்த லைஇவர்[1] இன்னணம் ஏகினார்;
அத்த லைச்சண்பை நாதர்க்கும் அவ்விரா
முத்த நற்சிவி கைமுத லாயின
உய்த்த ளிக்கும் படிமுன் உணர்த்துவார். 205

அள்ளல் நீர்வயல் சூழும் அரத்துறை
வள்ள லார்"நாம் மகிழ்ந்தளிக் கும்அவை
கொள்ள லாகுங்கொண் டுய்த்தல்செய் வாய்" என
உள்ள வாறருள் செய்ய உணர்ந்தபின். 206

சண்பை யாளியார் தாங்கண்ட மெய்யருட்[2]
பண்பு தந்தையார் தம்முடன் பாங்கமர்
தொண்ட ருக்கருள் செய்து தொழாமுனம்[3]
விண்பு லப்பட வீங்கிருள் நீங்கலும். 207

மாலை யாமம் புலர்வுறும் வைகறை
வேலை செய்வினை முற்றிவெண் ணீறணி

பா - ம்—[1] இத்தலையவர். [2] பேரருள்; மெய்ப்பொருள். [3] தொழுமுனம்.

கோல மேனிய ராய்க்கைம் மலர்குவித்(து)
ஏல அஞ்செழுத் தோதி எழுந்தனர். 208

போத ஞானப் புகலிப் புனிதரைச்
சீத முத்தின் சிவிகைமேல் ஏற்றிடக்
காதல் செய்பவன் போலக் கருங்கடல்
மீது தேரின்வந் தெய்தினன் வெய்யவன். 209

ஆய போழ்தின் அரவெனும் ஆர்ப்புடன்
தூய முத்தின் சிவிகை சுடர்க்குடை
மேய சின்னங்கள் கொண்டுமெய் யன்பரோ(டு)
ஏய அந்தணர் தாமெதிர் தோன்றினர். 210

வந்து தோன்றிய அந்தணர் மாதவர்
கந்த வார்பொழில் காழிநன் னுடர்முன்
"அந்த மில்சீர் அரத்துறை ஆதியார்
தந்த பேரருள் தாங்குவீர்" என்றனர். 211

என்று தங்களுக் கீசர் அருள்செய்த(து)
ஒன்றும் அங்கொழி யாமை உரைத்துமுன்
நின்று போற்றித் தொழுதிட [1] "நேர்ந்தது
மன்று ளார்அருள்" என்று வணங்கினர். 212

மெய்ம்மை போற்றி விடாத விருப்பினுல்
தம்மை உன்னும் பரிசுதந் தாள்பவர்
செம்மை நித்தில யானச் சிறப்பருள்
எம்மை யாளுவப் பானின் றளித்ததே. 213

"எந்தை ஈசன்" எனஎடுத்(து) "இவ்வருள் [2]
வந்த வாறுமற் றெவ்வண மோ? [3]" என்று
சிந்தை செய்யுந் திருப்பதி கத்திசை
புந்தி யாரப் புகன்றெதிர் போற்றுவார். 214

"பொடிஅ ணிந்த புராணன் [4] அரத்துறை
அடிகள் தம்மரு ளேஇது வாம்" எனப்

பா - ம்— [1] தொழுதுடன். [2] என்றெடுத் தின்னருள். [3] மற்றிவ் வணமோ. [4] புராணர்.

படியி லாதசொன் மாலைகள் பாடியே
நெடிது போற்றிப் பதிகம் நிரப்பினார். 215

சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார்
மீது தாழ்ந்துவெண் ணீற்றொளி போற்றிநின்(று)
ஆதி யார்அரு ளாதலின் அஞ்செழுத்
தோதி ஏறினார் உய்ய உலகெலாம்.* 216

தொண்டர் ஆர்த்தனர்; சுருதிகள் ஆர்த்தன; தொல்லை
அண்டர் ஆர்த்தனர், அகிலமும் ஆர்ப்புடன் எய்தக்
கொண்டல் ஆர்த்தன; முழவமும் ஆர்த்தன; குழுமி
வண்ட ருப்பொலி மலர்மழை ஆர்த்தது வானம். 217

வளையும் ஆர்த்தன; வயிர்களும் ஆர்த்தன; மறையின்
கிளையும் ஆர்த்தன, கிளைஞரும் ஆர்த்தனர்; கெழுவும்
களைகண் ஆர்த்ததொர்[1] கருணையின் ஆர்த்தன; முத்து[2]
விளையு மாக்கதிர் வெண்குடை ஆர்த்தது மிசையே. 218

பல்கு வெண்கதிர்ப் பத்திசேர் நித்திலச் சிவிகைப்
புல்கு நீற்றொளி யுடன்பொலி புகலிகா வலனார்
அல்கு வெள்வளை அலைத்தெழு மணிநிரைத் தரங்கம்
மல்கு பாற்கடல வளாமதி உதித்தென வந்தார். 219

நீடு தொண்டர்கள் மறையவர் ஏனையோர் நெருங்கி
மாடு கொண்டெழு மகிழ்ச்சியின் மலர்க்கைமேல் குவித்தே
ஆடு கின்றனர் அயர்ந்தனர்; அளவில்ஆ னந்தம்
கூடு கின்றகண் பொழிபுனல் வெள்ளததில் குளித்தார். 220

செய்ய பொன்புனை வெண்டர ளத்தணி சிறக்கச்
சைவ மாமறைத் தலைவர்பால் பெறுந்தனிக் காளம்
வையம் ஏழுடன் மறைகளும் நிறைதவத் தோரும்
"உய்ய ஞானசம் பந்தன்வந் தான்" என ஊத. 221

சுற்று மாமறைச் சுருதியின் பெருகொலி நடுவே
செற்றி னார்புரம் எரித்தவர் தருதிருச் சின்னம்

பா - ம்—* இச்செய்யுள் இடைப்பகுதி. [1] ஆர்ந்ததோர். [2] கருவணை யினாற் கவின் முத்தும்; கருவணயினார் கவின் முத்தின்.

"முற்றும் ஆனவள் ஞானமே முலைசுரந் தூட்டப்
பெற்ற பாலரு வாயன்வந் தான்" எனப் பிடிக்க. 222

புணர்ந்த மெய்த்தவக் குழாத்தொடும் போதுவார் முன்னே
இணைந்த நித்திலத் திலங்கொளி நலங்கிளர் தாரை
"அணைந்த மாமறை முதற்கலை அகிலமும் ஓதா
துணர்ந்த முத்தமிழ் விரகன்வந் தான்" என ஊத. 223

தெருளு மெய்க்கலை விளங்கவும் பாருளோர் சிந்தை
இருளும் நீங்கவும் எழுதுசொன் மறைஅளிப் பவர்தாம்
பொருளும் ஞானமும் போகமும் "போற்றி"என் பாருக்(கு)[1]
அருளும் அங்கணர் திருஅரத் துறையைவந் தணைந்தார். 224

வந்து கோபுர மணிநெடு வாயில்சேய்த் தாகச்
சந்த நித்திலச் சிவிகையின் றிழிந்துதாழ்ந் தெழுந்து
சிந்தை ஆர்வமும் மகிழ்ச்சியும் பொங்கிமுன் செல்ல
அந்தி நாண்மதி அணிந்தவர் கோயிலுள் அடைந்தார். 225

மன்னு கோயிலை வலங்கொண்டு திருமுன்பு வந்து
சென்னி யிற்கரங் குவித்துவீழ்ந் தன்பொடு திளைப்பார்
"என்னை யும்பொரு ளாகஇன் னருள்புரிந் தருளும்
பொன்ன டித்தலத் தாமரை போற்றி"என் றெழுந்தார். 226

சூடி னார்கர கமலங்கள், சொரிந்திழி கண்ணீர்
ஆடி னார்திரு மேனியில், அரத்துறை விரும்பி
நீடி னார்திரு அருட்பெருங் கருணையே நிகழப்
பாடி னார்திருப் பதிகம்ஏ ழிசையொடும் பயில. 227

இசைவி ளங்கிட இயல்பினிற் பாடிநின் றேத்தி
மிசைவி ளங்குநீர் வேணியார் அருளினால் மீண்டு
திசைவி ளங்கிடத் திருவருள் பெற்றவர் சிலநாள்
அசைவில சீர்த்தொண்டர் தம்முடன் அப்பதி அமர்ந்தார். 228

தேவர் தம்பிரான் திருஅரத் துறையினில் இறைஞ்சி
மேவு நாட்களில் விமலனார் நெல்வெண்ணெய் முதலாத்

---

பா - ம்—[1] போற்றிசெ யன்பருக்கு.

காவில் அன்பர்கள் தம்முடன் தொழுதுபின் சண்பைக்
காவ லார்அருள் பெற்றுடன் கலந்துமீண் டணைந்தார். 229

விளங்கு வேணுபு ரத்திருத் தோணிவீற் றிருந்த
களங்கொள் கண்டர்தங் காதலி யாருடன் கூட
உளங்கொ ளப்புகுந் துணர்வினில் வெளிப்பட உருகி
வளங்கொள் பூம்புனற் புகலிமேற் செலமனம் வைத்தார். 230

அன்ன வார்திரு அரத்துறை அடிகளை வணங்கி
நன்று பேரரு ளால்விடை கொண்டுபோய் நடங்கொண்(டு)
உன்னனி றைந்தபூங் கழலினை உச்சிமேற் கொண்டே
வெள்ளனி லாமலர் நித்திலச் சிவிகைமேற் கொண்டார். 231

சிவிகை முத்தினிற் பெருகொளி திசைஎலாம் விளக்கக்[1]
கவிகை வெண்மதிக் குளிரொளி கதிர்செய்வான் கலப்பக்
குவிகை மேற்கொண்டு மறையவர் குணலையிட் டாடப்
புவிகைம் மாறின்றிப் போற்றவந் தருளினார் போந்தார். 232

மறைமு ழங்கின; தழங்கின வண்டமிழ்; வயிரின்
குறைந ரன்றன; முரன்றன வளைக்குலம், காளம்[2]
முறைஇ யம்பின; இயம்பல ஒலித்தன; முரசப்
பொறை[3] கறங்கின; பிறங்கின போற்றிசை[4] அரவம். 233

உடைய பிள்ளையார் வருமெல்லை உள்ளஅப் பதியோர்
புடைநி ரம்பினுங் கொடியொடு பூந்துகில் விதானம்
நடைசெய் காவணந் தோரணம் பூகநற் கதலி
மிடையு மாலைகள் நிறைகுடம் விளக்கொடு நிரைத்தார். 234

அனைய செய்கையால எதிர்கொளும் பதிகளா னவற்றின்
வினைத ரும்பவந் தீர்ப்பவர் கோயில்கள் மேவிப்
புனையும் வண்டமிழ் மொழிந்தடி பணிந்துபோந் தணைந்தார்;
பனைநெ டுங்கைமா உரித்தவர் மகிழ்பெரும் பழுவூர். 235

அங்கணைந் திளம்பிறை அணிந்த சென்னியார்
பொங்கெழிற் கோபுரந் தொழுது புக்கபின்

பா - ம்—[1] விரிக்கக். [2] கானம். [3] பறை. [4] போற்றிசெய்.

துங்கநீள் விமானத்தைச் சூழ்ந்து வந்துமுன்
பங்கயச் சேவடி பணிந்து பாடுவார். 236

மண்ணினிற் பொலிகுல மலையர் தாந்தொழு(து)
எண்ணில்சீர்ப் பணிகள்செய் தேத்துந் தன்மையில்
நண்ணிய வகைசிறப் பித்து நாதரைப்
பண்ணினில் திகழ்திருப் பதிகம் பாடினார். 237

பாவின திசைவழி[1] பாடி அங்ககன்
றியாவருந் தொழுதுடன் ஏத்த எய்தினார்
மூவுல குய்யநஞ் சுன்ட மூர்த்தியார்
மேவிய பெருந்திரு விசய மங்கையில். 238

அந்தணர் விசயமங் கையினில் அங்கணர்
தந்தனி ஆலயஞ் சூழ்ந்து தாழ்ந்துமுன்
வந்தனை செய்துகோ தனத்தை மன்னிய
செந்தமிழ் மாலையிற் சிறப்பித் தேத்தினார். 239

விசயமங் கையினிடம் அகன்று மெய்யர்தாள்[2]
அசைவில்வை காவினில் அணைந்து பாடிப்போந்(து)
இசைவளர் ஞானசம் பந்தர் எய்தினார்
திசையுடை ஆடையர் திருப்பு றம்பயம். 240

புறம்பயத் திறைவரை வணங்கிப் போற்றிசெய்
திறம்புரி நீர்மையிற் பதிகச் செந்தமிழ்
நிறம்பயில் இசையுடன் பாடி நீடிய
அறந்தரு கொள்கையார் அமர்ந்து மேவினார். 241

அத்திருப் பதிபணிந் தகன்று போய்அனல்
கைத்தலத் தவர்பதி பிறவுங் கைதொழு
முத்தமிழ் விரகராம் முதல்வர் நண்ணினார்
செய்த்தலைப் பணிலமுத்(து) ஈனுஞ் சேய்ஞலூர். 242

திருமலி புகலிமன் சேரச் சேய்ஞலூர்
அருமறை யவர்பதி அலங்க ரித்துமுன்

---

பா - ம்—[1] மிசைவழி. [2] மெய்யர்தான்.

பெருமறை யொலிமுழ வொலிபி றங்கவே
வருமுறை எதிர்கொள வந்து முந்தினார். 243

ஞானசம் பந்தரும் "நாய னார்சடைத்
தூநறுந் தொடையல்முன் சூட்டும் பிள்ளையார்
பான்மையில் வரும்பதி" என்று நீத்தில
யானமுன் இழிந்தெதிர் இறைஞ்சி எய்தினார். 244

மாமறை யாளர்வண் புகலிப் பிள்ளையார்
தாமெழுந் தருளிடத் தங்கள் பிள்ளையார்
காமரும் பதியில்வந் தருளக் கண்டனர்
ஆமகிழ் வுடன்பணிந் தாடி ஆர்த்தனர். 245

களித்தனர் புண்ணியக் கரக வாசநீர்
தெளித்தனர், பொரிகளும் மலருஞ் சிந்தினர்,
துளித்தனர் கண்மழை, சுருதி ஆயிரம்
அளித்தவர் கோயிலுள் அவர்முன் பெய்தினர் 246

வெங்குரு வேந்தரும் விளங்கு கோயிலைப்
பொங்கிய விருப்பினாற் புடைவ லங்கொடு
செங்கைகள் சென்னிமேற் குவித்துச் சென்றுபுக் (கு)
அங்கணர் முன்புற அணைந்து தாழ்ந்தனர். 247

வேதியர் சேய்ஞலூர் விமலர் தங்கழல்
காதலிற் பணிந்தவர் கருணை போற்றுவார்
தாதைதாள் தடிந்தசண் டேசப் பிள்ளையார்
பாதகப் பயன்பெறும்[1] பரிசு பாடினார். 248

இன்னிசை வண்டமிழ் பாடி ஏத்தியே[2]
நன்னெடும் பதியுளோர் நயக்க வைகிய
பின்னர்வெண் பிறையணி வேணிப் பிஞ்ஞகர்
மன்னிய திருப்பனந் தாள்வ ணங்கினார். 249

ஆங்கணி சொன்மலர் மாலை சாத்திஅப்
பாங்குபந் தணநலூர் பணிந்து பாடிப்போய்த்

பா - ம்—[1] பாதபங்கயம் பெறும். [2] ஏத்தியநா; ஏத்தியும்.

*தீங்குதிர் மாமறைச் செம்மை அந்தணர்*
*ஓங்குமிழ மாம்புலி யூர்வந் துற்றனர்.* 250

*மற்றநற் பதிவட தளியின் மேவிய*
*அற்புதர் அடி பணிந் தலர்ந்த செந்தமிழ்ச்*
*சொற்றொடை பாடிஅங் ககன்று சூழ்மதில்*
*பொற்பதி வாழ்கொளி புத்தூர் புக்கனர்.* 251

*சீர்வளர் கோயிலை அணைந்து தேமலர்க்*
*கார்வளர் கண்டர் தாள் பணிந்து காண்பவர்*
*பார்புகழ் பதிகங்கள் பாடி நீடுவார்*
*வார்பொழிற்[1] கடம்பையும் வணங்கி வாழ்ந்தனர்.[2]* 252

*நம்பரை நலந்திகழ் நாரை யூரினிற்*
*கும்பிடும் விருப்பொடு குறுகிக் கூடிய*
*வம்பலர் செந்தமிழ் மாலை பாடிநின் (று)*
*எம்பிரான் கவுணியர் தலைவர் ஏத்தினார்.* 253

*அப்பதி பணிந்தருந் தமிழ்பு னைந்துதம்[3]*
*மெய்ப்படு விருப்பொடு மேவு நாள்அரன்[4]*
*பொற்பதி பலவும்முன் பணிந்து போந்தனர்*
*பைப்பணி யவர்கருப் பறிய லூரினில்.* 254

*பரமர்தந் திருக்கருப் பறிய லூரினைச்[5]*
*சிரபுரச் சிறுவர்கை தொழுது செந்தமிழ்*
*உரைஇசை பாடிஅம் மருங்கின் உள்ளவாம்*
*சுரர்தொழும் பதிகளும் தொழுது பாடினார்.* 255

*மண்ணுலகு செய்ததவப் பயனா யுள்ள வள்ளலார் அப்பதிகள் வணங்கி ஏகி, எண்ணில்முர சிரங்கிஎழப் பணிலம் ஆர்ப்ப இலங்கியகா ளஞ்சின்னம் எங்கும் ஊதக், கண்வளர்மென் கரும்புமிடை கதிர்ச்செஞ் சாலி கதலிகமு குடனோங்கும் கழனி நாட்டுத், தெண்ணிலவு சூடியதம் பெருமான் வைகும் திருப்பிரம புரஞ்சாரச் செல்லும் போது.* 256

**பா - ம்—**[1] **வார்புகழ்க்.** [2]**மீண்டனர்.** [3]**தமிழ்புனைந்தங்கு.** [4]**அமர்.** [5]**பரமர்தங்கழல் கருப்பறியலூரினில்.**

**22**

பிள்ளையார் எழுந்தருளக் கேட்ட செல்வப் பிரமபுரத் தருமறையோர் பெருகு காதல், உள்ளமகிழ் சிறந்தோங்கத் தோணி மேவும் உமைபாகர் கழல்வணங்கி உவகை கூர, வெள்ளமறை ஒலிபெருகு¹ மறுகு தோறும் மிடைமகர தோரணங்கள் கதலி பூகம், தெள்ளுபுனல் நிறைகுடங்கள் தீப தூபம் செழுங்கொடிகள் நிரைத்தெதிர்கொள் சிறப்பிற் செல்வார். 257

ஆரணங்கள் மதுரவொலி எழுந்து பொங்க அரசிலையுந் தருப்பையும்பெய் தகைந்த வாசப், பூரணகும் பங்கள்நிறை கரகம் ஏந்திப் புதுமலரும் நறுந்துகளும் பொரியுந் தூவி, வாரணங்கு முலையுமையாள் குழைத்த செம்பொன் வள்ளத்தில் அமுதுண்ட வள்ள லாரைச், சேரணங்கு மணிமுத்தின் சிவிகை மீது ச பூந்தராக் குடைநிழற்கீழ்ச் சென்று கண்டார். 258

கண்டபொழு தேகைகள் தலைமேற் கொண்டு கண்களிப்ப மனங்களிப்பக் காதல் பொங்கித், தொண்டர்களும் மறையவருஞ் சென்று சூழ்ந்து சொல்விறந்த மகிழ்ச்சியினால் துதித்த ஓசை, எண்டிசையும் நிறைவித்தார்; ஆடை வீசி இருவிசும்பின் வெளிதூர்த்தார், ஏறு சீர்த்தி, வண்டமிழ்நா யகரும்இழிந் தெதிரே சென்று வணங்கிஅவ ருடன்கூடி மகிழ்ந்து புக்கார். 259

திங்கள்அணி மணிமாடம் மிடைந்த வீதி சென்றணைந்து தெய்வமறைக் கற்பின் மாதர், மங்கலவாழ்த் திசைஇரண்டு மருங்கு மல்க வானவர்நா யகர்கோயில் மருங்கு சார்ந்து, துங்கநிலைக் கோபுரத்தை இறைஞ்சிப் புக்குச் சூழ்ந்துதிருத் தோணிமிசை மேவி னார்கள், தங்கள்திரு முன்புதாழ்ந் தெழுந்து நின்று தமிழ்வேதம் பாடினார் தாளம் பெற்றார். 260

பரவுதிருப் பதிகஇசை பாடி நீடும் பரன்கருணைத்² திருவருளின் பரிசு போற்றி, விரவுமலர்க் கண்பனிப்பக் கைகள் கூப்பி விழுந்தெழுந்து புறம்போந்து வேத வாய்மைச், சிரபுரத்துப் பிள்ளையார் செல்லும் போது திருநீல கண்டயாழ்ப் பாணர்

பா - ம்—¹ ஒலிபெருக. ² பரங்கருணைத்.

பின்னே, வரஅவரை வளம்பெருகு மனையிற் போக அருள் செய்து தந்திருமா ளிகையின் வந்தார். 261

மறையவர்கள் அடிபோற்றத் தந்தை யாரும் மருங்கணைய மாளிகையில் அணையும் போதில், நிறைகுடமும் மணிவிளக்கும் முதலா யுள்ள நிதிமறைக்[1] குலமகளிர் நெருங்கி ஏந்த, இறைவர் திரு நீற்றுக்காப் பேந்தி முன்சென் றின்றதா யார்சாத்தி இறைஞ்சி ஏத்த, முறைமையவர்க் கருள்செய்து மடத்திற் புக்கார் முதல்வர்பால் மணிமுத்தின் சிவிகை பெற்றார். 262

செல்வநெடு மாளிகையில் அமர்ந்து நாளும் திருத்தோணி மிசையாரைச் சென்று தாழ்ந்து, மல்குதிருப் பதிகங்கள் பலவும் பாடி மனமகிழ்ந்து போற்றிசைத்து வைகு நாளில், ஒல்லைமுறை[2] உபநயனப் பருவம் எய்த உலகிறந்த சிவஞானம் உணரப் பெற்றார், தொல்லைமறை விதிச்சடங்கு மறையோர் செய்யத் தோலொடுநூல் தாங்கினார் சுரர்கள் போற்ற. 263

ஒருபிறப்பும் எய்தாமை உடையார் தம்மை உலகியல்பின் உபநயன முறைமை யாகும், இருபிறப்பின் நிலைமையினைச் சடங்கு காட்டி எய்துவிசகும் மறைமுனிவர் எதிரே நின்று, "வருதிறத்தின் மறைநான்குந் தந்தோம்" என்று மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுர வாக்கால், பொருவிறப்ப ஓதினார் புகலி வந்த புண்ணியனார் எண்ணிறந்த புனித வேதம். 264

சுருதிஆ யிரம்ஓதி அங்க மான தொல்கலைகள் எடுத்தியம்பும் தோன்ற லாரைப், பரிதிஆ யிரகோடி விரிந்தால் என்னப் பரஞ்சோதி அருள்பெற்ற பான்மை மேன்மை, கருதிஆ தரவோடும் வியப்புற றேத்துங் கலைமறையோர் கவுணியனார் தம்மைக் கண்முன், வருதியா னப்பொருளென் றிறைஞ்சித் தாமுன் வல்லமறை கேட்டையந் தீர்ந்து வாழ்ந்தார். 265

மந்திரங்க ளானஎலாம் அருளிச் செய்து மற்றவற்றின் வைதிகநூற் சடங்கின் வந்த, சிந்தைமயக் குறும்ஐயந் தெளிய எல்லாம் செழுமறையோர்க் கருளிஅவர் தெருளும்[3] ஆற்றால்,

---

பா - ம்—[1] நீடுமறைக். [2] தொல்வலமுறை. [3] தெளியும்.

முந்தைமுதன் மந்திரங்கள் எல்லாந் தோன்றும் முதலாகும் முதல்வனார் எழுத்தஞ்(சு) என்பார், "அந்தியினுள் மந்திரம் அஞ்செழுத்துமே" என்றஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார். 266

அத்தகைமை பிள்ளையார் அருளிச் செய்ய அந்தணர்கள் அருள்தலைமேற் கொண்டு தாழ்ந்து, சித்தமகிழ் வொடுசிறப்பத் தாமுந் தெய்வத் திருத்தோணி அமர்ந்தாரைச் சென்று தாழ்ந்து, மெய்த்தஇசைப் பதிகங்கள் கொண்டு போற்றி விரைமலர்த் தாள் மனங்கொண்டு மீண்டு போந்து, பத்தருடன் இனிதமரும் பண்பு கூடப் பரமர்தாள் பணிந்தேத்திப் பயிலும் நாளில். 267

பந்தணை மெல்விர லாளும் பரமரும் பாய்விடை மீது
வந்துபொன் வள்ளத் தளித்த வரம்பில்ஞா னத்தமு துண்ட
செந்தமிழ் ஞானசம் பந்தர் திறங்கேட் டிறைஞ்சுதற் காக
அந்தணர் பூந்தராய் தன்னில் அணைந்தனர் நாவுக் கரையர். 268

"வாக்கின் பெருவிறல் மன்னர் வந்தணைந் தார்" எனக் கேட்டுப்
பூக்கமழ் வாசத் தடஞ்சூழ் புகலிப் பெருந்தகை யாரும்
"ஆக்கிய நல்வினைப் பே"றென் றன்பர் குழாத்தொடும் எய்தி
ஏற்கும் பெருவிருப் போடும் எதிர்கொள எய்தும் பொழுதில். 269

சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில் அசைவும்
கந்தம் மிகையாங்[1] கருத்தும் கைஉழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமி லாத்திரு வேடத் தரசும் எதிர்வந் தணைய. 270

கண்ட கவுணியக் கன்றும் "கருத்திற் பரவுமெய்க் காதல்
தொண்டர் திருவேடம் நேரே தோன்றிய" தென்று தொழுதே
அண்டரும் போற்ற அணைந்தங் கரசும் எதிர்வந் திறைஞ்ச
மண்டிய ஆர்வம் பெருக மதுர மொழிஅருள் செய்தார். 271

பேரிசை நாவுக் கரசைப் பிள்ளையார் கொண்டுடன் போந்து, போர்விடை யார்திருத் தோணிப் பொற்கோயி லுட்புகும் போதில், ஆர்வம் பெருக அணையும் அவருடன் கும்பிட்

---

பா - ம்—[1] கந்தைமிகையாங்.

டருளால், சீர்வளர் தொண்ட ரைக்கொண்டு திருமா ளிகை யினிற்[1] சேர்ந்தார். 272

அணையுந் திருத்தொண்டர் தம்மோ டாண்ட அரசுக்கும் அன்பால், இணையில் திருவமு தாக்கி இயல்பால் அமுதுசெய் வித்துப், புணரும் பெருகன்பு நண்பும் பொங்கிய காதலிற் கும் பிட்(டு) உணருஞ்சொன் மாலைகள் சாத்தி உடன்மகிழ் வெய்தி உறைந்தார்.[2] 273

அந்நாள் சிலநாள்கள் செல்ல அருள்திரு நாவுக் கரசர்
மின்னார் சடைஅண்ணல் எங்கும் மேவிடங் கும்பிட வேண்டிப்
பொன்மார்பின் முந்நூல் புனைந்த புகலிப் பிரான்இசை வோடும்
பின்னாக எய்த இறைஞ்சிப் பிரியாத நண்பொடும் போந்தார். 274

வாக்கின் தனிமன்னர் ஏக, மாறாத் திருவுளத் தோடும்
பூக்கமழ் பண்ணைகள்[3] சூழ்ந்த புகலியின் மீண்டும் புகுந்து
தேக்கிய மாமறை வெள்ளத் திருத்தோணி வீற்றிருந் தாரைத்
தூக்கின் தமிழ்மாலை பாடித் தொழுதங் குறைகின்ற நாளில்.

செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்க ளான்மொழி மாற்றும்
வந்தசொற் சீர்மாலை மாற்றும் வழிமொழி எல்லா மடக்குச்
சந்த வியமகம் ஏகபா தந் தமிழ்இ ருக்குக்குறள் சாத்தி
எந்தைக் கெழுகூற் றிருக்கை ஈரடி ஈரடி வைப்பு. 276

நாலடி மேல்வைப்பு மேன்மை நடையின் முடுகுமி ராகம்
சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிக
மூல இலக்கிய மாக எல்லாப் பொருள்களும்[4] முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப் பாடினார் ஞானசம் பந்தர். 277

இன்னிசை பாடின எல்லாம் யாழ்ப்பெரும் பாணனார் தாமும்
மன்னும் இசைவடி வான மதங்கசூ ளாமணி யாரும்
பன்னிய ஏழிசை பற்றிப் பாடப் பதிகங்கள் பாடிப்
பொன்னின் திருத்தா ளம்பெற்றார் புகலியிற் போற்றி இருந்தார்.

அங்கண் அமர்கின்ற நாளில் "அருந்தமிழ் நாடெத்தி னுள்ளும்
திங்கள் சடைஅண்ண லார்தம் திருப்பதி யாவையுங் கும்பிட்(டு)

பா-ம்—[1] மாடம். [2] இருந்தார். [3] பூக்கம ழும்பணை. [4] பொருள்கோளும்.

எங்குந் தமிழ்மா லைபாடி ஏத்திஇங் கெய்துவன்" என்று
தங்குலத் தாதையா ரோடுந் தவமுனி வர்க்கருள் செய்தார். 279

பெருகு விருப்புடன் நோக்கிப் பெற்ற குலத்தாதை யாரும், "அருமையால் உம்மைப் பயந்த அதனுற் பிரிந்துறை வாற்றேன், இருமைக்கும் இன்பம் அளிக்கும் யாகமும் யான்செய வேண்டும், ஒருமையால் இன்னஞ் சிலநாள் உடன்எய் துவேன்"[1]என் றுரைத்தார். 280

ஆண்டகை யாரும் இசைந்தங் கம்பொற் றிருத்தோணி மேவும்
நீண்ட சடையார் அடிக்கீழ்ப் பணிவுற்று நீடருள் பெற்றே
ஈண்டு புகழ்த்தா தையார்பின் எய்திட யாழ்ப்பாண ரோடும்
காண்டகு காழி தொழுது காதலி னுற்புறம் போந்தார். 281

அத்திரு மூதூரின் உள்ளார் அமர்ந்துடன் போதுவார் போத, மெய்த்தவர் அந்தணர் நீங்கா விடைகொண்டு மீள்வார் கள் மீள, முத்தின் சிவிகைமேற் கொண்டு மொய்யொளித் தாமம் நிரைத்த, நித்தில வெண்குடை மீது நிறைமதி போல நிழற்ற.

சின்னந் தனிக்காளம் தாரை "சிரபுரத் தாண்டகை வந்தார்"
என்னுந் தகைமை விளங்க ஏற்ற திருப்பெயர் சாற்ற
முன்னெம் மருங்கு நிரந்த முரசுடைப் பல்லியம் ஆர்ப்ப
மன்னுந் திருத்தொண்ட ரானோர் வந்தெதிர் கொண்டு வணங்க.

சங்கநா தங்கள் ஒலிப்பத் தழங்குபொற் கோடு முழங்க
மங்கல வாழ்த்துரை எங்கும் மல்க மறைமுன் இயம்பத்
திங்களும் பாம்பும் அணிந்தார் திருப்பதி எங்கும் முன்சென்று
பொங்கிய காதலிற் போற்றப் புகலிக் கவுணியர் போந்தார். 284

திருமறைச் சண்பைய ராளி சிவனூர் திருக்கண் ணார்கோயில்
பெருவிருப் பால்அணைந் தேத்திப் பிஞ்ஞகர் கோயில் பிறவும்
உருகிய அன்பால் இறைஞ்சி உயர்தமிழ் மாலைகொண் டேத்தி
வருபுனற் பொன்னி வடபால் குடதிசை நோக்கி வருவார். 285

போற்றிய காதல் பெருகப் புள்ளிருக் குந்திரு வேளூர்
நாற்றடந் தோளுடை மூன்று நயனப் பிரான்கோயில் நண்ணி

---

பா - ம் —[1] எய்துவன்.

ஏற்றஅன் பெய்தவ ணங்கி இருவர்புள் வேந்தர் இறைஞ்சி
ஆற்றிய பூசனை சாற்றி அஞ்சொற் பதிகம் அணிந்தார். 286

நீடு திருநின்றி யூரின் நிமலனூர்[1] நீள்கழல் ஏத்திக்
கூடிய காதலிற் போற்றிக் கும்பிட்டு வண்டமிழ் கூறி
நாடுசீர் நீடூர் வணங்கி நம்பர் திருப்புன்கூர் நண்ணி
ஆடிய பாதம் இறைஞ்சி அருந்தமிழ் பாடிஅ மர்ந்தார். 287

அங்குநின் றேகிஅப் பாங்கில் அரனூர் மகிழ்கோ யிலான
எங்கணுஞ் சென்று பணிந்தே ஏத்தி இமவான் மடந்தை
பங்கர் உறைபழ மண்ணிப் படிக்கரைக் கோயில் வணங்கித்
தங்கு தமிழ்மாலை சாத்தித் திருக்குறுக் கைப்பதி சார்ந்தார். 288

திருக்குறுக் கைப்பதி மன்னித் திருவீரட் டானத் தமர்ந்த, பொருப்புவில் லாளரை ஏத்திப் போந்தன்னி யூர்சென்று போற் றிப், பருக்கை வரைஉரித் தார்தம் பந்தண நல்லூர் பணிந்து, விருப்புடன்[2] பாடல் இசைத்தார் வேதந் தமிழால் விரித்தார்.

அப்பதி போற்றி அகல்வார் அரனூர் திருமணஞ் சேரி
செப்பருஞ் சீர்த்தொண்ட ரோடுஞ் சென்று தொழுதிசை பாடி
எப்பொரு ளுந்தரும் ஈசர் எதிர்கொள்பா டிப்பதி எய்தி
ஒப்பில் பதிகங்கள் பாடி ஓங்குவேள் விக்குடி உற்றார். 290

செழுந்திரு வேள்விக் குடியில் திகழ்மண வாளநற் கோலம், பொழிந்த புனல்பொன்னி மேவும் புனிதத் துருத்தி இரவில், தழும்பிய தன்மையுங் கூடத் தண்டமிழ் மாலையிற் பாடிக், கொழுந்துவெண் திங்கள் அணிந்தார் கோடி காவிற்சென் றடைந்தார். 291

திருக்கோடி காவில் அமர்ந்த தேவர் சிகாமணி தன்னை
எருக்கோ டிதழியும் பாம்பும் இசைந்தணிந் தானைவெள் ளெனப்
பருக்கோடு பூண்ட[3] பிரானைப் பணிந்துசொன் மாலைகள் பாடிக்
கருக்கோடி நீப்பார்கள் சேருங் கஞ்சனூர் கைதொழச் சென்றார்.

கஞ்சனூர் ஆண்டதங் கோவைக் கண்ணுற் றிறைஞ்சிமுன் போந்து, மஞ்சணர்[4] மாமதில் சூழும் மாந்துறை வந்துவ ணங்கி,

பா - ம்—[1] நிமலர்தம். [2] விருப்புறு. [3] அணிந்த. [4] மஞ்சணை.

அஞ்சொல் தமிழ்மாலை சாத்தி அங்ககன் றன்பர்முன் னாகச்,
செஞ்சடை வேதியர் மன்னுந் திருமங்க லக்குடி சேர்ந்தார். 293

வெங்கண் விடைமேல் வருவார்[1] வியலூர் அடிகளைப் போற்றித், தங்கிய இன்னிசை கூடும் தமிழ்ப்பதி கத்தொடை சாத்தி, அங்கண் அமர்வார்தம் முன்னே அருள்வே டங்காட்டத் தொழுது, செங்கண்மா லுக்கரி யார்தந் திருந்துதே வன்குடி சேர்ந்தார். 294

திருந்துதே வன்குடி மன்னுஞ் சிவபெரு மான்கோயில் எய்திப்
பொருந்திய காதலி றபுக்குப் போற்றிவ ணங்கிப் புரிவார்
"மருந்தொடு மந்திர மாகி மற்றும்இ வர்வேட மாம்"என்(று)
அருந்தமிழ் மாலைபு னைந்தார் அளவில்ஞா னத்தமு துண்டார்.

மொய்திகழ் சோலைஅம் மூதூர் முன்னகன் றந்நெறி செல்வார்
செய்தரு சாலிக ரும்பு தெங்குபைம் பூகத்தி டைபோய்
மைதிகழ் கண்டர்தங் கோயில் மருங்குள்ள எல்லாம் வணங்கி
எய்தினர் ஞானசம்பந்தர் இன்னம்பர் ஈசர்தங்[2] கோயில். 296

இன்னம்பர் மன்னும்பி ரானை இறைஞ்சி இடைமடக் கான
பன்னுந் தமிழ்த்தொடை மாலைப் பாடல்பு னைந்து பரவிப்
பொன்னங் கழலிணை போற்றிப் புறம்போந் தணைந்து புகுந்தார்
மன்னுந் தடங்கரைப் பொன்னி வடகுரங் காடு துறையில். 297

வடகுரங் காடு துறையில் வாலியார் தாம்வழி பட்ட, அடைவுந் திருப்பதி கத்தில் அறியச் சிறப்பித் தருளிப், புடைகொண் டிறைஞ்சினர் போந்து புறத்துள்ள தானங்கள் போற்றிப், படைகொண்ட மூவிலை வேலார் பழனத் திருப்பதி சார்ந்தார். 298

பழனத்து மேவிய முக்கட் பரமேட்டி யார்பயில் கோயில்
உழைபுக் கிறைஞ்சிநின் றேத்தி உருகிய சிந்தைய ராகி
விழைசொற் பதிகம் விளம்பி விருப்புடன் மேவி அகல்வார்
அழனக்க பங்கய வாவி ஐயாறு சென்றடை கின்றார். 299

---

பா - ம்—[1] விடைமீது மேவும். [2] நம்பர்தங்.

மாடநிரை[1] மணிவீதித் திருவையாற் றினில்வாழு மல்கு தொண்டர், "நாடுய்யப் புகலிவரு ஞானபோ னகர்வந்து நண்ணி ஞர்"என், றுடலொடு பாடல்அறு அணிமூதூர் அடைய அலங் காரஞ் செய்து, நீடுமனக் களிப்பினொடும் எதிர்கொள்ள நித்தி லயா னத்து நீங்கி. 300

வந்தணைந்த[2] திருத்தொண்டர் மருங்குவர மான்ஏந்து கையர் தம்பால், நந்திதிரு வருள்பெற்ற நன்னகரை முன் இறைஞ்சி நண்ணும் போதில், "ஐந்துபுலன் நிலைகலங்கும் இடத்தஞ்சேல்[3] என்பார்தம் ஐயா(று)"என்று, புந்திநிறை செந் தமிழின் சந்தஇசை போற்றிசைத்தார் புகலி வேந்தர். 301

மணிவீதி இடங்கடந்து மாலயனுக் கரியபிரான் மன்னுங் கோயில், அணிநீடு கோபுரத்தை அணைந்திறைஞ்சி உள்ளெய்தி அளவில் காதல், தணியாத கருத்தினொடுந் தம்பெருமான் கோயில்வலங் கொண்டு தாழ்ந்து, பணிசூடு மவர்முன்பு பணிந்து வீழ்ந் தெழுந்தன்பாற் பரவுகின்றார். 302

"கோடல்கோங் கங்குளிர்கூ விளம்"என்னுந் திருப்பதிகக் குலவு மாலை, நீடுபெருந் திருக்கூத்து நிறைந்ததிரு உள்ளத்து நிலைமை தோன்ற, "ஆடுமா றதுவல்லான் ஐயாற்றெம் ஐயனே" என்று நின்று, பாடினார் ஆடினார் பண்பினொடுங்[4] கண்பொழிநீர் பரந்து பாய. 303

பலமுறையும் பணிந்தெழுந்து புறம்போந்து பரவுதிருத் தொண்ட ரோடு, நிலவுதிருப் பதியதன்கண் நிகழுநாள் நிகரிலா நெடுநீர்க் கங்கை, அலையுமதி சூடியார்தம் பெரும்புலியூர் முத லான அணைந்து போற்றிக், குலவுதமிழ்த் தொடைபுனைந்து மீண்டணைந்து பெருகார்வங் கூரு நாளில். 304

குடதிசைமேற் போவதற்குக் கும்பிட்டங் கருள்பெற்றுக் குறிப்பி னோடும், படருநெறி மேலணைவார் பரமர்திரு நெய்த் தானப் பதியில் நணணி, அடையுமனம் உறவணங்கி அருந்

---

பா-ம்—[1] மாடநிறை. [2] வந்தவணைந்து. [3] இடத்தஞ்சல். [4] பண்ணோடுங்.

தமிழ்மாலைகள்பாடி அங்கு நின்றும், புடைவளர்மென் கரும்பி னொடு பூகமிடை மழபாடி போற்றச் சென்றார். 305

செங்கைமான் மறியார்தந் திருமழபா டிப்புறத்துச் சேரச் செல்வார், "அங்கையார் அழல்" என்னும் திருப்பதிகம் எடுத் தருளி அணைந்த போழ்தில், "மங்கைவாழ் பாகத்தார் மழபாடி தலையினால் வணங்கு வார்கள், பொங்குமா தவமுடையார்" எனத்தொழுது போற்றிசைத்தே கோயில்புக்கார். 306

மழபாடி வயிரமணித் தூண்அமர்ந்து மகிழ்கோயில் வலங் கொண் டெய்திச், செழுவாச மலர்க்கமலச் சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந் தெழுந்து நின்று, தொழுதாடிப் பாடிநறுஞ் சொன்மாலைத் தொடையணிந்து துதித்துப் போந்தே, ஒழியாத நேசமுடன் உடையவரைக் கும்பிட்டங் குறைந்தார் சின்னாள். 307

அதன்மருங்கு கடந்தருளால் திருக்கானூர் பணிந்தேத்தி ஆன்ற சைவ, முதன்மறையோர் அன்பிலா லந்துறையின் முன் னவனைத் தொழுது போற்றிப், பதநிறைசெந் தமிழ்பாடிச் சடை முடியார் பயில்பதியும்[1] பணிந்து பாடி,[2] மதகரட வரையுரித்தார் வடகரைமாந் துறைஅணைந்தார் மணிநூல் மார்பர் 308

சென்றுதிரு மாந்துறையில் திகழ்ந்துறையுந் துறைநதி[3] வாழ்சென்னி யார்தம், முன்றில்பணிந் தணிநெடுமா ளிகைவலஞ் செய் துள்புக்கு முன்பு தாழ்ந்து, துன்றுகதிர்ப் பரிதிமதி மருத் துக்கள் தொழுதுவழி பாடு செய்ய, நின்றநிலை சிறப்பித்து நிறை தமிழின் சொன்மாலை நிகழப் பாடி. 309

அங்கணகன் றம்மருங்கில் அங்கணர்தம் பதிபிறவும் அணைந்து போற்றிச், செங்கமலப் பொதிஅவிழச் சேல்பாயும் வயல்மதுவால் சேறு மாறாப், பொங்கொலிநீர் மழநாட்டுப் பொன்னிவட கரைமிசைப் போய்ப் புகலி வேந்தர், நங்கள் பிரான் திருப்பாச்சி லாச்சிரா மம்பணிய நண்ணும் போதில். 310

அந்நகரில் கொல்லிமழ வன்பயந்த அரும்பெறல்ஆர் அமுத மென்சொற், கன்னிஇள மடப்பிணையாங் காமருகோ மளக்

---

பா - ம்—[1] பலபதியும். [2] போற்றி. [3] திருநதி.

கொழுந்தின் கதிர்செய் மேனி, மன்னுபெரும் பிணியாகும் முயல கன்வந் தணைவுறமெய் வருத்தம் எய்தித், தன்னுடைய பெருஞ் சுற்றம் புலம்பெய்தத் தானும்மனந் தளர்வு கொள்வான். 311

மற்றுவே றொருபரிசால் தவிராமை மறிவளருங் கையார் பாதம், பற்றியே வருங்குலத்துப் பான்மையினான் ஆதலினால் பரிவு தீரப், பொற்றொடியைக் கொடுவந்து போர்க்கோலச் சேவ கராய்ப் புரங்கள் மூன்றும், செற்றவர்தங் கோயிலினுட் கொடு புகுந்து திருமுன்பே இட்டு வைத்தான். 312

அவ்வளவில் ஆளுடைய பிள்ளையார் எழுந்தருளி அணுக எய்தச், "செவ்வியமெய்ஞ் ஞானமுணர் திருஞான சம்பந்தன் வந்தான்" என்றே, எவ்வுலகுந் துயர்நீங்கப் பணிமாறுந் தனிக் காளத் தெழுந்த ஓசை, வெவ்வுயிர்க்கும் அவன்கேளா மெல்லி யலை விட்டெதிரே விரைந்து செல்வான். 313

"மாநகரம் அலங்கரிமின் மகரதோ ரணம்நாட்டும் மணிநீர் வாசத், தூநறும்பூ ரணகும்பம் சோதிமணி விளக்கினொடு தூபம் ஏந்தும், ஏனைஅணி பிறவுமெலாம் எழில்பெருக இயற்றும்"என ஏவித் தானும், வானவர்நா யகர்மகனார் வருமுன்பு தொழு தணைந்தான் மழவர் கோமான். 314

"பிள்ளையார் எழுந்தருளப் பெற்றேன்"என் றானந்தம் பெருகு காதல், வெள்ளநீர் கண்பொழியத் திருமுத்தின் சிவிகை யின்முன் விழ்ந்த போது, வள்ளலார் "எழுக"என மலர்வித்த திருவாக்கால் மலர்க்கை சென்னி, கொள்ளமகிழ்ந் துடன்சென்று குலப்பதியின் மணிவீதி கொண்டு புக்கான் 315

மங்கலதூ ரியம்முழங்கு மணிவீதி கடந்துமதிச் சடையார் கோயில், பொங்குசுடர்க் கோபுரத்துக் கணித்தாகப் புனைமுத் தின் சிவிகை நின்றும், அங்கண் இழிந் தருளுமுறை இழிந்தருளி அணிவாயில் பணிந்து புக்குத், தங்கள்பிரான் கோயில்வலங் கொண்டுதிரு முன்வணங்கச் சாருங் காலை. 316

கன்னிஇளங் கொடியுணர்வு கழிந்துநிலன் சேர்ந்ததனைக் கண்டு நோக்கி, "என்இது?"என் றருள்செய்ய மழவன்தான்

எதிர் இறைஞ்சி "அடியேன் பெற்ற, பொன் இவளை முயலகனும் பொருவில்அரும் பிணிபொருந்தப் புனிதர் கோயில், முன்அணை யக் கொணர்வித்தேன் இதுபுகுந்த படி"என்று மொழிந்து நின்றான். 317

அணிகிளர் தாரவன் சொன்ன மாற்றம் அருளொடுங் கேட் டந் நிலையின் நின்றே பணிவளர் செஞ்சடைப் பாச்சின் மேய பரம்பொருளாயினா ரைப்பணிந்து, "மணிவளர் கண்டரோ மங் கையை வாடமயல்செய்வ தோஇவர் மாண்ப"தென்று, தணிவில் பிணிதவிர்க் கும்பதிகத் தண்டமிழ் பாடினார் சண்பைநாதர். 318

பன்னு தமிழ்மறை யாம்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தி, மன்னுங் கவுணியர் போற்றி நிற்க, மழவன் பயந்த மழலைமென்சொல், கன்னி யுறுபிணி விட்டுநீங்கக் கதுமெனப் பார்மிசை நின்றெழுந்து, பொன்னின் கொடிஎன ஒல்கிவந்து பொருவலித் தாதை புடையணைந்தாள். 319

வன்பிணி நீங்கு மகளைக் கண்ட மழவன் பெருகு மகிழ்ச்சி பொங்கத், தன்தனிப் பாவையுந் தானுங் கூடச் சண்பையர் காவலர் தாளில் வீழ, நின்ற அருமறைப் பிள்ளை யாரும் நீரணி வேணி நிமலர்பாதம், ஒன்றிய சிந்தை யுடன்ப ணிந்தார் உம்பர் பிரான்திருத் தொண்டர் ஆர்த்தார். 320

நீடு திருவாச்சி ராமம்[1] மன்னும் நேரிழை பாகத்தர் தாள்வ ணங்கிக், கூடும் அருளுடன் அங்கமர்ந்து கும்பிடுங் கொள்கை மேற்கொண்டுபோந்தே, ஆடல் பயின்றார்[2] பதிபிறவும் அணைந்து பணிந்தடி போற்றி ஏகிச், சேடர்கள் வாழுந் திருப்பைஞ் ஞீலிச் சிவபெருமானை இறைஞ்சச் சென்றார். 321

பண்பயில் வண்டினம்[3] பாடுஞ் சோலைப் பைஞ்ஞீலி வாணர் கழல்ப ணிந்து, மண்பர வுந்தமிழ் மாலை பாடி வைகி வணங்கி மகிழ்ந்து போந்து, திண்பெருந் தெய்வக் கயிலை யில்வாழ் சிவ னார் பதிபல சென்றிறைஞ்சிச், சண்பை வளந்தரு நாடர் வந்து தடந்திரு ஈங்கோய் மலையைச் சார்ந்தார். 322

---

பா - ம்—[1] திருப்பாச்சிராமம். [2] மகிழ்ந்தார். [3] வண்டிசை.

செங்கட் குறவரைத் தேவர் போற்றும் திகழ்திரு ஈங்கோய் மலையில் மேவும், கங்கைச் சடையார் கழல்ப ணிந்து கலந்த இசைப்பதி கம்பு னைந்து, பொங்கர்ப் பொழில்சூழ் மலையும் மற்றும் புறத்துள்ள தானங்க ளெல்லாம் போற்றிக், கொங்கிற் குடபுலஞ் சென்ற ணைந்தார்[1] கோதில்மெய்ஞ் ஞானக் கொழுந்தனையார். 323

அண்டர்பிரான் ஆலயங்கள் அம்மருங்குள் ளனபணிந்து, தெண்டிரைநீர்த் தடம்பொன்னித் தென்கரையாங் கொங்கினிடை, வண்டலையும் புனற்சடையார் மகிழ்விடங்கள் தொழுதணைந்தார், கொண்டல்பயில்[2] நெடும்புரிசைக் கொடிமாடச் செங்குன்றூர். 324

அந்நகரில் வாழ்வாரும் அடியவரும் மனமகிழ்ந்து
பன்னெடுந்தோ ரண முதலாப் பயில்அணிகள் பலஅமைத்து
முன்னுறவந் தெதிர்கொண்டு பணிந்தேத்தி மொய்கரங்கள்
சென்னியுறக் கொண்டணைந்தார் சினவிடையார் செழுங்கோயில்.

நம்பெருமான் கோயிலினுள் எழுந்தருளித் தமிழ்விரகர்
நம்பரவர் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நலஞ்சிறக்க
இம்பரும்உம் பரும்ஏத்த இன்னிசைவண் டமிழ்பாடிக்
கும்பிடும்ஆ தரவுடன்அக் கோநகரில் இனிதமர்ந்தார். 326

அப்பாலைக் குடபுலத்தில் ஆறணிந்தார் அமர்கோயில்
எப்பாலுஞ் சென்றேத்தித் திருநணு வினை இறைஞ்சிப்
பைப்பாந்தள் புனைந்தவரைப் பரவிப்பண் டமர்கின்ற
வைப்பான செங்குன்றூர் வந்தணைந்து வைகினார். 327

ஆங்குடைய[3] பிள்ளையார் அமர்ந்துறையும் நாளின்கண்
தூங்குதுளி முகிற்குலங்கள் சுரந்து[4]பெயல் ஒழிகாலை
வீங்கொலிநீர் வைப்பெல்லாம் வெயில்பெரு[5] விருப்புவரப்
பாங்கர்வரை யுங்குளிரும் பனிப்பருவம் எய்தியதால். 328

பா - ம்—[1] சென்றடைந்தார். [2] கொண்டல்பணி. [3] ஆங்குறையும். [4] சுரந்த. [5] வெயில்வெரு.

எதிர் இறைஞ்சி "அடியேன் பெற்ற, பொன் இவளை முயலகனும் பொருவில் அரும் பிணிபொருந்தப் புனிதர் கோயில், முன் அணையக் கொணர்வித்தேன் இதுபுகுந்த படி"என்று மொழிந்து நின்றான். 317

அணிகிளர் தாரவன் சொன்ன மாற்றம் அருளொடுங் கேட்டந் நிலையின் நின்றே பணிவளர் செஞ்சடைப் பாச்சின் மேய பரம்பொருளாயினு ரைப்பணிந்து, "மணிவளர் கண்டரோ மங்கையை வாடமயல்செய்வ தோஇவர் மாண்ப"தென்று, தணிவில் பிணிதவிர்க் கும்பதிகத் தண்டமிழ் பாடினார் சண்பைநாதர். 318

பன்னு தமிழ்மறை யாம்பதிகம் பாடித் திருக்கடைக் காப்புச் சாத்தி, மன்னுங் கவுணியர் போற்றி நிற்க, மழவன் பயந்த மழலைமென்சொல், கன்னி யுறுபிணி விட்டுநீங்கக் கதுமெனப் பார்மிசை நின்றெழுந்து, பொன்னின் கொடிஎன ஒல்கிவந்து பொருவலித் தாதை புடையணைந்தாள். 319

வன்பிணி நீங்கு மகளைக் கண்ட மழவன் பெருகு மகிழ்ச்சி பொங்கத், தன்தனிப் பாவையுந் தானுங் கூடச் சண்பையர் காவலர் தாளில் வீழ, நின்ற அருமறைப் பிள்ளை யாரும் நீரணி வேணி நிமலர்பாதம், ஒன்றிய சிந்தை யுடன்ப ணிந்தார் உம்பர் பிரான்திருத் தொண்டர் ஆர்த்தார். 320

நீடு திருவாச்சி ராமம்[1] மன்னும் நேரிழை பாகத்தர் தாள்வணங்கிக், கூடும் அருளுடன் அங்கமர்ந்து கும்பிடுங் கொள்கை மேற்கொண்டுபோந்தே, ஆடல் பயின்றார்[2] பதிபிறவும் அணைந்து பணிந்தடி போற்றி ஏகிச், சேடர்கள் வாழுந் திருப்பைஞ் ஞீலிச் சிவபெருமானை இறைஞ்சச் சென்றார். 321

பண்பயில் வண்டினம்[3] பாடுஞ் சோலைப் பைஞ்ஞீலி வாணர் கழல்பணிந்து, மண்பர வுந்தமிழ் மாலை பாடி வைகி வணங்கி மகிழ்ந்து போந்து, திண்பெருந் தெய்வக் கயிலை யில்வாழ் சிவனார் பதிபல சென்றிறைஞ்சிச், சண்பை வளந்தரு நாடர் வந்து தடந்திரு ஈங்கோய் மலையைச் சார்ந்தார். 322

பா - ம்—[1] திருப்பாச்சிராமம். [2] மகிழ்ந்தார். [3] வண்டிசை.

செங்கட் குறவரைத் தேவர் போற்றும் திகழ்திரு ஈங்கோய் மலையில் மேவும், கங்கைச் சடையார் கழல்ப ணிந்து கலந்த இசைப்பதி கம்பு னைந்து, பொங்கர்ப் பொழில்சூழ் மலையும் மற் றும் புறத்துள்ள தானங்க ளெல்லாம் போற்றிக், கொங்கிற் குடபுலஞ் சென்ற ணைந்தார்[1] கோதில்மெய்ஞ் ஞானக் கொழுந் தனையார். 323

அண்டர்பிரான் ஆலயங்கள் அம்மருங்குள் ளனபணிந்து, தெண்டிரைநீர்த் தடம்பொன்னித் தென்கரையாங் கொங் கினிடை, வண்டலையும் புனற்சடையார் மகிழ்விடங்கள் தொழு தணைந்தார், கொண்டல்பயில்[2] நெடும்புரிசைக் கொடிமாடச் செங்குன்றூர். 324

அந்நகரில் வாழ்வாரும் அடியவரும் மனமகிழ்ந்து
பன்னெடுந்தோ ரண முதலாப் பயில்அணிகள் பலஅமைத்து
முன்னுறவந் ததிர்கொண்டு பணிந்தேத்தி மொய்கரங்கள்
சென்னியுறக் கொண்டணைந்தார் சினவிடையார் செழுங்கோயில்.

தம்பெருமான் கோயிலினுள் எழுந்தருளித் தமிழ்விரகர்
நம்பரவர் திருமுன்பு தாழ்ந்தெழுந்து நலஞ்சிறக்க
இம்பரும்உம் பரும்ஏத்த இன்னிசைவண் டமிழ்பாடிக்
கும்பிடும்ஆ தரவுடன்அக் கோநகரில் இனிதமர்ந்தார். 326

அப்பாலைக் குடபுலத்தில் ஆறணிந்தார் அமர்கோயில்
எப்பாலுஞ் சென்றேத்தித் திருநணு வினைஇறைஞ்சிப்
பைப்பாந்தள் புனைந்தவரைப் பரவிப்பண் டமர்கின்ற
வைப்பான செங்குன்றூர் வந்தணைந்து வைகினார். 327

ஆங்குடைய[3] பிள்ளையார் அமர்ந்துறையும் நாளின்கண்
தூங்குதுளி முகிற்குலங்கள் சுரந்து[4]பெயல் ஒழிகாலை
வீங்கொலிநீர் வைப்பெல்லாம் வெயில்வெரு[5] விருப்புவரப்
பாங்கர்வரை யுங்குளிரும் பனிப்பருவம் எய்தியதால். 328

---

பா - ம்—[1] சென்றடைந்தார். [2] கொண்டல்பணி. [3] ஆங்குறையும். [4] சுரந்த. [5] வெயில்வெரு.

அளிக்குலங்கள் சுளித்தகல[1] அரவிந்த முகம்புலரப்
பளிக்குமணி மரகதவல் லியிற்கோத்த பான்மையெனத்
துளித்தலைமெல்[2] அறுகுபனி தொடுத்தசையச் சூழ்பனியால்
குளிர்க்குடைந்து வெண்படாம் போர்த்தனைய குன்றுகளும்.

மொய்பனிகூர்[3] குளிர்வாடை முழுதுலவும் பொழுதேயாய்க்
கொய்தளிர்மென் சோலைகளுங் குலைந்தசையக் குளிர்க்கொதுங்கி
வெய்யவனுங் கரங்கிமிர்க்க மாட்டான்போல் விசும்பினிடை
ஐதுவெயில் விரிப்பதுவும் அடங்குவதும் ஆகுமால். 330

நீடியஅப் பதிகளெலாம் நிரைமாடத் திறைகள்[4]தொறும்
பேடையுடன் பவளக்கால் புறவொடுங்கப் பித்திகையின்
தோடலர்மென் குழல்மடவார் துணைக்கலச வெம்முலையுள்
ஆடவர்தம் பணைத்தோளும் மணிமார்பும் அடங்குவன. 331

அரிசனமும் குங்குமமும் அரைத்தமைப்பார் அயலெல்லாம்
பரியஅகிற் குறைபிளந்து புகைப்பார்கள் பாங்கெல்லாம்
எரியுமிழ்பேழ் வாய்த்தோணி இரும்பீர்ப்பார் இடையெல்லாம்
விரிமலர்மென்[5] புறவணிந்த மீப்புலதது வைப்பெல்லாம். 332

அந்நாளிற் கொடிமாடச் செங்குன்றூர் அமர்ந்திருந்த[6]
மெய்ஞ்ஞானப் பிள்ளையா ருடன்மேவும் பரிசனங்கள்
பன்னாளும் அந்நாட்டிற் பயின்றதனால் பனித்தகுளிர்
முன்னான பிணிவந்து மூள்வதுபோல் முடுகுதலும். 333

அந்நிலைமை[7] ஆளுடைய பிள்ளையார்க் கவர்களெலாம்
முன்னறிவித் திறைஞ்சுதலும் முதல்வனூர் அருள்தொழுதே
"இந்நிலத்தின் இயல்பெனினும் நமக்கெய்தப் பெறா"என்று
சென்னிமதி அணிந்தாரைத் திருப்பதிகம் பாடுவார். 334

"அவ்வினைக் கிவ்வினை" என்றெடுத்(து) "ஐயர் அமுதுசெய்த
வெவ்விடம் முன்தடுத் தெம்மிடர் நீக்கிய வெற்றியினால்
எவ்விடத் தும்அடி யார்இடர் காப்பது கண்டம்"என்றே
"செய்வினை தீண்டா திருநீல கண்டம்" எனச்செப்பினார். 335

---

பா - ம்—[1] சுளிந்தகல. [2] மேல். [3] மொய்யொளிகூர். [4] நீள் மாடத்துறையுள். [5] விரிமலர்வண். [6] இடத்திருந்த. [7] அந்நிலையில்.

ஆய குறிப்பினில் ஆணை நிகழ அருளிச்செய்து
தூய பதிகத் திருக்கடைக் காப்புத் தொடுத்தணிய
மேயஅப் பொற்பதி வாழ்பவர்க் கேஅன்றி மேவும்அந்நாள்
தீய பனிப்பிணி அந்நா டடங்கவுந் தீர்ந்ததன்றே. 336

அப்பதி யின்கண் அமர்ந்து சிலநாளில் அங்ககன்று
துப்புறழ் வேணியர் தானம் பலவுந் தொழுதருளி[1]
முப்புரி நூலுடன் தோலணி மார்பர் முனிவரொடும்
செப்பருஞ் சீர்த்திருப் பாண்டிக் கொடுமுடி சென்றணைந்தார். 337

பருவ மருப்பொன்னிப் பாண்டிக் கொடுமுடி யார்தம்பாதம்
மருவி வணங்கி வளத்தமிழ் மாலை மகிழ்ந்துசாத்தி
விரிசுடர் மாளிகை வெஞ்சமாக் கூடல விடையவர்தம்
பொருவில்தா னம்பல போற்றிக் குணதிசைப் போதுகின்றார்.

செல்வக் கருவூர்த் திருவா னிலைக்கோயில் சென்றிறைஞ்சி
நல்லிசை வண்டமிழ்ச் சொற்றொடை பாடிஅந் நாடகன்று
மல்கிய மாணிக்க வெற்பு முதலா வணங்கிவந்து
பல்கு திரைப்பொன்னித் தென்கரை தானம் பலபணிவார். 339

பன்னெடுங் குன்றும் படர்பெருங் கானும்[2] பலபதியும்
அந்நிலைத் தானங்கள் ஆயின எல்லாம் அமர்ந்திறைஞ்சி
மன்னு புகலியில் வைதிக வாய்மை மறையவனார்
பொன்னியல் வேணிப் புனிதர் பராய்த்துறை யுட்புகுந்தார். 340

நீடும் பராய்த்துறை நெற்றித் தனிக்கண்ணர் கோயில்நண்ணிக்
கூடுங் கருத்தொடு கும்பிட்டுக் கோதில் தமிழ்ச்சொன் மாலை
பாடுங் கவுணியர் கண்பனி மாரி பரந்திழியச்
சூடுங் கரதலத் தஞ்சலி கோலித் தொழுதுகின்றார். 341

தொழுது புறம்பணைந் தங்குநின் றேகிச் சுரர்பணிவுற்(று)
எழுதிரு வாலந் துறைதிருச் செந்துறை யேமுதலா
வழுவில்பல் கோயில்கள் சென்று வணங்கி மகிழ்ந்தணைவார்
செழுமலர்ச் சோலைத் திருக்கற் குடிமலை சேரவந்தார். 342

பா - ம்—[1] பிறவும் தொழுதிறைஞ்சி. [2] நெடுங்கானும்.

கற்குடி மாமலை மேலெழுந்த கனகக் கொழுந்ினைக் கால் வளையப், பொற்றிரள் மேருச் சிலைவளைத்த போர்விடை யாளியைப் போற்றிசைத்து, நற்றமிழ் மாலை புனைந்தருளி ஞானசம்பந்தர் புலன்கள்ஐந்தும், செற்றவர் மூக்கீச் சரம்பணிந்து திருச்சிராப் பள்ளிச் சிலம்பணைந்தார். 343

செம்மணி வாரி அருவி தூங்கும் சிராப்பள்ளி மேய செழுஞ் சுடரைக், கைம்மலை ஈருரி போர்வைசாத்துங் கண்ணுத லாரைக் கழல்பணிந்து, மெய்ம்மகிழ் வெய்தி உளங்குளிர விளங்கிய சொற்றமிழ் மாலைவேய்ந்து மைம்மலர் கண்டர்தம் ஆனைக்காவை வணங்கும் விருப்பொடு வந்தணைந்தார்.[1] 344

விண்ணவர் போற்றிசெய் ஆனைக்காவில் வெண்ணாவல் மேவிய மெய்ப்பொருளை, நண்ணி இறைஞ்சிமுன் வீழ்ந்தெழுந்து நாற்கோட்டு நாகம் பணிந்ததுவும், அண்ணல் கோச்செங்கண் அரசன் செய்த அடிமையும் அஞ்சொற் றொடையில் வைத்துப், பண்ணுறு செந்தமிழ் மாலைபாடிப் பரவினின் றேத்தினர் பான்மையினால் 345

நாரணன் நான்முகன் காணாஉண்மை வெண்ணாவல் உண்மை[2] மயேந்திரமும், சீரணி நீடு திருக்கயிலை செல்வத் திருவாரூர் மேய பண்பும், ஆரணத் துட்பொரு ளாயினாரை ஆனைக்கா வின்கட் புகழ்ந்து பாடி, ஏரணி யும்பொழில் சூழ்ந்த சண்பை ஏந்தலார் எல்லையில் இன்ப முற்றார் 346

கைதொழு தேத்திப் புறத்தணைந்து காமர் பதியதன் கட்சில நாள், வைகி வணங்கி மகிழ்ந்தணைவார் மன்னுந் தவத்துறை வானவர்தாள், எய்தி இறைஞ்சி எழுந்துநின்றே இன்தமிழ் மாலைகொண் டேத்திப் போந்து, வைதிக மாமணி அம்மருங்கு மற்றுள்ள தானம் வழுத்திச் செல்வார். 347

ஏறுயர்த் தார்திருப் பாற்றுறையும் எறும்பியூர் மாமலையேமுதலா, வேறு பதிகள் பலவும் போற்றி விரவுந் திருத்தொண்டர் வந்துசூழ, ஈறில் புகழ்ச்சண்பை யாளியார்தாம் எண்

---

பா - ம்—[1] வந்தவணவார். [2] நன்மை.

டிசை யோருந் தொழுதிறைஞ்ச, நீறணி செம்பவ ளப்பொருப் பின் நெடுங்கள மாநகர் சென்று சேர்ந்தார். 348

நெடுங்களத் தாதியை அன்பால் "நின்பால் நெஞ்சம்[1] செலா வகை நேர்விலக்கும், இடும்பைகள் தீர்த்தருள் செய்வாய்" என்னும் இன்னிசை மாலைகொண் டேத்திஏகி, அடும்பணிச் செஞ்சடை யார்பதிகள் அணைந்து[2] பணிந்து நியமம் போற்றிக், கடுங்கை வரைஉரித் தார்மகிழ்ந்த காட்டுப்பள் ளிப்பதி கைதொழுவார். 349

சென்று திகழ்திருக் காட்டுப்பள்ளிச் செஞ்சடை நம்பர்தங் கோயில்எய்தி, முன்றில் வலங்கொண் டிறைஞ்சி வீழ்ந்து மொய் கழற் சேவடி கைதொழுவார், கன்றணை ஆவின் கருத்துவாய்ப்பக் கண்ணுத லாரைமுன் போற்றிசெய்து, மன்றுள்நின் ருடன் மனத்துள் வைப்பார் "**வாருமன் னும்முலை**" பாடிவாழ்ந்தார்.

அங்கப் பதிநின் றெழுந்தருளி அணிதிரு வாலம் பொழில் வணங்கிப், பொங்கு புனற்பொன்னிப் பூந்துருத்திப் பொய்யிலி யாரைப் பணிந்து போற்றி, எங்கும் நிகழ்திருத் தொண்டர் குழாம் எதிர்கொள்ள எப்பதி யுந்தொழுது, செங்கயல் பாய்வயல் ஓடைசூழ்ந்த திருக்கண்டி யூர்தொழச் சென்றணைந்தார். 351

கண்டியூர் வீரட்டர் கோயில்எய்திக் கலந்தடி யாருடன் காதல் பொங்கக், கொண்ட விருப்புடன் தாழ்ந்திறைஞ்சிக் குலவு மகிழ்ச்சியின் கொள்கையினால், தொண்டர் குழாத்தினை நோக்கி நின்று தொடுத்த இசைத்தமிழ் மாலைதன்னில், அண்டர் பிரான்தன் அருளின் வண்ணம் அடியார் பெருமையிற் கேட் டருளி. 352

வினவி எடுத்த திருப்பதிகம் மேவு திருக்கடைக் காப்புத் தன்னில், அனைய நினைவரி யோன்செயலை அடியாரைக் கேட்டு மகிழ்ந்த தன்மை, புனைவுறு பாடலிற் போற்றிசெய்து போந்து புகலிக் கவுணியனார், துனைபுனற் பொன்னித் திரைவலங்கொள் சோற்றுத் துறைதொழச் சென்றடைவார்.[3] 353

---

**பா - ம்—[1] நேசந். [2] அனைத்தும். [3] சென்றவணைவார்.**

"அப்பர் சோற்றுத் துறைசென் றடைவோம்" என்(று)
ஒப்பில் வண்டமிழ் மாலை ஒருமையால்
செப்பி யேசென்று சேர்ந்தனர் சேர்விலார்
முப்புரஞ் செற்ற முன்னவர் கோயில்முன். 354

தொல்லை நீள்திருச் சோற்றுத் துறையுறை
செல்வர் கோயில் வலங்கொண்டு தேவர்கள்
அல்லல் தீர்க்கநஞ் சுண்ட பிரான்அடி [1]
எல்லை யில்அன்பு கூர இறைஞ்சினர். 355

இறைஞ்சி ஏத்தி எழுந்துநின் றின்னிசை
நிறைந்த செந்தமிழ் பாடி நிலாவிஅங்(கு)
உறைந்து வந்தடி யாருடன் எய்தினர்
சிறந்த சீர்த்திரு வேதி குடியினில். 356

வேத வேதியர் வேதி குடியினில்
நாதர் கோயில் அணைந்து நலந்திகழ்
பாத பங்கயம் போற்றிப் பணிந்தெழுந்
தோதி னார்தமிழ் வேதத்தின் ஓங்கிசை. 357

எழுது மாமறை யாம்பதி கத்திசை
முழுதும் பாடி முதல்வரைப் போற்றிமுன்
தொழுது போந்துவந் தெய்தினர் சோலைசூழ்
பழுதில் சீர்த்திரு வெண்ணிப் பதியினில். 358

வெண்ணி மேய விடையவர் கோயிலை
நண்ணி நாடிய காதலின் நாண்மதிக்
கண்ணி யார்தங் கழலிணை போற்றியே
பண்ணில் நீடும் பதிகமுன் [2] பாடினர். 359

பாடி நின்று பரவிப் பணிந்துபோய்
ஆடும் அங்கணர் கோயில்அங் குள்ளன
மாடு சென்று வணங்கி மகிழ்ந்தனர்
நீடு சண்பை நிறைபுகழ் வேதியர். 360

---

பா - ம்— [1] நஞ்சுண்டாரடியிணை. [2] பதிகமும்.

மொய்தருஞ் சோலைசூழ் முளரிமுள் ளடவிபோய்
மெய்தரும் பரிவிலான் வேள்வியைப் பாழ்படச்
செய்தசங் கரர்திருச் சக்கரப் பள்ளிமுன்
பெய்தவந் தருளினார் இயல்இசைத் தலைவனார். 361

சக்கரப் பள்ளியார் தந்திருக்[1] கோயிலுள்
புக்கருத் தியினுடன் புனைமலர்த் தாள்பணிந்(து)
அக்கரைப் பரமர்பால் அன்புறும் பரிவுகூர்
மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார். 362

தலைவர்தஞ் சக்கரப் பள்ளிதன் னிடையகன்(று)
அலைபுனற் பணைகளின் அருகுபோய் அருமறைப்
புலனுறுஞ் சிந்தையார் புள்ளமங் கைப்பதி
குலவும்ஆ லந்துறைக் கோயிலைக் குறுகினார்.[2] 363

மன்னும்அக் கோயில்சேர் மான்மறிக் கையர்தம்
பொன்னடித் தலம்உறப் புரிவொடுந் தொழுதெழுந்(து)
இன்னிசைத் தமிழ்புனைந் திறைவர்சே லூருடன்
பன்னுபா லைத்துறைப் பதிபணிந் தேகினார். 364

காவின்மேல் முகிலெழுங் கமழ்நறும் புறவுபோய்
வாவிநீ டலவன்வாழ் பெடையுடன் மலர்நறும்
பூவின்மேல் விழைவுறும் புகலியார் தலைவனார்
சேவின்மேல் அணணலார் திருநலூர் நண்ணினார். 365

மன்றலங் கழனிசூழ் திருநலூர் மறைவலோர்
துன்றுமங் கலவினைத் துழனியால் எதிர்கொளப்
பொன்தயங் கொளிமணிச் சிவிகையிற் பொலிவுறச்
சென்றணைந் தருளினார் சிரபுரச் செம்மலார். 366

நித்திலச் சிவிகைமேல் நின்றிழிந் தருளியே
மொய்த்தஅந் தணர்குழாம் முன்செலப் பின்செலும்
பத்தரும் பரிசனங் களுமுடன் பரவவே
அத்தர்தங் கோபுரந் தொழுதணைந் தருளினார். 367

பா - ம்—[1] தந்தனிக். [2] கோயில்வந் தெய்தினார்.

வெள்ளிமால் வரையைநேர்[1] விரிசுடர்க் கோயிலைப்
பிள்ளையார் வலம்வரும் பொழுதினிற் பெருகுநீர்[2]
வெள்ளஆ னந்தமெய் பொழியமேல் ஏறிநீர்
துள்ளுவார் சடையரைத் தொழுதுமுன் பரவுவார். 368

பரவுசொற் பதிகம்முன் பாடினார் பரிவுதான்
வரவயர்த் துருகுநேர் மனனுடன் புறம்அணைந்(து)
அரவுடைச் சடையர்பேர் அருள்பெறும் பெருமையால்
விரவும்அப் பதிஅமர்ந் தருளியே மேவினார். 369

அன்ன தன்மையில் அப்பதி யினில்[3]அமர்ந் தருளி
மின்னெ டுஞ்சடை[4] விமலர்தாள் விருப்பொடு வணங்கிப்
பன்னும் இன்னிசைப் பதிகமும் பலமுறை பாடி
நன்னெ டுங்குல நான்மறை யவர்தொழ நயந்தார். 370

நீடும் அப்பதி நீங்குவார் நிகழ்திரு நல்லூர்
ஆடு வார்திரு அருள்பெற அகன்றுபோந் தங்கண்
மாடும் உள்ளன வணங்கியே பரவிவந் தணைந்தார்
தேடும் மாலயற் கரியவர் திருக்கரு காவூர். 371

வந்து பந்தர்மா தவிமணங் கமழ்கரு காவூர்ச்
சந்த மாமறை தந்தவர் கழலிணை தாழ்ந்தே
"அந்தம் இல்லவர் வண்ணம்ஆ ரழல்[5] வண்ணம்" என்று
சிந்தை இன்புறப் பாடினார் செழுந்தமிழ்ப் பதிகம். 372

பதிக இன்னிசை பாடிப்போய்ப் பிறபதி பலவும்
நதிஅ ணிந்தவர் கோயில்கள் நண்ணியே வணங்கி
மதுர முத்தமிழ் வாசகர் அணைந்தனர் மன்றுள்
அதிர்சி லம்படி யார்மகிழ் அவளிவ ணல்லூர். 373

மன்னும் அப்பதி வானவர் போற்றவும் மகிழ்ந்த
தன்மை யார்பயில் கோயிலுள் தம்பரி சுடையார்
என்னும் நாமமும் நிகழ்ந்திட ஏத்திமுன் இறைஞ்சிப்
பன்னு சீர்ப்பதி பலவும்அப் பாற்சென்று பணிவார். 374

பா - ம்—[1] வரைநிகர். [2] பெருகுசீர். [3] அப்பதிதனில். [4] மின்னு செஞ்சடை. [5] வண்ணமாம் அழல்.

பழுதில் சீர்த்திருப் பரிதிநன் னியமமும் பணிந்தங்(கு)
எழுது மாமறை[1] யாம்பதி கத்திசை போற்றி
முழுதும் ஆனவா கோயில்கள் வணங்கியே முறைமை
வழுவி லார்[2]திருப் பூவனூர் வணங்கிவந் தணைந்து. 375

பொங்கு காதலிற் போற்றிஅங் கருளுடன் போந்து
பங்க யத்தடம் பணைப்பதி பலவும்முன் பணிந்தே
எங்கும் அன்பர்கள் ஏத்தொலி எடுக்கவந் தணைந்தார்
அங்க ணர்க்கிடம் ஆகிய பழம்பதி ஆவூர். 376

பணியும் அப்பதிப் பசுபதீச் சரத்தினி திருந்த[3]
மணியை உள்புக்கு வழிபடும் விருப்பினால் வணங்கித்
தணிவில் காதலில் தண்டமிழ் மாலைகள் சாத்தி
அணிவி ளங்கிய திருநலூர் மீண்டும்வந் தணைந்தார். 377

மறைவி ளங்கும்அப் பதியினில் மணிகண்டர் பொற்றாள்
நிறையும் அன்பொடு வணங்கியே நிகழ்பவர் நிலவும்
பிறைஅ ணிந்தவர் அருளபெறப் பிரசமென் மலர்வண்(டு)
அறைந றும்பொழில் திருவலஞ் சுழியில்வந் தணைந்தார். 378

மதிபு னைந்தவர் வலஞ்சுழி மருவுமா தவத்து
முதிரும் அன்பர்கள் முத்தமிழ் விரகர்தம் முன்வந்(து)
எதிர்கொள் போழ்தினில் இழிந்தவர் எதிர்செல மதியைக்
கதிர்செய் வெண்முகிற் குழாம்புடை சூழ்ந்தெனக் கலந்தார்.

கலந்த அன்பர்கள் தொழுதெழக் கவுணியர் தலைவர்
அலர்ந்த செங்கம லக்கரங் குவித்துடன் அணைவார்
வலஞ்சு ழிப்பெரு மான்மகிழ் கோயில்வந் தெய்திப்
பொலங்கொள் நீள்சுடர்க் கோபுரம் இறைஞ்சியுட் புகுந்தார்[4]

மருவ லார்புரம் முனிந்தவர் திருமுன்றில் வலங்கொண்(டு)
உருகும் அன்புடன் உச்சிமேல் அஞ்சலி யினராய்த்
திருவ லஞ்சுழி உடையவர் சேவடித் தலத்தில்
பெருகும் ஆதர வுடன்பணிந் தெழுந்தனர் பெரியோர். 381

---

பா - ம்—[1] நான்மறை. [2] வழுவில்சீர்த். [3] சுரத்திருந்தருளும்; சரத்தினிதமர்ந்து. [4] புக்கார்.

ஞான போனகர் நம்பர்முன் தொழுதெழு விருப்பால்
ஆன காதலில் அங்கண ரவர்தமை வினவும்
ஊன மில்இசை யுடன்விளங் கியதிருப் பதிகம்
பான லார்மணி கண்டரைப் பாடினார் பரவி. 382

புலன்கொள் இன்தமிழ்[1] போற்றினர் புறத்தினில் அணைந்தே
இலங்கு நீர்ப்பொன்னி சூழ்திருப் பதியினில் இருந்து
நலங்கொள் காதலின் நாதர்தாள் நாள்தொறும் பரவி
வலஞ்சு ழிப்பெரு மான்தொண்டர் தம்முடன் மகிழ்ந்தார். 383

மகிழ்ந்த தன்தலை வாழும்அந் நாளிடை வானில்
திகழ்ந்த ஞாயிறு துணைப்புணர் ஓரையுட் சேர்ந்து
நிகழ்ந்த தன்மையில் நிலவும்ஏழ் கடல்நீர்மை குன்ற
வெகுண்டு வெங்கதிர் பரப்பலின் முதிர்ந்தது வேனில். 384

தண்பு னற்குளிர் கால்நறுஞ் சந்தனத் தேய்வை
பண்பு நீடிய வாசமென் மலர்பொதி பனிநீர்
நண்பு டைத்துணை நகைமணி[2] முத்தணி நாளும்
உண்ப மாதுரி யச்சுவை உலகுளோர் விரும்ப. 385

அறல்மலியுங் கான்யாற்றின் நீர்நசையால் அணையுமான்
பெறல்அரிய புனல்என்று பேய்த்தேரின் பின்தொடரும்;[3]
உறையுணவு கொள்ளும்புள் தேம்பவயல்[4] இரைதேரும்;
பறவைசிறை விரித்தொடுங்கப் பனிப்புறத்து வதியுமால. 386

நீணிலைமா ளிகைமேலும் நிலாமுன்றின் மருங்கினிலும்
வாணிழைநற் சோலையிலும் மலர்வாவிக் கரைமாடும்
பூணிலவு முத்தணிந்த பூங்குழலார் முலைத்தடத்தும்
காணுமகிழ்ச் சியின்மலர்ந்து மாந்தர்கலந் துறைவரால். 387

மயிலொடுங்க வண்டாட மலர்க்கமல முகைவிரியக்
குயிலொடுங்காச்[5] சோலையின்மென் தளிர்கோதிக் கூவிஎழத்
துயிலொடுங்கா உயிர்[6]அனைத்தும் துயில்பயிலச் சுடர்வானில்
வெயிலொடுங்கா வெம்மைதரும் வேனில்விரி தருநாளில்.[7] 388

---

பா - ம்—[1] இன்னிசை. [2] நகைமதி. [3] பின்படரும். [4] தேம்பிஅயல். [5] குயிலொடுங்குந். [6] ஊர். [7] வேனில்தருமந் நாளில்.

சண்பைவரும் பிள்ளையார் சடாமகுடர் வலஞ்சுழியை
எண்பெருகத் தொழுதேத்திப் பழையாறை எய்துதற்கு
நண்புடைய அடியார்க ளுடன்போத நடந்தருளி
விண்பொருநீள் மதிளாறை மேற்றளிசென் றெய்தினார். 389

திருவாறை மேற்றளியில் திகழ்ந்திருந்த[1] செந்தீயின்
உருவாளன் அடிவணங்கி உருகியஅன் பொடுபோற்றி
மருவாருங் குழல்மலையாள்[2] வழிபாடு செய்யஅருள்
தருவார்தந் திருச்சத்தி முற்றத்தின் புறஞ்சார்ந்தார். 390

திருச்சத்தி முற்றத்திற் சென்றெய்தித் திருமலையாள்
அருச்சித்த சேவடிகள் ஆர்வமுறப் பணிந்தேத்திக்
கருச்சுற்றில் அடையாமற் கைதருவார் கழல்பாடி
விருப்புற்றுத் திருப்பட்டீச் சரம்பணிய மேவுங்கால். 391

வெம்மைதரு வேனிலிடை வெயில்வெப்பந் தணிப்பதற்கு
மும்மைநிலைத் தமிழ்விரகர் முடிமீதே சிவபூதம்
தம்மைஅறி யாதபடி தண்தரளப் பந்தர்எடுத(து)
"எம்மைவிடுத் தருள்புரிந்தார் பட்டீசர்" என்றியம்ப.[3] 392

அவ்வுரையும் மணிமுத்தின் பந்தரும்ஆ காயம்எழச்
செவ்வியமெய்ஞ் ஞானமுணர் சிரபுரத்துப் பிள்ளையார்
"இவ்வினைதான் ஈசர்திரு வருளாகில் இசைவ"தென
மெய்விரவு புளகமுடன் மேதினியின் மிசைத்தாழ்ந்தார். 393

அதுபொழுதே அணிமுத்தின் பந்தரினை அருள்சிறக்கக்
கதிரொளிய[4] மணிக்காம்பு பரிசனங்கள் கைக்கொண்டார்
மதுரமொழி மறைத்தலைவர் மருங்கிமையோர் பொழிவாசப்
புதுமலரால் அப்பந்தர் பூம்பந்த ரும்போலும். 394

தொண்டர்குழாம் ஆர்ப்பெடுப்பச் சுருதிகளின் பெருந்துழனி
எண்டிசையும் நிறைந்தோங்க[5] எழுந்தருளும் பிள்ளையார்
வெண்டரளப் பந்தர்நிழல் மீதணையத் திருமன்றில்
அண்டர்பிரான் எடுத்ததிரு வடிநீழல் எனஅமர்ந்தார். 395

---

பா - ம்—[1] வீற்றிருந்த. [2] ஏழலுமையாள். [3] என்றியம்பும்.
[4] கதிரொளிசெய். [5] எழுந்தோங்க.

பாரின்மிசை அன்பருடன் வருகின்றார் பன்னகத்தின்
ஆரம்அணிந் தவர்தந்த அருட்கருணைத் திறம்போற்றி
ஈரமனங் களிதழைப்ப எதிர்கொள்ள முகமலர்ந்து
சேரவருந் தொண்டருடன் திருப்பட்டீச் சரம்அணைந்தார். 396

சென்றணைந்து திருவாயிற புறத்திறைஞ்சி உள்புக்கு
வென்றிவிடை யவர்கோயில் வலங்கொண்டு வெண்கோட்டுப்
பன்றிகிளைத்[1] தறியாத பாததா மரைகண்டு
முன்தொழுது விழுந்தெழுந்து மொழிமாலை போற்றிசைத்தார்.

அருள்வெள்ளத்[2] திறம்பரவி அளப்பரிய ஆனந்தப்
பெருவெள்ளத் திடைமூழ்கிப் பேராத பெருங்காதல்
திருவுள்ளப் பரிவுடனே செம்பொன்மலை வல்லியார்
தருவள்ளத் தமுதுண்ட சம்பந்தர் புறத்தணைந்தார். 398

அப்பதியில் அமர்கின்ற ஆளுடைய பிள்ளையார்
செப்பருஞ்சீர்த் திருவாறை வடதளியில் சென்றிறைஞ்சி
ஒப்பரிய தமிழ்பாடி உடன்அமருந் தொண்டரொடு[3]
எப்பொருளு மாய்நின்றார் இரும்பூளை எய்தினார். 399

தேவர்பிரான் அமர்ந்ததிரு இரும்பூளை சென்றெய்தக்
காவணநீள் தோரணங்கள் நாட்டியுடன் களிசிறப்பப்
பூவண[4]மா லைகள்நாற்றிப் பூரணபொற் குடம்நிரைத்தங்(கு)
யாவர்களும் போற்றிசைப்பத் திருத்தொண்டர்எதிர்கொண்டார்.

வண்டமிழின் மொழிவிரகர் மணிமுத்தின் சிவிகையினைத்
தொண்டர்குழாத் தெதிர்இழிந்தங் கவர்தொழுததா முந்தொழு
அண்டர்பிரான் கோயிலினை அணைந்திறைஞ்சி முன்நின்று [தே
பண்டரும்இன் னிசைப்பதிகம் பரம்பொருளைப் பாடுவார். 401

நிகரிலா மேருவரை அணுவாக நீண்டானை
நுகர்கின்ற தொண்டர்தமக் கமுதாகி நொய்யானைத்
தகவொன்ற அடியார்கள் தமைவினவித்[5] தமிழ்விரகர்
பகர்கின்ற அருமறையின் பொருள்விரியப் பாடினார். 402

---

பா - ம்—[1] கிழித். [2] அருள் வள்ளல். [3] தொண்டருடன். [4] பூவணை. [5] விரவித்.

பாடும்அர தைப்பெரும் பாழியே முதலாகச்
சேடர்பயில் திருச்சேறை திருநாலூர் குடவாயில்
நாடியசீர் நறையூர்தென் திருப்புத்தூர் நயந்திறைஞ்சி
நீடுதமிழ்த் தொடைபுனைந்தந் நெடுநகரில் இனிதமர்ந்தார். 403

அங்கண்இனி தமருநாள் அடல்வெள்ளே னத்துருவாய்ச்
செங்கண்நெடு மால்பணியுஞ் சிவபுரத்துச் சென்றடைந்து
கங்கைசடைக் கரந்தவர்தங் கழல்வணங்கிக் காதலினால்
பொங்கும்இசைத் திருப்பதிகம் முன்னின்று போற்றிசைத்தார்.

போற்றிசைத்துப் புனிதர்அருள் பெற்றுப்போந் தெவ்வுருவும்[1]
தோற்றுவித்த அயன்போற்றுந் தோணிபுரத் தந்தணனார்
ஏற்றுமிசை ஏற்றுகந்த[2] இறைவர்தமை ஏததுதற்கு
நாற்றிசையோர் பரவுதிருக் குடமூக்கு நண்ணினார். 405

தேமருவு மலர்ச்சோலைத் திருக்குடமூக் கினிற்செல்வ
மாமறையோர் பூந்தராய் வள்ளலார் வந்தருளத
தூமறையின் ஒலிபெருகத் தூரியமங் கலம்முழங்கக்
கோமுறைமை எதிர்கொண்டு தம்பதியுட்[3] கொடுபுக்கார். 406

திருஞான சம்பந்தர் திருக்குடமூக் கினைச்சேர
வருவார்தம் பெருமானை வண்டமிழின் திருப்பதிகம்
உருகாநின் றுளம்மகிழக்[4] "குடமூக்கை உவந்திருந்த
பெருமான்எம் இறை"என்று பெருகிசையால் பரவினார். 407

வந்தணைந்து திருக்கீழ்க்கோட் டத்திருந்த வான்பொருளைச்
சிந்தைமகிழ வுறவணங்கித் திருத்தொண்ட ருடன்செல்வார்
அந்தணர்கள் புடைசூழ்ந்து போற்றிசைப்ப அவரோடும்
கந்தமலர்ப் பொழில்சூழ்ந்த காரோணஞ் சென்றடைந்தார். 408

பூமருவும் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்தம்
மாமகந்தா னாடுதற்கு வந்துவழி படுங்கோயில்
தூமருவு மலர்க்கையால் தொழுதுவலங் கொண்டணைந்து
காமர்கெட நுதல்விழித்தார் கழல்பணிந்து களித்தார். 409

---

பா - ம்—[1] தெவ்வுயிரும். [2] ஏற்றுவந்த. [3] தம்பதியிற். [4] நின்றுண் மகிழக.

கண்ணாரும் அருமணியைக்[1] காரோணத் தாரமுதை
நண்ணாதார்[2] புரம்எரித்த நான்மறையின் பொருளானைப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பணிந்தேத்திப் பிறபதியும்
எண்ணார்ந்த சீரடியா ருடன்பணிவுற் றெழுந்தருளி 410

திருநாகேச் சரத்தமர்ந்த செங்கனகத் தனிக்குன்றைக்
கருநாகத் துரிபுனைந்த கண்ணுதலைச் சென்றிறைஞ்சி
அருஞானச் செந்தமிழின் திருப்பதிகம் அருள்செய்து
பெருஞான சம்பந்தர் பெருகார்வத் தின்புற்றார். 411

மாநாகம்[3] அருச்சித்த மலர்க்கமலத் தாள்வணங்கி
நாளும் பரவுவார் பிணிதீர்க்கும் நலம்போற்றிப்
பாலுறும் மணிவாயர் பரமர்திரு விடைமருதில்
பூநாறும் புனற்பொன்னித் தடங்கரைபோய்ப் புகுகின்றார். 412

ஓங்குதிருப் பதிகம் "ஓ டேகலன்" என் றெடுத்தருளித்
தாங்கரிய பெருமகிழ்ச்சி தலைசிறக்குந் தன்மையினால்
"ஈங்கெனைஆ ளுடையபிரான் இடைமருதீ தோ" என்று
பாங்குடைய இன்னிசையாற் பாடி எழுந் தருளினார். 413

அடியவர்கள் எதிர்கொள்ள எழுந்தருளி அங்கணைந்து
முடிவில்பரம் பொருளானார் முதற்கோயில் முன்இறைஞ்சிப்
படியில்வலங் கொண்டுதிரு முன்பெய்திப் பார்மீது
நெடிதுபணிந் தெழுந்தன்பு நிறைகண்ணீர் நிரந்திழிய. 414

பரவுறுசெந் தமிழ்ப்பதிகம் பாடிஅமர்ந் தப்பதியில்
விரவுவார் திருப்பதிகம் பலபாடி வெண்மதியோ(டு)
அரவுசடைக் கணிந்தவர்தந் தாள்போற்றி ஆர்வத்தால்
உரவுதிருத் தொண்டருடன் பணிந்தேத்தி உறையுநாள். 415

மருங்குளநற் பதிகள்பல பணிந்துமா நதிக்கரைபோய்க்
குரங்காடு துறையணைந்து குழகனார் குரைகழல்கள்
பெருங்காத லிற்[4]பணிந்து பேணியஇன் னிசைபெருக
அருங்கலைநூல் திருப்பதிகம் அருள்செய்து பரவினார். 416

---

பா — [1] அருங்கனியைக். [2] நண்ணார்தம். [3] மாநாகம்.
[4] காதலாற்.

அம்ம லர்த்தடம் பதிபணிந் தகன்றுபோந் தருகு
மைம்ம லர்க்களத் திறைவர்தங் கோயில்கள் வணங்கி
நம்ம லத்துயர் தீர்க்க[1]வந் தருளிய ஞானச்
செம்ம லார்திரு ஆவடு துறையினைச் சேர்ந்தார். 417

மூவ ருக்கறி வரும்பொரு ளாகிய மூலத்
தேவர் தந்திரு ஆவடு துறைத்திருத் தொண்டர்
பூவ லம்புதண் பொருபுனல் தடம்பணைப் புகலிக்
காவ லர்க்கெதிர் கொள்ளும்ஆ தரவுடன் கலந்தார். 418

வந்த ணைந்தவர் தொழாமுனம் மலர்புகழ்ச்[2] சண்பை
அந்த ணர்க்கெலாம் அருமறைப் பொருளென வந்தார்
சந்த னத்திலச் சிவிகைநின் றிழிந்தெதிர் தாழ்ந்தே
சிந்தை இன்புற இறைவர்தங் கோயில்முன் சென்றார். 419

நீடு கோபுரம் இறைஞ்சிஉள் புகுந்துநீள் நிலையான்
மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கி
ஆடும் ஆதியை ஆவடு துறையுள்ஆர் அமுதை
நாடு காதலிற் பணிந்தெழுந் தருந்தமிழ் நவின்றார். 420

அன்பு நீடிய அருவிகண் பொழியும்ஆர் வத்தால்
முன்பு போற்றியே[3] புறம்பணை முத்தமிழ் விரகர்
துன்பு போம்மனத் திருத்தொண்டர் தம்முடன் தொழுதே
இன்பம் மேவிஅப் பதியினில் இனிதமர்ந் திருந்தார். 421

மேவி அங்குறை நாளினில் வேள்விசெய் வதனுக்
காவ தாகிய காலம்வந் தணைவுற அணைந்து
தாவில் சண்பையர் தலைவர்க்குத் தாதையார் தாமும்
போவ தற்கரும் பொருள்பெற எதிர்நின்று புகன்றார். 422

தந்தை யார்மொழி கேட்டலும் புகலியார் தலைவர்
முந்தை நாளிலே மொழிந்தமை நினைந்தருள் முன்னி
"அந்த மில்பொரு ளாவன ஆவடு துறையுள்
எந்தை யார்அடித் தலங்களன் றோ?" என எழுந்தார். 423

---

பா - ம்—[1] நீங்க. [2] வளர்புகழச். [3] போற்றியப்.

சென்று தேவர்தம் பிரான்மகிழ் கோயில்முன் பெய்தி
நின்று போற்றுவார் "நீள்நிதி வேண்டினார்க் கீவ(து)
ஒன்றும் மற்றிலேன் உன்னடி அல்லதொன் றறியேன்"
என்று பேரருள் வினவிய செந்தமிழ் எடுத்தார். 424

எடுத்த வண்டமிழ்ப் பதிகநா லடியின்மேல் இருசீர்
தொடுத்த வைப்பொடு தொடர்ந்தஇன் னிசையினால் துதிப்பார்;
மடுத்த காதலில் வள்ளலார் அடியிணை வழுத்தி
அடுத்த சிந்தையால் ஆதரித் தஞ்சலி அளித்தார். 425

நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம் பந்தர்
இச்சை யேபுரிந் தருளிய இறைவர்இன் அருளால்
அச்சி றப்பருள் பூதமுன் விரைந்தகல் பீடத்(து)
உச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று. 426

வைத்த பூதம்அங் கணைந்துமுன் நின்றுநல் வாக்கால்
"உய்த்த இக்கிழி பொன்னுல வாக்கிழி, உமக்கு
நித்த னார்அருள் செய்த"தென் றுரைக்கநேர் தொழுதே
அத்தனார்திரு வருள்நினைந் தவனிமேற் பணிந்தார். 427

பணிந்தெ ழுந்துகை தொழுதுமுன் பனிமலர்ப் பீடத்(து)
அணைந்த ஆடகக் கிழிதனைக் கொண்டரு மறைகள்
துணிந்த வான்பொருள் தரும்பொருள் தூயவாய் மையினால்
தணிந்த சிந்தைஅத் தந்தையார்க் களித்துரை செய்வார். 428

"ஆதி மாமறை விதியினால் ஆறுசூழ் வேணி
நாத னாரைமுன் னாகவே புரியுநல் வேள்வி
தீது நீங்கநீர் செய்யவுந் திருக்கழு மலத்து
வேத வேதியர் அனைவருஞ் செய்யவும் மிகுமால்." 429

என்று கூறிஅங் கவர்தமை விடுத்தபின் அவரும்
நன்றும் இன்புறு மனதொடும் புகலிமேல் நண்ண
வென்றி ஞானசம் பந்தரும் விருப்பொடு வணங்கி
மன்றல் ஆவடு துறையினில் மகிழ்ந்தினி திருந்தார். 430

அண்ண லார்திரு ஆவடு துறைஅமர்ந் தாரை
உண்ணி லாவிய காதலி னாற்பணிந் துறைந்து

மண்ணெ லாம்உய வந்தவர் போந்துவார் சடைமேல்
தெண்ணி லாஅணி வார்திருக் கோழம்பஞ் சேர்ந்தார். 431

கொன்றை வார்சடை முடியரைக் கோழம்பத் திறைஞ்சி
என்றும் நீடிய இன்னிசைப் பதிகம்முன் இயம்பி
மன்று ளார்மகிழ் வைகல்மா டக்கோயில் மருங்கு
சென்று சார்ந்தனர் திருவளர் சிரபுரச் செல்வர். 432

வைகல் நீடுமா டக்கோயில் மன்னிய மருந்தைக்
கைகள் அஞ்சலி கொண்டுதாழ்ந் தெழுந்துகண அருவி
செய்ய இன்னிசைச் செந்தமிழ மாலைகள் மொழிந்து
நையும் உள்ளத்த ராய்த்திரு நல்லத்தில் நண்ணி. 433

நிலவு மாளிகைத் திருநல்லம் நீடுமா மணியை
இலகு சேவடி இறைஞ்சிஇன் தமிழ்கொடு துதித்துப்
பலவும் ஈசர்தந் திருப்பதி பணிந்துசெல் பவர்தாம்
அலைபு னல்திரு வழுந்தூர்மா டக்கோயில் அடைந்தார். 434

மன்னு மாமடம் மகிழ்ந்தவான் பொருளினை வணங்கிப்
பன்னு பாடலிற் பதிகஇன் னிசைகொடு பரவிப்
பொன்னி மாநதிக் கரையினில் மீண்டுபோந் தணைந்து
சொன்ன வாறறி வார்தமைத் துருத்தியில் தொழுதார். 435

திரைத்த டம்புனற் பொன்னிசூழ திருத்துருத் தியினில்
**"வரைத்த லைப்பசும் பொன்"**எனும் வண்டமிழ்ப் பதிகம்
உரைத்து மெய்யுறப் பணிந்துபோந் துலவும்அந் நதியின்
கரைக்கண் மூவ லூர்க் கண்ணுத லார்கழல் பணிந்தார். 436

மூவ லூர்உறை முதல்வரைப் பரவிய மொழியால்
மேவு காதலில் ஏத்தியே விருப்பொடும் போந்து
பூவ லம்புதண் புனற்பணைப் புகலியர் தலைவர்
வாவி சூழ்திரு மயிலாடு துறையினில் வந்தார். 437

மல்கு தண்டலை மயிலாடு துறையினில் மருவும்
செல்வ வேதியர் தொண்டரோ டெதிர்கொளச் சென்று
கொல்லை மான்மறிக் கையரைக் கோயில்புக் கிறைஞ்சி
எல்லை இல்லதோர் இன்பம்முன் பெருகிட எழுந்தார். 438

உள்ளம் இன்புற உணர்வுறும் பரிவுகொண் டுருகி
வெள்ளந் தாங்கிய சடையரை விளங்குசொற் பதிகத்
தெள்ளும் இன்னிசைத் திளேப்பொடும் புறத்தணேந் தருளி
வள்ள லார்மற்ற வளம்பதி[1] மருவுதல் மகிழ்ந்தார். 439

அத்தி ருப்பதி அகன்றுபோய் அணிகிளர் சூலக்
கைத்த லப்படை வீரர்செம் பொன்பள்ளி கருதி
மெய்த்த காதலில் விளநகர் விடையவர் பாதம்
பத்தர் தம்முடன் பணிந்திசைப் பதிகம்முன் பகர்ந்தார். 440

பாடும் அப்பதி பணிந்துபோய்ப் பறியலூர் மேவும்
'தோடு லாமலர் இதழியும் தும்பையும் அடம்பும்[2]
காடு கொண்டசெஞ் சடைமுடிக் கடவுளர் கருது
நீடு வீரட்டம் பணிந்தனர் நிறைமறை வேந்தர். 441

பரமர் தந்திருப் பறியலூர் வீரட்டம் பரவி
விரவு காதலின் வேலேயின் கரையினே மேவி
அரவ ணிந்தவர் பதிபல அணேந்துமுன் வணங்கிச்
சிரபு ரத்தவர் திருத்தொண்டர் எதிர்கொளச் செல்வார். 442

அடியவர்கள் களிசிறப்பத் திருவேட்டக் குடிபணிந்தங் கலே வாய்ப் போகிக், கடிகமழும் மலர்ப்பழனக் கழனிநாட் டகன் பதிகள் கலந்து நீங்கிக், கொடிமதில்சூழ் தருமபுரங் குறுகினூர் "குண்டர்சாக் கியர்தங் கொள்கை, படிஅறியப் பழு"தென்றே மொழிந்துய்யும் நெறிகாட்டும் பவள வாயர். 443

தருமபுரம் பெரும்பாணர் திருத்தாயர் பிறப்பிடமாம் அத ஞற் சார, வருமவர்தஞ் சுற்றத்தார் வந்தெதிர்கொண் டடி வணங்கி வாழ்த்தக் கண்டு, பெருமையுடைப் பெரும்பாணர் அவர்க்குரைப்பார் பிள்ளேயார் அருளிச் செய்த, அருமையுடைப் பதிகந்தாம் யாழினுற் பயிற்றும்பே றருளிச் செய்தார். 444

கிளேஞரும்மற் றதுகேட்டுக் "கெழுவுதிருப் பதிகத்திற் கிளர்ந்த ஓசை, அளவுபெறக் கருவியில்நீர் அமைத்தியற்றும் அதனுலே அகிலம் எல்லாம், வளர இசை நிகழ்வ"தென விளம்

---

பா - ம்—[1] வள்ளலாரும் மற்றுளபதி. [2] அறுகும்.

புதலும் வளம்புகலி மன்னர் பாதம், உளம்நடுங்கிப் பணிந்து திரு நீலகண்டப் பெரும்பாணர் உணர்த்து கின்றார். 445

"அலகில்திருப் பதிகஇசை அளவுபடா வகைஇவர்கள் அன்றி யேயும், உலகில்உளோ ருந்தெரிந்தங் குண்மையினை அறிந்துய்ய உணர்த்தும் பண்பால், பலர்புகழுந் திருப்பதிகம் பாடிஅரு ளப்பெற்றால் பண்பு நீடி, "இலகும்இசை யாழின்கண் அடங்காமை யான்காட்டப் பெறுவன்" என்றார். 446

வேதநெறி வளர்ப்பவரும் விடையவர்முன் தொழுதுதிருப் பதிகத் துண்மை, பூதலத்தோர் கண்டத்தும் கலத்தினிலும் நிலத்தநூல் புகன்ற பேத,[1] நாதஇசை முயற்சிகளால் அடங் காத வகைகாட்ட நாட்டு கின்றார், "மாதர்மடப் பிடி"பாடி வணங்கினார் வானவரும் வணங்கி ஏத்த. 447

வண்புகலி வேதியனார் "மாதர்மடப் பிடி"எடுத்து வனப்பிற் பாடிப், பண்பயிலுந் திருக்கடைக்காப் புச்சாத்த அணைந்து பெரும் பாண னார்தாம், நண்புடையாழ்க் கருவியினில் முன்பு போல்கைக்கொண்டு நடத்தப் புக்கார்க்(கு), எண்பெருகும் அப் பதிகத் திசைநரம்பில் இடஅடங்கிற் றில்லை அன்றே. 448

அப்பொழுது திருநீல கண்டஇசைப் பெரும்பாணர் அதனை விட்டு, மெய்ப்பயமும் பரிவும்உறப் பிள்ளையார் கழலிணைவீழ்ந் தெழுந்துநோக்கி, "இப்பெரியோர் அருள்செய்த[2] திருப்பதிகத் திசையாழில் ஏற்பன் என்னச், செப்பியதிக்[3] கருவியைநான் தொடுதலினன் றோ?"என்று தெளிந்து செய்வார். 449

"வீக்குநரம் புடையாழி னால்விளைந்த திது"என்றங் கதனைப் போக்க, ஓக்குதலுந் தடுத்தருளி "ஐயரே! உற்றஇசை அளவி னால்[4] நீர், ஆக்கியஇக் கருவியினைத் தாரும்"என வாங்கிக்கொண் டவனிசெய்த, பாக்கியத்தின் மெய்வடிவாம் பாலரு வாயர் பணித் தருளுகின்றார்.[5] 450

---

பா - ம்—[1] வேத. [2] அருள்செய்ய. [3] செப்பியஇக். [4] இசை உணவினால். [5] பரிந்தருளுகின்றார்.

ஐயர்! நீர் யாழ்இதனை முரிக்குமதென்? ஆளுடையா ளுடனே கூடச், செய்யசடை யார்அளித்த திருவருளின் பெருமையெலாந் தெரிய[1] நம்பால், எய்திய இக் கருவியினில் அளவுபடு மோ? நந்தம் இயல்புக் கேற்ப, வையகத்தோர் அறிவுற இக் கருவிஅள வையின் இயற்றல் வழக்கே'' என்றார். 451

"சிந்தையால் அளவுபடா இசைப்பெருமை செயலளவில் எய்து மோ? நீர், இந்தயா ழினைகொண்டே இறைவர்திருப் பதிகஇசை இதனில் எய்த, வந்தவா றேபாடி வாசிப்பீர்'' எனக்கொடுப்பப் புகலிமன்னர், தந்தயா ழினைத்தொழுது கைக்கொண்டு பெரும்பாணர் தலைமேற் கொண்டார். 452

அணைவுறும்அக் கிளைஞருடன் பெரும்பாணர் ஆளுடைய பிள்ளையார்தம், துணைமலர்ச்சே வடிபணிந்து துதித்தருளத் தோணிபுரத் தோன்ற லாரும், இணையில்பெருஞ் சிறப்பருளித் தொண்டருடன் அப்பதியில் இனிது மேவிப், பணைநெடுங்கை மதயானை உரித்தவர்தம் பதிபிறவும் பணியச் செல்வார். 453

பங்கயப்பா சடைத்தடஞ்சூழ் பழனநாட் டகன்பதிகள் பலவும் நண்ணி, மங்கையொரு பாகத்தார் மகிழ்கோயில் எனைப் பலவும் வணங்கிப் போற்றித, தங்கிசையாழ்ப் பெரும்பாண ருடன்மறையோர் தலைவனார் சென்று சார்ந்தார், செங்கைமான் மழுவேந்தும் சினவிடையார் அமர்ந்தருளுந் திருநள் ளாறு. 454

நள்ளாற்றில் எழுந்தருள நம்பர்திருத் தொண்டர்குழாம் நயந்து சென்று, கொள்ளாற்றில் எதிர்கொண்டு குலவியுடன் சூழ்ந்தணையக் குறுகிக் கங்கைத், தெள்ளாற்று வேணியர்தந் திருவளர்கோ புரம்இறைஞ்சிச் செல்வக் கோயில், உள்ளாற்ற வலங்கொண்டு திருமுன்பு தாழ்ந்தெழுந்தார் உணர்வின் மிக்கார்.

உருகியஅன் புறுகாதல் உள்ளுருகி நனைஈரம் பெற்றாற் போல, மருவுதிரு மேனிஎலாம் முகிழ்த்தெழுந்த மயிர்ப்புளகம் வளர்க்கு நீராய், அருவிசொரி[2] திருநயனத் தானந்த வெள்ளம்

---

பா - ம்—[1] தெளிய ; திகழ. [2] சொரிந்.

இழிந் தலைய நின்று, பொருவில்பதி கம்"போக மார்த்தபூண் முலையாள்"என் றெடுத்துப் போற்றி. 456

யாணரம்பில் ஆரஇயல் இசைகூடப் பாடியே எண்ணில் கற்பச், சேணளவு படஓங்குந் திருக்கடைககாப் புச்சாத்திச் செங்கண் நாகப், பூணகலத் தவர்பாதம் போற்றிசைத்துப் புறத் தணைந்து புவனம் ஏத்தும், பாணனார் யாழிலிடப் பாலறு வாயர் அருள் பணிதத போது. 457

பிள்ளையார் திருத்தாளங் கொடுபாடப் பின்புபெரும் பாண னார்தாம், தெள்ளமுத இன்னிசையின் தேம்பொழிதந் திரியா ழைச் சிறக்க வீக்கிக, கொள்ளஇடும் பொழுதின்கட் குவலயத் தோர் களிகூரக் குலவு சண்பை, வள்ளலார் திருவுள்ளம் மகிழ்ந்துதிருத் தொண்டருடன் மருவுங் காலை. 458

மன்னுதிரு நள்ளாற்று மருந்தைவணங் கிப்போந்து வாச நன்னீர்ப், பொன்னிவளந் தரு[1]நாட்டுப் புறம்பணைசூழ் திருப் பதிகள் பலவும் போற்றிச்,[2] செந்நெல்வயற் செங்கமல முக மலருந் திருச்சாத்த மங்கை மூதூர், தன்னில்எழுந் தருளினார் சைவசிகா மணியார்மெய்த் தவத்தோர் சூழ. 459

நிறைசெல்வத் திருச்சாத்த மங்கையினில் நீலநக்கர் தாமுஞ் சைவ, மறையவனார் எழுந்தருளும் படிகேட்டு வாழ்ந்துவழி விளககி எங்கும், துறைமலிதோ ரணங்கதலி கமுகுநிறை குடந் தூப தீபம் ஆக்கி, முறைமையில்வந் தெதிர்கொள்ள உடனணைந்து முதல்வனார் கோயில் சார்ந்தார். 460

அயவந்தி அமர்ந்தருளும் அங்கணர்தங் கோயில்மருங் கணைந்து வானோர், உயவந்தித் தெழுமுன்றில் புடைவலங்கொண் டுட்புக்கா(று) ஒழுகுஞ் செக்கர், மயவந்தி மதிச்சடையார் முன் தாழ்ந்து மாதவம்இவ் வையமெல்லாஞ், செயவந்த அந்தணனார் செங்கைமேற் குவித்தெழுந்து திருமுன் நின்றார். 461

போற்றிசைக்கும் பாடலினாற் பொங்கிஎழும் ஆதரவு பொழிந்து விம்ம,[3] ஏற்றின்மிசை இருப்பவர்தம் எதிர்நின்று

பா-ம—[1] வளத்திரு. [2] பிறவும்போற்றச். [3] விம்மி.

துதித்துப்[1]போந்தெல்லை இல்லா, நீற்றுநெறி மறையவனார் நீல நக்கர் மனையில்எழுந்தருளி அன்பால், ஆற்றும்விருந் தவர் அமைப்ப அன்பருடன் இன்புற்றங் கமுது செய்தார். 462

நீடுதிரு நீலநக்கர் நெடுமனையில் விருந்தமுது செய்து நீர்மைப்,[2] பாடுமியாழ்ப் பெரும்பாண ருந்தங்க அங்கிரவு பள்ளி மேவி, ஆடுமவர் அயவந்தி பணிவதனுக் கன்பருடன் அணைந்து சென்று, நாடியநண் புடைநீல நக்கடிக ளுடன்நாதர் கழலில் தாழ்ந்து. 463

கோதிலா ஆரமுதைக் கோமளக்கொம் புடன்கூடக் கும்பிட் டேத்தி, ஆதியாம்[3] மறைபொருளால் அருந்தமிழின் திருப்பதிகம் அருளிச் செய்வார், நீதியால்[4] நிகழ்கின்ற நீலநக்கர் தம்பெருஞ் சீர் நிகழ வைத்துப, பூதிசா தனர்பரவும் புனிதஇய லிசைபபதிகம் போற்றி செய்தார். 464

பரவியகா தலிற்பணிந்து பாலரு வாயர்புறத் தணைந்து பண்பு, விரவியநண் புடையடிகள் விருப்புறுகா தலில்தங்கி மேவும் நாளில், அரவணிந்தார் பதிபிறவும் பணியஎழும் ஆதரவால் அணைந்து செல்வார், உரவுமனக் கருத்தொன்றும் உள்ள முடை யவர்க்குவிடை உவந்து நல்கி. 465

மற்றவர்தம் பெருங்கேண்மை மகிழ்ந்து கொண்டு மாலயனுக் கரியபிரான் மருவு தானம், பற்பலவுஞ் சென்றுபணிந் தேத்திப் பாடிப் பரமர்[5]திருத தொண்டர்குழாம் பாங்கின் எய்தக், கற்றவர்வாழ் கடல்நாகைக் காரோ ணத்துக் கண்ணுதலைக் கைதொழுது கலந்த ஓசைச், சொற்றமிழ்மா லைகள்பாடிச் சில நாள வைகித் தொழுதகன்றார் தோணிபுரத் தோன்ற லார்தாம்.

கழிக்கானல் மருங்கணை யுங் கடல்நாகை யதுநீங்கிக் கங்கை யாற்றுச், சுழிக்கானல் வேணியர்தம் பதிபலவும் பரவிப்போய்த் தோகை மார்தம், விழிக்காவி மலர்பழனக் கீழ்வேளூர் விமலர் கழல் வணங்கி ஏத்தி, மொழிக்காதல தமிழ்மாலை புனைந்தருளி அங்ககன்றார் மூதூர் நின்றும். 467

பா - ம்—[1] திளைத்துப். [2] நீர்மை. [3] ஆதிமா. [4] நீதியாய். [5] பரவு.

அருகணையுந் திருப்பதிகள் ஆனவெலாம் அங்கணரைப் பணிந்து போற்றிப், பெருகியஞா னம்பெற்ற பிள்ளையார் எழுந் தருளும் பெருமை கேட்டுத், திருமருவு செங்காட்டங் குடிநின் றுஞ் சிறுத்தொண்ட ரோடிச் சென்றங், குருகுமனங் களிசிறப்ப எதிர்கொண்டு தம்பதியுட் கொண்டு புக்கார். 468

சிறுத்தொண்ட ருடன்கூடச் செங்காட்டங் குடியில்எழுந் தருளிச் சீர்த்தி, நிறுத்தெண்டிக் கினுநிலவுந் தொண்டரவர் நண் பமர்ந்து நீல கண்டம், பொறுத்தண்டர் உயக்கொண்டார் கண பதீச் சரத்தின்கட் போகம் எல்லாம், வெறுத்துண்டிப் பிச்சை நுகர் மெய்த்தொண்ட ருடன்அணைந்தார் வேத கீதர்.[1] 169

அங்கணைந்து கோயில்வலங் கொண்டருளி அரவணிந்தார்[2] அடிககீழ வீழ்ந்து, செங்கணஅரு விகள்பொழியத் திருமுன்பு பணிந்தெழுந்து செங்கை கூப்பித், தங்கள்பெருந் தகையாரைச் சிறுத்தொண்டர் தொழஇருந்த தன்மை போற்றிப், பொங்கி எழும் இசைபாடிப் போற்றிசைதது வொருபரிசு புறம்பு போந்தார். 470

போந்துமா மாததிரர்தம் போரேற்றின் திருமனையிற் புகுந்து சிந்தை, வாய்ந்தமா தவரவர்தாம் மகிழ்ந்தருள அமர்ந் தருளி மதில்கள் மூன்றும், காய்ந்தமால் விடையார்தங் கணபதீச் சரம்பரவு காதல் கூர, ஏந்துநூல் அணிமார்பர் இன்புற்றங் கன்பருடன் இருந்த நாளில். 471

திருமருகல் நகரின்கண் எழுந்தருளித் திங்களுடன் செங்கட் பாம்பு, மருவுநெடுஞ் சடைமவுலி மாணிக்க வண்ணர்கழல் வணங்கிப் போற்றி, உருகியஅன் புறுகாதல் உள்ளலைப்பத் தெள்ளும்இசை யுடனே கூடப், பெருகுதமிழத் தொடைசாத்தி அங்கிருந்தார் பெரும்புகலிப் பிள்ளை யார்தாம். 472

அந்நாளில் ஒருவணிகன் பதிக னாகி அணைவானோர் கன்னி யையும் உடனே கொண்டு, பொன்னூர்மே ருச்சிலையார் கோயில் மாடு புறத்திலொரு மடத்திரவு துயிலும் போது, மின்னூர்வெள்

பா - ம்—[1] வாயர். [2] ஆறணிந்தார்.

எயிறறரவு கவ்வுதலும் கிளர்ந்த விடவேகங் கடிதுதலை மீக்கொண்[1] டேறத், தன்னுவி நீங்குமவன் தன்மை கண்டு சாயலிளங் கன்னிநிலை தளர்ந்து சோர்வாள். 473

வாளரவு தீண்டவுந்தான் தீண்ட கில்லாள் மறுமாற்றம் மற்றொருவர் கொடுப்பா ரின்றி, ஆளரியே றனையானை அணுக வீழ்ந்தே அசைந்தமலர்க் கொடிபோலவாள் அரற்றும் போது, கோளுருமும் புள்ளரசும் அனையார் எல்லாக் கொள்கையினு லுந்தீர்க்கக் குறையா தாக, நீளிரவு புலர்காலை மாலை வாச நெறிகுழலாள் நெடிதயர்ந்து புலம்பு கின்றாள். 474

"அன்னையையும் அத்தனையும் பிரிந்து நின்னை அடைவாக உடன் போந்தேன் அரவால் வீடி,[2] என்னை உயிர் விட்டகன்றாய்[3] யானென் செய்கேன்? இவ்விடுக்கண் தீர்க்கின்றார் யாருமில்லை, மன்னியசீர் வணிகர்குல மணியே! யானும் வாழேன்" என்றென் றயர்வாள் மதியி னாலே, சென்னிஇளம் பிறைஅணிவார் கோயில் வாயில் திசைநோக்கித் தொழுதழுதாள்[4] செயலொன் றில்லாள் 475

"அடியாராம் இமையவர்தங் கூட்டம் உய்ய அலைகடல்வாய்[5] நஞ்சுண்ட அமுதே! செங்கண், நெடியானும் நான்முகனும் காணுக் கோல நீலவிட அரவணிந்த நிமலா! வெந்து, பொடியான காமன்உயிர் இரதிவேண்டப் புரிந்தளித்த புண்ணியனே! பொங்கர் வாசக்,[6] கடியாரும் மலர்ச்சோலை மருங்கு சூழுங் கவின்மருகற் பெருமானே! காவாய்" என்றும் 476

"வந்தடைந்த சிறுமறையோன் உயிர்மேற் சீறி வருங் காலன் பெருங்கால வலயம் போலும், செந்தறுகண் வெள்ளெயிற்றுக் கரியகோலம் சிதைந்துருள உதைத்தருளுஞ் செய்ய தாளா!, இந்தவிடக் கொடுவேகம் நீங்கு மாறும் யான்இடுக்கட் குழி[7] நின்றும் ஏறு மாறும், அந்திமதிக் குழவிவளர் செய்ய வேணி அணிமருகற் பெருமானே! அருளாய்" என்றும். 477

---

பா - ம்—[1] மேற்கோண். [2] வாடி. [3] என்னையுமிங் கிட்டகன்றாய். [4] கைதொழுதாள். [5] அலைவாயின. [6] பொங்கு வாசக். [7] சுழி.

இத்தன்மை சிவனருளே சிந்தித் தேங்கும் இளங்கொடி போல் நுடங்கும்இடை ஏழை ஏத்தும், அத்தன்மை ஓசைஎழுந் தெங்கள் சண்பை ஆண்டகையார் கும்பிடவந் தணைகின் றார்தம், மெய்த்தன்மை விளங்குதிருச் செவியிற் சார மேவுதலுந் திருவுள்ளக் கருணை மேன்மேல், வைத்தன்னம் எனஅயர்வாள் மாடு நீடு மாதவத்தோர் சூழஎழுந் தருளி வந்தார். 478

சிரபுரத்து மறையவனார் சென்று நின்று சிவபெருமான் அருள்போற்றிச் சிந்தை நைந்து, பரிவுறுவாள்[1] தனைநோக்கிப் "பயப்படேல்நீ பருவரலும் நும்பரிசும் பகர்வாய்" என்னக், கரமலர்கள் உச்சியின்மேற் குவித்துக்கொண்டு கண்ணருவி சொரிந்திழியக் காழிவேதப், புரவலனார் சேவடிக்கீழ் வீழ்ந்து தாங்கள் போந்ததுவும் புகுந்ததுவும் புகல லுற்றாள். 479

"வளம்பொழில்சூழ் வைப்பூர்க்கோன் தாமன் எந்தை மருமகன்மற் றிவன்,அவற்கு மகளிர் நல்ல, இளம்பிடியார் ஒரெழுவர், இவரில்[2] மூத்தாள் இவனுக்கென் றுரைசெய்தே ஏதிலானுக், குளம்பெருகத் தனம்பெற்றுக் கொடுத்த பின்னும் ஒரொருவராகஎனை ஒழிய ஈந்தான். தளர்ந்தழியும் இவனுக்காத் தகவு செய்தங் கவரைமறைத் திவன்தனையே[3] சார்ந்து போந்தேன்."

மற்றிவனும் வாளரவு[4] தீண்ட மாண்டான், மறிகடலிற் கலங்கவிழ்த்தார்[5] போல நின்றேன், சுற்றத்தார் எனவந்து தோன்றி என்பால் துயரமெலாம்[6] நீங்கஅருள செய்தீர்"என்னக், கற்றவர்கள் தொழுதேத்துங் காழி வேந்தர் கருணையினாற் காரிகையாள தனக்கு நல்கப், பற்றியவாள் அரவுவிடந்[7] தீரு மாறு பணைமருகற் பெருமானைப் பாட லுற்றார். 481

சடையானை எவ்வுயிர்க்குந் தாயா னானைச் சங்கரனைச் சசிகண்ட மவுலி யானை, விடையானை வேதியனை வெண்ணீற் றானை விரவாதார் புரமூன்றும் எரியச் செற்ற, படையானைப் பங்கயத்து மேவி னானும் பாம்பணையில் துயின்றானும் பரவுங்

பா - ம்—[1] பரவுறுவாள். [2] அவரில். [3] இவனையே. [4] வாளரவம். [5] கவிழ்ந்தாற். [6] துயரெலாம். [7] அரவின்விடந்.

கோலம், உடையானை "உடையானே தகுமோ இந்த ஒள்ளிழை யாள் உள்மெலி(வு)?"என் றெடுத்துப் பாட 482

பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றான், சூழ்ந்த பொருவில் திருத் தொண்டர்குழாம் பொலிய ஆர்ப்ப, அங்கையினை உச்சி யின்மேற் குவித்துக் கொண்டங் கருட்காழிப் பிள்ளையார் அடி யில் வீழ்ந்த, நங்கைஅவள் தனைநயந்த நம்பி யோடு நானிலத் தில் இன்புற்று வாழும் வண்ணம், மங்குல்தவழ் சோலைமலி புகலி வேந்தர் மணம்புண ரும் பெருவாழ்வு வகுத்து விட்டார்.

மற்றவர்க்கு விடைகொடுத்தங் கமரு நாளில் மருகல்நக ரினில்வந்து வலிய பாசம்,[1] செற்றபுகழ்ச் சிறுத்தொண்டர் வேண்ட மீண்டுஞ் செங்காட்டங் குடியில்எழுந் தருள வேண் டிப், பற்றியெழுங் காதல்மிக மேன்மேற் சென்று பரமனார் திறத்துன்னிப் பாங்கர் எங்குஞ், சுற்றும்அருந் தவரோடுங் கோயில் எய்திச் சுடர்மழுவாண் டவர்பாதந் தொழுவான் புக்கார். 484

புக்கிறைஞ்சி எதிர்நின்று போற்று கின்றார் பொங்குதிரை நதிப்புனலும் பிறையுஞ் சேர்ந்த, செக்கர்முடிச் சடைமவுலி வெண்ணீற் றார்தந் திருமேனி ஒருபாகம் பசுமை யாக, மைக் குலவு கண்டத்தார் மருகற் கோயில் மன்னுநிலை மனங்கொண்டு வணங்கு வார்முன், கைக்கனலார் கணபதீச் சரத்தின் மேவுங் காட்சிகொடுத் தருளுவான் காட்டக் கண்டார். 485

மருகல் அமர்ந்து நிறைந்த கோலம் மல்குசெங் காட்டங் குடியின் மன்னிப், பெருகு கணபதி யீச்சரத்தார பீடுடைக் கோலமே யாகித் தோன்ற, உருகிய காதலும் மீது பொங்க உலகர்முன் கொள்ளும் உணர்வு நீட, அருவிகண் வார்வுறப் பாட லுற்றார் "அங்கமும் வேதமும்" என்றெ டுத்து. 486

கண்டெதிர்[2] போற்றி வினவிப் பாடிக் கணபதி யீச்சரங் காதலித்த, அண்டர் பிரானை வணங்கி வைகும் அப்பதி யிற்சில நாள்கள் போற்றித், தொண்ட ருடன்அருள் பெற்று மற்றத்

---

பா - ம்—[1] நகர்தனில் நின்று பாசமெல்லாம். [2] கண்டடி.

தொல்லைத் திருப்பதி எல்லை நீங்கிப், புண்டரி கத்தடஞ் சூழ்பழ னப் பூம்புக லூர்தொழப் போது கின்றார். 487

சீரின் மலிந்த சிறப்பின் மேவுஞ் சிறுத்தொண்டர் நண் புடன் செல்ல நல்ல, வேரி நறுந்தொங்கல் மற்றவரும் விடை யரு ளப்பெற்று மீண்ட பின்பு, நீரின் மலிந்த சடையர் மேவி நிகழும் பதிகள் பலப ணிந்து, பாரின் மலிந்து நிறைந்த செல்வம் பயில்புக லூர்நகர்ப் பாங்க ணைந்தார். 488

திருப்புக லூர்த்திருத் தொண்ட ரோடுஞ் செம்மை முருக னார் மெய்ம்ம கிழ்ந்த, விருப்பொடு சென்றெதிர் கொள்ள வந்து வேத முதல்வர்தங் கோயி லெய்திப், பொருப்புறழ கோபுரத் துட்பு குந்து பூமலி முன்றில் புடைவ லங்கொண், டொருப்படு சிந்தையொ டுள்ளணைந் தார் ஓதா து ஞானமெ லாம்உ ணர்ந்தார்.

புக்கெதிர் தாழ்ந்து விழுந்தெ ழுந்து பூம்புக லூர்மன்னு புண்ணியரை, நெக்குரு குஞ்சிந்தை அன்பு பொங்க நிறைமலர்க் கண்ணீர் அருவி செய்ய, மிக்க தமிழ்த்தொடை மாலை சாத்தி மேவிய ஏழிசை பாடிப் போந்து, திக்கு நிறைசீர் முருகர் முன்பு செல்ல அவர்மடஞ் சென்று புக்கார். 490

ஆங்கவர் போற்றுஞ் சிறப்பின் மேவி அப்பதி தன்னில் அமரு நாளில், வாங்கு மலைச்சிலை யார்ம கிழ்ந்த வர்த்தமா னீச் சரந் தான்வணங்கி, ஓங்கிய அன்பின் முருக னார்தம் உயர்திருத் தொண்டு சிறப்பித் தோங்கும், பாங்குடை வண்டமிழ் பாடி நாளும் பரமர்தம் பாதம் பணிந்தி ருந்தார். 491

மற்றத் திருப்பதி வைகு நாளில் வாக்கின் பெருவிறல் மன்ன னாதாம், புற்றிடங் கொண்டாரை வந்தி றைஞ்சிப் பொன்மதில் ஆரூர் புகழ்ந்து போறறிச், சிற்றிடைப் பொற் றொடிப் பங்கர் தங்குந் திருப்புக லூர்தொழச் சிந்தை செய்து, கொற்றவ னார்அருள் பெற்ற தொண்டர் குழாத்துடன் அவ்வூர் குறுக வந்தார். 492

நாவுக் கரசர் எழுந்த ருளும் நல்ல திருவார்த்தை கேட்ட போதே, சேவில் திகழ்ந்தவர் மைந்த ரான திருஞான சம்பந்தர்

*சிந்தை அன்பு, மேவுற்ற காதல் மிகப்பெருக விரைந்தெதிர் கொள்ளமெய் யன்ப ரோடும், பூவிற் பொலிபொய்கை சூழ்புக லூர்ப் புறம்பணை எல்லை கடந்து போந்தார்.* 493

*அங்கணர் ஆரூர் வணங்கிப் போந்த அரசும் எதிர்வந் தணைய வாசப், பொங்கு புனற்றண் புகலி வந்த பூசுரர் சிங்கமும் பொற்பின் எய்தித், தங்களின் அன்பின் முறைமை யாலே தாழ்ந்து வணங்கித் தனித்தனியே, மங்கல மாகிய நல்வரவின் வாய்மை வினவி[1] மகிழும் போது.* 494

*மெய்த்திரு ஞானசம் பந்தர் வாக்கின் வேந்தரை நோக்கி விருப்பினாலே, "அப்பரை இங்கணை யப்பெ றும்பே ரருளுடை யோமியாம் அந்தண் ஆரூர், எப்பரி சால்தொழு துய்ந்த(து)?" என்று வினவிட ஈறில் பெருந்த வத்தோர், செப்பிய வண்டமிழ் மாலையாலே* **திருவா திரைநிகழ்** *செலவஞ் சொன்னார்.* 495

*அரசரு ளிச்செய்த வாய்மை கேட்ட அப்பொழு தேஅருள் ஞானம் உண்ட, சிரபுர வேந்தருஞ் "சிந்தை யின்கண் தென்திரு வாரூர் வணங்கு தற்கு, விரவிய காதலிற் சென்று போற்றி மீண் டும்வந் தும்முடன் மேவுவன்" என்(று), உரவு கடற்கல் மிதப் பின் வந்தார்க் குரைத்துடன் பாடுகொண் டொல்லை போந்தார்.*

*சொற்பெரு வேந்தருந் தோணி மூதூர்த் தோன்றல்பின் காதல் தொடரத் தாமும், பொற்புக லூர்தொழச் சென்றணைந் தார், புகலிப் பிரானும் புரிந்த சிந்தை, விற்குடி வீரட்டஞ் சென்று மேவி விடையவர் பாதம் பணிந்து போற்றிப்,* **பற்பல ஆயிரந தொண்ட ரோடும் "பாடல னான்மறை"** *பாடிப் போந்தார்.* 497

*துணரிணர்ச் சோலையுஞ் சாலி வேலித் துறைசீர்ப் பழன முஞ் சூழ்க ரும்பின், மணமலி கானமும் ஞானம் உண்டார் மருங் குற நோக்கி மகிழ்ந்தருளி, அணைபவர்* **"அள்ளற் கழனி ஆரூர் அடைவோம்"** *என மொழிந் தன்பு பொங்கப், புணரிசைச் செந்*

---

பா - ம்—[1] விளம்பி; விரும்பி.

தமிழ் கொண்டு போற்றிப் பொன்மதில் ஆரூர்ப் புறத்த ணைந்தார். 498

வானுயர் செங்கதிர் மண்டி லத்து[1] மருங்கணை யுங்கொடி மன்னும் ஆரூர், தாளுெரு பொன்னுல கென்னத் தோன்றுந் தயங்கொளி முன்கண்டு சண்பை வந்த, பானிற நீற்றர் "பருக்கை யானைப்" பதிகத் தமிழிசை பாடி யாடித்,[2] தேனொடு வண்டு முரலுஞ் சோலைத் திருப்பதி மற்றதன் எல்லை சேர்ந்தார்.

பொங்கிய சிந்தை விருப்பின் வெள்ளம் பொழிந்து புவிமேற் பொலிவ தென்ன, எங்குங் குளிரொளி[3] வீசு முத்தின் இலங்கு சிவிகை இழிந்தருளிச் செங்கை நிறைமலர் கொண்டு தூவித் திருவிருக் குக்குறள் பாடி ஏத்தித், தங்கள் பிரான்அர சாளும் ஆரூர் தனைப்பணி வுற்றுர் தமிழ்விரகர். 500

படியில் ஞானமுண் டருளிய பிள்ளையைப்[4] பணிதற்(கு)
அடியர் சென்றெதிர் கொளஎழுந் தருளும்அஞ் ஞான்று
வடிகொள் சூலத்தர் மன்னிய பொன்மதில் ஆரூர்க்
கடிகொள் பேரணிப் பொலிவையார் முடிவுறக் காண்பார்? 501

நான மான்மத நளிர்பெருஞ் சேற்றிடை நறும்பொன்
தூந றுந்துகள் சொரிதலிற் சுடரொளிப் படலை
யான வீதிகள் அடிவலித் தவைகரைந் தலைய
வான மாரியிற் பொழிந்தது மலர்மது[5] மாரி. 502

ஆடல் நீடுவ துகிற்கொடி அணிகுழற் கொடிகள்;
தோடு சூழ்வன சுரும்பொடு தமனியத் தசும்பு;
காடு கொண்டன கதலிதோ ரணநிரைக் கமுகு;
மாட மாளிகை மண்டபங் களின்மருங் கெல்லாம். 503

மாலை சூழ்புறங் கடைகளின் மணிநிரை விளக்கின்
கோல நீள்சுடர் ஒளியுடன் கோத்திடை தூக்கும்
நீல மாமணி நிழல்பொர நிறம்புகர் படுக்கும்
பால வாயின பவளவே திகைமலர்ப் பந்தர். 504

---

பா - ம்—[1] மண்டலத்து. [2] பாடிப்பாடித். [3] கதிரொளி. [4] பிள்ளை யார். [5] மதுமலர்.

தழைம லர்த்தடஞ் சாலைகள் தெற்றிகள் சதுக்கம்
குழைமு கத்தவர் ஆடரங் கிமையவர் குழாமும்
விழைசி றப்பின வியலிடம் யாவையும் மிடைந்து
மழைமு ழக்கென இயம்பின மங்கல இயங்கள். 505

விரவு பேரணி வேறுவே றின்னன விளங்கும்
பிரச மென்மலர்ச் சோலைசூழ பெருந்திரு வாரூர்
அரச ளிப்பவர் அருளினல் அடியவர் குழுவும்
புரிச னங்களும் புறத்தணைந் தெதிர்கொளும் பொழுது. 506

வந்தி றைஞ்சுமெய்த் தொண்டர்தங் குழாத்தெதிர் வணங்கிச்
சந்த முத்தமிழ் விரகராஞ் சண்பையர் தலைவர்
"அந்த மாயுல காதியாம்" பதிகம்அங் கெடுத்தே
"எந்தை தான்எனை என்றுகொ ளுங்கொல்?"என் றிசைத்தார்.

ஆன அத்திருப் பதிகமுன்[1] பாடிவந் தணையும்
ஞான வித்தகர் மெய்த்தவர் சூழஅந் நகரார்
தூந றுஞ்சுண்ண மலர்பொரி தூஉய்த்தொழு தேத்த
வான நாயகர் கோயில்வா யிலின்[2]மருங் கணைந்தார். 508

மன்னு தோரண வாயில்முன் வணங்கியுள் புகுவார்
தன்னுள் எவ்வகைப் பெருமையுந் தாங்கிய தகைத்தாம்
பன்னெ டுஞ்சுடர்ப் படலையின் பரப்பினைப் பார்த்துச்
சென்னி தாழ்ந்துதே வாசிரி யன்தொழு தெழுந்தார். 509

மாடு சூழ்திரு மாளிகை வலங்கொண்டு வணங்கிக்
கூடு காதலிற் கோபுரம் பணிந்துகை குவித்துத்
தேடு மாலயர்க் கரியராய்ச்[3] செழுமணிப் புறறில்
நீடு வார்முன்பு நிலமுறப் பலமுறை பணிந்தார். 510

பணிந்து வீழ்ந்தனர், பதைத்தனர்; பரவிய[4] புளகம்
அணிந்த மேனியோ டாடினர், பாடினர் அறிவில்
துணிந்த மெய்ப்பொரு ளானவர் தமைக்கண்டு துதிப்பார்
தணிந்த சிந்தையின் விரைந்தெழு வேட்கையில தாழ்ந்தார்.

பா - ம்—[1] பதிகமும். [2] வாயின். [3] மாலயற்குரியராய்ச். [4] பரப்பிய.

செஞ்சொல் வண்டமிழ்த் திருப்பதி கத்திசை எடுத்து
நஞ்சு போனகம் ஆக்கிய நம்பர்முன் பாடி
மஞ்சு சூழ்திரு மாளிகை வாயிலின் புறம்போந்(து)
அஞ்செ ழுத்தின்மெய் யுணர்ந்தவர் திருமடத் தணைந்தார். 512

அங்க ணைந்தமர்ந் தருளுவார் அரனெறி அமர்ந்த
செங்க ணேற்றவர் சேவடி வணங்கிமுன் திளைத்துப்
பொங்கு பேரொளிப் புற்றிடங் கொண்டவர் புனிதப்
பங்க யப்பதந் தொழுதுகா லந்தொறும் பணிந்தார். 513

புற்றி டங்கொளும் புனிதரைப் போற்றிசை பெருகப்
பற்றும் அன்பொடு பணிந்திசைப் பதிகங்கள் பாடி
நற்ற வத்திருத் தொண்டர்க ளொடு[1] நலஞ் சிறப்ப
மற்ற வண்பதி தன்னிடை வைகும்அந் நாளில். 514

மல்லல் நீடிய வலிவலங் கோளிலி முதலாத்
தொல்லை நான்மறை முதல்வர்தம் பதிபல தொழுதே
எல்லை யில்திருப் பதிகங்க ளாறபணிந் தேத்தி
அல்லல் தீர்ப்பவர் மீண்டும்ஆ ரூர்தொழ அணைந்தார். 515

ஊறு காதலில் ஒளிவளர் புற்றிடங் கொண்ட
ஆறு லாவிய சடைமுடி ஐயரைப் பணிந்து
நீறு வாழ்வென நிகழ்திருத் தொண்டர்க ளோடும்
ஈறி லாத்திரு ஞானசம் பந்தர்அங் கிருந்தார். 516

அங்கு நன்மையில் வைகும்அந் நாள்சில அகல
நங்கள் தந்திரு நாவினுக் கரசரை நயந்து
பொங்கு சீர்ப்புக லூர்தொழ அருளினுற் போவார்
தங்கும் அப்பதிப் புறம்பணை சார்ந்தருள செய்வார். 517

புவனவா ரூரினிற் புறம்புபோந் ததனையே நோக்கி நின்றே,
"அவமிலா நெஞ்சமே அஞ்சல்நீ உய்யுமா றறிதி" அன்றே,
"சிவனதா ரூர்தொழாய்[2] நீமற வா(து)"என்று செங்கை கூப்
பிப், "பவனமாய்ச் சோடையாய்" எனுந்திருப் பதிகமுன்
பாடினரே.[3] 518

பா - ம்—[1] ளுடன். [2] தொழல். [3] பதிகமே பாடிநின்றார்.

காழியார் வாழவந் தருள்செயுங் கவுணியப் பிள்ளை யார்தாம்
ஆழியான் அறியொணு அண்ணல்ஆ ரூர்பணிந் தரிது செல்வார்
பாழிமால் யானையின் உரிபுனைந் தார்பனை யூர்ப ணிந்து
வாழிமா மறைஇசைப் பதிகமும் பாடிஅப் பதியில் வைகி. 519

அங்குநின் றரிதெழுந் தருளுவார் அகிலகா ரணமும்[1] ஆனுர், தங்குநற் பதிகளும் பிறபணிந் தருளிவண் டமிழ்பு னைந்தே, எங்குமெய்த் தவர்குழாம் எதிர்கொளத் தொழுதெழுந் தருளி வந்தார், பொங்குதண் பாசடைப் பங்கயப் புனல்வயற் புகலூர் சார. 520

நாவினுக் கரசரும் நம்பிசீர் முருகரும் மற்று நாமச்
சேவுகைத் தவர்திருத் தொண்டரா னவர்கள்முன் சென்று சீதப்
பூவினிற் பொலிபுனற் புகலியார் போதகத் தெதிர்ப ணிந்தே
மேவமற் றவருடன் கூடவே விமலர்கோ யிலைஅ டைந்தார். 521

தேவர்தந் தலைவனுர் கோயில்புக் கனைவருஞ் சீர்நிலத் துறவ ணங்கிப், பாவருந் தமிழிசைப் பதிகமும் பாடிமுன் பரவுவார் புறம்ப ணைந்தே, தாவில்சீர் முருகனுர் திருமனைக் கெய்திஅத் தனிமுதல் தொண்டர் தாமே, யாவையுங் குறைவறுத் திட அமர்ந் தருளுவார் இனிதின்அங் குறையு நாளில். 522

நீலநக் கடிகளும் நிகழ்சிறுத் தொண்டரும் உடன்அணைந் தெய்து நீர்மைச், சீலமெய்த் தவர்களுங் கூடவே கும்பிடுஞ் செய் கைநேர் நின்று வாய்மை, சாலமிக்[2] குயர்திருத் தொண்டின்உண் மைத்திறந் தன்னையே தெளிய நாடிக், காலமுய்த்[3] தவர்களோ டளவளா விக்கலந் தருளினுர் காழி நாடர். 523

கும்பிடுங் கொள்கையிற் ''குறிகலந் திசை''எனும் பதிகமுன் னுன பாடல், தம்பெருந் தலைமையால் நிலைமைசால் பதியதன் பெருமை சால் புறவி ளம்பி, உம்பரும் பரவுதற குரியசொற் பிள்ளையார் உள்ள மெய்க் காதல் கூர, நம்பர்தம் பதிகளா யின எனைப் பலவுமுன் னண்ணியே தொழுந யந்தார். 524

---

பா - ம்—[1] காரணரும். [2] சால்பின்மிக். [3] காலமெய்.

புள்ள லம்புதண் புனற்புக லூர்உறை புனிதனார் அருள் பெற்றுப், பிள்ளை யாருடன் நாவினுக் கரசரும் பிறபதி தொழச் செல்வார், வள்ள லார்சிறுத் தொண்டரும் நீலநக் கரும்வளம் பதிக்கேக, உள்ளம் அன்புறும் முருகர்அங் கொழியவும் உடன் பட இசைவித்தார்.[1] 525

கண்ண கன்புக லூரினை தொழுதுபோம் பொழுதினிற் கடற்காழி, அண்ண லார்திரு நாவினுக் கரசர்தம் அருகுவிட் டகலாதே, வண்ண நித்திலச் சிவிகையும் பின்வர வழிக்கொள உறுங்காலை, எண்ணில் சீர்த்திரு நாவினுக் கரசரும் மற்றவர்க் கிசைக்கின்றார். 526

"நாய னார்உமக் களித்தருள் செய்தஇந் நலங்கிளர் ஒளி முத்தின், தூய யானத்தின் மிசைஎழுந் தருளுவீர்" என்றலுஞ் "சுடர்த்திங்கள், மேய வேணியார் அருளும்இவ் வாறெனில் விரும்புதொண் டர்களோடும், போய தெங்குநீர் அங்குயான் பின்வரப் போவ"தென் றருள்செய்தார். 527

என்று பிள்ளையார் மொழிந்தருள் செய்திட இருந்தவத் திறையோரும், "நன்று நீர்அருள் செய்ததே செய்வன்"என் றருள்செய்து நயப்புற்ற, அன்றை நாள்முதல் உடன்செலு நாளெலாம் அவ்வியல் பினிற்செல்வார், சென்று முன்னுறத் திருவம்பர் அணைந்தனர் செய்தவக குழாத்தோடும். 528

சண்பை மன்னருந் தம்பிரான் அருள்வழி நிற்பது தலைச் செல்வார், பண்பு மேம்படு பனிக்கதிர் நித்திலச் சிவிகையிற் பணிந்தேறி, வண்பெ ரும்புக லூரினைக் கடந்துபோய் வரும்பரி சனத்தோடும் திண்பெ ருந்தவர் அணைந்ததெங் கென்றுபோய்த் திருவம்பர் நகர்புக்கார். 529

அம்பர் மாநகர் அணைந்துமா காளத்தில் அண்ணலார் அமர் கின்ற, செம்பொன் மாமதிற் கோயிலை வலங்கொண்டு திருமுன்பு பணிந்தேத்தி, வம்பு லாமலர் தூவிமுன் பரவியே வண்டமி

---

பா - ம்—[1] இசைந்தார்கள்.

ழிசைமாலை, உம்பர் வாழநஞ் சுண்டவர் தமைப்பணிந் துருகும் அன் பொடுதாழ்ந்தார். 530

தாழ்ந்து நாவினுக் கரசுடன் தம்பிரான் கோயில்முன் புற மெய்திச், சூழ்ந்த தொண்டரோ டப்பதி யமர்பவர் சுரநதி முடி மீது, வீழ்ந்த வேணியர் தமைப்பெருங்[1] காலங்கள் விருப்பினுற் கும்பிட்டு, வாழந்தி ருந்தனர் காழியார் வாழவந் தருளிய மறை வேந்தர். 531

பொருவி லாதசொற் "புல்குபொன் னிறம்"முதற் பதிகங்க ளாற்போற்றித், திருவி ருந்தகோச் செங்கணுன் அந்நகர்ச் செய்தகோ யிலைச்சேர்ந்து, மருவு வாய்மைவண் டமிழ்மலர் மாலை அவ் வளவனைச் சிறப்பித்துப், பெருகு காதலிற் பணிந்துமுன் பரவிஞர் பேணிய உணர்வோடும். 532

இன்ன வாறுசொன் மாலைக ளாற்றுதித் திறைஞ்சிஅங் கமர்நாளில், கன்னி மாமதில் திருக்கட வூர்தொழக் காதல்செய் தருளிப்போய், மன்னு கோயில்கள் பிறபதி வணங்கியே வாக் கின்மன் னவரோடும், அந்நெ டும்பதி அணைவுறக் கலயரோ டடியவர் எதிர்கொண்டார். 533

மற்ற வண்பதி அணைந்துவீ ரட்டத்து மழவிடை யார் கோயில், சுற்று மாளிகை வலங்கொண்டு காலனை யுதைத்[2] துருட் டியசெய்ய, பொற்சி லம்பணி தாமரை வணங்கிமுன் போற்றிஉய்ந் தெதிர்நின்று, பற்ற றுப்பவர் "சடையுடை யான்"எனும் பதிகஇன் னிசைபாடி. 534

பரவி ஏத்திஅங் கரிதினிற் போந்துபார் பரவுசீர் அரசோடு, விரவு நண்புடைக் குங்குலி யப்பெருங் கலயர்தம் மனைமேவிக், கரையில் காதல்மற் றவர்அமைத் தருளிய விருந்தினி தமர்ந் தங்குச், சிரபு ரத்தவர் திருமயா னமும்பணிந் திருந்தனர் சிறப்பெய்தி. 535

சிறப்பு டைத்திருப் பதிஅத னிடைச்சில நாளமர்ந் தரு ளோடும், விறற்பெ ருங்கரி உரித்தவர் கோயில்கள் விருப்பொடுந்

---

பா - ம்—[1] தமைப்பெறுங். [2] காலனைத் தொலைத்.

தொழச்செல்வார், மறைப்பெ ருந்திருக் கலயரும் உடன்பட
வணங்கிய மகிழ்வோடும். அறப்பெ ரும்பயன் அனையஅத்
தொண்டரோ டணைந்தனர் திருவாக்கூர். 536

தக்க அந்தணர் மேவும்அப் பதியினில் தான்தோன்றி
மாடத்துச், செக்கர் வார்சடை அண்ணலைப் பணிந்திசைச் செந்
தமிழ்த் தொடைபாடி, மிகக கோயில்கள் பிறவுடன் தொழுது
போய் மீயச்சூர் பணிந்தேத்திப், பசகம் பாரிடம் பரவநின்[1]
றுடுவார் பாம்புர நகர்சேர்ந்தார். 537

பாம்பு ரத்துறை பரமரைப் பணிந்துநற் பதிகஇன் னிசை
பாடி, வாம்பு னற்சடை முடியினர் மகிழ்விடம் மற்றுமுள் ளன
போற்றிக், காம்பி னில்திகழ் கரும்பொடு செந்நெலின் கழனியம்
பணைநீங்கித, தேம்பொ ழில்திரு வீழிநன்[2] மிழலையின் மருங்
குறச் செல்கின்றார். 538

அப்பொழுதின் ஆணட அரசை எதிர்கொணட
மெய்ப்பெருமை அந்தணர்கள் வெங்குருவாழ் வேந்தனார்
பிற்படவந் தெய்தும் பெரும்பேறு கேட்டுவப்பார்
எப்பரிசி னல்வந் தணைந்தங் கெதிர்கொண்டார். 539

நிறைகுடந் தூபந்திபம் நீட நிரைத்தேந்தி
நறைமலர்ப் பொற்சுண்ணம் நறும்பொரியுந் தூவி
மறையொலிபோய் வானளபப மாமுரசம் ஆர்ப்ப
இறைவர்திரு மைந்தரதமை எதிர்கொள்வர வேற்றார்.[3] 540

வந்து திருவீழி மிழலை மறைவல்ல
அந்தணர்கள் போற்றிசைப்பத் தாமும் மணிமுத்தின்
சந்த மணிச்சிவிகை நின்றிழிந்து தாழ்ந்தருளி
உய்ந்த மறையோ ருடனணைந்தங் குள்புகுவார். 541

அப்போ(து) "அரையார் விரிகோ வணஆடை"
ஒப்போ தரும்பதிகத் தோங்கும் இசைபாடி
மெய்ப்போதப் போதமாநதார் தங்கோயில் மேவினார்
கைப்போது சென்னியின்மேற் கொண்டு கவுணியனார். 542

---

பா - ம்—[1] பாடநின. [2] வீழிமா. [3] எதிர்கோ ளேற்றார்.

நாவின் தனிமன்னர் தாமும் உடன்நண்ண
மேவிய விண்ணிழிந்த கோயில் வலங்கொள்வார்
பூவியலும் உந்தியான் போற்றப் புவிக்கிழிந்த
தேவியலு மெய்கண்டு சிந்தைவியப் பெய்தினார். 543

வலங்கொண்டு புக்கெதிரே வந்து[1] வரநதியின்[2]
சலங்கொண்ட வேணித் தனிமுதலைத் தாழ்ந்து
நிலங்கொண்ட மேனியராய் நீடுபெருங் காதல்
புலங்கொண்ட சிந்தையினாற் பொங்கிஇசை மீப்பொழிந்தார்.[3]

போற்றிச் "சடையார் புனலுடையான்" என்றெடுத்துச்
சாற்றிப் பதிகத் தமிழ்மாலை சந்தஇசை
ஆற்ற மிகப்பாடி ஆனந்த வெள்ளத்தில்
நீற்றழகர் சேவடிககீழ் நின்றலைந்து நீடினார். 545

நீடியபே ரன்புருகி உள்ளலைப்ப நேர்நின்று
பாடிஎதி ராடிப் பரவிப் பணிநதெழுந்தே
ஆடிய சேவடிகள் ஆர்வமுற உட்கொண்டு
மாடுயர் கோயிற் புறத்தரிது வந்தணைந்தார். 546

வந்தணைந்து வாழ்ந்து மதிற்புறத்தோர் மாமடத்துச்
செந்தமிழ்ச்சொல் வேந்தருஞ் செய்தவருஞ் சேர்ந்தருளச்
சந்தமணிக் கோபுரத்துச் சார்ந்தவட பாற்சன்னை
அந்தணர்சூ ளாமணியார் அங்கோர் மடத்தமர்ந்தார். 547

அங்கண் அமர்வார் அரனார் அடியிணைக்கீழ்த்
தங்கிய காதலினாற் காலங்கள் தபபாமே
பொங்குபுகழ் வாகீச ருங்கூடப போற்றிசைத்தே
எங்கும் இடர்திர்பபார் இன்புற் றுறைகின்றார்.[4] 548

ஓங்குபுனற் பேணு பெருந்துறையும் உள்ளிட்ட
பாங்கார் திலதைப் பதிமுற்ற மும்பணிந்து
வீங்கொலிநீர் வீழி மிழலையினில் மீண்டும்அணைந்(து)
ஆங்கினிது கும்பிட் டமர்ந்தொழுகும்[5] அந்நாளில். 549

---

பா - ம்—[1] நின்று. [2] புககெதிரே வானநதியின். [3] பொழிந்தார்; பொங்கிப் பொழிந் தெழுந்தார். [4] றமர்கின்றார். [5] டமர்ந்துறையும்.

ஒருமுறை தடவ அங்கண் ஒழிந்துவெப் பகன்று பாகம்[1]
மருவுதீப் பிணியும் நீங்கி வழுதியும் முழுதும் உய்ந்தான். 770

கொற்றவன் தேவி யாரும் குலச்சிறை யாரும் நீங்கு
செற்றவர் செய்ய பாத தாமரை சென்னி சேர்த்துப்[2]
"பெற்றனம் பெருமை; இன்று பிறந்தனம், பிறவா மேன்மை
உற்றனன் மன்னன்" என்றே உளங்களித் துவகை மிக்கார். 771

மீனவன் தன்மே லுள்ள வெப்பெலாம் உடனே மாற
ஆனபேர் இன்பம் எய்தி உச்சிமேல் அங்கை கூப்பி
"மானமொன் றில்லார் முன்பு வன்பிணி நீக்க[3] வந்த
ஞானசம் பந்தர் பாதம் நண்ணிநான் உய்ந்தேன்" என்றான்.

கந்துசீறு மாலியானை மீனவன் கருத்துநேர்
வந்து[4]வாய்மை கூறமற்று[5] மாசுமேனி நீசர்தாம்
முந்தைமந் திரத்துவிஞ்சை முற்றும்எஞ்ச அஞ்சியே
சிந்தைசெய்து கைவருந் திறந்தெரிந்து தேடுவார்.[6] 773

"சைவமைந்தர் சொல்லின்வென்றி சந்தஇன்சொல் மாலையால்
கைதவன்றன் வெப்பொழிந்த தன்மைகண் டறிந்தனம்;[7]
மெய்தெரிந்த தர்க்கவாதம் வெல்லலாவ தன்று,வே(று)
எய்துதீயின் நீரில்வெல்வ" தென்றுதம்மில் எண்ணினார். 774

பிள்ளையாரும் "உங்கள்வாய்மை பேசுமின்கள்" என்றலும்
தள்ளுநீர்மை யார்கள்"வேறு தர்க்கவாதின் உத்தரங்
கொள்ளும்வென்றி அன்றியே குறித்தகொள்கை உண்மைதான்
உள்ளவாறு கட்புலத்தில் உய்ப்ப'தென்ன ஓட்டினார். 775

என்றுவாது கூறலும் இருந்ததென்னர் மன்னனும்
'கன்றிஎன் உடம்பொடுங்க வெப்புநோய் கவர்ந்தபோ
தொன்றும்அங் கொழித்திலீர்கள், என்னவா துமக்(கு)?" எனச்[8]
சென்றுபின்னும் முன்னும்நின்று சில்லிவாயர் சொல்லுவார். 776

"என்னவாது செய்வ"தென் றுரைத்ததே வினாவெனச்[9]
சொன்னவாச கந்தொடங்கி "ஏடுகொண்டு சூழ்ச்சியால்

---

பா - ம்—[1] நீங்கி; போக. [2] சேர்த்திப். [3] நீங்க. [4] வந்த. [5] மற்ற. [6] கூறுவார். [7] கண்டறிந்தபின். [8] எனாச். [9] வினாவெனச்.

மன்னுதம் பொருட்கருத்தின்[1] வாய்மைதிட்டி மாட்டினால்
வெந்நெருப்பின் வேவுறாமை வெற்றியாவ" தென்றனர். 777

என்றபோது மன்னனன் றியம்புமுன்பு பிள்ளையார்
"நன்றுநீர் உரைத்தவாறு; நாடுதீயில் ஏடுதான்
வென்றிடிற் பொருட்கருத்து மெய்ம்மையாவ தென்றிரேல்
வன்றனிக்கை யானைமன்னன் முன்புவம்மின்" என்றனர். 778

அப்ப டிக்கெதிர் அமணரும் அணைந்துறும் அளவில்
ஒப்பில் வண்புகழ்ச் சண்பையர் காவலர் உரையால்
செப்ப ருந்திறல் மன்னனும் "திருந்தவை முன்னர்
வெப்பு றுந்தழல் அமைக்"கென வினைஞரை விடுத்தான். 779

ஏய மாந்தரும் இந்தனங் குறைத்துடன் அடுக்கித்
தீய மைத்தலுஞ் சிகைவிடு புகையொழிந் தெழுந்து[2]
காயும் வெவ்வழற் கடவுளும் படரொளி காட்ட
ஆயு முத்தமிழ் விரகரும் அணையவந் தருளி. 780

"செங்கண் ஏற்றவ ரேபொருள்" என்றுதாந் தெரித்த[3]
பொங்கி சைத்திருப் பதிகநன் முறையினைப் போற்றி
"எங்கள் நாதனே பரம்பொருள்" எனத்தொழு தெடுத்தே
அங்கை யால்முடி மிசைக்கொண்டு காப்புநாண் அவிழ்த்தார். 781

சாற்று மெய்ப்பொருள் தருந்திரு முறையினைத் தாமே
நீற்று வண்கையால் மறித்தலும் வந்துநேர்ந் துளதால்
நாற்ற டம்புயத் தண்ணலார் மருவுநள் ளாறு
போற்றும் அப்பதி கம்"போக மார்த்தபூண் முலையாள்." 782

அத்தி ருப்பதி கத்தினை அமர்ந்துகொண் டருளி
மைத்த வெங்கடு மிடற்றுநள் ளாறரை வணங்கி
மெய்த்த நற்றிரு வேட்டினைக் கழற்றிமெய்ம் மகிழ்ந்து
கைத்த லத்திடைக் கொண்டனர் கவுணியர் தலைவர். 783

"நன்மை உய்க்கும்மெய்ப் பதிகத்தின் நாத"னென் றெடுத்தும்[4]
என்னை ஆளுடை ஈசன்தன் நாமமே என்றும்

---

பா - ம்—[1] கருத்து. [2] புகையெழுந் தொழிந்து. [3] தெரிந்த.
[4] றெடுத்தே.

மன்னும் மெய்ப்பொரு ளாமெனக் காட்டிட வன்னி
தன்னி லாகெனத் "தளிரிள வளரொளி" பாடி. 784

செய்ய தாமரை அகவித ழினுமிகச் சிவந்த
கையில் ஏட்டினைக் கைதவன் பேரவை காண
வெய்ய தீயினில் வெற்றரை யவர்சிந்தை வேவ
வையம் உய்ந்திட வந்தவர் மகிழ்ந்துமுன் னிட்டார். 785

இட்ட ஏட்டினில் எழுதிய[1] செந்தமிழ்ப் பதிகம்
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்(து)
அட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையால் அமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே. 786

மையல் நெஞ்சுடை அமணருந் தம்பொருள் வரைந்த
கையில் ஏட்டினைக் கதுவுசெந் தியினில் இடுவார்
'உய்யு மோஇது?' எனஉறுங் கவலையாம் உணர்வால்
நையும் நெஞ்சின ராகியே நடுங்கிநின் றிட்டார். 787

அஞ்சும் உள்ளத்த ராகியும் அறிவிலா அமணர்
வெஞ்சு டர்ப்பெருந் தீயினில் விழுத்திய ஏடு
பஞ்சு தீயிடைப்[2] பட்டது படக்கண்டு பயத்தால்
நெஞ்சு சோரவும் பீலிகை சோர்ந்திலர் நின்றார். 788

மான மன்னவன் அவையின்முன் வளர்த்தசெந் தீயின்
ஞானம் உண்டவர் இட்டஏ டிசைத்தநா ழிகையில்
ஈனம் இன்மைகண் டியாவரும் வியப்புற எடுத்தார்
பான்மை முன்னையிற் பசுமையும் புதுமையும் பயப்ப. 789

எடுத்த ஏட்டினை அவையின்முன் காட்டிஅம் முறையில்
அடுத்த வண்ணமே கோத்தலும் அதிசயித் தரசன்
தொடுத்த பீலிமுன் தூக்கிய கையரை நோக்கிக்
"கடுத்து நீரிட்ட ஏட்டினைக் காட்டுமின்" என்றான். 790

அருகர்தாம் இட்ட ஏடு வாங்கச்சென் றணையும் போதில்
பெருகுதீக் கதுவ வெந்து பேர்ந்தமை கண்ட மன்னன்

---

பா - ம்—[1] எய்திய. [2] தீயினில்.

தருபுனல் கொண்டு செந்தீத் தணிப்பித்தான், சமணர் அங்குக்
கருகிய சாம்ப ரோடுங் கரியலால் மற்றென் காண்பார்? 791

செய்வதொன் றறிகி லாதார் திகைப்பினுல் திரண்ட சாம்பல்
கையினுற் பிசைந்து தூற்றிப் பார்ப்பது கண்ட[1] மன்னன்
எய்திய நகையி ஞேடும் "ஏடின்னம் அரித்துக் காணும்
பொய்யினுல் மெய்யை யாக்கப் புகுந்தநீர் போமின்" என்ருன்.

"வெப்பெனுந் தீயில் யான்முன் வீடுபெற் றுய்ய நீங்கள்
அப்பொழு தழிந்து தோற்றீர்; ஆதலால் அதுவா ருக[2]
இப்பொழு தெரியில் இட்ட ஏடுய்ந்த தில்லை என்ருல்
துப்புர வுடையீர்! நீங்கள் தோற்றிலீர் போலும்" என்ருன்.

தென்னவன் நகையுட் கொண்டு செப்பிய மாற்றந் தேரார்;
சொன்னது பயனுக் கொண்டு சொல்லுவார் "தொடர்ந்த வாது,
மூன்னுற இருகால் செய்தோம்; முக்காலில் ஒருகால் வெற்றி,
என்னினும் உடையோம்; மெய்ம்மை[3] இனியொன்று காண்ப"
தென்ருர். 794

தோற்கவும் ஆசை நீங்காத் துணிவிலார் சொல்லக் கேட்
"டிம், மாற்றமென் னுவ" தென்று மன்னவன் மறுத்த பின்னும்,
நீற்றணி விளங்கு மேனி நிறைபுகழ்ச் சண்பை மன்னர், "வேற்
றுவா தினிஎன் செய்வ(து)?" என்றலும் மேற்கோள் ஏற்பார்.

"நீடுமெய்ப் பொருளின் உண்மை நிலைபெறுந் தன்மை எல்லாம்
ஏடுற எழுதி மற்றவ் வேட்டினை யாமும் நீரும்
ஓடுநீர் ஆற்றில் இட்டால் ஒழுகுதல் செய்யா தங்கு
நாடிமுன் தங்கும் ஏடு நற்பொருள் பரிப்ப" தென்ருர். 796

என்றமண் கையர் கூற ஏறுசீர்ப் புகலி வேந்தர், "நன்றது
செய்வோம்" என்றங் கருள்செய நணுக வந்து, வென்றிவேல்
அமைச்ச ஞர்தாம் "வேறினிச் செய்யும் இவ்வா(து), ஒன்றினுந்
தோற்ருர் செய்வ தொட்டியே செய்வ" தென்ருர். 797

அங்கது கேட்டு நின்ற அமணரும் அவர்மேற் சென்று[4]
பொங்கிய வெகுளி கூரப் பொருமைகா ரணமே யாகத்

---

பா - ம்—[1] கண்டு. [2] அதுவேருக. [3] எம்மை. [4] சென்ற.

தங்கள்வாய் சோர்ந்து தாமே "தனிவாதில் அழிந்தோ மாகில்
வெங்கழு வேற்று வான்இவ் வேந்தனே" என்று சொன்னார்.

மற்றவர் சொன்ன வார்த்தை கேட்டலும் மலய மன்னன்
"செற்றத்தால் உரைத்தீர்; உங்கள் செய்கையும் மறந்தீர்" என்று
"பற்றிய பொருளின் ஏடு படர்புனல் வைகை யாற்றில்
பொற்புற விடுவ தற்குப் போதுவ" தென்று[1] கூற. 799

பிள்ளையார் முன்னம் பைம்பொற் பீடத்தில் இழிந்து போந்து
தெள்ளுநீர்த் தரளப் பத்திச் சிவிகைமேல் ஏறிச் சென்றார்;
வள்ளலார் அவர்தம் பின்பு மன்னன்மா ஏறிச் சென்றான்;
உள்ளவா றறிகி[2] லாதார் உணாவுமால் ஏறிச் சென்றார். 800

தென்னவன் வெப்புத் தீர்ந்து செழுமணிக் கோயில் நீங்கிப்
பின்னுற அணைந்த போது பிள்ளையார் பெருகுஞ் செல்வம்
மன்னிய மதுரை மூதூர் மறுகில்வந் தருளக்[3] கண்டு
துன்னிய மாதர் மைந்தர் தொழுதுவே றிணைய சொன்னார். 801

"மீனவன் கொண்ட வெப்பை நீக்கிநம் விழுமந் தீர்த்த
ஞானசம் பந்தர் இந்த நாயனார் காணும்" என்பார்;
"பானறுங் குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளை யார்தாம்
மானசீர்த் தென்னன் நாடு வாழவந் தணைந்தார்" என்பார். 802

"எரியிடை வாதில் தோற்ற திவர்க்குநம் அருகர்" என்பார்;
"புரிசடை அண்ணல் நீறே பொருளெனக் கண்டோம்" என்பார்;
"பெருகொளி முத்தின் பைம்பொற் சிவிகைமேற் பிள்ளையார்
தாம், வருமழ கென்னே" என்பார்; "வாழ்ந்தன கண்கள்"
என்பார். 803

"ஏதமே விளைந்த திந்த அடிகள்மார் இயல்பால்" என்பார்,
"நாதனும் ஆல வாயில் நம்பனே காணும்" என்பார்;
"போதமா வதுவும் முக்கட் புராணனை அறிவ" தென்பார்;
"வேதமும் நீறு மாகி விரவிடும்[4] எங்கும்" என்பார். 804

"அடிகள்மார் முகங்கள் எல்லாம் அழிந்தன பாரீர்" என்பார்;
"கொடியவஞ் சனைகள் எல்லாங் குலைந்தன போலும்" என்பார்;

பா - ம்—[1] போதுக என்று. [2] றுணர்கி. [3] வந்தணைய. [4] விடும்விடும்.

"வடிகொள்வேல் மாறன் காதல் மாறின வண்ணம்" என்பார்,
"விடிவதாய் முடிந்த திந்த வெஞ்சமண் இருளும்" என்பார். 805

"நெருப்பினில் தோற்றார் தாங்கள் நீரில்வெல் வர்களோ?"[1] என்பார்; "இருப்புநெஞ் சுடைய[2] ரேனும் பிள்ளையார்க் கெதிரோ?" என்பார்; "பருப்பொருள் உணர்ந்தா தாங்கள் படுவன பாரீர்" என்பார்; "மருப்புடைக் கழுக்கோல் செய்தார் மந்திரி யார்தாம்" என்பார். 806

"ஏடுகள் வைகை தன்னில் இடுவதற் கணைந்தார்" என்பார்;
"ஓடுநீ ருடன்செ லாது நிற்குமோ ஓலை?" என்பார்,
"நீடிய ஞானம் பெற்றார் நிறுத்தவும் வல்லர்" என்பார்;
"நாடெலாங் காண இங்கு நண்ணுமா[3] காணீர்" என்பார். 807

"தோற்றவர் கழுவில் ஏறத் துணிவதே அருகர்?" என்பார்; "ஆற்றிய அருளின் மேன்மைப் பிள்ளையார்க் கழகி(து)!" என்பார், "நீற்றினால் தென்னன் தீங்கு நீங்கிய வண்ணங் கண்டார்,[4] போற்றுவார் எல்லாஞ் சைவ நெறியினைப் போற்றும்" என்பார். 808

இன்னன இரண்டு பாலும் ஈண்டினர் எடுத்துச் சொல்ல
மின்னொளி மணிப்பொற் காம்பின் வெண்குடை மீது போதப்
பன்மணிச் சிவிகை தன்மேற் பஞ்சவன் நாட்டு ளோர்க்கு
நன்னெறி காட்ட வந்தார் நான்மறை வாழ வந்தார். 809

"தென்றமிழ் விளங்க வந்த திருக்கழு மலத்தான்[5] வந்தான்;
மன்றுளார் அளித்த ஞான வட்டில்வண் கையன் வந்தான்;
வென்றுல குய்ய மீள வைகையில் வெல்வான் வந்தான்";
என்றுபன் மணிச்சின் னங்கள் எண்டிசை நெருங்கி ஏங்க. 810

பன்மணி முரசஞ்[6] சூழ்ந்த பல்லியம் இயம்பப் பின்னே
தென்னனும்[7] தேவி யாரும் உடன்செலத் திரண்டு செல்லும்
புன்னெறி அமணர் வேறோ புடைவரப் புகலி வேந்தர்
மன்னிய வைகை யாற்றின் கரைமிசை மருவ வந்தார். 811

---

பா-ம்—[1] வெல்வாரோ. [2] சுடையா. [3] நண்ணுவர். [4] கண்டார்ப். [5] மலக்கோன்; மலத்தோன். [6] முரசு. [7] தென்னன்.

கார்கெழு பருவம் வாய்ப்பக் காமுறு மகளிர் உள்ளம்
சீர்கெழு கணவன் தன்பால் விரைவுறச் செல்லு மாபோல்
நீர்கெழு பௌவம் நோக்கி நிரைதிரை இரைத்துச் செல்லும்
பார்கெழு புகழின் மிக்க பண்புடை வைகை யாறு. 812

ஆற்றில்நீர் கடுக ஓடும் மருங்குற அரசன் நோக்கி
"நீற்றணி திகழ்ந்த[1] மேனி நிறைமதிப் பிள்ளை யாரும்
வேற்றுரு அருகர் நீரும் விதித்தவை டிடுக" என்றான்;
"தோற்றவர் தோலார்" என்று முன்னுறத் துணிந்திட் டார்கள்.

படுபொரு ளின்றி நெல்லிற் பதடிபோல் உள்ளி லார்மெய்
அடுபவர் பொருளை "அத்தி நாத்தி"என் றெழுதி ஆற்றில்
கடுகிய புனலை கண்டும் அவாவினுற கையி லேடு
விடுதலும் விரைந்து கொண்டு வேலைமேற் படர்ந்த தன்றே.814

ஆறுகொண் டோடும் ஏட்டைத் தொடர்ந்தெதிர் அணைப்பார் போலத். தேறுமெய் யுணர்வி லாதார் கரைமிசை ஓடிச் சென்றார், பாறும்அப் பொருள்மேற் கொண்ட பட்டிகை எட்டா தந்து, நூறுவிற் கிடைக்கு[2] முன்னே போனது நோக்கிக் காணார்.[3] 815

காணவும் எய்தா வண்ணம் கடலின்மேற் செல்லும் ஏடு
நாணிலா அமணர் தம்மை நட்டாற்றில் விட்டுப் போகச்
சேணிடைச் சென்று நின்றார், சிதறினார், திகைத்தார்; மன்னன்
ஆணையில் வழுவ மாட்டா தஞ்சுவார் அணைய[4] மீண்டார். 816

வேறொரு செயலி லாதார் வெருவுற்று நடுங்கித் தம்பால்
ஈறுவந் தெய்திற் றென்றே மன்னவன் எதிர்வந் தெய்தி
ஊறுடை நெஞ்சில் அச்சம் வெளிப்பட ஒளிப்பார் போன்று
"மாறுகொண் டீரும்[5] இட்டால் வந்தது காண்டும்"[6] என்றார்.817

மாசுசேர் அமணர் எல்லாம் மதியினில் மயங்கிக் கூற
ஆசிலா நெறியிற் சேர்ந்த அரசனும் அவரை விட்டுத்

பா - —ம்[1] திகழும். [2] விற்கிடக்கை. [3] நோக்கிச் சென்றார். [4] ஆணையம் வழுவமாட்டா தஞ்சுவாரடைய. [5] டவரும். [6] காணும்.

தேசுடைப் பிள்ளை யார்தந் திருக்குறிப் பதனை நோக்கப்
பாசுரம் பாட லுற்றார் பரசம யங்கள் பாற. 818

தென்னவன் மாறன் தானுஞ் சிரபுரத் தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றை யார்தந் திருநீறு பூசப் பெற்று
முன்னைவல் வினையும் நீங்க[1] முதல்வனை அறியுந் தன்மை
துன்னினான் வினைகள் ஒத்துத் துலையென நிற்ற லாலே. 819

உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்
கலதிவாய் அமணர்காண் கிலார்க ளாயினும்
பலர்புகழ் தென்னவன் அறியும பான்மையால. 820

"அந்தணர் தேவர்ஆன் இனங்கள் வாழ்க" என்
றிந்தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புறச்
சந்தவேள் விகள்முதற் சங்க ரர்க்குமுன்
வந்தஅர்ச் சனைவழி பாடு மன்னவாம். 821

வேள்வி நற்பயன் "வீழ்புன" லாவது
நாளும் அர்ச்சனை நல்லுறுப் பாதலால்;
ஆளும் "மன்னனை வாழ்த்திய(து)" அர்ச்சனை
மூளும் மற்றிவை காக்கும் முறைமையால். 822

"ஆழ்க தீய" தென் றோதிற் றயல்நெறி
வீழ்க என்றது[2] வே "றெல்லாம் அரன்பெயர்
சூழ்க" என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத் தோதி வளர்கவே. 823

சொன்ன "வையக முந்துயர் தீர்கவே"
என்னும் நீர்மை இகபரத் தில்துயர்
மன்னி வாழுல கத்தவர் மாற்றிட
முன்னர் ஞானசம் பந்தர் மொழிந்தனர். 824

"அரிய காட்சியர்" என்பதவ் வாதியைத்
"தெரிய லாம்நிலை யால்" தெரி யாரென

---

பா - ம்—[1] வினையின் நீங்கி. [2] என்று.

உரிய அன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினர். 825

"ஆயி னும்பெரி யாரவர்" என்பது
மேய இவ்வியல் பேயன்றி விண்முதற்
பாய பூதங்கள் பல்லுயிர் அண்டங்கள்
ஏயும் யாவும் இவர்வடி வென்றதாம். 826

பின்பும் "ஆரறி வாரவர் பெற்றியே"[1]
என்ப தியாருணர் வானுஞ்[2]சென் றெட்டொணு
மன்பெ ருந்தன்மை யார்என வாழ்த்தினர்
அன்பு சூழ்சண்பை ஆண்டகை யாரவர். 827

"வெந்த சாம்பல் விரை"யென் பதுதம
தந்த மில்லொளி அல்லா ஒளியெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாக்கொண்ட வண்ணமுஞ் சாற்றினர். 828

தமக்குத் "தந்தையர் தாயிலர்" என்பதும்
அமைத்திங் கியாவையும் ஆங்கவை வீந்தபோ
திமைத்த சோதி அடக்கிப்பின் ஈதலால்
எமக்கு நாதர் பிறப்பிலர் என்றதாம். 829

"தம்மை யேசிந்தி யா"எனுந் தம்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளி தாமென
இம்மை யேநினை வார்தம் இருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவர் என்றதாம். 830

"எந்தை யாரவர் எவ்வகை யார்கொல்"என்(று)
இந்த வாய்மைமற் றெப்பொருட் கூற்றினும்
முந்தை யோரைஎக்[3] கூற்றின் மொழிவதென்(று)
அந்தண் பூந்தாராய் வேந்தர் அருளினர். 831

ஆதி "ஆட்பா லவர்க்கரு ளுந்திறம்"
நாதன் மாட்சிமை கேட்க நவிலுங்கால்

---

பா - ம்—[1] பெற்றியை. [2] வாலுஞ். [3] யோரையே.

ஓதும் எல்லை உலப்பில ஆதலின்
யாதும் ஆராய்ச்சி இல்லையாம் என்றதாம். 832

அன்ன ஆதலில் "ஆதியார் தாளடைந்
தின்ன கேட்கவே ஏற்றகோட் பாலவும்
முன்னை வல்வினை யும்முடி வெய்தும்அத்
தன்மை யார்க்"கென் றனர்சண்பை காவலர். 833

மன்னும் "ஏதுக்க ளாலெனும்" வாய்மைதான்
தன்ன தொப்புவே றின்மையிற் சங்கரன்
இன்ன தன்மையை ஏது எடுத்துக்காட்
டன்ன வாற்ருல் அளப்பிலன் என்றதாம். 834

தோன்று காட்சி "சுடர்விட் டுளன்"என்ப(து)
ஆன்ற அங்கிப் புறத்தொளி யாய்அன்பில்
ஊன்ற உள்ளெழுஞ் சோதியாய் நின்றனன்,
ஏன்று காண்பார்க் கிதுபொருள் என்றதாம். 835

"மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றும்" என்ப(து)
ஆதிச் சுடர்ச்சோ தியைஅன்பின் அகத்துள் ளாக்கிப்
போதித்த நோக்குற் றுழியாமற் பொருந்தி வாழ்ந்து
பேதித்த பந்தப் பிறப்பின்நெறி பேர்மின் என்றும். 836

ஈண்டு "சாதுக்கள் என்றெடுத் தோதிற்று
வேண்டும் வேட்கைய எல்லாம் விமலர்தாள்
பூண்ட அன்பினிற் போற்றுவீர்! 'சார்மின்"என்(று)
ஆண்ட சண்பை அரசர் அருளினுர். 837

"ஆடும்" எனவாந் திருப்பாட்டின் அமைத்த மூன்றும்
நீடும் புகழோ? பிறர்துன்பம் நீத்தற்கோ? என்று
தேடும் உணர்வீர் உலகுக்கிவை செய்த தீசர்
கூடுங் கருணைத் திறம்என்றனர் கொள்கை மேலோர். 838

கருதுங் "கடிசேர்ந்த" எனுந்திருப் பாட்டில் ஈசர்
மருவும் பெரும்பூசை மறுத்தவர்க் கோறல் முத்தி
தருதன் மையதாதல் சண்டீசர் தஞ்செய்கை தக்கோர்
பெரிதுஞ் சொலக்கேட் டனம்என்றனர் பிள்ளை யார்தாம்.

"வேத முதல்வன்" எனும்மெய்த் திருப்பாட் டினினேர்
ஆதி உலகோர் இடர்நீங்கிட ஏத்த "ஆடும்"
பாத முதலாம் பதினெண் புராணங்கள் என்றே
ஓதென் றுரைசெய் தனர்யாவும் ஓதா துணர்ந்தார்.[1] 840

"பாவுற்ற பாராழி வட்டத்"திருப் பாட்டின் உண்மை
காவற்றொழி லானெனுங் கண்ணனுங் காவல் பெற்ற
தியாவர்க்கு மேலாய ஈசன்அருள் ஆழி பெற்று
மேவுற்ற சீருற் ற(து)என் றனர் வேத வாயர். 841

"மாலா யவன்"என்ன வருந்திருப் பாட்டில் மாலும்
தோலா மறைநான் முகனும் தொடர்வாம் அமரர்
ஏலா வகைசுட்ட நஞ்சுண் டிறவாமை காத்த
மேலாங் கருணைத் திறம்வெங்குரு வேந்தர் வைத்தார். 842

ஆன"அற நன்றி" என்ற அத்திருப்[2] பாட்டிற் கூடல்
மாநக ரத்துச்[3] சங்கம் வைத்தவன் தேற்றத் தேரு[4]
ஈனர்கள் எல்லைக் கிட்ட ஏடுநீர் எதிர்ந்து[5] செல்லில்
ஞானம் ஈசன்பால் அன்பே[6] என்றனர் ஞானம் உண்டார். 843

வெறியார் பொழிற்சண் பையர்வேந்தர் மெய்ப்பா சுரத்தைக்
குறிஏ றியஎல்லை அறிந்துகும் பிட்டேன் அல்லேன்
சிறியேன் அறிவுக் கவர்தநதிருப் பாதந் தந்த
நெறியே சிறிதியான் அறிநீர்மைகும் பிட்டேன் அன்பால்.[7] 844

அலரும் விரைசூழ் பொழிற்காழியுள் ஆதி ஞானம்
மலருந் திருவாக் குடைவள்ளலார் உள்ள வண்ணம்
பலரும் உணர்ந்துய்யப் பகர்ந்து வரைந்தி யாற்றில்
நிலவுந் திருவேடு திருக்கையால் நீட்டி இட்டார்.* 845

---

பா - ம்—[1] துணர்ந்தோர். [2] என்றெடுத்த அத்திருப்; அந்தண னுந்திருட். [3] மாநகர்ச். [4] தேறத்தேரு. [5] ஏடே திர்ந்து. [6] அன்பு. [7] இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

* இச்செய்யுள் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகள் பதிப்பில் 820-வது செய்யுளை அடுத்துக் காணப்படுகின்றது.

திருவுடைப் பிள்ளை யார்தந் திருக்கையால் இட்ட ஏடு
மருவுறும்[1] **பிறவி யாற்றில் மாதவர் மனஞ்சென் றாற்போல்**
பொருபுனல் வைகை யாற்றில் எதிர்ந்து[2] நீர் கிழித்துப் போகும்
இருநிலத் தோர்கட் கெல்லாம் "இதுபொருள்" என்று காட்டி.

"**எம்பிரான் சிவனே எல்லாப் பொருளும்**"என் றெழுதும் ஏட்டில், தம்பிரான் அருளால் **வேந்தன் தன்னைமுன் ஓங்கப் பாட**, அம்புய மலராள் மார்பன் "**அனபாயன்**" என்னுஞ் சீர்த் **திச், செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூன் நிமிர்ந்த தன்றே.** 847

ஏடுநீர் எதிர்ந்து செல்லும் பொழுதிமை யோர்கள் எல்லாம்
நீடிய வாழ்த்திற் போற்றி நிமிர்ந்தபூ[3] மாரி தூர்த்தார்;
ஆடியல் யானை மன்னன் அற்புதம் எய்தி நின்றான்;
பாடுசேர் அமணர் அஞ்சிப் பதைப்புடன் பணிந்து நின்றார். 848

**ஆற்றின்மேற்** செல்லும் ஏடு தொடர்ந்தெடுப் பதற்கு வேண்டிக்
**காற்றென விசையிற் செல்லுங** கடும்பரி ஏறிக்கொண்டு
கோற்றொழில் திருத்த வல்ல குலச்சிறை யார்பின் சென்றார்;
ஏற்றுயர் கொடியி னாரைப் பாடினார் ஏடு தங்க. 849

ஏடகம் பிள்ளை யார்தாம் "**வன்னி**"என் றெடுத்துப் பாடக்
கூடிய நீரில் ஏடு குலச்சிறை யாருங் கூடிக்
காடிட மாக ஆடுங் கண்ணுதல் கோயில் மாடு
நீடுநீர் நடுவுட் புக்கு நின்றஏ டெடுத்துக் கொண்டார். 850

தலைமிசை வைத்துக் கொண்டு தாங்கரும் மகிழ்ச்சி பொங்க
அலைபுனற் கரையில் ஏறி அங்கினி[4] தமர்ந்த மேருச்
சிலையுடை யவர்தாள் போற்றி மீண்டுசென் றணைவார் தெய்வ
மலைமகள் குழைத்த ஞானம் உண்டவர் தம்பால் வந்தார். 851

மற்றவர் பிள்ளை யார்தம் மலரடி வணங்கிப் போற்றிக்
கொற்றவன் முதலா யுள்ளோர் காணமுன் கொணர்ந்த ஏடு
பற்றிய கையில் ஏந்திப் பண்பினு லியார்க்குங் காட்ட
அற்றருள் பெற்ற தொண்டர் "**அர**"வொலி எழுந்த தன்றே.

---

பா - ம்—[1] மருவிய. [2] எதிர்த்து. [3] நிறைந்தபூ. [4] ஆங்கினி.

மன்னவன் மாறன் கண்டு மந்திரி யாரை நோக்கித்
"துன்னிய வாதில் ஒட்டித் தோற்றஇச் சமணர் தாங்கள்
முன்னமே பிள்ளை யார்பால் அநுசிதம் முற்றச் செய்தார்
கொன்னுனைக் கழுவில் ஏற[1] முறைசெய்க" என்று கூற. 853

புகலியில் வந்த ஞானப் புங்கவர் அதனைக் கேட்டும்
இகலிலர் எனினுஞ் சைவர் இருந்துவாழ் மடத்தில் தீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை. 854

பண்புடை அமைச்ச னாரும் பாருளோர் அறியும் ஆற்றால்
கண்புடை பட்டு நீண்ட கழுத்தறி நிரையில் ஏற்ற
நண்புடை ஞானம் உண்டார் மடத்துத்தீ நாடி இட்ட
எண்பெருங் குன்றத் தெண்ணா யிரவரும் ஏறி னார்கள். 855

தோற்றவர் கழுவில் ஏறித் தோற்றிடத் தோற்றுந் தம்பம்
ஆற்றிடை அமண ரோலை அழிவினால் ஆர்ந்த தம்பம்
வேற்றொரு தெய்வ மின்மை விளக்கிய பதாகைத் தம்பம்
போற்றுசீர்ப் பிள்ளை யார்தம் புகழ்ச்சயத்[2] தம்ப மாகும். 856

தென்னவன் தனக்கு நீறு சிரபுரச் செல்வர் ஈந்தார்,
முன்னவன் பணிந்து கொண்டு[3] முழுவதும் அணிந்து நின்றான் ;
'மன்னனன் நீ றணிந்தான்" என்று மற்றவன்[4] மதுரை வாழ்வார்
துன்னினின் றார்கள் எல்லாந் தூயநீ றணிந்து கொண்டார். 857

பூதிமெய்க் கணிந்து வேந்தன் புனிதனாய் உய்ந்த போது
நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கும்
மேதினி புனித மாக வெண்ணீற்றின் விரிந்த சோதி
மாதிரந் தூய்மை செய்ய அமணிருள் மாய்ந்த தன்றே. 858

மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
ஊனமாஞ் சமணை நீக்கி உலகெலாம் உய்யக் கொண்ட[5]
ஞானசம் பந்தர் வாய்மை ஞாலத்திற் பெருகி யோங்கத்
தேனலர்[6] கொன்றை யார்தந் திருநெறி நடந்த தன்றே. 859

---

பா - ம்—[1] ஏற்றி; ஏற்ற. [2] புகழ்செய்த. [3] வாங்கி. [4] மற்றஅம். [5] உய்யவந்த. [6] தேனவில்; தேனவிழ்.

மறையவர் வேள்வி செய்ய வானவர் மாரி நல்க
இறைவன்நன் னெறியின் ஓங்க இகத்தினில் அவனி இன்பம்
குறைவில தெனினுங் கூற்றை உதைத்தவர் நாமங் கூறி
நிறைகடற் பிறவித் துன்பம் நீங்கிடப் பெற்ற தன்றே 860

"அங்கயற் கண்ணி தன்னோ டாலவாய் அமர்ந்த அண்ணல்[1]
பங்கயச் செய்ய பாதம் பணிவன்"என் றெழுந்து சென்று
பொங்கொளிச் சிவிகை ஏறிப் புகலியர் வேந்தர் போந்தார்;
மங்கையர்க் கரசி யாரும் மன்னனும் போற்றி வந்தார். 861

எண்ணரும் பெருமைத் தொண்டர் யாவரும் மகிழ்ச்சி எய்திப், புண்ணியப் பிள்ளை யாரைப் புகழ்ந்தடி[2] போற்றிப் போத, மண்ணெலாம் உய்ய வந்த வள்ளலார் தம்மைக் கண்டு, கண்ணினுற் பயன்கொண் டார்கள் கன்னிநாட் டவர்கள் எல்லாம். 862

ஆலவாய் அண்ணல் கோயில் அங்கண்முன் தோன்றக் கண்டு,
பாலரு வாயர் மிக்க பண்பினால் தொழுது சென்று
மாலுநான் முகனும் போற்ற மன்னினார் கோயில் வாயில்
சீலமா தவத்தோர் முன்பு சிவிகைநின் றிழிந்து புக்கார். 863

தென்னவன் தானும் எங்கள் செம்பியன் மகளார் தாமும்
நன்னெறி அமைச்ச னாரும் ஞானசம் பந்தர் செய்ய
பொன்னடிக் கமலம் போற்றி உடன்புகப் புனிதர் கோயில்
தன்னைமுன் வலங்கொண் டுள்ளால் சண்பையர் தலைவர் புக்கார்.

கைகளுந் தலைமீ தேறக் கண்ணில்ஆ னந்த வெள்ளம்
மெய்யெலாம் பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி
"ஐயனே! அடிய னேனை அஞ்சலென் றருள வல்ல
மெய்யனே!" என்று "வீட லாலவாய்" விளம்ப லுற்றார். 865

"ஒன்றுவே றுணர்வும் இல்லேன் ஒழிவற நிறைந்த கோலம்
மன்றில்நான் மறைகள் ஏத்த மானுடர் உய்ய வேண்டி
நின்றுநீ ஆடல் செய்கை நினைப்பதே நியமம் ஆகும்"
என்றுமும் புகலி மன்னர் இன்றமிழ்ப் பதிகம் பாட. 866

பா - ம்—[1] வள்ளல். [2] புகழ்ந்துமுன்; புகழ்ந்துடன்.

தென்னவன் பணிந்து நின்று "திருவால வாயில் மேவும்
மன்னனே ! அமணர் தங்கள் மாய்கையால்[1] மயங்கி யானும்[2]
உன்னையான் அறிந்தி லேனை உறுபிணி தீர்த்தாட் கொள்ள
இன்னருட் பிள்ளை யாரைத் தந்தனை இறைவ!" என்றான். 867

சீருடைப் பிள்ளை யாரும் சிறப்புடை அடியா ரோடும்
காரினிற் பொலிந்த கண்டத் திறைவர்தாள் வணங்கிக் காதல்
ஆரருள் பெற்றுப் போற்றி அங்குநின் றரிது நீங்கி
ஏரியல் மடத்தில் உள்ளால் இனிதெழுந் தருளிப் புக்கார். 868

நீடுசீர்த் தென்னர் கோனும் நேரியன் பாவை யாரும்
மாடுசென் றிறைஞ்சி[3] நோக்கி மாளிகை தன்னிற் போகக்[4]
கூடிய மகிழ்ச்சி பொங்கக் கும்பிடும் விருப்பி னாலே
நாடிஅங் கிருந்து தங்கள் நாதரைப் பாட லுற்றார். 869

திருவிய மகத்தின் உள்ளுந் திருநீல கண்டப் பாணர்க்
கருளிய திறமும் போற்றி அவரொடும் அளவ ளாவித், தெரு
ளுடைத் தொண்டர் சூழத்[5] திருத்தொண்டின் உண்மை நோக்கி,
இருள்கெட மண்ணில் வந்தார் இனிதமர்ந் திருந்தா ரன்றே.

பூழியன் மதுரை யுள்ளார் புறத்துளார் அமணர் சேரும்
பாழியும் அருகர் மேவும் பள்ளியும் ஆன எல்லாம்
கீழுறப் பறித்துப் போக்கிக் கிளரொளித் தூய்மை செய்தே
வாழிஅப் பதிகள் எல்லாம் மங்கலம் பொலியச் செய்தார். 871

மீனவன் தேவி யாரும் குலச்சிறை யாரும் மிக்க
ஞானசம் பந்தர் பாதம் நாடொறும் பணிந்து போற்ற
ஆனசண் பையர்கோ னாரும் ஆலவாய் அமர்ந்தார் பாதம்
ஊனமர்ந் துருக ஏத்தி உளங்களித்[6] துறையும் நாளில். 872

செய்தவத்தால் சிவபாத விருதயர்தாம் பெற்றெடுத்த
வைதிகசூ ளாமணியை மாதவத்தோர் பெருவாழ்வை
மைதிகழுந் திருமிடற்றார் அருள்பெற்ற வான்பொருளை
எய்தியபூம் புகலியிலே இருந்தநாள் மிகநினைந்தார். 873

பா - ம்—[1] மாயையால். [2] யாதும். [3] நிறைஞ்ச. [4] போக்கிக். [5] சூழ்ந்த. [6] உளங்கனிந்.

"ஆனபுகழ்த் திருநாவுக் கரசர்பால் அவஞ்செய்த
மானமிலா அமணருடன் வாதுசெய்து வெல்வதற்கும்
மீனவன்றன் நாடுய்ய வெண்ணீறு பெருக்குதற்கும்[1]
போனவர்பாற் புகுந்தபடி அறிவன்" எனப் புறப்படுவார். 874

துடியிடையாள் தன்னோடுந் தோணியில்வீற் றிருந்தபிரான்
அடிவணங்கி அலர்சண்பை அதனின்றும் வழிக்கொண்டு
படியின்மிசை மிக்குளவாம் பரன்கோயில் பணிந்தேத்தி[2]
வடிநெடுவேல் மீனவன்தன் வளநாடு வந்தணைந்தார். 875

மாமறையோர் வளம்பதிக ளிடைத்தங்கி வழிச்செல்வார்
தேமருவு நறும்பைந்தார்த் தென்னவன்தன் திருமதுரை
தாமணைந்து திருவால வாய்அமர்ந்த தனிநாதன்
பூமருவுஞ் சேவடிக்கீழ்ப் புக்கார்வத் தொடும்பணிந்தார். 876

அங்கணரைப் பணிந்துபோந் தருகணைந்தார் தமைவினவ
"இங்கெம்மைக் கண்விடுத்த காழியார் இளவேறு
தங்குமிடந் திருநீற்றுத் தொண்டர்குழாஞ் சாருமிடம்
செங்கமலத் திருமடம்மற் றிது" என்றே தெரிந்துரைத்தார். 877

செப்புதலும் அதுகேட்டுத் திருமடத்தைச் சென்றெய்த
"அப்பர்எழுந் தருளினார்" எனக்கண்டோர்[3] அடிவணங்கி
ஒப்பில்புகழ்ப் பிள்ளையார் தமக்கோகை உரைசெய்ய
"எப்பொழுது வந்தருளிற்(று)?" என்றெதிரே எழுந்தருள. 878

சிவபாத விருதயர்தாம் முன்தொழுது சென்றணையத்
தவமான நெறியணையுந் தாதையார் எதிர்தொழுவார்
அவர்சார்வு கண்டருளித் திருத்தோணி அமர்ந்தருளிப்
பவபாசம் அறுத்தவர்தம் பாதங்கள் நினைவுற்றார். 879

இருந்தவத்தோர் அவர்முன்னே இணைமலர்க்கை குவித்தருளி, "அருந்தவத்திர்! எனைஅறியாப் பருவத்தே எடுத்தாண்ட, பெருந்தகைஎம் பெருமாட்டி யுடனிருந்த தே?" என்று, பொருந்துபுகழ்ப் புகலியின்மேல் திருப்பதிகம் போற்றிசைத்தார். 880

---

பா - ம்—[1] பெருகுதற்கும். [2] வலங்கொண்டு. [3] எனக்கேட்டோர்.

"மண்ணினல்ல" என்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
உண்ணிறைந்த காதலினுல் கண்ணருவி பாய்ந்தொழுக
அண்ணலார் தமைவினவித் திருப்பதிகம் அருள்செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத் தாரணிந்த தமிழ்விரகர். 881

திருப்பதிகந் திருக்கடைக்காப் புச்சாத்திச் சிறப்பின்மிகு
விருப்பினுல் அவர்தமக்கு விருந்தளித்து மேவுநாள்
அருப்புறுமெய்க் காதல்புரி அடியவர்கள் தம்மோடும்
பொருப்புறுகைச் சிலையார்சேர் பதிபிறவும்[1] தொழப்போவார்.

ஆலின்கீழ் நால்வர்க்கன் றறமுரைத்த அங்கணனை
நூலின்கட பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானைக்
காலம்பெற் றினிதிறைஞ்சிக் கைதொழுது புறம்போந்தார்
சீலங்கொள் தென்னவனும் தேவியரும் உடன்போத. 883

தேன்நிலவு பொழில்மதுரைப் புறத்துப் போந்த தென்ன வனுர் தேவியார் அமைச்சர் சிந்தை, ஊன்நெகிழும் படிஅழிந்தங் கொழுகு கண்ணீர் பாய்ந்திழிய உணர்வின்றி வீழக் கண்டே, **"யானும்மைப் பிரியாத வண்ணம் இந்நாட் டிறைவர்பதி எனைப்பலவும் பணிவீர்"** என்று, ஞானமுணர் வார்அருள அவ ரும் போத நம்பர்திருப் பரங்குன்றை நண்ணி னுரே. 884

ஆறணிந்தார் தமைவணங்கி அங்குப் போற்றி அணிஆப்ப னூரணைந்து பணிந்து பாடி, நீறணிந்த செல்வர்பதி பிறவுஞ் சேர்ந்து நிலவுதிருப் பதிகங்கள் நிகழப் பாடிச், சேறணிந்த வயற்பழனக் கழனி சூழ்ந்த சிரபுரத்து வந்தருளுஞ் செல்வர் செங்கண், ஏறணிந்த வெல்கொடியார் திருப்புத் தூரை எய்தி இறைஞ் சிச்சிலநாள்[2] இருந்தா ரன்றே. 885

பற்றுர்தம் புரங்கள்மலைச் சிலையால் செற்ற பரமனுர் திருப் புத்தூர் பணிந்து போந்து, புற்றுரும் பணிபூண்ட புனித னுர்தம் பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்து பாடிக், கற்றுர்கள் தொழுதேத்துங் கானப் பேரும் கைதொழுது தமிழ்பாடிச் சுழி

---

பா - ம்—[1] பிறபதியும். [2] திருப்புத்தூரை இனிதிறைஞ்சிச் சில நாளங்கு.

யல் போற்றிக், குற்ருலங் குறும்பலாக் கும்பிட் டேத்திக் கூற்று தைத்தார் நெல்வேலி குறுகி ஞரே. 886

புண்ணியஞர் நெல்வேலி பணிந்து போற்றிப் புரிசடையார் திருப்பதிகள் பிறவும் சென்று, நண்ணிஇனி தமர்ந்தங்கு நயந்து பாடி நற்ரெண்ட ருடன்நாளும் போற்றிச் செல்வார், விண்ண வரைச் செற்றுகந்தான் இலங்கை செற்ற மிக்கபெரும் பாத கத்தை நீக்க வேண்டித், திண்ணியபொற் சிலைத்தடக்கை இரா மன் செய்த திருவிரா மேச்சுரத்தைச் சென்று சேர்ந்தார். 887

செங்கண்மால் வழிபட்ட கோயில் நண்ணித் திருமுன்பு தாழ்ந்தெழுந்து தென்ன ஞேடும், மங்கையர்க்கு நாயகியார் தாமும் மெய்ம்மை மந்திரியா ரும்சூழ மணிநீள் வாயில், பொங்கி எழும் விருப்பிஞல் உடனே புக்குப் புடைவலங்கொண் டுள்ள ணைவார் போற்றி செய்து, பங்கயச்செங் கைகுவித்துப் பணிந்து நின்று பாடிஞர் மன்னவனும் பரவி ஏத்த. 888

சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த சிவபெருமான் தனைப்பாடிப் பணிந்து போந்து, காதலுடன் அந்நகரில் இனிது மேவிக் கண்ணுதலான் திருத்தொண்ட ராஞர்க் கெல்லாம், கோதில்புகழ்ப பாண்டிமா தேவி யார்மெய்க் குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச் செல்ல, நாதர்தமை நாடோறும் வணங்கி ஏத்தி நளிர்வேலைக் கரையில்நயந் திருந்தா ரன்றே. 889

அந்நகரில் அமர்ந்தங்கண் இனிது மேவி ஆழிபுடை சூழ்ந் தொலிக்கும் ஈழந் தன்னில், மன்னுதிருக் கோணமலை மகிழ்ந்த செங்கண் மழவிடையார் தமைப்போற்றி வணங்கிப் பாடிச் சென்னிமதி புனைமாட மாதோட் டத்தில் திருக்கேதீச் சரத்தண் ணல் செய்ய பாதம், உன்னிமிகப் பணிந்தேத்தி அன்ப ரோடும் உலவாத கிழிபெற்ருர் உவகை யுற்ருர். 890

அப்பதியைத் தொழுதுவட திசைமேற் செல்வார் அங்கை அனல் தரித்தபிரான் அமருங் கோயில், புக்கிறைஞ்சிப் பலபதி யுந் தொழுது போற்றிப் புணரிபொரு தலைகரைவாய் ஒழியப் போந்தே, செப்பரிய புகழ்த்திருவா டானை சேர்ந்து செந்தமிழ்மா

லைகள்சாத்திச் சிவனூர் மன்னும், ஒப்பரிய புனவாயில் போற்றி செய்து வணங்கினூர் உலகுய்ய ஞானம் உண்டார். 891

பதிநிலவு பாண்டிநா டதனில் முக்கட் பரமனூர் மகிழ்விடங்கள் பலவும் போற்றி, விதிநிலவு வேதநூல் நெறியே ஆக்கி வெண்ணீற்றின் சார்விஞல் மிக்கு யர்ந்த, கதியருளிக் காழிநகர் வாழ வந்தார் கண்ணுதலான் திருத்தொண்டர் பலருஞ் சூழ, மதிநிலவு குலவேந்தன் போற்றிச் செல்ல மந்திரியார் பதிமணமேற் குடியில் வந்தார். 892

அந்நகரில் இனிதமர்வார் அருகு சூழ்ந்த பதிகளில்நீ(டு) அங்கணர்தங் கோயில் தாழ்ந்து, மன்னுதிருத் தொண்டருடன் மீண்டு சேர்ந்து மன்னவனும் மங்கையருக் கரசி யாரும், கொன்னவில்வேற் குலச்சிறையார் தாமும் கூடிக் குரைகழல்கள் பணிந்துகுறை கொண்டு போற்றச், சென்னிவளர் மதியணிந்தார் பாதம் போற்றிச் சிரபுரத்துச் செல்வர்இனி திருந்த நாளில். 893

பொங்குபுனற் காவிரிநா டதனின் மீண்டு போதுதற்குத் திருவுள்ள மாகப் போற்றும்,[1] மங்கையருக் கரசியார் தாமும் தென்னர் மன்னவனும் மந்திரியார் தாமும் கூட, அங்கவர்தந் திருப்பாதம் பிரிய லாற்ரு துடன்போக ஒருப்படும்அவ் வளவு நோக்கி, "இங்குநான் மொழிந்ததனுக் கிசைந்தீ ராகில் ஈசர்சிவ நெறிபோற்றி இருப்பீர்" என்று. 894

சாலமிகத் தளர்வாரைத் தளரா வண்ணம் தகுவனமற் றவர்க்கருளிச் செய்த பின்பு, மேலவர்தம் பணிமறுக்க அவரும் அஞ்சி மீள்வதனுக் கிசைந்துதிரு வடியில் வீழ்ந்து, ஞாலமுய்ய வந்தருளும் பிள்ளை யாரைப் பிரியாத நண்பிஞெடுந்[2] தொழுது நின்ரூர், ஆலவிடம் உண்டவரை அடிகள் போற்ற[3] அந்நாட்டை அகன்றுமீண் டணையச் செல்வார். 895

பொன்னிவளந் தருநாடு புகுந்து மிக்க பொருவில்சீர்த் திருத்தொண்டர் குழாத்தி ஞேடும், பன்னகப்பூண் அணிந்தவர்தங் கோயில் தோறும் பத்தருடன் பதியுள்ளோர் போற்றச்

பா-ம்—[1] பெற்று. [2] அன்பிஞெடும். [3] போற்றி.

சென்று, கன்னிமதில் திருக்களரும் போற்றிக் கண்டங் கறை யணிந்தார் பாதாளீச் சுரமும் பாடி, முன்னணைந்த[1] பதிபிறவும் பணிந்து போற்றி முள்ளிவாய்க் கரையணைந்தார் முந்நூல் மார்பர். 896

மலைவளர்சந் தனமகிலும் தேக்கும் உந்தி மலர்ப்பிறங்கல் வண்டிரைப்பச் சுமந்து பொங்கி, அலைபெருகி ஆள் இயங்கா வண்ணம் ஆறு பெருகுதலால் அத்துறையில் அணையும் ஓடம், நிலைபுரியும் ஓடக்கோல் நிலையி லாமை[2] நீர்வாழநர் கரையின் கண் நிறுத்திப் போகக், கலைபயிலுங் கவுணியர்கோன் அதனைக் கண்(டு) அக் கரையின்கண் எழுந்தருளி நின்ற காலை. 897

தேவர்பிரான் அமர்ந்ததிருக் கொள்ளம் பூதூர் எதிர்தோன்றத் திருவுள்ளம் பணியச் சென்று, மேவுதலால் ஓடங்கள் விடுவார் இன்றி ஒழிந்திடவும் மிக்கதோர் விரைவால் சண்பைக், காவலனார் ஓடத்தின் கட்ட விழ்த்துக் கண்ணுதலான் திருத்தொண்டர் தம்மை ஏற்றி, நாவலமே கோலாக அதன்மேல் நின்று நம் பர்தமைக் "கொட்டம்"என நவின்று பாட. 898

உம்பருய்ய நஞ்சுண்டார் அருளால் ஓடம் "செலச்செல்ல உந்து" தலால் ஊடு சென்று, செம்பொன்நேர் சடையார்தங் கொள்ளம் பூதூர் தனைச்சேர அக்கரையில் சேர்ந்த பின்பு, நம் பரவர் தமைவணங்க[3] ஞானம் உண்ட பிள்ளையார் நற்றொண்ட ருடனி ழிந்து, வம்பலரு நறுங்கொன்றை நயந்தார் கோயில் வாயிலின்முன் மகிழ்ச்சியொடு வந்து சார்ந்தார். 899

நீணிலைக்கோ புரமதனை இறைஞ்சிப் புக்கு நிகரிலாத் தொண்டருடன் நெருங்கச் சென்று, வாணிலவு கோயிலினை வலங்கொண்டெய்தி மதிச்சடையார் திருமுன்பு வணங்கி நின்று. "தாணுவே! ஆற்றின்கண் ஓடம் உய்க்குந் தன்மையால் அருள் தந்த தலைவா! நாகப், பூணினாய்! களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே!" எனப் பணிந்து போற்றி[4] செய்தார். 900

---

பா - ம்—[1]முன்னைவணந்து. [2]நிலையிலாமல். [3]வணங்கி. [4]பரவிப் போற்றல்.

போற்றிசைத்துப் புறம்போந்தங் குறையும் நாளில் பூழியன்முன் புன்சமயத் தமணர் தம்மோ, டேற்றபெரு வாதின்கண் எரியின் வேவாப் பதிகமுடை இறையவரை இறைஞ்ச வேண்டி, ஆற்றவும்அங் கருள்பெற்றுப் போந்து முன்னம் அணைந்தபதி களும்இறைஞ்சி அன்பர் சூழ, நாற்றிசையும் பரவுதிரு நள்ளா றெய்தி நாடுடைநா யகர்கோயில் நண்ணி னாரே. 901

நீடுதிருத் தொண்டர்புடை சூழ அங்கண் நித்திலயா னத்திடைநின் றிழிந்து சென்று, பீடுடைய திருவாயில் பணிந்து புக்குப் பிறையணிந்த சென்னியார் மன்னுங் கோயில், மாடுவலங் கொண்டுள்ளால் மகிழ்ந்து புக்கு மலர்க்கரங்கள் குவித்திறைஞ்சி வள்ள லாரைப் "பாடகமெல் லடி"எடுத்துப் பாடிநின்று பரவினார் கண்ணருவி பரந்து பாய. 902

"தென்னவர்கோன் முன்னமணர் செய்த வாதில் தீயின்கண் இடும்ஏடு பச்சை யாக்கி, என்னுள்ளத் துணையாகி ஆலவாயில் அமர்ந்திருந்த வாறென்கொல் எந்தாய்!"என்று, பன்னுதமிழ்த் தொடை சாத்திப் பரவிப் போந்து பண்பினிய தொண்டருடன் அங்கு வைகி, மன்னுபுகழ்ப் பதிபிறவும் வணங்கச் சண்பை வள்ளலார் நள்ளாறு வணங்கிச் செல்வார். 903

சீர்நிலவு திருத்தெளிச்சே ரியினைச் சேர்ந்து சிவபெருமான் தனைப்பரவிச் செல்லும் போது, சார்வறியாச் சாக்கியர்தம் போதி மங்கை சார்தலும்மற் றதுஅறிந்த சைவர் எல்லாம், ஆர்கலியின் கிளர்ச்சிஎனச் சங்கு தாரை அளவிறந்த பல்லியங்கள் முழக்கி ஆர்த்துப், பார்குலவு தனிக்காளஞ் சின்னம் எல்லாம் "பரசமய கோளரிவந் தான்"என் றூத. 904

புல்லறிவிற் சாக்கியர்கள் அறிந்தார் கூடிப் புகலியர்தம் புரவலனார் புகுந்து தங்கள், எல்லையினில் எழுந்தருளும் பொழுது தொண்டர் எடுத்தஆர்ப் பொலியாலும் எதிர்முன் சென்று, மல்கி எழுந் திருச்சின்ன ஒலிக ளாலும் மனங்கொண்ட பொறாமையினால் மருண்டு தங்கள், கல்வியினில் மேம்பட்ட புத்த நந்தி முதலான தேரர்க்குங் கனன்று சொன்னார். 905

மற்றவர்கள் வெவ்வுரையும் பிள்ளை யார்முன் வருசின்னப் பெருகொலியும் மன்னுந் தொண்டர், பொறப்புடைய ஆர்ப்பொ லியுஞ் செவியினூடு புடைத்தநா ராசமெனப் புக்க போது, செற்ற மிகும் உள்ளத்துப் புத்த நந்தி செயிர்த்தெழுந்து தேரர் குழாஞ் சூழச் சென்று, "வெற்றிபுனை சின்னங்கள் வாதில் எம்மை வென்றன்றோ பிடிப்ப"தென வெகுண்டு சொன்னான்.

புத்தரினம் புடைசூழப் புத்த நந்தி பொருவில்ஞா னப்புனி தர் திருமுன் பூதும், மெய்த்தவிறற் சின்னங்கள் விலக்குங் காலை வெகுண்டெழுந்த திருத்தொண்டர் வெறுத்து நோக்கி, "இந்த மைய செயறகிவரைத தடிதல் செய்யா திதுபொறுக்கில் தங்கள் நிலை ஏற்பர்" என்று, முத்துநிரைச் சிவிகையின்மேல் மணியை வந்து முறைபணிந்து புகுந்தபடி மொழிந்து நின்றார். 907

"வருமிடத்தில் அழகிதாம் நமக்கு வாதில் மற்றிவர்தம் பொருள் நிலைமை மருத வண்ணம், பொருமிடத்தில் அறிகின் றோம் புத்த நந்தி பொய்ம்மேற்கோள்" எனப்புகலி வேந்தர் கூற. அருமுறைசொற்[1] றிருப்பதிகம் எழுதும் அன்பர் ஆளு டைய பிள்ளையார் திருவாக் காலே, "உரும்இடித்து விழப்புத் தன் உத்த மாங்கம் உருண்டுவீழ்கெ"னப்பொரு உரைமுன் விட்டார். 908

ஏறுயர்த்தார் சைவநெறி ஆணை உய்க்க எதிர்விலக்கும் இடையூற்றை எறிந்து நீக்கும், மாறில்வலி[2] மந்திரமாம் அசனி போல வாய்மைஉரைத்[3] திருத்தொண்டர் வாக்கி னாலே, வேறு மொழிப் போரேற்பான் வந்த புத்தன் மேனியையும் தலையினை யும் வெவ்வே றாகக், கூறுபட நூறியிடப் புத்தர் கூட்டங் குலைந் தோடி விழுந்துவெருக் கொண்ட தன்றே. 909

மற்றவர்கள் நிலைமையையும் புத்த நந்தி வாக்கின் போ ரேற் றவன் தன் தலையும் மெய்யும், அற்றுவிழ அத்திரவாக் கதனால் அன்பர் அறுத்ததுவும் கண்டஅரன் அடியார் எல்லாம், வெற்றி தரும் பிள்ளையார் தமக்குச் சென்று விண்ணப்பஞ் செய''எதிர்ந்த

பா - ம்—[1] அருமறைச்சொற். [2] மாறுவலி. [3] வாய்மையுணர்.

விலக்கு நீங்க, உற்றவிதி அதுவேயாம்;[1] அர! என் றெல்லாம் ஓது''கென[2] அவ்வொலிவான் உற்ற தன்றே. 910

அஞ்சிஅகன் றோடியவப் புத்த ரெல்லாம் அதிசயித்து மீண் டும்உடன் அணைந்து கூடி, "வஞ்சனையோ? இதுதான்மற் றவர் தஞ் சைவ வாய்மையோ?" எனமருண்டு மனத்திற் கொள்வார், "எஞ்சலின்மந் திரவாதம் அன்றி எம்மோ டெதிர்ந்து பொருள் பேசுவதற் கிசைவ''தென்று, தஞ்செயலின் மிக்குள்ள சாரி புத் தன் தன்னையே முன்கொண்டு பின்னுஞ் சார்ந்தார். 911

அத்தன்மை கேட்டருளிச் சண்பை வந்த அடலேறு திரு வுள்ளத "தமுகி'' தென்று, மெத்தமகிழ்ச் சியினோடும் விரைந்து சென்று வெண்டரளச் சிவிகையின்நின் றிழிந்து வேறோர், சத்திர மண் டபத்தின் மிசை ஏறி நீடு சைவருடன் எழுந்தருளி இருந்து "சாரும், புத்தர்களை அழைக்க''எனத் திருமுன் நின்றார் புகலிகா வலர் ஏவல் போற்றிச் சென்றார். 912

சென்றவர்கள் தேரர்குழாம் அணைந்து "நீங்கள் செப்பி வரும் பொருள்நிலைமை தெரிக்க எங்கள், வென்றிமழ இளங் களிறு சண்பையாளி வேதபாரகன்[3] மும்மைத் தமிழின் வேந் தன், நன்றுமகிழ்ந் தழைக்கின்றான், ஈண்ட நீரும் நண்ணும்'' எனக் கூறுதலும் நன்மை சாராத், தன்றகைமைப் புத்தருடன் சாரி புத்தன் சத்திரமண் டபமுன்பு சார வந்தான். 913

அங்கணைந்து மண்டபத்துப் புத்த ரோடும் பிள்ளையார் அரு கணைய நின்ற போதில், எங்குநிகழ திருச்சின்னந் தடுத்த புத் தன் இருஞ்சிரத்தைப் பொடியாக்கும் எதிரில் அன்பர், பொங்கு புகழ்ப் புகலிகா வலர்தம் பாதம் போற்றிஅரு ளாற்சாரி புத்தன் தன்னை, "உங்கள்தலை வனும்பொருளும் உரைக்க!'' என்ன உற்றவா றினைமேற்கொண் டுரைசெய் கின்றான். 914

"கற்பங்கள் அனைத்தினிலும் பிறந்து வீந்து கதிமாறுங் கணபங்க இயல்பு தன்னில், பொற்புடைய தானமே தவமே தன்மை[4] புரிந்தநிலை யோகமே பொருந்தச் செய்ய, உற்பவிக்கும்

பா - ம்—[1]இதுவேயாம். [2]ஓதுமென. [3]வேதபாலகன். [4]நன்மை.

ஒழிவின்றி உரைத்த ஞானத் தொழியாத பேரின்ப முத்தி பெற்றான், பற்பலரும் பிழைத்துய்ய அறமுன் சொன்ன பான்மை யான் யாங்கள் தொழும் பரமன்'' என்றான். 915

என்றுரைத்த சாரிபுத்தன் எதிர்வந் தேற்ற இருந்தவத்துப் பெருந்தன்மை அன்பர் தாமும், "நன்றுமது தலைவன்தான் பெற்றான் என்று நாட்டுகின்ற முத்திதான் யாவ'' தென்றார்; "நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்நின்ற ஞான மென நிகழ்ந்த ஐந்தும், ஒன்றியகந் தத்தவிவே[1] முத்தி'' என்ன உரைசெய்தான் பிடகத்தின் உணர்வு மிக்கான். 916

ஆங்கவன்தான் உரைத்தமொழி கேட்ட அன்பர் அதனை அனுவாதஞ்செய் தவனை நோக்கித், "தாங்கியஞா னத்துடனுங் கந்தம் ஐந்தும் தாம்வீந்து கெட்டனவேல் தலைவன் தானும், ஈங்குளன்''[2]என் றவனுக்கு விடய மாக யாவையும்முன் இயற்று தற்கு விகார மேசெய், தோங்குவடி வமைத்துவிழ வெடுக்கும் பூசை கொள்வார்ஆர்? உரைக்க!'' என உரைக்க லுற்றான். 917

"கந்தமாம் வினையுடம்பு நீங்கி எங்கோன் கலந்துளன்முத் தியில்''என்றான்; என்னக் "காணும், இந்திரியங் கண்முதலாங்[3] கரணந் தானும் இல்லையேல் அவன்உணர்ச்சி இல்லை'' என்றார், "முந்தையறி விலனுகி உறங்கி னானை நிந்தித்து மொழிந்துடல்மீ தாடி னார்க்கு, வந்தவினைப் பயன்போல வழிபட் டார்க்கும் வரு மன்றோ நன்மை?''என மறுத்துச் சொன்னான். 9:8

சொன்னஉரை கேட்டருளி அன்பர் தாமும் "தொடர்ந்தவழி பாடுபல கொள்கின் றானுக், கன்னவற்றின் உடன்பாடும் எதிர் வும் இல்லை யானபோ தவன்பெறுதல் இல்லை'' என்றார்; "முன் னவற்றில் உடன்பாடும் எதிர்வும் இன்றி முறுகுதுயில் உற்றானை முனிந்து கொன்றால், இன்னுயிர்போய்க் கொலையாகி முடிந்த தன்றோ? இப்படியால் எம்மிறைவற் கெய்தும்'' என்றான். 919

"இப்படியால் எய்தும்''என இசைத்து "நீஇங் கெடுத்துக் காட் டியதுயிலும் இயல்பி னன்போல், மெய்ப்படிய கரணங்கள்

---

பா - ம்—[1] தத்தழிவே. [2] ஈங்குளம். [3] கண்முதலான.

உயிர்தாம் இங்கு வேண்டுதியால் நும்இறைவற் கான போது, செப்பியஅக் கந்தத்தின் வினையின் ருகித் திரிவில்லா முத்தியிற் சென் றிலனும் ஆனான்,, அப்படிஅக் கந்தத்துள் அறிவுங் கெட்டால் அம்முத்தி யுடன் இன்பம் அணையா'' தென்றார். 920

அவ்வுரைகேட் டெதிர்மாற்றம் அறைவ தின்றி ''அணைந்துளன்அம் முத்தியெனும் அதுவும் பாழாம்'', கவ்வையில்லின்றவனைஎதிர் நோக்கி ஞானக் கடலமுதம் அனையவர்[1]தங் காதல் அன்பர், ''பொய்வகையே முத்தியினிற் போனான் முன்பே பொருளெல்லாம் உணர்ந்துரைத்துப் போனான் என்றாய்,, எவ்வகையால் அவன்எல்லாம் உணர்ந்த திதும் இல்லதுரைப் பாய் எனினும் ஏற்போம்'' என் றார். 921

''உணர்வுபொதுச் சிறப்பென்ன இரண்டின் முன்ன துளவான மரப்பொதுமை உணர்த்தல்[2] ஏனைப், புணர்சிறப்பு மரங்களில்லைத் தின்ன தென்றல் இப்படியால் வரம்பில்லாப் பொருள்கள் எல்லாம், கொணரும்விற கினைக்குவைசெய் திடினும் வேறு குறைத்தவற்றைத் தனித்தனியே இடினும் வெந்தீத், துணர்கதுவிச் சுடவல்ல வாறுபோலத் தொகுத்தும்விரித் துந் தெரிக்குந் தொல்லோன்'' என்றான். 922

எடுத்துரைத்த புத்தன்எதிர் இயம்பும் அன்பர் ''எரியுணர்வுக் கெடுத்துக்காட் டாகச் சொன்னாய்,,[3] அடுத்தவுணர் வுருவுடைய தன்றுசொன்ன அனல்வடிவிற் றும்அதுவும் அறிதி: நுங்கோன், தொடுத்த நிகழ் காலமே அன்றி ஏனைத் தொடர்ந்தஇரு காலமுந்தொக் கறியு மாகில், கடுத்தஎரி நிகழ்காலத் திட்ட தல்லால் காணாத காலத்துக் கதுவா'' தென்றார். 923

''ஆதலினால் உன்னிறைவன் பொருள்கள் எல்லாம் அறிந்ததுநும் முத்திபோல் ஆயிற் றன்றே;, ஏதமாம் இவ்வறிவால் உரைத்த நூலும்'' என் றவனுக் கேற்குமா றருளிச் செய்ய, வாதமா றென்றின்றித் தோற்றான் புத்தன்; மற்றவனை வென்றருளிப் புகலி மன்னர், பாததா மரைபணிந்தார் அன்பர், தங்கள் பான்மையழி புத்தர்களும் பணிந்து வீழ்ந்தார். 924

---

பா - ம்—[1] உண்டவர். [2] உணர்தல். [3] சொன்னால்.

புந்தியினால் அவருரைத்த பொருளின் தன்மை பொருளன்றாம் படிஅன்பர் பொருந்தக் கூற, மந்தவுணர் வுடையவரை நோக்கிச் "சைவம் அல்லாது மற்றொன்றும் இல்லை" என்றே, அந்தமில்சீர் மறைகள்ஆ கமங்கள் ஏனை அகிலகலைப் பொருளுணர்ந்தார் அருளிச் செய்யச், சிந்தையினில் அதுதெளிந்து புத்தர் சண்டைத் திருமறையோர் சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்தார்.

அன்றவர்க்குக் கவுணியர்கோன் கருணை நோக்கம் அணைதலினால் அறிவின்மை அகன்று நீங்கி, முன்தொழுது விழுந்தெழுந்து சைவ ரானார், முகைமலர்மா ரியின்வெள்ளம் பொழிந்த தெங்கும், நின்றனவும் சரிப்பனவும் சைவ மேயாம் நிலைமையவர்க் கருள்செய்து சண்டை வேந்தர், சென்றுசிவ னூர்பதிகள் பணிய வேண்டித் திருக்கடவூ ரதன் மருங்கு சேர வந்தார். 926

அந்நகரில் அடியார்கள் எதிர்கொள்ளப் புக்கருளிக்
கொன்னவிலுங் கூற்றுதைத்தார் குரைகழல்கள் பணிந்தேத்தி
மன்னிஅமர்ந் துறையுநாள் "வாகீச மாமுனிவர்
எந்நகரில் எழுந்தருளிற்" றென்றடியார் தமைவினவ. 927

அங்கவரும் அடிபோற்றி ஆண்டஅர செழுந்தருளிப்
பொங்குபுனற் பூந்துருத்தி நகரின்கண் போற்றிசைத்துத்
தங்குதிருத் தொண்டுசெயும் மகிழ்ச்சியினால் சார்ந்தருளி
எங்குமிகழ்ந் திடஇருந்த படிஎல்லாம் இயம்பினார். 928

அப்பரிசங் கவர்மொழிய ஆண்டஅர சினைக்காணும்
ஒப்பரிய பெருவிருப்பு மிக்கோங்க ஒளிபெருகு
மைப்பொருவு கறைக்கண்டர் கழல்வணங்கி அருள்பெற்றுச்
செப்பரிய புகழ்ப்புகலிப் பிள்ளையார் செல்கின்றார். 929

பூவிரியுந் தடஞ்சோலை புடைபரப்பப் புனல்பரக்கும்
காவிரியின் தென்கரைபோய்க் கண்ணுதலார் மகிழ்ந்தஇடம்
மேவிஇனி தமர்ந்திறைஞ்சி விருப்புறுமெய்த் தொண்டரொடு
நாவரச ருழைச்சண்டை நகரரசர் நண்ணுவார். 930

அந்தணர்சூ ளாமணியார் பூந்துருத்திக் கணித்தாக
வந்தருளும் பெருவார்த்தை வாகீசர் கேட்டருளி

"நந்தமையா ளுடையவரை நாமெதிர்சென் றிறைஞ்சுவது
முந்தைவினைப் பயன்"என்று முகமலர அகமலர்வார். 931

"எதிர்சென்று பணிவன்"என எழுகின்ற பெருவிருப்பால்
நதிதங்கு சடைமுடியார் நற்பதங்கள் தொழுதந்தப்
பதிநின்றும் புறப்பட்டுப் பரசமயஞ் சிதைத்தவர்பால்
முதிர்கின்ற பெருந்தவத்தோர் முன்னெய்த வந்தணைந்தார். 932

திருச்சின்னம் பணிமாறக் கேட்டநாற் றிசையுள்ளோர்,
பெருக்கின்ற ஆர்வத்தால் பிள்ளையார் தமைச்சூழ்ந்த, நெருக்கினிடை யவர்காணு வகைநிலத்துப் பணிந்துள்ளம், உருக்கி. எழும் மனம்பொங்கத்[1] தொண்டர்குழாத் துடன்அணைந்தார்.*

வந்தணைந்த வாகீசர் வண்புகலி வாழ்வேந்தர்
சந்தமணித் திருமுத்தின் சிவிகையினைத் தாங்கியே[2]
சிந்தைகளிப் புறவந்தார்;[3] திருஞான சம்பந்தர்
புந்தியினில் வேறொன்று நிகழ்ந்திடமுன் புகல்கின்றார். 934

"அப்பர்தாம் எங்குற்றார் இப்பொழு(து)?"என் றருள்செய்யச்
செப்பரிய புகழ்த்திருநா வுக்கரசர் செப்புவார்
"ஒப்பரிய தவஞ்செய்தேன் ஆதலினால் உம்மடிகள்[4]
இப்பொழுது தாங்கிவரப் பெற்றுய்ந்தேன்யான்"என்றார். 935

அவ்வார்த்தை கேட்டஞ்சி அவனியின்மேல் இழிந்தருளி
"இவ்வாறு செய்தருளிற் றென்னும்?"என் றிறைஞ்சுதலும்
செவ்வாறு மொழிநாவர் "திருஞான சம்பந்தர்க்(கு)
எவ்வாறு செயத்தகுவ(து)?" என்றெதிரே இறைஞ்சினார்.[5] 936

சூழ்ந்துமிடைந் தருகணையும் தொண்டரெல்லாம் அதுகண்டு
தாழ்ந்துநிலம் உறவணங்கி எழுந்துதலை[6] கை[7]குவித்து
வாழ்ந்துமனக் களிப்பினராய் "மற்றிவரை வணங்கப்பெற்(று)
ஆழ்ந்தபிறப் புய்ந்தோம்"என் றண்டமெலாம் உறஆர்த்தார்.

---

பா - ம்—[1] எழும் அன்போங்கத். [2] சந்தமணிச் சிவிகையினைத் தாங்குவார் உடன்தாங்கிச். [3] புறவருவார். [4] ஆதலினும் இணையடிகள். [5] இறைஞ்சுதலும். [6] எழுந்துதம. [7] எழுந்தங்கைதலை. * இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரசர்தமைப்
பெருகார்வத் தொடும்அணைந்து தழீஇக்கொள்ளப் பிள்ளையார்
மருவாரும் மலரடிகள் வணங்கியுடன் வந்தணைந்தார்
பொருவாரும் புனற்சடையார் மகிழ்ந்ததிருப் பூந்துருத்தி. 938

அன்பர்குழாத் தொடுஞ்செல்வார் ஆனேற்றார் மகிழ்கோயில்
முன்பணித்தா கச்சென்று கோபுரத்தை முன்னிறைஞ்சித்
துன்பமிலாத் திருத்தொண்ட ருடன்தொழுது புக்கருளி
என்புருக வலங்கொண்டு பணிந்தேத்தி இறைஞ்சினார். 939

பொய்யிலியா ரைப்பணிந்து போற்றியே புறத்தணைவார்;
செய்யசடை யார்கோயில் திருவாயில் முனாகுக
மையறுசீர்த் தொண்டர்குழாம் வந்துபுடை சூழஉல(கு)
உய்யவரு வார்தங்க ளுடன்மகிழ்ந்தங் கினிதிருந்தார். 940

வாக்கின் தனிமன்னர் வண்புகலி வேந்தர்தமைப்
போக்கும் வரவும் வினவப் புகுந்ததெல்லாந்
தூக்கின் தமிழ்விரகர் சொல்லிறந்த ஞானமறை
தேக்குந் திருவாயாற் செப்பி அருள்செய்தார். 941

காழியினில் வந்த கவுணியர்தம் போரேற்றை
ஆழிமிசைக் கல்மிதப்பில் வந்தார் அடிவணங்கி
"வாழிதிருத் தொண்டென்னும் வான்பயிர்தான் ஓங்குதற்குச்
சூழும் பெருவேலி யானீர்" எனத்தொழுதார். 942

பிள்ளையார் தாமுமவர் முன்தொழுது போன்பின்
வெள்ள புனையபுகழ் மானியார் மேன்மையையும்
கொள்ளும் பெருமைக் குலச்சிறையார் தொண்டினையும்
உள்ள பரிசெல்லாம் மொழிந்தங்(கு) உவந்திருந்தார். 943

தென்னற் குயிரோடு நீறளித்துச் செங்கமலத்
தன்னம் அனையார்க்கும் அமைச்சர்க்கும் அன்பருளித்
துன்றுநெறி வைதிகத்தின் தூநெறியே ஆக்குதலால்
மன்னுபுகழ் வாகீசர் கேட்டு மனமகிழ்ந்தார். 944

சொல்லின் பெருவேந்தர் தொண்டைவள நாடெய்தி
மல்கு புகழ்க்காஞ்சி ஏகாம் பரமன்னும்

செல்வர் கழல்பணிந்து சென்றதெல்லாஞ் செப்புதலும்
புல்குநூல் மார்பரும்போய்ப் போற்ற மனம்[1]புரிந்தார். 945

அங்கணரைப் போற்றிஎழுந் தாண்ட அரசமர்ந்த
பொங்கு திருமடத்தில் புக்கங் கினிதமர்ந்து
திங்கட் பகவணியும்[2] சென்னியார் சேவடிக்கீழ்த்
தங்கு மனத்தோடு தாள்[3] பரவிச் செல்லுநாள். 946

வாகீச மாமுனிவர் மன்னுதிரு வாலவாய்
நாகம் அரைககசைத்த நம்பர் கழல்வணங்கப்
போகும் பெருவிருப்புப் பொங்கப் புகலியின்மேல்
ஏகும் பெருங்காதல் பிள்ளையார் ஏற்றெழுவார் 947

பூந்துருத்தி மேவும் புனிதர்தமைப் புக்கிறைஞ்சிப்
போந்துதிரு வாயிற் புறததணைந்து நாவினுக்கு
வேந்தர் திருவுள்ளம் மேவவிடை கொண்டருளி
ஏந்தலார் எண்ணிறந்த தொணடருடன் ஏகினர். 948

மாடுபுனற் பொன்னி இழிந்து வடகரையில்
நீடுதிரு நெய்த்தானம் ஐயாறு நேர்ந்திறைஞ்சிப்
பாடுதமிழ் மாலைகளுஞ் சாத்திப் பரவிப்போய்
ஆடல் புரிந்தார் திருப்பழனஞ் சென்றணைந்தார். 949

செங்கண் விடையார் திருப்பழனஞ் சேர்ந்திறைஞ்சிப்
பொங்கிய காதலின்முன் போற்றும் பதிபிறவும்
தங்கிப்போய்ச் சண்பைநகர் சார்ந்தார் தனிப்பொருப்பின்
மங்கை திருமுலைப்பால் உண்டருளும் வள்ளலார். 950

தென்னாட் டமண்மா சறுத்துத்[4] திருநீறே
அந்நாடு போற்றுவித்தார் வந்தணையும் வார்த்தைகேட்(டு)
"எந்நாள் பணிவ(து)?"என ஏற்றெழுந்த மாமறையோர்
முன்னாக வேதம் முழங்க[5] எதிர்கொண்டார். 951

போத நீடுமா மறையவர் எதிர்கொளப் புகலிகா வலருந்தம்,
சீத முத்தணிச் சிவிகைநின் றிழிந்தெதிர் செல்பவர் திருந்

பா - ம்—[1] போற்றித்திறம்; போற்றுந்திறம். [2] கொழுந்தணியும். [3] தாம். [4] டமணு சறுத்துத். [5] மொழிந்தங்கு.

தோணி, நாதர் கோயில்முன் தோன்றிட நகைமலர்க் கரங்குவித் திறைஞ்சிப்போய், ஓத நீரின்மேல் ஓங்குகோயி லின்மணிக் கோபுரஞ் சென்றுற்றார். 952

அங்கம் மாநிலத் தெட்டுற வணங்கிப்புக் கஞ்சலி மூடிஏறப், பொங்கு காதலிற் புடைவலங் கொண்டுமுன் பணிந்துபோற் றெடுத் தோதித், துங்க நீள்பெருந் தோணியாங் கோயிலை அருளி னால் தொழுதேறி, மங்கை யோடுடன் வீற்றிருந் தருளினார் மலர்க்கழல் பணிவுற்றார். 953

முற்று மெய்யெலாம் புளகங்கள் முகிழ்த்தெழ முகந்துகண் களிகூரப், பற்றும் உள்ளம்உள் ளலைத்தெழும் ஆனந்தம் பொழி தரப் பணிந்தேத்தி, "உற்று மைசேர்வ(து)" எனுந்திரு வியமகம் உவகையால் எடுத்தோதி,[1] "வெற்றி யாகமீ னவன்அவை எதிர் நதி மிசைவருக ரன்"என்பார். 954

சீரின் மல்கிய திருப்பதி கத்தினில் திருக்கடைப் காப்பேற்றி, வாரின் மல்கிய வனமுலை யாளுடன் மன்னினார் தமைப்போற்றி, ஆரும் இன்னருள் பெற்றுமீண் டணைபவர் அங்கையால் தொழு தேத்தி, ஏரின் மல்கிய கோயில்முன் பணிந்துபோந் திறைஞ் சினர் மணிவாயில். 955

தாதை யாரும்அங் குடன்பணிந் தணைந்திடச்[2] சண்பையார் தனிஏறு, மூதெ யில்திரு வாயிலைத் தொழுதுபோய் முகைமலர்க் குழலார்கள், ஆத ரித்துவாழ்த் துரை இரு மருங்கெழ அணிமறு கிடைச்சென்று, காத லித்தவர்க் கருள்செய்து தந்திரு மாளிகைக் கடைசார்ந்தார். 956

நறவம் ஆர்பொழிற் புகலியில் நண்ணிய திருஞான சம்பந் தர், விறலி யாருடன் நீலகண் டப்பெரும் பாணர்க்கு மிகநல்கி, உறையு ளாம்அவர் மாளிகை செலவிடுத் துள்ளணை தரும் போதில், அறலின் நேர்குழ லார்மணி விளக்கெடுத் தெதிர்கொள அணைவுற்றார். 957

பா - ம்—[1] எடுத்தேத்தி. [2] அங்கணைந்துடன் பணிந்திட.

அங்க ணைந்தரு மறைக்குலத் தாயர்வந் தடிவணங் கிடத் தாழும்[1], துங்க நீள்பெருந் தோணியில் தாயர்தாள் மனங் கொளத் தொழுவாராய்த், தங்கு காதலின் அங்கமர்ந் தருளுநாண் தம்பிரான் கழல்போற்றிப், பொங்கும் இன்னிசைத் திருப்பதி கம்[2] பல பாடினார் புகழ்ந்தேத்தி. 958

நீல மாவிடந் திருமிடற் றடக்கிய நிமலரை நேரெய்தும், கால மானவை அனைத்தினும் பணிந்துடன் கலந்தஅன் பர்க ளோடும், சால நாள்கள்அங் குறைபவர் தையலாள் தழுவிடக் குழைகம்பர், கோல மார்தரக் கும்பிடும் ஆசைகொண் டெழுங் குறிப் பினரானார். 959

"தண்ட கத்திரு நாட்டினைச் சார்ந்துவந் தெம்பிரான்[3] மகிழ்கோயில், கண்டு போற்றிநாம் பணிவ"தென் றன்பருக் கருள்செய்வார் காலம்பெற், றணட ருக்கறி வரும்பெருந் தோணி யில் இருந்தவர் அருள்பெற்றுத், தொண்டர் சூழ்ந்துடன் புறப் படத் தொடர்ந்தெழுந் தாதையார்க் குரைசெய்வார். 960

"அப்பர்! நீர்இனி இங்கொழிந் தருமறை அங்கிவேட் டன் போடும், துப்பு நேர்சடை யார்தமைப் பரவியே தொழுதிரும்" எனச் சொல்லி, மெய்ப்பெ ருந்தொண்டர் மீள்பவர் தமக்கெலாம் விடை கொடுத் தருளிப்போய், ஒப்பிலாதவர் தமைவழி யிடைப் பணிந்துருகும்அன் பொடுசெல்வார். 961

செல்வம் மல்கிய தில்லைமூ தூரினில் திருநடம் பணிந்தேத் திப், பல்பெ ருந்தொண்டர் எதிர்கொளப் பரமர்தந் திருத்தினை நகர்பாடி, அல்கு தொண்டர்கள் தம்முடன் திருமாணி குழியினை அணைந்தேத்தி, மல்கு வார்சடை யார்திருப் பாதிரிப் புலியூரை வந்துற்றார். 962

கன்னி மாவனங் காப்பென இருந்தவர் கழலிணை பணிந் தங்கு, "முன்ன மாமுடக் கான்முயற் கருள்செய்த வண்ண மும்" மொழிந்தேத்தி, மன்னு வார்பொழில் திருவடு கூரினை

பா - ம்—[1] தாழ்ந்து. [2] தமிழ்ப்பதிகம். [3] சார்ந்துநந் தம்பிரான்.

வந்தெய்தி வணங்கிப்போய்ப், பின்னு வார்சடை யார்திரு வக்கரை பிள்ளையார் அணைவுற்றார். 963

வக்கரைப்பெரு மான்தனை வணங்கிஅங் கமருநாள் அருளாலே, செக்கர் வேணியார் இரும்பைமா காளமுஞ் சென்று தாழ்ந் துடன்மீண்டு, மிக்க சீர்வளர் அதிகைவீ ரட்டமும் மேவு[1] வார் தம்முன்பு, தொக்க மெய்த்திருத் தொண்டர்வந் தெதிர் கொளத் தொழுதெழுந் தணைவுற்றார். 964

ஆதி தேவர்அங் கமர்ந்தவீ ரட்டானஞ் சென்றணை பவர் முன்னே, பூதம் பாடநின் றுடுவார் திருநடம்[2] புலப்படும் படி காட்ட, வேத பாலகர்[3] பணிந்துமெய் யுணர்வுடன் உருகிய விருப்போடும், கோதி லாஇசை குலவு "குண்டைக்குறட் பூதம்" என் றெடுத்தேத்தி.[4] 965

பரவி ஏத்திய திருப்பதி கத்திசை பாடினார் பணிந்தங்கு, விரவும் அன்பொடு மகிழ்ந்தினி துறைபவர் விமலரை வணங்கிப் போய், அரவ நீர்ச்சடை அங்கணர் தாம்மகிழ்ந் துறைதிரு வாமாத்தூர், சிரபு ரத்துவந் தருளிய திருமறைச்[5] சிறுவர்சென் றணைவுற்றார். 966

சென்ற ணைந்துசிந் தையின்மகிழ் விருப்பொடு திகழ்திரு வாமாத்தூர்ப், பொன்ற யங்குபூங் கொன்றையும் வன்னியும் புனைந்தவர் அடிபோற்றிக், "குன்ற வார்சிலை" எனுந்திருப் பதிகமெய் குலவிய இசைபாடி, நன்றும் இன்புறப் பணிந்துசெல் வார்திருக் கோவலூர் நகர்சேர்ந்தார். 967

கோவல் நீடிய வீரட்டம் அமர்ந்தவர் குரைகழல் பணிந் தேத்தி, ஆவின் ஐந்துகந் தாடுவார் அறையணி நல்லூரை அணைந்தேத்திப், பாவ லர்ந்தசெந் தமிழ்கொடு பரவுவார் பரவு சீர் அடியார்கள், மேவும் அன்புறு மேன்மையாந் தன்மையை விளங்கிட அருள்செய்தார். 968

---

பா - ம்—[1] வீரட்டான மேவு. [2] திருநட்டம். [3] வேதபாரகர். [4] றெடுத்தோதி. [5] சிறுமறைச்.

சீரின் மன்னிய பதிகமுன் பாடிஅத் திருஅறை யணிநல் லூரர், வாரின் மல்கிய கொங்கையாள் பங்கர்தம் மலைமிசை வலங் கொள்வார், பாரின் மலகிய தொண்டர்கள் இமையவர் நாடொறும் பணிந்தேத்தும், காரின் மலகிய சோலைஅண் ணாமலை அன்பர்காட் டிடக்கண்டார். 969

அண்ணா மலைஅங் கமரர்பிரான்[1] வடிவு போன்று தோன்று தலும், கணணால் பருகிக் கைதொழுது கலந்து போற்றுங் காதலினால் "உண்ணா முலை"யாள் எனும்பதிகம் பாடித் தொண்ட ருடன்போந்து, தெண்ணீர் முடியார் திருவண்ணா மலை யைச் சென்று சேர்வுற்றார். 970

அங்கண் அணைவார் பணிந்தெழுந்து போற்றி செய்தம் மலை மீது, தங்கு விருப்பில் வீற்றிருந்தார் தாட்டா மரைகள் தம்முடி மேல், பொங்கும் ஆர்வத் தொடும்புனைந்து புளகம் மலர்ந்த திரு மேனி, எங்கு மாகிக் கண்பொழியும் இன்ப அருவி பெருக்கினார்.

ஆதி மூர்த்தி கழல்வணங்கி அங்கண் இனிதின் அமருநாள், பூத நாத ரவர்தம்மைப் "பூவார் மல"ரால் போற்றிசைத்துக், காத லால்அத் திருமலையிற் சிலநாள் வைகிக் கமழ்கொன்றை, வேத கீதர் திருபபதிகள் பிறவும் பணியும் விருப்புறுவார்.[2] 972

மங்கை பாகர் திருவருளால் வணங்கிப் போந்து வடதிசை யில், செங்கண் விடையார் பதிபலவும் பணிந்து புகலிச் செம் மலார், துங்க வரைகள் கான்[3]பலவுங் கடந்து தொண்டைத் திரு நாட்டில், திங்கள் முடியார் இனிதமருந் திருவோத் தூரைச் சேர்வுற்றார். 973

தேவர் முனிவர்க்(கு) ஒத்தளித்தார்[4] திருவோத் தூரில் திருத்தொண்டர், தாவில் சண்பைத் தமிழ்விரகர் தாம்அங் கணை யக் களிசிறந்து, மேவுங் கதலி தோரணங்கள் விளக்கு நிரைத்து நிறைகுடமும், பூவும் பொரியும் சுண்ணமும்முன் கொண்டு போற்றி எதிர்கொண்டார். 974

---

பா - ம்—[1] கமர்ந்தபிரான். [2] பணிய விரும்புவார். [3] வரைகள் தாம். [4] ஓத்தளித்த.

சண்பை வேந்தர் தண்டரளச் சிவிகை நின்றும் இழிந்தருளி, கண்பின் மிக்க சீரடியார் சூழ நம்பர் கோபுரஞ்சூழ், விண்பின் னுக முன்னேங்கும் வியன்பொற் புரிசை வலங்கொண்டு, பண்பு[1] நீடிப் பணிந்தெழுந்து பரமர் கோயி லுள்ளடைந்தார். 975

வாரணத்தின் உரிபோர்த்த மைந்தர் உமையாள் மணவாளர், ஆரணத்தின் உட்பொருளாய் நின்றூர் தம்முன் அணைந்திறைஞ்சி, நாரணற்கும் பிரமற்கும் நண்ணற் கரிய கழல்போற்றும், காரணத்தின் வரும்இன்பக் கண்ணீர் பொழியக் கைதொழுதார். 976

தொழுது விழுந்து பணிந்தெழுந்து சொன்மாலைகளால் துதிசெய்து, முழுதும் ஆனூர் அருள்பெற்றுப் போந்து வைகி[2] முதல்வர்தமைப், பொழுது தோறும் புக்கிறைஞ்சிப் போற்றி செய்தங் கமர்வார்முன், அழுது வணங்கி ஒருதொண்டர் அமணர் திறத்தொன் றறிவிப்பார். 977

"அங்கை அனலேற் றவர்க்கடியேன் ஆக்கும் பனைக ளானவெலாம், மங்கு லுறநீண் டாண்பனையாய்க் காயா வாகக் கண்டமணர், 'இங்கு நீரிட் டாக்குவன காய்த்தற் கடைவுண்டோ?' என்று, பொங்கு நகைசெய் திழித்துரைத்தார் அருளவேண்டும்" எனப்புகல. 978

பரமனூர்தந் திருத்தொண்டர் பண்பு நோக்கிப் பரிவெய்தி, விரவு காத லொடும்விரைந்து விமலர் கோயில் புக்கருளி, அரவும் மதியும் பகைதீர அணிந்தார் தம்மை அடிவணங்கி, இரவு போற்றித் திருப்பதிகம் இசையிற் பெருக எடுத்தருளி. 979

விரும்பு மேன்மைத் திருக்கடைக்காப் பதனில் விமலர் அருளாலே, "குரும்பை ஆண்பனை ஈனும்" என்னும் வாய்மை குலவுதலால், நெருங்கும் ஏற்றுப் பனையெல்லாம் நிறைந்த குலைக ளாய்க்குரும்பை, அரும்பு பெண்ணை யாகியிடக் கண்டோர்[3] ரெல்லாம் அதிசயித்தார். 980

---

பா - ம்—[1] பண்பின். [2] பெற்று வைகி வணங்கி. [3] கண்டார.

சீரின் மன்னுந்[1] திருக்கடைக்காப் பேற்றிச் சிவனார் அருள் பெற்றுப், பாரில் நீடும் ஆண்பனைமுன்[2] காய்த்துப் பழுக்கும் பண்பினால், நேரும் அன்பர் தங்கருத்து நேரே முடித்துக் கொடுத்தருளி, ஆரும் உவகைத் திருத்தொண்டர் போற்ற அங் கண் இனிதமர்ந்தார். 981

தென்னாட் டமண்மா சறுத்தார்[3]தஞ் செய்கை கண்டு திகைத் தமணர், அந்நாட் டதனை விட்டகல்வார் சிலர்தங் கையிற் குண் டிகைகள், "என்னு வனமற் றிவை?"என்று தகர்ப்பார்; "இறைவன் ஏறுயர்த்த, பொன்னார் மேனிப் புரிசடையான் அன்றே!" என்று போற்றினார். 982

பிள்ளை யார்தந் திருவாக்கிற் பிறத்த லால்அத்[4] தாலமும் முன்(பு), உள்ள பாசம் விட்டகல ஒழியாப் பிறவி தனையொழித் துக், கொள்ளு நீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடின வால்;,[5] வள்ள லார்மற் றவரருளின் வாய்மை கூறின் வரம் பென்னும்? 983

அங்கண் அமரர் பெருமானைப் பணிந்து போந்தா டரவினு டன், பொங்கு கங்கை முடிக்கணிந்தார் மகிழும் பதிகள் பல போற்றி, மங்கை பாகர் அமர்ந்தருளும் வயல்மா கறலை வழுத்திப் போய்க், கொங்கு மலர்நீர்க் குரங்கணின்முட் டத்தைச் சென்று குறுகினார், 984

ஆதி முதல்வர் குரங்கணின் முட்டத்தை அணைந்து பணிந் தேத்தி, நீதி வாழுந்[6] திருத்தொண்டர் போற்ற நிகரில் சண்பை யினில், வேத மோடு சைவநெறி விளங்க வந்த கவுணியனார், மாதொர் பாகர் தாம்மன்னும் மதில்சூழ் காஞ்சி மருங்கணைந்தார்.

நீடுகாஞ்சி வாணரும் நிலவுமெய்ம்மை அன்பரும்
மாடுசண்பை வள்ளலார் வந்தணைந்த ஓகையால்
கூடுகின்ற இன்பநேர் குலாவுவீதி கோலினார்
காடுகொண்ட பூகம்வாழை காமர்தோ ரணங்களால். 986

---

பா - ம்—[1] மெய்ம்மைத். [2] அப்பனைமுன்; பனைமுன்னம். [3] டமறு சறுத்தார். [4] பிறத்தலாலே. [5] கூடினவாம். [6] நீதிவழுவா.

அன்ன தன்மையில் இருவரும் பணிந்தெழுந் தருள்தலை மேற்கொண்டு, மன்னும் வன்றொண்டர் ஆலால சுந்தரர் ஆகித் தாம் வழுவாத, முன்னை நல்வினைத் தொழில்தலை நின்றனர் முதற்சேரர் பெருமானும், நன்மை சேர்கண நாதராய் அவர் செயும் நயப்புறு தொழில்பூண்டார். 49

தலத்து வந்துமுன் னுதயஞ்செய் பரவையார் சங்கிலி யாரென்னும், நலத்தின் மிக்கவர் வல்வினைத் தொடக்கற நாயகி அருளாலே, அலத்த மெல்லடிக் கமலினி யாருடன் அனிந்திதை யாராகி, மலைத்த னிப்பெரு மான்மகள் கோயிலில் தந்தொழில் வழிநின்றார். 50

வாழி மாதவர் ஆலால சுந்தரர் வழியிடை அருள்செய்த, ஏழி சைத்திருப் பதிகம்இவ் வுலகினில் ஏற்றிட எறிமுந்நீர், ஆழி வேந்தனும் வருணனுக்(கு) அளித்திட அவனும்அவ் வருள்சூடி, ஊழி யிற்றனி யொருவர்தந் திருவஞ்சைக் களத்தி லுய்த் துணர்வித்தான். 51

சேரர் காவலர் விண்ணப்பஞ் செய்தஅத் திருவுலாப் புறம் அன்று, சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா சாத்தனுந் தரித்திந்தப், பாரில் வேதியர் திருப்பிட வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும், நார வேலைசூழ் உலகினில் விளங்கிட நாட்டினர் நலத்தாலே. 52

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம். 53

சருக்கம் பதின்மூன்றுக்குத் திருவிருத்தம் - 4,286.

இரண்டாங் காண்டம் முற்றிற்று.

திருத்தொண்டர் புராணம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்

—

# வாழ்த்து

வையம் நீடுக ; மாமழை மன்னுக ;
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக ;
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக ;
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

இந்த இறுதி வாழ்த்துச் செய்யுள் பெரிய புராண ஏட்டுப் பிரதிகள் பலவற்றுள்ளும் இல்லை.

## சமயகுரவர்
## நால்வர் திருநட்சத்திரம்

சித்திரைச் சதயம் அப்பர் ; சிறந்தவை காசி மூலம்
அத்தரைப் பணிசம் பந்தர் ; ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாத வூரர் ; முதியநல் ஆடி தன்னில்
சுத்தமாஞ் சோதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார். 1

## சமயகுரவர் நால்வர் வயசு

அப்பருக்கெண் பத்தொன்(று) அருள்வாத வூரருக்குச்
செப்பியநா லெட்டினில் தெய்வீகம்—இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்(கு)
அந்தம் பதினா றறி. 2

—தனிப்பாடல்.

உ

செந்திலாண்டவன் துணை

கொற்றவன்குடி

**உமாபதி சிவாசாரியர்**

அருளிச் செய்த

# நம்பியாண்டார் நம்பி புராணம்

என்னும

# திருமுறைகண்ட புராணம் *

°°○★○°°

## காப்பு

கருமுறை விண்டடி யவருயு மாறருள் கவுணியர் குலதீபம், தருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடும்அத், திருமுறை கண்ட புராணம் உரைக்கச் சிந்துர முகனற்குருள், ஒருமுறை இருமுறை மும்முறை வாழ்த்தி உவந்தன் பொடுபணிவாம்.

## நூல்

உலகமகிழ் தருசைய மீது தோன்றி ஓவாது வருபொன்னி சூழ்சோ ணாட்டின், திலகமென விளங்குமணி மாடஆரூர்த் தியாகேசர் பதம்பணிந்து செங்கோ லோச்சி, அலகில்புகழ் பெறுராசராச மன்னன் அபயகுல சேகரன்[1] பால் எய்தும் அன்பர், இலகுமொரு மூவரருள் பதிக மொன்றொன் றேஇனிதின் உரைசெய்ய அன்பாற் கேட்டு. 1

கையிரண்டும் உச்சிமேல் ஏறக் கண்ணீர் கரைந்தோட மெய்ம்முழுதும் புளகம் போர்ப்ப, ஐயன்மலர்ப் பதமுளத்தே கொண்டு போற்றி அரியமுறை தேடஎங்கும் இலாமை யாலே,

* இதனைப் பாடியவர், உமாபதி சிவம் என்னும் புலவர் ஒருவர் என்றும், அவர் கி. பி. 940-1012-ல் விளங்கியவர் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். உமாபதி சிவாசாரியார் காலம் கி. பி. 1313.

[1] இவனை ஆதித்த கரிகாலன் என்பர் ஆராய்ச்சியாளர்.

நையுமனத் தினனாகி இருக்குங் காலை நாரையூரினில்ஆதி சைவ மறை யோன்பால், வையமெலாம் ஈடேறச் சைவம் வாழ மாமணிபோல் ஒருசிறுவன் வந்து தோன்றி. 2

வளமொடுப நயனவிதிச் சடங்கும் பூண்டு மறைமுதலாம் கலைபயின்று வருநாள் ஈன்ற, கிளர்மறையோன் ஓரூர்க்குச் செல்ல மைந்தன் கேடில்பிதா உரைத்தமொழிப் படியே அந்தி, இளமதிச் செஞ்சடைப் பொல்லாப் பிள்ளையாரை ஏத்திஆ ராதிப் பான் இனிதின் ஏகி, உளமலிஅன் பொடுதிருமஞ் சனமுன் னாகும் உரியஎலாஞ் செய்துநிவே தனம்முன் வைத்து. 3

"எம்பெருமான்! அமுதுசெய வேண்டும்" என்ன இறைஞ் சிடவும் அமுதுசெயா திருப்பக் கண்டு, வெம்பியுளம் "ஏதேனுந் தவறிங் குண்டோ? வேழமுகனே! அடியேன் நிவேதித் திட்ட, பம்பமுதம் உண்ணாத தென்னை?" என்று பரிந்துதலை தனை மோதப் புகுங்கால் எம்மான், "நம்பி!பொறு" எனத்தடுத்தவ் வமுத மெல்லாம் நன்கருந்த உவந்துநம்பி நவில்வ தானான். 4

"எந்தையே! இனி அடியேன் பள்ளிக் கேகில் எங்கள்தே சிகன் அடிப்பான் ஆத லாலே, சந்தமறை முதற்கலைகள் நீயே ஓதித் தரல்வேண்டும்" எனவேழ முகத்தோன் தானும், அந்த மற ஓதுவிக்க ஓதி நம்பி மகிழ்ந்தனன்;அன் றதுபோல மற்றை நாளும், விந்தையொடு நிகழநம்பி யாண்டார் நம்பி மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன் கேளா. 5

"செல்வமிகு திருநாரை யூரில் மேவுஞ் சிவனளித்த மதகரிக் குச் சிந்தை கூர்ந்து, நல்லபுக மூடையநம்பி யாண்டார் நம்பி நண்பினொடு நிவேதிப்பான் மதுர மிக்க, எல்லையில்வா ழைக்கனி தேன் அவலோ டப்பம் எள்ளுண்டை இவ்வுலகோர் எடுக்க" என்றே, மல்லல்மிகு சேனையுடன் இராச ராச மன்னவனும் அந்நகரில் வந்து சேர்ந்தான். 6

ஆங்கதனுக் கந்நகரில் இடம்போ தாமல் அயல்சூழப் பதின்காத அகல எல்லை, மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கை யாவும் வந்தனஅவ் வெல்லையெலாம் மருவ வைத்துப், பாங்கி

னுடன் நம்பிதாள் பணிந்து மன்னன் பலகனிகள் கொணர்ந்த எலாம் பகர்ந்து போற்றி, "ஈங்கிதனைப் பொல்லாத பிள்ளை யாருக் கிப்பொழுதே நிவேதிக்க" என்று சொன்னான். 7

நம்பிஅர சன்சொன்ன வார்த்தை கேளா "நன்றுனது பணி" என்ன அருளால் உன்னித், தும்பிமுகன் அடிபணிந்து "மன்னன் இங்குத் தொகுத்தன நீ அமுதுசெய வேண்டும்" என்னக், கம்பமதக் களிற்றுமுகத் தானும் அங்குக் கருத்தி னுடன் நம்பியுரைக் கிசைந்து காட்ட, இம்பரினில் வந்தனநாற் சுத்தி செய்தே, இருந்தஎலாம் படைக்கஅவன் ஏற்றல் செய் தான். 8

புகர்முகக்கை புறப்படவே படைத்த எல்லாம் புகுந்தஇடம் அறியாமற் போன பின்னை, அகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர் வார நம்பிகழல் அன்பினால் அரசன் போற்றி, "மிகவும்ஒரு விண்ணப்பம் அடியேற் குண்டு; வேதியனே! கேள்" என்று விளம்பு வான்: "மெய்ப், புகழதுசேர் மூவர்தமிழ் - தொண்டர் செய்தி பூதலத்தில் விளங்க" எனப் போற்றி நின்றான். 9

அந்தஉரை கேட்டலும்அங் கரசன் தன்னை நம்பிமகிழ்ந் தருள்புரிவான் "அருள்சேர் மூவர், செந்தமிழ்கள் இருந்தஇடம் அன்ப ருள்ளோர் செய்திக்கவ் விநாயகன்தாள் சிந்தித் தெந் தாய்!, அந்தவகை ஏதென்று கேட்டால் எந்தை மகிழ்ந்தருளும்; அந்நெறியை வழாது னக்குத், தந்திடுவன்; மன்ன! பொறு" என்று சொல்லித் தந்திமுகன் சந்நிதியில் தாழ்ந்து சென்றான். 10

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப் போதைச் சென்னி யில்வைத் தவனருளில் திளைத்துச் சிந்தை, ஒன்றுமற உருகிவிழி தாரை கொள்ள உண்மையினால் வந்தித்தங் குவாவோன் தன்னை, "இன்றமிழ்சேர் மூவர்தமிழ் இருந்த எல்லை - எல்லையில் சீர்த் திருத்தொண்டர் இயல்பு - மூர்த்தி!, நன்றும் அருள் செய் தருள வேண்டும்" என்ன நாகமுகன் நம்பிக்கு நவில லுற்றான்.

"வார்ந்தருட்கண் நீர்சொரிய நம்பி கேட்ப வண்டமிழ்கள் இருந்தஇடம் மன்று ளாடும், கூர்ந்தஇருட் கண்டர்புறக் கடை

யின் பாங்கர்க் கோலமலர்க் கைகள்அடை யாள மாகச், சார்ந் தன'' என் றருள்செய்து தொண்டர் பேறும் சாற்றுதலால் சகதலத்தோர் அருளைச் சார, ஆர்ந்ததமிழ் இருந்தஇடம் - அன் பர் செய்தி அத்தனையும் நம்பிமனத் தருளிற் கொண்டார். 12

கொண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து குஞ்சரத்தோன் அருள்செய்த கொள்கை எல்லாம், மண்டுபெருங் காதலுடன் சொல்லி அந்த வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல் வார்;, "கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்; கைகாணு மந்திரங் கண் ணுதலோன் கூறல்; எண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற் காக இம்மொழியின் பெருமையையான் இயம்பக் கேள்நீ." 13

"சேடர்மலி காழிநகர் வேந்தர் தாமுந் தேவர்புகழ் திருத் தோணிச் சிவனார் பங்கில், பீடுடைய உமைமுலைப்பால் அருளால் உண்டு பிஞ்ஞகனைச் சின விடைமேல் பெருகக் கண்டு, 'தோடு டைய செவியன்' முதல் 'கல்லூர்' என்னும் தொடைமுடிவாப் பரசமயத் தொகைகள் மாளப், பாடினார்; பதிகங்கள் பாவில் ஒன்றும் பதினாறு யிரம்உளதாப் பகரு மன்றே. 14

திருநாவுக் கரையரெனும் செம்மை யாளர் தீ அமணர் சிறை நீங்க அதிகை மேவும், குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை கொடுங் 'கூற்றா யின' என்ன எடுத்துக் கோதில், ஒருமானைத் தரிக்கும் 'ஒருவரையுங்' காறும் ஒரு நாற்பத்தொன் பதினாயிரம தாகப், பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப் பிஞ்ஞகனார் அடி யிணைகள் பெற்று ளாரே. 15

பின்புசில நாளின்கண் ஆரூர் நம்பி பிறங்குதிரு வெண் ணெய்நல்லூர்ப் 'பித்தா' என்னும், இன்பமுதல் திருப்பதிகம் 'ஊழி தோறும்' ஈறாய்முப் பத்தெண்ணா யிரம தாக, முன்பு புகன் றவர்நொடித்தான் மலையிற் சேர்ந்தார்; முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர் தன்னில், அன்றவர்கை இலச்சினையால் வைத்தார்; மன்ன! ஆராய்ந்து தருக'' என அருளிச் செய்தார். 16

"அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடும் அதுபோலன் றிதுஎன்றும் உளதாம்; உண்மைப், பரபதமும் தற்பரமும்

பரனே அன்றிப் பலரில்லை என்றெழுதும் பனுவல்; பாரின், எரியினிடை வேவா(து)ஆற் றெதிரே யோடும் என்புக்கும் உயிர் கொடுக்கும் இடுநஞ் சாற்றும், கரியையவளை விக்குங்கல் மிதக்கப் பண்ணுங் கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே." 17

என்றென்று நம்பிக்குப் பரிவால் உண்மை இன்றமிழின் பெருமைதனை இயம்பக் கேட்டுக், குன்றொன்று பேருருவங் கொண்டாற் போலுங் குஞ்சரததோன் அருளினைஉட் கொண்டு மன்னன், மன்றினிடஞ் சென்றுமறை யோர்கள் தொண்டர் வார்சடையோர் காவலுடை மரபோர்க் கெல்லாம், "நன்றெங்கள் கணபதிதன் சொல்இ(து)" என்று நன்மையுடன் மன்னவனுர் நவிலுங் காலை. 18

அத்தகையோர் "தமிழ்வைத்த மூவர் வந்தால் அறைதிறக்கும்" எனஉரைக்க அரசன் தானும், மெய்த்தகுசிர் அம்பலவர்க் குற்ற செல்வ விழாஎடுத்து விளம்புதமிழ் மூவர் தம்மை, உய்த் தணிவீ தியினிலுலா வருவித் தும்பர் நாயகன்றன் கோயில்வல மாக்கி யுள்ளே, சித்தமெலாம் உருக்குதமிழ் இருக்கை சேரச் சேர்த்திஅவர் சேர்ந்ததெனச் செப்பி நின்ருன். 19

ஐயர்நட மாடும்அம் பலத்தின் மேல்பால் அருள்பெற்ற மூவர்தம தருள் சேர் செய்ய, கையதுவே இலச்சினையாய் இருந்த காப்பைக் கண்டவர்கள் அதிசயிப்பக் கடைவாய் நீக்கிப், பொய் யுடையோர் அறிவுதனைப் புலன்கள் மூடும் பொற்பதுபோல் போதமிகும் பாடல் தன்னை, நொய்யசிறு வன்மீகம் மூடக்கண்டு நொடிப்பளவி னிற்சிந்தை நொந்த வேந்தன். 20

பார்த்ததனைப் புறத்துய்ப்ப உரைத்து மேலே படிந்திருந்த மண்மலையைச் சேரத் தள்ளிச், சீர்த்ததில தயிலமலி கும்பங் கொண்டு செல்லுநனை யச்சொரிந்து திருஏ டெல்லாம், ஆர்த்த அரு ளதனாலே எடுத்து நோக்க அலகிலா ஏடுபழு தாகக் கண்டு, "தீர்த்தமுடிக் கணிபரனே! பரனே!!" என்னச் சிந்தைதளர்ந் திருகண்ணீர் சோர நின்ருன். 21

ஏந்துபுகழ் வளவனிவ்வா றன்பி ளுலே இடர்க்கடலின் கரைகாணு தினையுங் காலைச், சார்ந்தமலை மகள்கொழுநன்

அருளால் "வேதச் சைவநெறித் தலைவரெனும் மூவர் பாடல், வேய்ந்தனபோல் மண்மூடச் செய்தே ஈண்டு வேண்டுவன வைத்தோம்" என் றுலகி லுள்ள, மாந்தரொடு மன்னவனுங் கேட்கு மாற்றல் வானகத்தில் ஓரோசை எழுந்த தன்றே. 22

அந்தமொழி கேட்டலுமே மன்னன் தானும் ஆடினன்; பாடினன்; அலக்கண் யாவும், சிந்தினன்; அமுதமுண்டான் போல நெஞ்சந் தேறினன் நம்பி திரு வடியில் தாழ்ந்தான், "பந்தமறு சிவனடியார் கொள்க" என்றுப் பண்டாரந் திறந்து விட்டான்; பரிவு கூர்ந்தான், இந்தவகைப் பெருங்களிகொள் மன்னன் தானும் எழில்முறையை முன்போல வகுக்க எண்ணி.

மன்னுதமிழ் விரகரெங்கள் காழி வேந்தர் வகுத்தருளால் அமைத்ததிரு முறைஓர் மூன்றும், அன்னவகை வாகீசர் முறை ஓர் மூன்றும் ஆரூரர் உரைத்ததிரு முறைய தொன்றும், துன்ன வகை ஏழாகத் தொகுத்துச் செய்தான் தூயமனு எழுகோடி என்ப துன்னித், தன்னிகரில் திருவருளால் மன்னன் தானுந் தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே. 24

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்(று)
எண்பத்தி னன்கினால் இலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்
வண்பெற்ற முறைஒன்று நூற்றினால் வன்றொண்டர். 25

ஆகவளர் திருமுறைஏழ் அருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமாம் முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். 26

வைத்ததற்பின் நம்பிகழல் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சித்
"சித்திதரும் இறைமொழிந்த திருமுகப்பா சுரம்முதலாம்
உய்த்தபதி கங்களையும் ஒருமுறையாச் செய்க"எனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார். 27

மந்திரங்கள் எழுகோடி ஆதலினால் மன்னுமவர்
இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்துப்

பந்தமுறு மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால்
அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார். 28

ஆக்கியபின் திருத்தொண்டத் தொகைஅடைவை அருளாலே
நோக்கியபின் நாயன்மார் நுடங்கடைவுந் தொழிற்பேறும்
பாக்கியத்தால் இபமுகத்தோன் அருள்செய்த பகுதியினால்
வாக்கியல்சேர் அந்தாதி நம்பிஅடை வேவகுத்தார். 29

சீரருள்சேர் அறுபத்து மூவர்தனித் திருக்கூட்டம்
சாரும்அவர் ஒன்பானுந் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகைஅடைவு புவியினிடைப் பெருமையினாற்
சீருலவு திருஎருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார். 30

சென்னியருள் நம்பிஇவர் அந்நகரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்(து)"அரனே!
இன்னிசைதந் தருள்"என்ன இரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோன் அருள்செய்த கடனுரைப்பாம். 31

"நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லிஒருத் திக்கிசைகள் வாய்ப்பஅளித் தோம்"என்று
சொல்லஅவள் தனைஅழைத்துச் சுருதிவழிப் பண்தழுவும்
நல்லிசையின் வழிகேட்டு நம்பிஇறை உள்மகிழ்ந்தார். 32

"ஆங்கவளை அம்பலத்துள் ஆடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கருளால் முறைபணித்தற் கொக்கும்"என ஓரோசை
நீங்கரிய வானின்கண் நிகழஅரசன்கேட்டான். 33

மன்னனுக்கும் நம்பிக்கும் மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க
இன்னருள்முன் வியந்துரைத்த இவள்முதலா இசைத்தஇசை
தென்னிலமேல் மிகத்தோன்றத் திருவருளால் தோன்றியதாம்.

சொல்நட்ட பாடைக்குத் தொகைஎட்டுக் கட்டளையாம்;
இன்னிசையால் தருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்;
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதாம்;
உன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார். 35

மேவுகுறிஞ் சிக்கஞ்சு, வியாழக்குறிஞ் சிக்காறு;
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாவிரண்டு;
தேவுவந்த இந்தளத்தின் செய்திக்கு நான்கினிய;
தாவில்புகழ்க் காமரத்தின் தன்மைதனக் கிரண்டமைத்தார். 36

காந்தார மாகிய பியந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்(கு)
ஏய்ந்தவகை இரண்டாக்கிச் செவ்வழியொன் றாகஇசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார். 37

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைநேர் பஞ்சமத்திற்(கு)
ஒல்லையினில் ஒன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லும்இசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார். 38

அந்தாளிக் கொன்றாக்கி வாகீசர் அருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்றும் மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிரண்(டு)
உந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார்.

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்(கு)
ஆண்டகையார் தடுத்தாண்ட ஐயர்அருள் தூய்யமுறைக்(கு)
ஈண்டிசைசேர் இந்தளத்துக் கிரண்டாக எடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். 40

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்(கு)
ஏறும்வகை இரண்டாக்கி இன்னிசைதேர் தக்கேசிப்
பேறிசைஆ றாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். 41

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டாம்
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கில்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
ஒன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார். 42

உற்றஇசைக் குறிஞ்சிக்கோர் இரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்ருக்கிக் கவுசிகப்பாற்
றுற்றஇசை இரண்டாக்கித் தூயஇசைப் பஞ்சமத்துக்
கற்றஇசை ஒன்ருக்கி அரனருளரல் விரித்தமைத்தார். 43

இந்தவகை சிவன்செவிப்பால் எக்கண்ணுந் தழைத்தோங்க
அந்தமிலா அறுபத்து மூவரருள் அம்புவிமேல்
நந்தியிட மும்மலமும் நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தைஅருட் சிவமாகத் தெளிவித்தான் அருட்சென்னி. 44

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனும்
ஏராரும் இறைவனையும் எழிலாரும் நம்பி*யையும்
ஆராத அன்பினுடன் அடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதல்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம். 45

திருமுறைகண்ட புராணம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - 46.

---

* இந் நம்பியாண்டார் நம்பி கி. பி. 966-970 வரை அரசாண்ட ஆதித்த கரிகாலன் (இரண்டாம் ஆதித்தன்) காலத்தவர் என்று 'சைவ சிகாமணிகள் இருவர்' என்ற நூல் கூறும். சில ஆராய்ச்சியாளர் கி. பி. 956-1012 என்பர்.

உ

செந்திலாண்டவன் துணை

கொற்றவன்குடி

**உமாபதி சிவாசாரியர்**

அருளிச் செய்த

# திருத்தொண்டர் புராண வரலாறு

எனனும்

# சேக்கிழார் சுவாமிகள் புராணம்*

°°°O°° ★ °°O°°°

## பாயிரம்

### விநாயகர்

**வா**னுலகும் மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்
ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம். 1

### சபாநாதர்

சீராருஞ் சதுமறையும் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியும் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலாம் ஈடேற
ஏராரு மணிமன்றுள் எடுத்ததிரு வடிபோற்றி. 2

### சிவகாமசுந்தரி

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய இருள்நீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றின் ஒளிவிளங்க
அரந்தைகெடப் புகலியர்கோன் அமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி. 3

### கற்பகவிநாயகர்

மலரயனுந் திருமாலுங் காணுமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்

* இஃது உமாபதிசிவம் என்னும் புலவர் இயற்றியது என்பர்.

குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயில்
நிலவியகற் பகக்கன்றின் நிரைமலர்த்தா ளிணைபோற்றி. 4

### சுப்பிரமணியர்

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நாறுமுக மாயணைந்து நாழில்படு களம்புகுத
மாறுமுகந் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் திருவடித்தா மரையிணைக ளவைபோற்றி. 5

### சைவ சமயாசாரியர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி,
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி;
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி;
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி. 6

### திருத்தொண்டர்—சேக்கிழார்

தில்லைவாழ் அந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி;
ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி. 7

### நூறபெயா

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாமல் உலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம். 8

### அவையடக்கம்

ஊர்க்கடலை இவனெனவந் துதித்தநான் ஓங்குதமிழ்
நூற்கடலைக் கரைகண்டு நுவலநினைக் குமதுதிருப்
பாற்கடலைச் சிற்றெறும்பு பருகநினைப் பதுபோலும்
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கநினைக் குமதொக்கும். 9

தேவுடனே கூடியசொல் செழுந்தமிழோர் தெரிந்துரைத்த
பாவுடனே கூடியஎன் பருப்பொருளும் விழுப்பொருளாம்;
கோவுடனே கூடிவருங் குருட்டாவும் ஊர்புகுதும்;
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமால். 10

## நூல்

பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும் பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலை தோறும், காலாறு கோலிஇசை பாட நீடும் களிமயில்சின் றாடும்இயல் தொண்டை நாட்டுள், நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்டம் நன்றிபுனை குன்றைவள நாட்டு மிக்க, சேலாறு கின்றவயற் குன்றத் தூரில் சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே. 11

நாடெங்கும் சோழன்முனந் தெரிந்தே ஏற்றும் நற்குடிநாற் பத்தெண்ணாயிரத்து வந்த, கூடல்கிழான் புரிசைகிழான் குலவு சீர்வெண் குளப்பாக்கி ழான் வரிசைக் குளத்து ழான்முன், தேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச் சேக்கிழார் குடியிலிந்தத் தேசம் உய்யப், பாடல்புரி அருண்மொழித்தே வரும்பி னந்தம் பாலறா வாயரும்வந் துதித்து வாழ்ந்தார். 12

இமயமலை யரையன்மகள் தழுவக் கச்சி ஏகம்பர் திருமேனி குழைந்த ஞான்று, சமயமவை ஆறினுக்குந் தலைவிக் கீசர் தந்தபடி எட்டுழக்கீ ராழி நெல்லும், உமைதிருச்சு டகக்கையால் கொடுக்க வாங்கி உழவுதொழி லாற்பெருக்கி உலகமெல்லாம், தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும் வேளாண் தலைவர்பெரும் புகழ்உலகில் தழைத்த தன்றே. 13

விளைகழனி பூலோகம் முழுதும் ஏரி விரிதிரைநீர்க் கடல்வருணன் கம்பு கட்டி, கிளர்கலப்பை தருசுமையாள் சுவேதராமன் கிடாமறலி வசத்தீசன் வசத்தான் என்றிங், களவறிந்தாண் டாண்டுதொறும் விதைதப் பாமல் அளக்குமவள் கச்சியறம் வளர்த்த மாதா, ஒளிபெருகு கொழுமிகுதி எறும்பீ றான உயிரனைத்துந் தேவரும்உண் டுவப்ப தன்றே. 14

மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகன் உயிர் இழப்பத் தாங்கள், கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக குழியிலெழு பதுபேரும் முழுகிக் கங்கை, ஆறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்பர் அண்டமுற நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால் பிறித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ. 15

காராளர் அணிவயலில் உழுது தங்கள் கையார நட்டமுடி திருந்தில் இந்தப், பாராளுந் திறல்அரசர் கவித்த வெற்றிப் பசும்பொன்மணி முடிதிருந்துங் கலப்பை பூண்ட, ஏராலெண் டிசைவளர்க்கும் புகழ்வே ளாளர் ஏரடிக்குஞ் சிறுகோலால் தரணி யாளச், சீராரு முடியரசர் இருந்து செங்கோல் செலுத்து வர்வே ளாளர்புகழ் செப்ப லாமோ. 16

வாயிலார் சத்தியார் விறல்சேர் மிண்டர் வாக்கரையர் சாக்கி யர்கோட் புலிகஞ் சாறர், ஏயர்கோன் கலிக்காமர் முனைவித் தாக்கும் இளையான்றன் குடிமாறர் மூர்க்கர் செங்கைத், தாயனூர் செருத்துணையார் செருவில் வெம்போர் சாதித்த முனையடுவார் ஆக நம்பி, பாயிரஞ்சேர் அறுபதுபேர் தனிப்பேர் தம்மில் பதின் மூவர் வேளாளர் பகருங் காலே. 17

அத்தகைய புகழ்வேளாண் மரபில் சேக்கி ழார்குடியில் வந்தஅருண் மொழித்தே வர்க்குத், தத்துபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந் தலைமை அளித் தவர்தமக்குத் தனது பேரும், "உத்தமசோ ழப்பல்ல வன்தான்" என்றும் உயர்பட்டங் கொடுத்திடஆங் கவர்நீர் நாட்டு, நித்தனுறை திருநாகேச் சுரத் தில் அன்பு நிறைதலினுல் மறவாத நிலைமை மிக்கார். 18

தம்பதிகுன் றத்தூரில் மடவ ளாகந் தானுக்கித் திருக் கோயில் தாபித் தங்கண், செம்பியர்கோன் திருநாகேச் சுரம்போ லீதுந் திருநாகேச் சுரமெனவே திருப்பேர் சாற்றி, அம்புவியில் அங்காங்க வைபவங்கட் கானபரி கலந்திருநாள் பூசை கற்பித்(து) இம்பர்புகழ் வளவன்அர சுரிமைச் செங்கோல் இமசேது பரி யந்தம் இயற்று நாளில். 19

கலகமிடும் அமண்முருட்டுக் கையர் பொய்யே கட்டிநடத்
தியசிந்தா மணியை மெய்யென்(று) உலகிலுளோர் சிலர்கற்று
நெற்குத் துண்ணு துமிக்குத்திக் கைவருந்திக் கறவை நிற்க,
மலடுகறந் துளந்தளர்ந்து குளிர்பூஞ்சோலை வழியிருக்கக் குழியில்
விழுந் தளறு பாய்ந்து, விலைதருமென் கரும்பிருக்க இரும்பை
மென்று விளக்கிருக்க மின்மினித்திக் காய்ந்து நொந்தார். 20

வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச் சிந்தா மணிக்
கதையை மெய்யென்று வரிசை கூர, உளமகிழ்ந்து பலபடப்பா
ராட்டிக் கேட்க உபயகுல மணிவிளக்காஞ் சேக்கி ழார்கண்(டு),
இளஅரசன் தனைநோக்கிச் "சமணர் பொய்ந்நூல் இது மறு
மைக் காகா(து), இம் மைக்கு மற்றே, வளமருவு கின்றசிவ கதை
இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி" என வளவன் கேட்டு. 21

"அவகதையாய்ப் பயனற்ற கதையீ தாகில் அம்மையும்இம்
மையும்உறுதி பயக்கத் தக்க, சிவகதைஏ ததுகற்ற திறமைப்
பேரார் சீவகசிந் தாமணிபோல் இடையில் வந்த, நவகதையோ?
புராதனமோ? முன்னூ லுண்டோ? நானிலத்துச் சொன்னவ
ரார்? கேட்ட பேரார்?, தவகதையோ? தவம்பண்ணிப் பேறு
பெற்ற தனிக்கதையோ? அடைவுபடச் சாற்றும்" என்றான். 22

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக் கேட்கச் சேக்கிழார்
குரிசில்உரை செய்வார் "ஞாலத்(து), அம்பலவர் திருத்தொண்டர்
பெருமை ஆரூர் அடிகள்முதல் அடிஎடுத்துக் கொடுக்க நாவல்,
நம்பிபதி னொருதிருப்பாட் டாகச்செய்த நலமலிதொண் டத்
தொகைக்கு நாரை யூரில், தும்பிமுகன் பொருளுரைக்க நம்பி
யாண்டார் சுருதிமொழிக் கலித்துறைஅந் தாதி செய்தார். 23

"ஆயுமறை மொழிநம்பி யாண்டார் நம்பி அருள்செய்த
கலித்துறைஅந் தாதி தன்னைச், சேயதிரு முறைகண்ட ராச ராச
தேவர்சிவா லயதேவர் முதலாயுள்ள, ஏயகருங் கடல்புடைசூழ்
உலக மெல்லாம் எடுத்தினிது பாராட்டிற்(று)" என்ன "அந்தத்,
தூயகதை அடைவுபடச் சொல்வீர்" என்று சோழன்உரை
செயக்கேட்டுக் குன்றை வேந்தர். 24

தில்லைவாழ் அந்தணரே முதற்பண் பாடு திருநீல கண்டத்துப் பாணர் ஈருச், சொல்லியதொண் டத்தொகைநூல் வகைஅந்தாதித் தொடர்ச்சியினை விரித்துரைக்க வளவன் கேட்டு, மெல்லியலாள் பங்கர்திரு வருளை நோக்கி வியந்தடியார்[1] தொண்டு செய்து பேறு பெற்ற, செல்கதியை நினைந்துருகி வளவர் கோமான் சேவையர்கா வலரைமுக நோக்கிச் சொல்வான். 25

"அவரவர்கள் நாடவர்கள் இருந்த ஊர்வந்(து) அவரித்த திருமரபு திருப்பேர் செய்த, சிவசமயத் திருத்தொண்டு முற்பிற் பாடு சிவனடிக்கீழ் உயர்பரம முத்தி பெற்றோர், எவரும்அறியச்சிவன் முத்த ராய்இங் கிருப்பவர்கள் இனிமேலும் பிறப்போர் மண்மேல், அவர்களைச்சேர்ந் தருள்பெற்றோர் பகைத்துப் பெற்றோர் அவர்கள்பகை யாய்நரகில் அடைந்த பேர்கள். 26

இல்லறத்தில் இருந்துநனி முத்தி பெற்றோர் இல்லறத்தில் சிற்றின்ப இயல்பை நீக்கி, நல்லறமாந் துறவறத்தில் நின்று பெற்றோர் நற்பிரம சாரிகளாய் அருள்பெற் றுய்ந்தோர், செல்கதிசற் குருவருளால் சென்று சேர்ந்தோர் சிவபூசை செய்துபர முத்தி பெற்றோர், புல்லறிவு தவிர்ந்துதிரு வேடமேமெய்ப் பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப் பொருந்தப் புக்கோர். 27

இப்படியே அடைவுபடப் பிரித்துக் கேட்டால் யாவருக்கு மேதரிக்கச் செவிநா நீட்ட, ஒப்பரிய பொருள்தெரிந்து விளங்கித் தோன்ற உவமையுடைத் தாயகதை கற்க நிற்கத், தப்பில் பெருங் காவியமாய் விரித்துச் செய்து தருவீர்"என் றவர்க்கு விடை கொடுத்து வேண்டும், செப்பரிய திரவியமும் கொடுக்க வாங்கிச் சேக்கிழார் குரிசில்திருத் தில்லை சேர்ந்தார். 28

தில்லை எல்லையில் வந்து வந்தெதிர் தெண்ட ஞகவி மூந்தெழுந்(து)
அல்லி சேர்கம லத்த டத்தினில் மூழ்கி அம்பல வாணர்முன்
ஒல்லை சென்றுப ணிந்து கைத்தலம் உச்சி வைத்துளம் உருகிநைந்
தெல்லை காணரி தாய பேரொளி இன்ப வாரியில் மூழ்கியே. 29

---

பா - ம்—[1] வியந்தடிமைத்.

அடைய லார்புரம் நீறெ ழத்திரு நகைசெய் தன்றொரு மூவரைப்
படியின் மேல்அடி மைக்கொ ளும்பத பங்க யங்கள் பணிந்துநின்
"றடிக ளேஉன தடியர் சீர்அடி யேன்உ ரைத்திட அடிஎடுத்(து)
இடர்கெ டத்தரு வாய்"என த்திரு வருளை எண்ணிஇ றைஞ்சினார்.

அலைபு னற்பகி ரதிந திச்சடை யாட வாடர வாடநின்(று)
இலகு மன்றினில் ஆடு வார்திரு வருளி னால்அச ரீரிவாக்(கு)
'உலகெலாம்'என அடிஎ டுத்துரை செய்தபேரொலி யோசைமிக்
கிலகு சீரடி யார்செ விப்புலத் தெங்கு மாகிநி றைந்ததால். 31

தில்லை மாநகர் வாழ வாழ்தவ சிந்தை அந்தணர் ஆறைஞ் ஞூ(று)
அல்ல தும்பல மடப தித்தவ ராச ரிக்கையி லுள்ளபேர்
எல்லை யில்லவர் யாவ ருங்களி கொளவி ளங்(கு)அச ரீரிவாக்(கு)
ஒல்லை வந்தெழ அனைவ ருங்கரம் உச்சி வைத்துளம் உருகினார்.32

உள்ள லார்புரம் நீறெ ழக்கணை ஒன்றுதொட்டுயர்மன்றில்வாழ்
வள்ள லார்திரு மாலை யுந்திரு நீறு மெய்ப்பரி வட்டமும்
எள்ள லாரல ரென்று சேவையர் காவ லர்க்கிவை இனிதளித்(து)
அள்ள லார்வயல் நீடு தில்லையில் அனைவ ருங்களி கொண்டபின்.

சேவை காவலர் தொண்டர்சீர்உரைசெய்வதற்குயர்செய்யுள்முன்
மூவ ரோதிய திருநெ றித்தமிழ் ஆத லால்வரன்முறைமையால்
யாவ ரும்புகழ் திருநெ றித்தலை வரைவ ணங்கிஇ ணங்கிமெய்த்
தாவ ருஞ்சிவ சாதனங்கள் தரித்து நீறு பரித்தரோ. 34

வந்து சூழ நிரைத்த ஐஇரு நூறு கால்மணி மண்டபத்(து)
எந்தை யார்திரு வருளை யுன்னி இருந்து சேவையர் காவலர்
செந்த மிழ்த்தொடை யால்வி ளங்கிய திருவி ருத்தநி ருத்தனார்
தந்த சொன்முத லாஎ டுத்தனர் தானு வானபு ராணநூல். 35

திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவே தியர்
அரனை வழிபட்ட புராணமோ ரிரண்டு, குரைகழல்மா மாத்திர
ரொன்(று) அறுவர்முடி மன்னர் குறுநில மன் னவர்ஐவர் வணிகர்
குலத் தைவர், இருமைநெறி வேளாளர் பதின்மூவர் இடையர்
இருவர்சா லியர்குயவர் தயிலவினை யாளர், பரதவர்சான் றார்வண்
ணார் சிலைமறவர் நீசர் பாணரிவர் ஓரொருவ ராம்பகருங் காலே.36

அறுதிபெறத் திருமரபு குறித்துரையாப் புராணம் அவை கள்ஒரு பதின்மூன்று திருக்கூட்டந் தன்னில், மறுவிலவர் பதி யறிந்த கதைஇரண்டு வந்த மரபறிந்த கதைஇரண்டு பேரறிந்த கதையொன்(று), உறுமரபு தெரியாப் புராணமவை யோரேழ் ஊரறியாக் கதைஏழு பேரறியாக் கதைஎட்(டு), இறுதியிலக் கங் கண்ட திருக்கூட்ட மொன்றெண் ணித்தனைஎன் றறியாத திருக் கூட்டம் எட்டே. 37

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார் சிறப்புலியார் கண நாதர் பூசலைசண் டேசர், கல்விநிறை சோமாசி மாறர்நமி நந்தி கவுணியனுர் அப்பூதி நீலநக்க ராகச், செல்வமறை யோர் காதை பதின்மூன்று சிவவே தியர்காதை இரண்டுபுகழ்த் துணை யார்முப் போதும், வல்லபடி சிவனைஅருச் சிப்பார்கள் மாமாத் திரர்மரபில் சிறுத்தொண்டர் ஒருவர்முடி மன்னர். 38

அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழர் அருள் மானி இடங்கழியார் நெடுமாறர் சேரர், குறுநிலமன் னவர்ஐவர் நரசிங்க முனையர் கூற்றுவனுர் கழற்சிங்கர் மெய்ப்பொருள்ஐ யடிகள், முறைமைவணி கரில்ஐவர் காரைக்காலம்மை மூர்த்தி கலிக் கம்பர்அமர் நீதிஇயற் பகையார், திறமைவிரி[1] வேளாளர் பதின்மூவர் மூர்க்கர் செருத்துணையார் வாயிலார் கோட்புலியார் சத்தி. 39

தாயனுர் இளையான்றன் குடிமாறர் அரசு சாக்கியர்கஞ் சாறர்விறன் மிண்டர்முனை யடுவார், ஏயர்கோன் கலிக்காமர் கோபாலர் மரபில் இருவர்திரு மூலனுர் ஆனுயர் குயவர், சேய புகழ்த் திருநீல கண்டனுர் பாணர் திருமரபில் திருநீல கண்டத் துப் பாணர், மேயதிறல் அதிபத்தர் பரதவர்கண் ணப்பர் வேடர் மர பினில்சான்றுர்[2] ஏனுதி நாதர். 40

நேசனுர் சாலியரில் திருநாளைப் போவார் நீசர்மர பினில் எங்கள் திருக்குறிப்புத் தொண்டர், தூசொலிக்கும் ஏகாலி மரபுதில தயிலத் தொழில் மரபில் கலியனுர் மரபுகுறித் துரை[3]

---

பா - ம்— [1] திறமைபுரி. [2] சான்றேர். [3] குறித்தறி.

யாக், காசில்கதை பதின்மூன்று குலச்சிறையார் தண்டி கணம் புல்லர் எறிபத்தர் காரியார் குறும்பர், தேசுடைய பத்தர்பர மனைப்பாடு வார்கள் சித்தத்தைச் சிவன்பால்வைத் தார்ஆரூர்ப் பிறந்தார். 41

செப்பரிய பொய்யடிமை இல்லாதார் மெய்யில் திருநீறு பூசு முனி வர்களுலகு தன்னில், அப்பாலும் அடிச்சார்ந்தார் இவர்கள் தமிற் சிலபேர் ஆய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர் மலையாளர் சிலபேர், தப்பாத தெலுங்கர்சிலர் மற்றுளதே சத்தோர் தவஞ்செய்து பரகதியை அடைந்தவர்கள் சிலபேர், இப்போதும் இருந்தரனை வழிபடுவோர் சிலபேர் இனிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே. 42

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர் திருமூலர் நெடு மாறர் மங்கையருக் கரசி, கரைசேருங் குலச்சிறையார் யாழ்ப் பாணர் குறும்பர் கணநாதர் அப்பூதி சோமாசி மாறர், உரை சேரும் இவர்கள்பதி னொருவர்குரு வருளால் உயர்முத்தி யடைந் தவர்கள்; எறிபத்தர் கலயர், முருகனார் கண்ணப்பர் ஆனாயர் தாயர் மூர்த்தியார் சண்டேசர் திருநாளைப் போவார். 43

சேரனார் சாக்கியனார் கூற்றுவனார் தண்டி சிறப்புலியார் பசு பதியார் கலிக்காமர் கலியர், காரியார் அதிபத்தர் நீலநக்கர் பூசல் கணம்புல்லர் கோட்புலியார் நமிநந்தி யடிகள், சீருடைய கழற் சிங்கர் வாயிலார் தூய செருத்துணையார் புகழ்த்துணையார் காட வர்ஐ யடிகள், மூரிநெடு வேற்செங்கட் சோழனாராக முப்பது பேர் சிவலிங்கத் தால்முத்தி யடைந்தோர். 44

திருநீல கண்டனார் இயற்பகையார் மூர்க்கர் சிறுத்தொண் டர் திருக்குறிப்புத் தொண்டர்விறன் மிண்டர், அருள்சேரும் இடங்கழியார் முனையடுவார் சத்தி அமர்நீதி மெய்ப்பொருளார் ஏனாதி நாதர், கரைசேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர் காரைக்கா லம்மைநர சிங்கர்கலிக் கம்பர், வருநேச ராகஒரு பத் தொன்ப தடியார் மணிவேடத் தாரைவழி பட்டரனை யடைந் தோர். 45

கவுணியர்நா வுக்கரசர் பேயார்இம் மூவர் கற்கும்இயல் இசைவல்லோர் இசைத்தமிழ்நூல் வல்லோர்;, பவமணுகாத் திருநாளைப் போவார்ஆ ளுயர் பாணர்பர மனைப்பாடு வாராக நால்வர், புவனிபுகழ் ஐயடிகள் திருமூலர் காரி பொய்யடிமை இல்லாத தமிழ்ப்புலவர் சேரர், நவமுடைய இவர்ஐவர் இயல் வல்லோர்; நின்ற நாயன்மார் தவம்புரிந்து நற்கதியை அடைந் தோர். 46

இல்லறத்தில் நின்றவர்கள் திருநீல கண்டர் இயற்பகை யார் உள்ளிட்டார்; மூர்த்தியார் அப்பர், நல்லதுற வறம்;பிரம சாரிகள்சண் டேசர் ; நானிலத்தில் அரனடியார் தங்களுடன் சேர்ந்து, செல்கதிபெற் றவர்ஞான சம்பந்த ருடனே திருமணத் தில் ஒருமணமாய்ச் சேர்ந்தவர்கள் அநேகர்;, பல்வளஞ்சேர் ஆரூர ருடன்சேரர் கையில் பரிஉகைக்க உடன்சென்ற பரிசனமெண் ணிறந்தோர். 47

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள் சேய்ஞ் ஞலூர்ச் சண்டேசர் பிதாஎச்ச தத்தன், கவர்புகழ்சேர் கோட் புலியார் உரைத்ததிரு விரையாக் கலிபிழைத்த கிளைபகைத்து[1] நரகினைச்சென் றடைந்தோர், தவரான[2] மூர்த்தியார் இறை வனுக்குச் சாத்துஞ் சந்தனக்காப் பினைவிலக்கி அமண்சமயச் சார்வாய்ப், புவிபுரந்த கருநடமன் னவன்முதல னேகர் புராண கதை யினைப்பிரித்துப் புகலஎளி தலவே. 48

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளில் அடித் தொண்டு செய்தொண்டர் சிலர்அவர்க்கு முன்னே, பேரூர் மெய்த் தொண்டுசெய்த பேர்சிலபேர் அவர்க்குப் பிறகுதிருத் தொண்டுசெயும் பேர்சிலபே ராகச், சீரூருந் திருத் தொண்டர் புராணத்திற் சேர்த்துச் சேவையர்கோன் சேர்வைசெயுந் தொண் டாள விறந்தோர், காரூரும் மணிகண்டர்க் கவரவர்கள் செய்த கைத்தொண்டின் நிலைகரைகண் டுரைக்கஎளி தலவே. 49

ஓருலகோ ஒருதிசையோ ஒருபதியோ தம்மில் ஒருமரபோ ஒரு பெயரோ ஒருகாலந் தானோ, பேருலகில் ஒருமைநெறி தருந்

---

பா - ம்—[1] பிழைத்து. [2] தவராசர்.

கதையோ பன்மைப் பெருங்கதையோ பேர்ஒன்றே அல்லவே இதனை, ஏர்"உலகெலாம்உணர்ந்தோ தற்கரியவன்"என் றிறைவன்முதல் அடியெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு, பாருலகில் நாமகள்கின் றெடுத்துக்கை நீட்டப் பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார். 50

கருங்கடலைக் கைநீத்துக் கொளஎளிது முந்நீர்க் கடற்கரையின்[1] நொய்மணலை எண்ணிஅள விடலாம், பெருங்கடல்மேல் வருந்திரையை ஒன்றிரண்டென் றெண்ணிப் பிரித்தெழுதிக் கடைஇலக்கம் பிரித்துவிட லாகும், தருங்கடலின் மீனைஅள விடலாகும் வானத் தாரகையை அளவிடலாம் சங்கரன்தாள் தமது, சிரங்கொள்திருத் தொண்டர்புரா ணத்தைஅள விடநஞ் சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே. 51

அறுபதுபேர் தனித்திருப்பேர் திருக்கூட்டம் ஒன்ப தாக அறு பத்தொன்ப(து) அரனடியார் கதையை, மறுவில்திரு நாவலூர்ச் சிவமறையோர் குலத்து வருசடைய ரூர்மனைவி இசைஞானி வயிற்றில், உறுதிபெற அவதரித்த ஆரூரர் முன்னாள் உரைசெய்த திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே, நறைமலிபூம் பொழில்புடைசூழ் திருநாரை யூரில் நம்பியாண்டார்திருவந் தாதிகடைப் பிடித்து. 52

காண்டம்இரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக் கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட்(டு), ஈண்டுரைத்த புராணத்தில் திருவிருத்தம் நாலாயிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக அமைத்துச், சேண்டகைய திருத்தொண்டர் புராணமெனப் புராணத் திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற அமைத்திட், டாண்டகைமை பெறஎழுதி மைக்காப்புச் சாத்தி அழகுபெறக் கவளிகையும் அமைத்ததில்வைத் ததன்பின். 53

"சேவை காவலர் புராண காதைதொகை செயநினைந் தெமை அகன்றபின், யாவர் தாம்அரு கிருந்த பேர்கள்கதை சென்ற தெவ்வளவி ருந்ததெங்(கு), ஆவ தென்னிவைகள் அறிய

---

பா - ம்—[1] கடற்கரைநுண்.

வேண்டும தறிந்து வாரும்''என வளவர்கோன், ஏவி னுரிய தூதர் தூதரறி யாமல் ஒற்றரையு மேவினன். 54

வென்றி வேல்வளவன் அளவ றிந்துவர விட்ட காளையர்''பு ராண நூல், ஒன்று பாதிகதை சென்ற(து)'' என்றுசிலர் ஓடி னர் சிலர் உவந்துசென்(று), ''இன்று நாளைமுடி யும்பு ராணம்இனி'' என்று ரைத்திடஇ றைஞ்சினன், சென்று ''நற்கதை முடிந் த(து)'' என்றுசிலர் செம்பியற் குறுதி செப்பினர். 55

வந்து சொன்னவர்கள் அனைவ ருக்குநவ மணிக ளுந்துகிலு மம்பொனும், சிந்தி அள்ளியும் உவந்து வீசிஉயர் செம்பொன் அம்பல மருங்கில்வாழ், அந்தி வண்ணர்நட மும்பணிந் துமுதல் அடிஎ டுத்தவர் கொடுத்திடப், புந்தி செய்துமகிழ் சேவை காவ லர் ''புராண முந்தொழு வன்நான்'' என. 56

வீதி வீதிகள்தொ றுந்தொறும் பயணம் என்று வென்றி மணிமுரசறைந், தோதி வேதியர்கள் எண்ணி இட்டஉயர் நாளும் ஓரையும் முகூர்த்தமும், போத நாடிவரை புரைகடக் களிறு புரவி தேர்கருவி யாள்தரச், சாது ரங்கமுட னேசெலப் பிளிறு தந்தி மேல்கொடு நடந்தனன். 57

தேர்மு ழக்கொலி மழைக்க டக்கரட சிந்துரக் களிறு பிளி றுசிர், ஆர்மு ழக்கொலி பரிச்செ ருக்கொலி பதாதி வந்தெதிர் அடர்ந்தெழும், போர்மு ழக்கொலி சழக்கி லாதுயர் படைக்க லன்புணரும் ஓசைஎழ், கார்மு ழக்கொலியின் எட்டி ரட்டிகிறை கடல்மு ழக்கென முழக்கெழ. 58

வளவர் கோன்வர வறிந்த தில்லைமறை யோரும்வண் மைம டபதிகளும், பிளவு கொண்டமதி நுதல்ம டந்தையரும் மற்று முள்ளபெரி யோர்களும், களவி லாதமொழி கொடுபு ராணகதை செய்த கங்கைகுல திலகரும், தளவ மாலைஅப யனைஎதிர்ந் தினிய சார ஆசிபல சாற்றினர். 59

முண்ட மானதிரு முடியும் இட்டதிரு முண்ட மும்கவச முந்துணைக், குண்ட லங்களும் இரண்டு காதினும் வடிந்த லைந்த குழை யுந்திருக், கண்ட மாலைகர மாலை யுஞ்சிரசு மாலை யுங்க

வின் விளங்கவே, தொண்டர் சீர்பரவுவான்அணைந்தசுப சரிதை சோழனெதிர் கண்டனன். 60

கண்ட போதுள மகிழ்ந்து தன்னைஅறி யாது கைகள்தலை மீதுறக், 'கொண்ட வேடம்அர னடியர் வேடம்இது குறைவி லாததவ் வேடம்'என், றண்ட வாணர்திரு வருளை யுன்னி அவர் அடிமை கொண்டபெரு மையைநினைந்(து), எண்ட யங்கரசர் ஏறுசேவையர் குலாதி பாதுகை இறைஞ்சினன். 61

இறைஞ்சி அம்பலவர் பாத தாமரை இறைஞ்ச எண்ணி வரன் முறைமையால், அறஞ்சி றந்தமுனி சேவை காவலரும் ஆறைஞ் ஞாறுமறை யோர்களும், துறஞ்சி றந்தமட பதிகளுந் தொடர வந்து மன்னன்அரி பிரமர்பால், மறைஞ்சு நின்றபொருள் வெளிப்படக் கனக மன்றில் நின்றபடி கண்டனன். 62

கண்ட கண்ணருவி தாரை கொள்ளஇரு கைகள் அஞ்சலி கொளக்கசிந்(து), எண்ட ரும்புளக ரோம கூபம்எழ இன்பம் வாரிகரை புரளவாய், விண்ட தூமொழிகள் குழற அன்பினொடு விம்மி விம்மிஅருள் மேலிடத், தெண்ட னுகமுன் விழுந்தெழுந்துநனி செம்பி யன்பரவ எம்பிரான். 63

"சேக்கி ழான்நமது தொண்டர் சீர்பரவ நாம்மகிழ்ந்(து) 'உலகம்' என்றுநம், வாக்கி னுல்அடி எடுத்து ரைத்திட வரைந்து நூல்செய்து முடித்தனன் ;, காக்கும் வேல்வளவ ! நீஇதைக் கடிதுகேள்" எனக் கனக வெளியிலே[1], ஊக்க மானதிரு வாக்கெ ழுந்தது ; திருச்சி லம்பொலியும் உடனெழ. 64

மன்று ளாடிதிரு வாய்ம லர்ந்தமொழி யுஞ்சிலம் பொலியும் மன்றிலே, நின்ற மானிடர்செ விப்பு லன்புக நிறைந்த தன்றி யும் நிலத்தின்மேல், ஒன்றி நின்றுயர் சராசரங் கள்அடை யக்க சிந் துருகி ஒலிடக், குன்றி லங்குதிரள் தோள்நரேந் திரபதி குதுகு லித்[2]துளம் மகிழ்ந்தனன். 65

"தொண்டர் தொண்டுசெய் புராண காதைமதி சூடு நாதர் திரு வருளினல், விண்ட நீதிபுனை சேக்கி ழார்முனி விரித்து

பா - ம்— [1] சபையிலே. [2] குதுகுதுத்.

ரைத்தகதை கேட்பதற்(கு), அண்ட வாணர்அடி யாரெலாங்
கடுகவருக'' என்றுதிசை திசைதொறும், எண்ட யங்கரசன்
ஏடெடுத் தெழுதி ஆளும் ஓலைகளும் ஏவினான். 66

கவச மணிந்த சனங்களு மிங்கித மூங்கம்பித்
தவச முறுஞ்சிவ சிந்தையும் அன்பக லாமேன்மைத்
தவச ரிதத்தொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவச மயத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள். 67

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழால்
ஓதிய மூவர் திருப்பதி கத்தொலி ஓவாமல்
பூதி அணிந்'தர கர'என அன்பர் புகழ்ந்தோதும்,
காதியல் பேரொலி காரொலி போலொலி கைத்தேற. 68

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்தாள்
நேசிப் பவர்சிலர் "பிறவா வரம்அருள் விமலா"என்
றியாசிப் பவர்சிலர் திருமுறை எழுதிக் களிகூர
வாசிப் பவர்சில ராக இருந்து மகிழ்ந்தார்கள். 69

தெள்ளு திரைக்கடல்மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை அன்புசெய் அன்பர் மடங்கள் தொறும்பாலர்
மெள்ள இருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி உரைப்பன கேட்பன மெய்ப்பூவை. 70

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்தரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள். 71

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்(று)
ஆடினர் வானில் அரம்பையர் அஞ்சலி எஞ்சாமல்
சூடினர் மண்ணின் மடந்தையர் எந்தை துணைப்பாதம்
தேடினர் மாலயன் அன்பர் நடந்தரி சித்தார்கள். 72

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய காளமிடக்கை கடக்கை மணிக்காளம்

பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதற்பொற்பார்
மங்கல தூரியம் எங்கும் முழங்கி வனப்பெய்த. 73

வேதியர் வேள்வி நெடும்புகை ஆலயம் எங்கெங்கும்
காதிய குங்குலி யப்புகை நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறும்
மாதர் புகைக்கும் அகிற்புகை எங்கும் வனப்பெய்த. 74

ஆடக நாடக சாலைகள் முத்தணி அத்தாணி
மேடை அரங்குக ளெங்க மிலாத வெளிக்கூடம்
மாட மதிட்கன மாளிகை சூளிகை எங்கெங்கும்
தோடவிழ் மாலைகள் பொன்னரி மாலைகள் சூழ்வித்தார். 75

பழுதக லத்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித்(து)
அழகு பெறத்திரு வீதி புதுக்கி யதன்பின்பு. 76

திருநெ றித்தமிழ் வல்ல பேர்கள் சிவாக மங்கள் படித்தபேர்
கருநெ றிப்பகை ஞான நூல்பல கற்ற பேர்மறை கற்றபேர்
குருநெ றிக்குரி யோரி லக்கண லக்கி யங்கள்கு றித்தபேர்
பெருநெ றிப்பல காவி யங்கதை பேச வல்லவர் அனைவரும். 77

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றில் மறைய வர்கோ மயசலத்தால் மெழுகித் தாபித், தெள்ளரும்வெண் சுதையொழுக்கி அறுகாற் பீடம் இட்டதன்மேல் பசும்பட்டு விரித்து மீதே, வெள்ளைமடித் திட்டுமது மலருந் தூவி விரை நறுந்தூ பங்கொடுத்தா தனங்கற் பித்துத், தெள்ளுதமிழ்ச் சேக் கிழார் புராணஞ் செய்த திருமுறையை அதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி. 78

"வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே வாசித்துப் பொருள்அருளிச் செய்வீர்" என்று, சோழர்பெரு மான்முதலாம் அடிய ரெல்லாஞ் சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடும், தாழ்சடையான் அடிஎடுத்துத் தரத்தாஞ் செய்த சைவகதை யினைவிளங்க விரித்துச் சொல்லச், சூழஇருந் தம்பலவர் அடியா ரெல்லாம் "சுருதிமொழி இது" எனக்கை தொழுது கேட்டார்.

" தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந் தன்மைஅர னுக்கிசைந்த பேர்வழியி னுளும், ஆளுடைய பிள்ளையார் அவ தரித்த நாளும் அவரமுது திருஞானம் அமுதுசெய்த நாளும், சூளுடைஆ திரைநாளாம் சித்திரைஆ திரைநாள் தொடங்கிஎதி ராம்ஆண்டு சித்திரைஆ திரையின், நாளுடைய கதைமுடிப்பம்" எனக்குன்றை வேந்தர் நடத்தஅனை வருமிருந்து கேட்டனர்நாள் தோறும். 80

சிறப்புடைய மூவர்முத லிகள்திருவாய் மலர்ந்த திருநெறிய தமிழ்மூலர் திருமந்திர மாலை, அறப்பயனுங் காரைக்கால் பேயி ரட்டை மாலை அந்தாதி மூத்தபதி கங்கமறிற் றறிவார், மறப் பரிய பொன்வண்ணத் தந்தாதி திருமும் மணிக்கோவை தெய்வ உலா ஐயடிகள் வெண்பா, உறுப்பாகத் திருவிருத்தம் உடலாகப் பொருட்கோள் உயிராக நாலடியால் நடந்ததுல கெல்லாம் 81

அன்றுமுதல் நாடோறும் நாடோறும் அண்ணல் அடியர் அள விறந்த பெயர் வந்தவர்க ளெல்லாம், சென்றுறையத் திரு மடங்கள் திருமடங்கள் தோறும் திருவிளக்கங் கவர்சாத்த உள்ளுடைமேற் போர்வை, துன்றியசெந் நெலின்அடிசில் கன் னல்நறுங் கனிகள் தூயஅறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பால்தேன், நன்றுதிருப் பண்ணியந்தண் ணீர்அமுதம் அடைக் காய் நரபதிஎ வலின்அமைச்சர் நாடோறும் நடத்த. 82

நலமலியுந் திருத்தில்லை மன்றினில்நின் றுடும் நடராசற் கன்றுமுதல் மகபூசை நடத்தி, அலகில்புகழ்த் தில்லைவாழ் அந்த ணர்க்கும் வெவ்வே றமுதுபடி கறியமுது முதலான எல்லாம், நலமலிசெங் கோல்வளவன் தப்பாமே நாளும் நடத்திவர அரனடி யார் நிறைந்துபதஞ் சலியும், புலிமுனியும் தவஞ்செய்த பெரும் பற்றப் புலியூர் பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற.

மருவுதிரு முறைசேர்ப்பார் எழுதுவார் இருந்து வாசிப்பார் பொருளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து, சிரமசைத்துக் கொண்டாடிக் குதுகுலிப்பார் சிரிப்பார் தேனிப்பார் குன்றை முனி சேக்கிழார் செய்த, அரியதவத் தினைநினைப்பார் 'அம்பலவர் முன்னாள் அடிஎடுத்துக் கொடுக்கஇவர் பாடினர்' என் றுரைப்

பார், 'பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப் பிடிக் குமோ ? இனிச்சிந்தா மணிப்புரட்(டு)' என் றுரைப்பார். 84

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராணம் இருந் தன்பர் பாராட்ட நடந்தெதிராம் ஆண்டு, சித்திரைஆ திரை நாளின் முடியஅது கண்டு திருத்தொண்டர் 'அர'எனும்பே ரொலிஎழுந்து பொங்கக், கத்துதிரைக் கடலொலியை விழுங்கி முழங் கோரேழ் கடலொலியைக் கீழ்ப்படுத்திப் பிரமாண்ட வெளியைப், பொத்தி இமை யவர்செவியை நிறைத்துயரப் பொங் கிப் பொன்னுலகுக் கப்பாலும் புகழ்பொலிந்த தன்றே. 85

திருத்தொண்டர் புராணம்எழு தியமுறையை மறையோர் சிவமூல மந்திரத்தால் அருச்சனைசெய் திறைஞ்சி, இருக்குமுதல் மறைநான்கில் இன்று முத லாக இதுவும்ஒரு தமிழ்வேதம் ஐந்தாவ தென்று, கருத்திருத்தி அமுதடைக்காய் நறுந்தூப தீபம் கவரிகுடை கண்ணாடி ஆலத்தி நீறு, பரித்தளவு செயக் கண்டு வளவர்பிரான் முறையைப் பசும்பட்டி னாற்சூழ்ந்து பொற்கலத்தில் இருத்தி. 86

செறிமதயா னைச்சிரத்தில் பொற்கலத்தோ டெடுத்துத் திரு முறையை இருத்தியபின் சேவையர்கா வலரை, முறைமைபெற ஏற்றிஅர சனுங்கூட ஏறி முறைமையினால் இணைக்கவரி துணைக் கரத்தால் வீச, மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி மழைபொழியத் திருவீதி வலமாக வரும்போ(து), இறைவர்திரு வருளைநினைந் தடலரசர் கோமான் "இதுவன்றோ நான்செய்த தவப்பயன்" என் றிசைத்தான். 87

வாரணத்தில் இவரைவரக் கண்டதிரு வீதி மறுகுதொறுந் தூய்மைசெய்து வாழைகளும் நாட்டிப், பூரணகும் பமும் அமைத்துப் பொரியும்மிகத் தூவிப் பொன்னரிமா லையும்நறும்பூ மாலைகளுந் தூக்கித், தோரணங்கள் நிரைத்து விரை நறுந்தூபம் ஏந்திச் சுடர்விளக்கும் ஏற்றிஅணி மணிவிளக்கும் ஏந்தி, ஆர ணங்கள் விரித்தோதி மாமறையோ ரெதிர்கொண் டறுகெடுப்ப வாழ்த்தெடுத்தார் அரம்பையர்க ளெல்லாம். 88

"காவல ஞரிவர் தவரிவர் காவலர் கவரி இடத்தகு மோ" என்பார், "சேவையர் காவல ஞர்சிவ மான சிறப்பிது நல்ல சிறப்"பென்பார், "தேவரு மெழுதவொ ணுமறை யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடும், மூவரும் ஒருமுத லாயுல கத்து முளைத்த முதற் பொருள் தான்"என்பார். 89

மின்மழை பெய்தது மேக ஒழுங்குகள் விண்ணவர் கற்பக விரைசேர்பூ, நன்மழை பெய்தனர் சேவையர் காவலர் நாவல ரின்புற நாவாரச், சொன்மழை பெய்தனர் இரவலர் மிடிகெட அள்ளி முகந்தெதிர் சோழேசன், பொன்மழை பெய்தனன் உருகிய நெஞ்சொடு கண்மழைஅன்பர் பொழிந்தார்கள். 90

"மதுரஇ ராமா யணகதை உரைசெய்த வான்மிக பகவனும் ஒப்பல்ல, விதிவழி பாரதம் உரைசெய்து கரைசெய்த வேதவி யாதனும் ஒப்பல்ல, சிதைவற ஆயிர நாவுடன் அறிவுள சேட விசேடனும் ஒப்பல்ல, பொதிய மலைக்குறு முனிவனும் ஒப்பல புகழ்புனை குன்றை முனிக்(கு)"என்பார். 91

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதிய கண்ணேறும், கையுந் திகழ்மணி கண்டமும் ஒளிதரு கவளிகை யும்புத் தகஏடும், நையுந் திருவுள மழியுந் தொறு"மர கர" வெனு நாமமும் "நாமெல்லாம், உய்யும் படியருள் கருணையும் அழகி"தெ னத்தொழு தனருல கவரெல்லாம். 92

பூவை மறந்தனள் வெண்டா மரைமயில்; புகல்தரு சங்கப் புலவோர்சொல், பாவை மறந்தனள், தேச சுபாடித பயனை மறந்தனள்; பதுமத்தோன், நாவை மறந்தனள், பொதிய மலைத் தலை நண்ணிய புண்ணிய முனிவனெனும், கோவை மறந்தனள்; சேவையர் காவல ஞர்திரு நாவிற் குடிகொண்டாள். 93

இப்படி இப்படி தன்னில் விதிப்படி இம்பரும் உம்பரும் ஏனோரும், அப்படி சூழ அரத்திரு வீதிவ லஞ்செய் தணைந்தம் பலமுன்றில், தப்பற யானையி னின்றும் இழிந்தர சனும்உரை செறிசே வையர்கோவும், முப்புரி நூல்மறை யோரொடணைந் தெழு தியமுறை யைத்திரு முன்வைத்தார். 94

அண்ட வாணரெதிர் தெண்ட னுகஅனே வரும்வி ழுந்துபின் எழுந்துசீர், கொண்ட சேவைகுல திலக ருக்கனேவ ருங்கு றித் தெதிர் கொடுத்தபேர்; தொண்டர் சீர்பரவு வாரெ னப்பெயர் சுமத்தி ஞானமுடி சூட்டிமுன், மண்ட பத்தினி லிருத்தி மற்ற வரை வளவர் பூபதி வணங்கினுன். 95

மூவ ரோதுதிரு முறைக ளேழுதிரு வாத வூரர்முறை ஒன்றி சைப், பாவ ரைந்தமுறை ஒன்று மூலர்முறை ஒன்று பாசுரம தாதியாக், கோவை செய்தமுறை ஒன்று சேவையர் குலாதி நீதி முறை ஒன்றுடன், பாவை பாகர்திரு வருள்சி றந்தமுறை பன்னி ரண்டென வகுத்தபின். 96

"தோடு செய்ததிரு நெறிய செந்தமிழொ டொக்கும்" என் றுரை தொடர்ந்துசெப், பேடு செய்துநட ராசர் சந்நிதியில் ஏற்றி னுர்களிது பாலிசூழ், நாடு செய்ததவ நீடு குன்றைவள நகரி செய்ததவ நிகரிலாப், பீடு செய்தபகி ரதிகு லத்திலகர் சேக்கி ழார்செய்த பெருந்தவம். 97

ஆய வேலைஅன பாயன் இந்நிலைமை யாதலால்"அநுசர் பாலரு, வாயர் எங்குளர்" எனப்ப ணிந்திரு மருங்கு நின்றவர் விளம்புவார், "தூய குன்றைநகர் மீது தம்பெயர் துலங்க ஓர் குளம் அமைத்தபின், ஏய நாகைஅர னுர்தி ருப்பணி இயற்றி அவ்விடை இருந்தனர்". 98

என்று சொல்லஅவர் தமைஅழைத் தரசன் "இவரமைச் சரிவர் பட்டமும், 'மன்றல மாலைபுனே தொண்டை மான்' "என வகுத்தபின் தமது மண்டலம், அன்று வற்பம்வர வந்த டைந்த வரை ஆற்றல் செய்து"தொண் டைமண்டல, நின்று காத்த பெருமான்" எனத் தமது பெயரை எங்கணும் நிறுத்தினுர். 99

தொண்டர் சீர்பரவு சேக்கி ழார்குரிசில் தூய தில்லைநகர் தன்னிலே, பண்டு மூவர்பதி கத்து வந்தஅறு பத்து மூவர்கதை தனேயுணர்ந்(து) அண்ட வாணர்அடி யார்கள் தம்முடன் அருந்த வந்தனில் இருந்துபின், இண்டை வைத்தசடை அம்ப லத்தவர் எடுத்த பாதநிழல் எய்தினுர். 100

வாழி தில்லைமணி மன்று ளென்றும்நட மாடும் அங்கணர் மலர்ப்பதம், வாழி காழிநகர் வாழ வந்ததிரு நெறிய ராதிபதி வள்ளல்தாள், வாழி அன்பர்திரு நீறு மிட்டதிரு முண்ட முந்து வய கவசமும், வாழி குன்றைமுனி சேவை யாதிபதி வாய்ம லர்ந்தருள் புராணமே. 101

தேசி லங்குமுகில் குன்றை யாதிபதி தொண்டர் சீர்பரவு சேக்கிழார், வாசல் அன்றுமுதல் இன்று காறும்இனி மேலும் வாழையடி வாழையாய், வீசு தென்றல்மணி மண்ட பத்தரசு வீற்றி ருக்குமுடி மன்னருக்(கு), ஈச னன்பர்கள் புராண முஞ் சொலி அமைச்சு மாகிநலம் எய்துமால். 102

அண்ட வாணர்தொழு தில்லை யம்பலவர் அடிஎடுத்(து) 'உல கெலாம்'எனத், தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்வரிசை துன்று குன்றைநக ராதிபன், தண்ட காதிபதி திருநெ றித்தலைமை தங்கு செங்கைமுகில் பைங்கழல், புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை போக்கு வார்பிறவி நீக்குவார். 103

ஆக திருவிருத்தம் - 103

---

## சிறப்புப்பாயிரம்

*திருக்கிளருங் கயிலைமலைக் காவல் பூண்ட செல்வமலி திரு நந்தி மரபில் வந்து, கருக்குழியில் எமைவீழா தெடுத்தாட் கொள்ளுங் கருணைமிகு மெய்கண்ட தேவர் தூய, மருக்கிளர்தாள் பரவும்அரு ணந்தி தேவர் மகிழும்மறை ஞானதே வருக்கன் பாகி, இருக்கும்உமா பதிதேவர் சேக்கி ழார்தம் இசைப்புரா ணம்உரைத்தார் என்ப மாதோ.

---

* இச்சிறப்புப் பாயிரம் சில பிரதிகளிலில்லை.

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# பாட்டு முதற்குறிப்பகராதி


| பாட்டு | பக்கம் |
|---|---|
| அக்குடியின் | 203 |
| அககுலததின் | 630 |
| அக்குலப்பதிக் | 66 |
| அக்குலப்பதித | 143 |
| அககோயில் | 661 |
| அகததின் | 583 |
| அகமநிறைநத | 569 |
| அகமலாநத | 640 |
| அகல்பாறையின் | 159 |
| அகலிடத்து | 59 |
| அகிலநறுந்தூபம் | 490 |
| அகில்விரைததூப | 25 |
| அகிலகாரணா | 21 |
| அகிலலோகமும் | 627 |
| அஙககன்று | 282 |
| அங்கஙகள் | 211 |
| அங்கண அணை | 451 |
| அஙகண அமா | 341 |
| அங்கண் அமா | 384 |
| ,, | 524 |
| அங்கண அமரர் | 453 |
| அஙகண அமருந | 162 |
| அங்கண அரனூர் | 608 |
| அஙகண அருள் | 597 |
| அங்கண் அவனூர் | 556 |
| அஙகண் இருநத | 249 |
| அங்கண இனித | 518 |
| அஙகண இனிரு | 361 |
| அஙகண இனிது | 619 |
| அஙகண எயதிய | 671 |
| அஙகண ஒரொளி | 5 |
| அஙகண மலைத் | 110 |
| அஙகண் மாநக | 162 |
| அஙகண மாமலை | 256 |
| அஙகண மாமறை | 37 |
| அஙகண மிகக | 495 |
| அஙகண முனை | 195 |
| அங்கண மேவிய | 405 |
| அஙகண வட | 460 |
| அஙகண் வான்மி | 171 |
| அஙகண் விழவிழ | 303 |
| அஙகண கனறம் | 346 |
| அஙகண மாவரா | 475 |
| அஙகணா அடியார் | 95 |
| அஙகணா ஆரூர் | 376 |
| அங்கணர் | 613 |
| அஙகணா தம | 538 |
| அஙகணரை அடி | 35 |
| அங்கணரை | 539 |
| அங்கணரைப் | 434 |
| ,, | 517 |
| ,, | 604 |
| அஙகணரைப்போ | 447 |
| அஙகணன அம் | 280 |
| அஙகணனை அடி | 650 |
| அஙகணுளாதம | 469 |
| அஙகணுளன | 7 |
| அஙகணைநதமாந | 379 |
| அஙகணைநதரும | 449 |
| அங்கணைநதி | 334 |
| அஙகணைநதுகோ | 371 |
| அஙகணைநதுதம | 234 |
| அஙகணைநதும | 441 |
| அஙகணைவார | 540 |
| அங்கதுகேட்டு | 422 |
| அஙகப்பதிகின் | 353 |
| அஙகப் பொழு | 114 |
| அஙகமஎட்டி | 403 |
| அஙகமஓதியோர் | 510 |
| அஙகமமாகிலத | 448 |
| அங்கயறகணணி | 432 |
| அஙகவாஎக | 392 |
| அஙகவாதமபின் | 534 |
| அஙகவர்தாம் | 636 |
| அங்கவருமஅடி | 444 |
| அஙகவரும் | 206 |
| அஙகவள உருவ | 471 |
| அங்கவளும்மக்க | 559 |

அங்கிவெண்மலை 121
அங்கினிதமர்ந்து 556
அங்குச்சிலநாள் 525
அங்குநன்மை 379
அங்குநாதாசெய் 537
அங்குநிகழ்ந்த 244
அங்குநின்றரி 380
அங்குநின்றுதிரு 505
அங்குநின்றும 500
அங்குநின்றெழு 326
அங்குநின்றே 343
அங்குநீடருள் 510
அங்குமண்ணு 177
அங்குமவண்திரு 35
அங்குமுற்றிஅக 256
அங்குமுன்னை 6
அங்குலைகவெகன் 14
அங்குவைகிப் 601
அங்குள்ளபி 456
அங்குறைநந்து 265
அங்குறையுந் 262
அங்குறையுநா 254
அங்கைஅனலே 452
அங்கொருநாள் 570
அச்சம்எய்தி 581
அச்சமயத்திடை 208
அச்சொறகேட்ட 197
அஞ்சலிகுவித்த 401
அஞ்சலிசென்னி 533
அஞ்சனமஞ்சன 575
அஞ்சிஅகன்றே 441
அஞ்சிறைச்சுரும் 484
அஞ்சும்உள்ளத் 421
அஞ்சும்உள்ள 290
அஞ்சுவன்காத் 182
அஞ்செழுத்தோ 571
அஞ்சைக்களத் 271
அஞ்சொல்திரு 225
அடல்முனைமற 100
அடல்வளவா 620
அடல்விடையே 103
அடவிபடும்அங் 653
அடிகணமார்எல் 214
அடிகளமாமுக 423
அடிபணிந்ததிரு 20
அடிமுதல்உபா 656
அடியவர்க்கடிய 52
அடியவர்கள்எதி 362
அடியவர்களகளி 366
அடியவரும்பதி 390
அடியனேன்அறி 145
அடியனேன்ஆத 268
அடியனேன்பி 671
அடியார்இடுக்க 544
அடியேன்உய்ந் 578
அடியேன்பெற்ற 500
அடியேனபொரு 591
அடியேன்மனை 578
அடுத்ததிருத் 646
அடுத்துமேனை 47
அடுப்பதுசிவன் 655
அடைத்திடக் 391
அடைமேல்அல 160
அடைவிலமண் 208
அண்டத்திறை 325
அண்டர்நாயக 179
அண்டர்பிரான் 349
அண்டர்பிரானுக் 200
அண்டர்பூமழை 88
அண்டர்பெருமா 529
அண்டர்வாழக் 545
அண்ணல்அணை 311
அண்ணல் அருந் 218
அண்ணல்திரு 582
அண்ணல்தொட 525
அண்ணல்வீற்றிரு 3
அண்ணலவனை 44
அண்ணலார்அடி 508
அண்ணலார்அரு 178
அண்ண - அருளி 548
,, 554
அண்ணலார்அன் 187
அண்ணலாதமக 323
அண்ணலார்அ 334
அண்ணலார்ஆ 364
அண்ணலாதிரு 129
அண்ணலார்நிகழ் 90
அண்ணலார்முன 530
அண்ணலேஎனை 259
அண்ணலைகைக 106
அண்ணுமலைஅங் 451
அண்ணுமலைமே 250
அணங்கனையதி 204
அணங்கினும்மே 473
அணங்கேயாகும் 528
அணிகிளர்தாரவ 348
அணிசிலம்படிகள் 43
அணிமுத்தின் 493
அணியாரூர்மணி 516
அணியாரூர்மறு 498
அணைந்ததொண் 537
அணைந்தருளும் 521
அணைந்துதிருக் 505
அணையவந்துபுக் 289
அணையுந்திருத் 341

அணைவுறவந 311
அணைவுறும்அ 368
அததகைகமை 340
அததர்தநதஅருட் 5
அததர்முன்பு 85
அததர்வேண்டிமு 22
அத்தராகிய 632
அத்தருவளர் 118
அததன்மைகே 441
அததன்மையினி 230
அததனுய்அன் 649
அததிருத்தொ 405
அததிருப்பதி 366
அததிருப்பதிகத 420
அததிருப்பதிப 335
அத்திருப்பதியில் 7
அத்திருப்பதியி 221
அததிருப்பதியை 508
அததிருமூதூர் 238
அததிருமூதூரி 342
அததிருவாயில் 392
அத்திறததுமுன் 468
அததிறமஅறிந 78
அததுறையின் 207
அதனமருஙகு 346
அதிகனபடை 621
அதிசயமஅன்றி 216
அதிர்கழல்உதி 590
அதுகணடுடைய 244
அதுகண்டுவீரட் 35
அதுபொழுதே 359
அதுவும்முனே 579
அநதணமறை 197
அந்தணவெள்ளி 260
அந்தணர்அவை 30
அந்தணர்கள் 169
அநதணர்கூறஇன் 31
அநதணர்சூளா 444
அநதணர்தஞ 558
அநதணாதேவர் 425
அநதணாவிசய 335
அநதணரின் 232
அநதணனும் 64
அநதணனுளா 329
அநதணனுளாத 198
அநதணனுளாவண 665
அநதணனுரும் 7
அநதம்இலவாம் 155
அநதமாற்றங்கே 527
அநதமில்சீர் 6
அநதமில்பெரு 469
அநதமில்லாஅறி 562
அந்தமின்றிநல் 181
அநதமெய்ப்பதி 8
அநதரத்தமரர் 51
அநதரதமெழு 663
அநதவிமானந 247
அநதனை 563
அநதிஇளம்பிறை 557
அநதிப்பிறை 154
அந்தியும்நண்பக 539
அநதிவண்ணை 529
அநதிவான்மதி 5
அந்நகர்தன்னில் 399
அநநகரத்தினி 644
அநநகரதனில் 658
அநநகரில்அடி 444
அநநகரில்அமர்ந 436
அந்நகரில்அவ்வ 253
அந்நகரில்இனி 437
அந்நகரில்கொ 346
அநநகல்பாரளிக் 618
அநநகரில்வாழ்வ 349
அநநாட்டின் 539
அநநாட்டுததிரு 603
அநநாட்டெல்லே 594
அநநாள்இரவின் 156
அநநாள்சிலநாள் 341
அந்நாள்போல்எந் 647
அநநாளில்ஆரூ 237
,, 637
அந்நாளில்எயிற் 568
அநநாளில்ஒரு 371
அந்நாளில்தம 520
அநநாளில்தம 239
அந்நாளில்திலக 204
அநநாளில்மது 602
அநநாளிற்கொ 350
அநநாளிற்சண் 575
அநநிலைஅணைந 393
அநநிலைஅணைய 643
அநநிலைஅவரை 65
அந்நிலைஆரூரன் 35
அநநிலைஎழுந்த 96
அநநிலைநிகழ்ந்த 509
அநநிலைமைஅ 477
அந்நிலைமைஆரூ 315
,, 350
அந்நிலைமைகண் 551
அந்நிலைமைச்சாக 568
அநநிலைமைத் 558
அந்நிலைமையினி 266
அநநிலையில்அன் 127
அந்நிலையில்திரு 308
அந்நிலையில்மிக 206

அந்நிலையேஉயிர் 20
அந்நிலையேசிவ 649
அந்நினைறதொ 103
அந்நெடுநதிரு 625
அந்நெறியின் 207
அப்படிக்கெதிர 420
அப்படிச்சின்று 239
அப்பணியால் 631
அப்பதிஅணை 656
அப்பதிக்கண 510
அப்பதிகருமுக 268
அபபதிதனனில 276
அப்பதிதானஅந 299
அபபதிநீஙகிஅரு 507
அப்பதிபணிந 337
அப்பதிபோற்றி 343
அப்பதியில்அமா 360
அப்பதியில்அன் 518
அப்பதியில்குடி 635
அப்பதியில்குல 138
அப்பதியில்விரு 456
அப்பதியிலமாந 602
அப்பதியின்அந 301
அப்பதியின்கண் 350
அப்பதியைசூழ்ந 232
அப்பதியைத 436
அப்பாசோற்று 354
அப்பாதாம்எங் 445
அப்பர்நீஇனி 449
அப்பரிசஙகவர் 444
அப்பரிசருளப் 280
அப்பரிசவவினை 220
அப்பரேவேத 390
அப்பாலைகுடபுல 349
அப்புறததிடை 326
அப்புரம்புரன் 258
அப்பூங்கானில் 659
அப்பூதிஅடி 287
அப்பெருஙகல்லு 220
அப்பெறறியில் 114
அப்பொழுதங 311
அப்பொழுதணைய 91
அப்பொழுதத 133
அப்பொழுதின் 383
அப்பொழுதுதிரு 367
அப்பொழுதுபொ 303
அப்பொழுதே 228
அப்பொறபதி 80
அப்பொறபதிவா 154
அபபோதரையா 383
அமபர்மாநகா 381
அம்பலததேஉல 653
அம்பலவாஅடியா 577
அமபிகைஅளி 316
அம்பிகைசெம் 229
அமபிகைதிருவு 279
அம்புயமலராள் 400
அம்புளிற்றுவின் 17
அமபொனநீடிய 72
அம்பொன்நீடும் 616
அமபொனமலைக் 459
அமபொனவார் 171
அம்மருங்குகடந 256
அமமருங்குநின்ற 275
அமமலர்குழலினு 414
அம்மலர்ச்சீரப்ப 255
அம்மலர்தடம் 363
அம்மாற்றங்கேட் 622
அம்மொழிகேட் 277
அம்மொழிமாலை 238
அம்மொழிவிள 400
அம்மொழிவிள 548
அமுதுசெய்த 291
அயல்நறுமபுறவி 175
அயல்வரைப்புல 108
அயலறியாத 66
அயலோர்தவமுய 34
அயவநதிஅமாந 369
அயன்கபாலநதரி 576
அயலகொளமுக் 163
அரசர்அஞ்சலி 672
அரசாககமைதத 598
அரசாகுலப் 186
அரசரவர்பண் 644
அரசருளிச்செய் 396
அரசருளிச்செய்த 376
அரசறியஉரை 253
அரசன்ஆங்கரு 94
அரசனதுபணி 214
அரசனுககுவெ 410
அரசனுமஅதனை 657
அரசியல்ஆயத 79
அரசியல்ஆயததா 642
அரசியல்நெறியின் 76
அரசிலியைஅமர் 476
அரசுகொளகடன 12
அரணமுற்றிஎறி 621
அரநதைசெய் 47
அரநதைதீாக்கும் 21
அரமபையராடல் 4
அரவநெடுதேர் 185
அரவம்அணிநத 162
அரியஅயற்கரி 550
அரிஅயனுக்கரி 222
அரிஅயனேமுத 299

அரிசனமும்குங்கு 350
அரிதருசெஙநெற் 12
அரிதில்திறக்கத 244
அரியஅதநிருத 643
அரியகறபின் 580
அரியகாட்சியர் 426
அரியணையதனில் 669
அரியதில்லைஎன 578
அரியநீர்மையில் 463
அரியானை என் 228
அரிவைகாரணத 553
அரிவையாதெரு 668
அருகககணமுதற 302
அருகாஅறுகேட் 562
அருகாதமமை 563
அருகாதாமஇட் 421
அருகாமதியாறு 295
அருகணைந்தார்த் 215
அருகணையுநதிரு 371
அருகுசூழ்நதா 544
அருகுதிரு 575
அருகுதினமூர் 530
அருகுபெரியதே 545
அருங்கடிஎழுநத 26
அருட்பெருகு 229
அருட்பெருமகிழ் 237
அருநதமிழாகரா 494
அருநதவதெர 64
அருநதவத்தோர் 482
அருநதவாஎழுந 285
அருநதனயன 234
அருநிதித்திறம் 462
அருப்புமென் 492
அருமபெறல்மற 104
அருமறைகள்திரு 390
அருமறைநாவல் 31
அருமறைப்பய 163
அருமறைமரபு 655
அருமறைமுறை 29
அருமறைமுனிவ 547
அருமறையநத 186
அருமறையாண 392
அருமறையோர 480
அருமறைவாழ் 413
அருமையாற் 318
அருமையினிற்ற 574
அருவரைக்குற 105
அருவாகிஉருவா 652
அருவிதநதசெம 173
அருவிலையிற் 388
அருள்கொண்ட 214
அருளசெய் 141
அருளநயநகஞ் 220
அருள்பொழியுந 576
அருளவெள்ளத 360
அருளின்நீர்மைத 2
அருளின்வலி 615
அருளும்இக்கன 511
அரையிற்சரண 113
அல்லல்நல்குர 143
அல்லற்பவம 225
அல்லார்கண்டத் 241
அல்லிமலர்ப்பழ 146
அல்லிருள்அன்ன 219
அலகில்திருப்பதி 367
அலகில்சீர்தவத 180
அலர்பகல்கழிந்த 107
அலரும்விரை 429
அலறுபேர்ஆவை 17
அவ்வன்பின்தூளி 140
அவவனைஅவா 400
அவவனைமருஙகு 318
அவவனைதிருநா 188
அவவனையால் 634
அவவணணநதொ 19
அவவழிஅநதிமா 123
அவவழிஅவர்கள் 78
அவ்வளவில்அருந் 48
அவவளவில்ஆரு 347
அவவார்தனை 209
,, 445
அவவாறுபணிந் 45
அவவாறுமொழி 159
அவவிடததை 217
அவ்விரவுபுலர்கா 496
,, 499
அவவினைக்கிய 350
அவவினைசெய்தி 219
அவ்வுரைஅவை 30
அவவுரைகேட் 18
,, 275
,, 286
அவவுரைகேட் 443
அவ்வரையில்வரு 19
அவவுரையும 359
அவ்வூர்தின்றந் 294
அவ்வேலையில் 156
அவம்பெருக்கும் 302
அவர்தங்கண் 60
அவர்நிலைமை 208
அவாமுன்பணி 225
அவனியிலை 289
அவனுடையவடி 127
அழகின்முன்னி 464
அழகினுக்கணி 488

